உ

குஹமயம்.

திருத்தேவையெனுந் திருவிராமேச்சுரத்தைச்சேர்ந்த

பாம்பன்:

ஸ்ரீமத் - அப்பாவுபிள்ளையவர்களாகிய

# குமாரகுருதாசசுவாமிகள்பாடல்.

இதனை,

இராமநாதபுரந் தாலூகாச்சேகரம்

பிரப்பன்வலசை:

## தி. உடையநாயகம்பிள்ளை

சென்னைப்பண்டிதமித்திரவச்சுக்கூடத்திற்

பதிப்பித்தனர்.

First Edition—500 Copies.



1901.

விலை ரூபா-1. அணா-2.

உ

# பிரகடனம்.



| | |
|---|---|
| | ரூ. அ. பை. |
| குமரகுருதாசசுவாமிகள் பாடல் பிரதி 1-க்கு | 1—2—0. |
| ஷை சுவாமிகளருளிச்செய்த திருவலங்கற்றிரட்டு முதலாங்கண்டமாகிய செவிச்சுவை மிகச்சிறந்துள்ள பண்பாடல் 601. பிரதி 1-க்கு | 0—6—0. |
| மேற்கண்ட இரண்டு புத்தகங்களும் ஒன்ருகக் கட்டிய பிரதி 1-க்கு | 1—8—0. |

இவைகளும் மேற்படி சுவாமிகளருளிச்செய்து பலராலு மச்சிடப்பட்ட மற்றப் பத்திய கத்தியரூபமான புத்தகங்களும் இராமநாதபுரந் தாலூக்கா உச்சப்புளிப் போஸ்டைச்சேர்ந்த பிரப்பன்வலசையிலிருக்கும் தி. உடையநாயகம்பிள்ளை, பாம்பன் சா. அ. முருகையாபிள்ளை, மதுரைப் புதுமண்டபம் புஸ்தகஷாப்பு எஸ். முத்தையபிள்ளை யிவர்களிடத்தில் விலைக்குக்கிடைக்கும். தேவையாயிருந்து தெரிவிப்போர்க்கு வி. பி. போஸ்டிலும் மேற்கண்டவர்கள் அனுப்புவார்கள். போஸ்ட்டுச்செலவு ஒத்துக்கொள்ள வேண்டும்.



# குமரகுருதாசசுவாமிகள் பாடல்

## தவறு திருத்தம்.

| பக்கம். | பாட்டு. | வரி. | தவறு. | திருத்தம். |
|---|---|---|---|---|
| கஉ | க0 | கஉ | நலகி | நல்கி |
| க௫ | ௫ | எ | அதிவகுய்ய | அதிகுய்ய |
| ௫௬ | ௬ | க | கிரிகை | கிரியை |
| அ௬ | க | ௩ | முற்பிரப் | முற்பிறப் |
| க0அ | ௬ | ௫ | மெய்யலா | மெய்யெலா |
| கஉஅ | க | ௩ | கொன்டவ | கொண்டவ |
| கஅஅ | அ0 | எ | டுறழுந்து | டுறழ்ந்து |
| க௯௫ | ௯க | எ | புரித்திடினும் | புரிந்திடினும் |
| உஉக | ௪ | க | மையோடே | மையொடே |
| ,, | ௬ | ௩ | வெனமோ | வெனவோ |
| உ௬உ | க௪ | க | பட்டிணத் | பட்டினத் |
| உ௬௫ | உ௩ | ௫ | துளபமை | துளபழ |
| ௩கக | ௫ | ௪ | யவிறி | யறிவி |
| ௩௩அ | கஎஉ | உ | ஆணவ | ஆணல |
| ,, | கஎ௪ | உ | மனம்பொனீ | மனம்போனீ |
| ௩௬௪ | கக | க | வனமனக் | வன்மனக் |

உ

சிவமயம்.

குஹப்பிரம்மணே நமஃ

திருச்சிற்றம்பலம்.

# குமரகுருதாசசுவாமிகள்பாடல்.

## தெய்வவணக்கம்.

பன்னிருசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அறிவினுக் கறிவான பொருளையடி கட்கருளு
மாநந்த போதநிதியை
யத்துவித நிச்சய வகண்டவே காகார
மானசின் மயவாரியைக்
குறிதிரி பிலாதசிவ யோகபரி பூரணக்
கூர்ப்பினைக் குருபரத்தைக்
குழவுமுது கிழமையின் றிலககோ சரசிற்சு
கோதய விலாசவெளியைத்
துறவிரு தயநடையை யம்பரம தேசெனச்
சுடருமா நந்தவடிவைச்
சுத்தபர தத்துவச் சுடரைச் சுயம்புவைத்
துரியவோங் காரமுதலை
நிறைசரத நிட்கள நிராகநிரு நாமபர
நிட்டையி னிலாவுதிருவை

நித்திய சுவாநுபவ முற்றவயி லடிகளை
நிரந்தரமு னெஞ்சில்வைப்பாம். க.

நின்மல நிராமய புராணபர தாரக
நிரம்பர நிராகாரமாய்
நிர்க்குண நிராகுல நிராசன நிராகுச
நிட்பிரபஞ் சப்பிரமமாய்ச்
சன்மமிகை மரணமின் றண்டபிண்டப் பெயர்கொள்
சங்கங்க ளிற்கலாவிச்
சச்சிதா நந்தசிவ சிற்கதன மாய்நித்ய
சருவவல் லபமுள்ளதாய்த்
தன்மகிரு பாகர விலாசசுக சாகர
சதாசிவ மகேசவடிவாய்ச்
சதுர்மறைசொல் வேதாந்த சித்தாந்த நிலையெலு
சமரச சுபாவமுடிபாய்
நன்மவுன ரறிவின்மெய் யறிவாகி விரிவாகி
நாளுஞ் சிறந்துதிகழு
நாட்பா றெழுத்திறைக் கடிமையென விதயமுண்
ணண்ணியஞ் சலிசெய்குவாம். உ.

தொல்லையில் வாதவூ ரடிகளொரு பெயர்புரஞ்
சொல்லவொண் ணுமுதலெனச்
சொற்றபர மாய்முப் மறைக்கிதய மாயுள்ள
தூவரிக ளுக்குரிமையா
யொல்லைமறை யின்பனுவல் பன்னுமா ரூதார
வுடலையும் பிராணனென்றே
யோதாவி தன்னையும் பொலமெனும் பொருளையு
மொருங்கே கவர்ந்தொன்றைநல்

தெல்லையொன் றில்பரம பதியாகி யதர்வத்தி
லெசுரிலெழு * பஞ்சருத்ர
மென்றதிவ் யோபநிட தங்களறை கின்றசிவ
மென்னவெவ ருந்தொழுவளர்
தில்லையம் பொதிநடக் கனகனே யாரென்று
செப்புபொழி கட்கணங்காய்த்
தேசிக னுளக்குகந் தொறுமுள்ள தாயுள்ள
தெய்வமணி யைப்பணிகுவாம். ௫.

---

## அமரர்கோ.

கங்கையைச் சடையிற் பரித்தமதி மழுவங்
கரத்திற் றரித்தருத்ரங்
காட்டுழுவை யதளைத் தனியன்றி லெங்கும்
காளத் தபின்னமாய
சங்கரி சடாதாரி சருவாணி கல்யாணி
தற்பரி பவானிதந்த
தந்திமுக னைமற் றைந்தபெயர் நீர்மையுந்
தன்னகத் துளதெய்வமே
மங்கையர்த மின்பெறுந் தாம்பினை விரும்புபட
மார்க்கத்தை விட்டதீதர்
வாழ்வுக்கும் வாழ்வாய வாழ்வினை யளிக்குமுன்
மலரடி தியானிக்கவு

---

* பஞ்சருத்ரம்—அதர்வணவேதத்திற்குச் சேர்ந்த அதர்வசிரம், அதர்வசிகை, எசுர்வேதத்திற்குச் சேர்ந்த கைவல்யம், சுவேதாசுவதரம், காலாக்கினி ருத்திரம் என்னும் உபநிடதங்கள். இவைகள் வைதிக சைவத்தை யினிதுவிளக்கும்.

மங்கையினி னொல்லியங் கனியெனத் திருவருளை
யடையவுங் கருணைநல்கா
யருமறை புகழ்ந்ததிரு முருகசிவ சரவணத்
தாதியே யமரர்கோவே. க.

மந்தரத் தாலமிர்த மகரால யந்தனை
மதித்தகான் மெய்யின்மாய
மருவுவன மாலிசோ தரியான வட்குரிய
வாமந் தனைக்கொடுத்துச்
சிந்துரக் குடிலந் தபங்கவரு ணடமிடு
திருக்கண் ணுதற்குமதலாய்
தீவினை தவிர்த்தருடி திக்கொருவ ரிலையெனச்
சேவடியை நம்பிநவிர
முந்துனபி தானமனு வோதிநிலை மீதிலே
யோடியா டித்திரிந்து
முள்ளத்தி லேவைத்த வெண்ணத்தொ ரெள்ளேனு
மொத்துவர வில்லையென்றெ
னந்தரங் கத்திலே யாறுத புண்ணுற்
றழுங்குமெற் கார்தஞ்சமே
யருமறை புகழ்ந்ததிரு முருகசிவ சரவணத்
தாதியே யமரர்கோவே. உ.

கஞ்சமலர் வதனத்தின் மஞ்சணில வக்கலைக்
காவிவிழி சூழ்ந்துசுழலக்
கலவையணி செண்டமை மிரண்டுநிமி ரச்செய்ய
கைக்கங்க ணங்கடிகழ
வஞ்சமென் னத்தெருவி னின்றுலா வித்தினமு
மாட்பிடித் திடுகணிகைய

ராசைகொண் டலையுமிவ் வாபாச நாய்தனை
யணைத்தருள் கொடுக்கவேண்டுந்
தஞ்சமென் றடைகின்ற வுயிர்களுக் காதரவு
தந்திரட் சிக்கவென்று
சாற்றியுள வேதாக மச்சஞ்ச யங்களிற்
சாரதர மாகவுள்ள
வஞ்செழுத் தாறெழுத் துக்கிறைவ வாதிநடு
வந்தமில் லாதபரமே
யருமறை புகழ்ந்ததிரு முருகசிவ சரவணந்
தாதிமே யமரர் கோவே. ௩.

சனகாதி நால்வர்க் குரைத்தமுறை போற்பரா
சரர்மக்க ளாறுபேர்க்குந்
தண்ணார் பரங்கிரிக் கண்ணே தனித்துநற்
சதுர்வேத வுச்சிமுடிவை
வினைதீர்த் துணர்த்துவா னருண்மௌன குருவென்ன
விற்றிருந் தைந்துறுப்பான்
விளக்கியருள் பாலித்த தண்ணளியை யாரறிவர்
மெய்யன்ப ரன்றியந்தக்
கனமான காரியந் தமியேற்கும் வேண்டியே
கைகுவித் திடுமென்னையுன்
கைவிடா நட்புவந் தென்றைக்கு மேவுமோ
காதற் கியைந்தகண்ணே
யனகமெய்ஞ் ஞானவா நந்தமுகி லேயென்ற
னந்தரங் கக்களிப்பே
யருமறை புகழ்ந்ததிரு முருகசிவ சரவணந்
தாதிமே யமரர்கோவே. ௪.

படிறற்ற வாகமம் பகர்பொருளோர் மூன்றனுட்
பசுவினை யநாதியாகப்
பந்தித்த பாசமுட னப்பசுவு மாசற்ற
பதியுடைய செயலின்றியே
முடிவாக வாயினுங் குறைவாக வாயினு
முரண்கொண் டியங்குங்கொலோ
மூடமுறு பாசஞா னந்தானும் விடயத்தின்
முயலுவ தலாதுன்னுடை
யடிதேடி நிற்குமோ பசுஞான முந்தன்னை
யறியுமோ கடினமின்றுன்
னருளான பதிஞானம் யாவையு முணர்த்திமெய்
யாநந்த வாழ்வுநல்கு
மடிமுடி குறிக்கவொண் ணுவைய வதனையிவ்
வடிமைக் கிரங்கியருடி
யருமறை புகழ்ந்ததிரு முருகசிவ சரவணத்
தாதியே யமரர்கோவே. ௫.

மூவர்மறை யாகம புராணேதி காசாதி
முனிவருங் கணநாதரு
முப்பத்து முக்கோடி தேவரும் பணியுநின்
முக்யபத வாரிசத்தைக்
கேவல மயக்கவெளி யேன்பணிய வோதரங்
கிஞ்சித்து மில்லைநின்றுட்
கிருபைகொண் டுன்பதம் பெறல்சுலப மென்றனைக்
கிட்டினே னிட்டம்வைத்துத்
தீவிர தரப்பெரிய கருணைசெய் தளியரிய
திவ்யமெய்ஞ் ஞானமௌன
சிவராஜ யோகனே தவராஜ ராஜனே
செப்பரிய முத்திமுதலே

யாவியர் சுவாமியே யருணகிரி நாதனுக்
கருடந்த குருநாதனே
யருமறை புகழ்ந்ததிரு முருகசிவ சரவணத்
தாதியே யமரர்கோவே. ௬.

---

# திருப்பரங்கிரி.

ஆதியிடை யீறெனுங் காலங் கடந்ததா
யகிலமுக் குணரகிதமா
யத்துவித சைதன்ய சுத்தபர தத்துவ
வசஞ்சல விலாசவெளியாய்
நீதியாய் நிறைகருணை யூறுசுக வாரியாய்
நிட்களா நந்தசிவமாய்
நின்றபர தெய்வமே தொண்டர்தொழு சைவனே
நின்னுமை மந்த்ரமொருகா
லோதினெண் ணம்போலெவ் விடயமும் விநாடியி
லொதுங்காது கூடுமெனுநா
லோரையா லத்தைநா ளுளுமோதியு
முளக்கவலை யோய்ந்ததில்லை
தீதிலா யிதனையிப் பிறவியின் பயனென்று
தெளிவதெ யாதுநினைவேன்
சிறைப்புண்மலி காவடர் திருப்பரங் கிரிமேவு
சேயே சிவாநந்தமே. க.

ஆணவ மலத்தினி லமிழ்ந்திய பசுக்களை
யறாதந் தன்னகத்தே
யைக்கியங் கோடற் கருந்தொழில்க ளைந்துநனி
யாற்றுமைம் முகனுகிநீ

மாணுட னவின்றநல் லாகமத் துள்ளபடி
வளர்ஜீவ காருண்ணியம்
வந்திடி னடங்காத வீச்சுவர பத்திதான்
மருவுமதன் மேன்மந்தர்கள்
காணரிய பாசவை ராக்யமுண் டாமஙன்
ககனமொடு புவனமெங்குங்
கரையின்றி நிறைவான பரமமெய்ஞ் ஞானமது
கண்ணெதி ருதிக்குமென்று
சேணுடைய சேணுடர் மோனர்மே தாவியோர்
சென்றநெறி யெற்குமளியாய்
சிறைப்புண்மலி காவடர் திருப்பரங் கிரிமேவு
சேயே சிவாநந்தமே. உ.

கூடா ரெனக்கணித மில்லுயிர் வதஞ்செய்த
கொடியபவ முங்கிறிகளுங்
குற்சிதக் குழுவாய தீங்குபல வும்மருட்
குன்றே நினைத்தொழுதபின்
னூடாடு மோதினமும் வாதாடு மோசற்று
முணர்வழித் திடவல்லமோ
யோயா தடர்த்தெனுயிர் போகாத வணமிவ
னுஞற் றுமுள வென்னையென்னை
வாடாத மேத்திப வியோமப்ர காசமே
மௌனமெஞ் ஞானநெறியை
வாழ்விக்கு மாநந்த வெள்ளமே யெளியனுண்
மனமா சறுத்துவினைக
டேடா திருக்கவுஞ் சீரடி யிருக்கவுந்
திருவரு ளளிக்கவேண்டுஞ்
சிறைப்புண்மலி காவடர் திருப்பரங் கிரிமேவு
சேயே சிவாநந்தமே. ௩.

மங்கள விலாசவுன் செம்பொனடி தனையிங்ஙன்
மனதிரங் கித்தருவையோ
மாயக்கண் வலைவீசி மோகத் தமிழ்த்துவிலை
மாதர்கட் கொப்பிப்பையோ
வெங்கும் பிரகாசமுள வன்பர்பத மலர்காண
வென்றனைமுத் துச்செல்வையோ
வேறவிட் டேணியை யெடுப்பது கடுப்பவெனை
யிடைவழியி லேவிடுவையோ
வங்கமெல் லாநொந்து வம்பிலலை யாதபடி
யதிவிரைவி லருடருவையோ
வாவிவெளி யோடும்வனை நேடியமு தலையென்ன
வாட்டுவித் தருடருவையோ
செங்குவளை மஞ்சரிகொண் மொய்ம்புவளர் மூர்த்தியே
சிறியனொரு சிறிதுமறியேன்
சிறைப்புண்மலி காவடர் திருப்பரங் கிரிமேவு
சேயே சிவாநந்தமே. ௨.

கட்டநற் பாளித மணைந்துகொள வம்பணி
கதம்பகத் தூரியென்றுங்
கனதனங் களிலிடுங் கச்சுமொற் சரிகைமே
கலைகள்பா வாடையென்று
மிட்டமுள வெங்கள்குல தேவதைக் குச்சிறப்
பிடவிரும் பணயமென்று
மெத்தியுள கைப்பொரு டனைப்பறித் தெக்கதியு
மில்லா தலைந்துமடிய
விட்டுவிடும் விப்ரமட மங்கையர் நவங்களை
விரும்பிநா னுழலாவணம்
வித்தகக் கடலே விவேகப்ர காசமே
வீவற்ற கருணைவிண்ணே

சிட்டர்பரி பாலீனே யிட்டமுட னென்னையுன்
திருவடி மதர்ப்பில்லையாய்
சிறைப்புண்மலி காவடர் திருப்பரங் கிரிமேவு
சேயே சிவாநந்தமே. ரு.

கரும்வழி யாய்வருஞ் சனனவே தனையோ
கலக்கங் களிற்கொடிதெனல்
கட்டாகு மதுவோவென் ஞாபகத் திப்போது
காணவெளி வருவதின்று
வெருவில்வெரு வென்னவினி வரவுள்ள கொடுமரண
வேதனைக் கேயென்மன
மெத்தப் பயந்துகவல் கின்றதிவ் விடயத்தின்
மேதினியி லுதவிசெய்ய
வொருவரா லாகுங்கொ லென்னைய வுன்னையே
யுள்ளபடி நனிநம்பினே
னுள்குமடி யார்பக்ஷ மாயுள்ள வுனதுதிரு
வுள்ளத்தி லென்னையும்வைத்துத்
திருவருட் செலவினி னடத்திவிடு தலைகொடாய்
தெய்வயணி யானசிவமே
சிறைப்புண்மலி காவடர் திருப்பரங் கிரிமேவு
சேயே சிவாநந்தமே. சா.

ஏதமின் மறைக்கப் புறத்ததாய் மனவாக்
கிறப்பினி லெழும்புநிறைவா
யெண்ணரிய பொருள்களா யல்லாத முதலாய்
யிருந்ததை யிருந்தவண்ணம்
போதமலி வாலறிய வென்றறு வருக்கன்று
புரையற்ற மௌனியாகிப்

புகலாம லேபுகன் றிட்டதிரு வருளினைப்
　　புந்தியிற் சிந்தைசெய்யின்
மேதினியி லெவருக்கு நித்யநெறி கூடாது
　　வியன்மௌன மந்த்ரகுருவே
வித்தகக் கடலே விகாசசைதன்யமே
　　விமலமே வுன்றிருவடிச்
சிதமென் சென்னியிற் படியுமொரு நாள்வந்து
　　சேரவிங் கென்றுகாண்பேன்
சிறைப்புண்மலி காவடர் திருப்பரங் கிரிமேவு
　　சேயே சிவாநந்தமே. எ.

அச்சரியி னேமிபோ லச்சுழன் றிடுபிறவி
　　யார்கலி கடந்துவிண்வா
மூமரர்புகழ் நின்பதத் திருவளரும் வாழ்வையே
　　யடைதல்சுக மென்றகத்தி
லிச்சைமிக வைத்தநு தினந்தொடர்பு செய்யுமிவ்
　　வேழைக் கிரங்கியின்ப
மீயாத நிலைமையை யடிக்கடி நினைந்தைய
　　வின்னமு மிடுக்கணேசெய்
கச்சணி முலைச்சியர்கண் மோகத்து ளாகியவர்
　　கடைவாயில் காத்திருந்து
கைப்பொரு ளிழந்துழன் றெய்த்தபின் னிக்கடங்
　　கம்பலைப் படர்கெழீஇச்
* சிச்சைக்கு ளாமோ வெனப்பதறி நெஞ்சந்
　　திடுக்கிட் டழுங்குகிறதே
சிறைப்புண்மலி காவடர் திருப்பரங் கிரிமேவு
　　சேயே சிவாநந்தமே. அ.

---

* சிகிச்சை சிச்சையென மரீஇயிற்று.

நஞ்சினுங் கொடிதாய வைந்தலரி வாளிதா
னூடோறு மென்னகத்தே
நடலைமலர் பொழிதலா னுளமுழுது நொந்தியா
னைந்துநைந் தேமெலியவுந்
துஞ்சுபொழு துண்ணிலையி லுண்டாகு மஞ்ஞான
சொப்பனத் தால்வெருளவுந்
துஞ்சுத லொழிந்தபின் வாய்மதம் பேசிச்
சுவாமியை மறந்துழலவுஞ்
சஞ்சலம் விளைக்குமிக லாமய மனேகமொரு
தடையின்றி வாதிக்கவுந்
தன்னகங் கண்டதன் றுன்னரு மகிழ்ச்சியொரு
சற்றுநுகர் வுற்றதுண்டோ
செஞ்சொன்மொழி பயிலுமின் னமிர்தப்ர வாகமே
சித்தம்வைத் தருடியருடி
சிறைப்புண்மலி காவடர் திருப்பரங் கிரிமேவு
சேயே சிவாநந்தமே. ௯.

வெள்ளறுகு ளான்விண்டு விதியண்ட ரனைவரும்
விறப்புழுவ லோடுபணிய
வேதமுனி வோர்புகழ வெள்ளிமலை யமருமலை
வில்லிக் கரும்பொருள்சொன
வள்ளலே யென்கவலை வாடவொரு தந்திரம்
வகுக்கவரும் விமலவித்தே
மருமலர் கதம்பகத் தாரியணி பணிபந்த
வன்னமே வடகமிலைந்த
கள்ளிக டருங்காம வெறியேறி வீணாய
காலங் கழித்திடாது
கருணைபுரி பதமலர்க ளுளமிசை யிருக்கக்
கருத்தொன்று நலகியருளாய்

தெள்ளறிஞ னருணகிரி யுள்ளத்தி லொழியாது
தித்திக்கு மின்பரசமே
சிறைப்புண்மலி காவடர் திருப்பரங் கிரிமேவு
சேயே சிவாநந்தமே. ௧0.

---

## திருச்செந்தில்.

காரொத்த குழலிமேல மேரொத்த முலையிமேல
கஞ்சமலர் வதனத்திலே
கன்னனிகர் மொழியிலே கயலனைய விழியிலே
கமழ்கின்ற வாடைதனிலே
சீரற்ற மனதைச் செலுத்தியநன் வருதுன்பு
தெரியா திதேசுகமெனச்
சிக்கியின மலைவனே தெருடரு வித்தியைச்
சிந்தைசெய் தாளாவனே
கூருற்ற குசலரொடு கூடியினி துய்வனே
கோளர்வழி நின்றுழல்வனே
கூர்த்தவுணர் வில்லாத வேழையறி யேனெனைக்
கொள்ளவுள நீகருணையா
வீரத்தி ரங்கொடுத் தாசறுத் தருளுநா
ளெந்தநாள் சொல்லியருளே
யிஞ்சிவளை மந்த்ரமலி செந்திலி லமர்ந்தவெழி
லெந்தையே கந்தசிவமே. ௧.

கருப்பையுழை யதியற்ப சுக்கிலந் தங்கவது
கதழ்வாகி மதிபத்திலோர்
களனிலா விளவலாய் வந்துதித் துற்றவர்கள்
கனகமணி யணிகளிட்டு

விருப்புவகை யொடுவெளர்க் கச்சடம் வளர்ந்துமத
மீக்கொண்டு மாதர்புழையில்
விழுந்துகிழ மடியுற் றயர்ந்துயிர் பிரிந்தபினர்
மெல்லிய ரரற்றவுரியோ
ருரப்புள பிணப்பறை சிறப்பொடு முழக்கியெரி
யுண்ணுநிலை சேர்த்துவசுவிட்
டேதவொரு பிடிபூதி யாகுமிது வேயிந்த
வுலகவாழ் வையவிதனை
யிருட்டுமன முள்ளார் மதித்துனை யெணுரென்ற
னெண்ணமுமவ் வாறுசெலுமோ
யிஞ்சிவளை மந்த்ரமலி செந்திலி லமர்ந்தவெழி
லெந்தையே கந்தசிவமே ௨.

முரசகே தன்னனும கேதனன் சகதேவன்
முனைபொங்கு தண்டவீமன்
பொய்ந்நகுல னெனுமைவர் தூதனு யெண்ணாறு
முனைந்தோனை முடிவுசெய்தோற்
குரிமையுட னுபமந்யர் செப்தசிவ தீக்கைவகை
யுணராத மக்கண்மேனு
ளுவகையொடு பரமனுர் வடநிழலி னல்வர்க்
குரைத்ததே முத்திமுடிவா
மருணெறி யெனத்தெளிய வல்லுநகர் கொலைவந்த
வறிவையே யென்சம்மதத்
தறிவுநெறி யாய்க்கொள்ள வருளினை யதேயிரண்
டற்றவத் வைதநிலையா
யிரிபற விலங்குசன் மார்க்கநல னுமதனை
யேயெனக் கருளல்வேண்டு
மிஞ்சிவளை மந்த்ரமலி செந்திலி லமர்ந்தவெழி
லெந்தையே கந்தசிவமே ௩.

காலமொரு மூன்றினும் பொன்றாத சத்தாய
கர்த்தவ்ய மென்னுமுன்னைக்
கனவினுங் காணாத மைந்தர்மறை முடிவின்
கருத்தைப் படித்தளவிலே
மேலவர்க டொழுபிரம நாமென நினைத்தகம்
விளம்பியருணெறியைவிட்டு
வியனற்ற புன்றொழில் விடாதவிழி பதிதராய்
விசுவத் துழன்றுகெடுவார்
சீலமுள தெய்வமே யந்நடலை யென்னருகு
சேரவொரு சிறிதுமொப்பேன்
றெய்வசுக நிட்டையிலுயர்ந்தொன் றிரண்டெனுஞ்
செப்பற நிலைக்கவென்று
மேலுமினி யேனுமென நனிதுணிந் துய்யநா
னென்னிமனை னவணமருள்வா
யிஞ்சிவளா மந்த்ரமலி செந்திலி லமர்ந்தவெழி
லெந்தையே கந்தசிவமே. ௨.

பிரிவற விளங்கருளை யடையாம லெங்குநிறை
பிரமத்தை யடைவதாகப்
பேசுபவர் பேச்சுக் கனுத்துணையு மொத்துப்
பிதற்றவென் னெஞ்சமிசையா
தரியதிரு வருள்வழி னளக்கர்நசை யேதுற்ற
வறியாமை யேதுதிப்போ
டழிவேது மெலிவேது பழியேதிவ் வதிவருய்ய
மன்பிலா ரறிவர்கொல்லோ
வொருநிமிட மேனுமுள் ளுருகிநின் பானிற்க
வரனிலா ரமரரெனினு
முன்னடிமை நாளொரு விதத்திலு மதிக்கிலே
னுனைநினைவர் சிறியரெனினு

மிருடிக ளெணக்கருதி யவரடி வணங்குவே
னெனையடி மைகொண்டபரமே
யிஞ்சிவளை மந்த்ரமலி செந்திலி லமர்ந்தவெழி
லெந்தையே கந்தசிவமே. ரு.

கண்ணுங் கருத்துமறி யாதபொரு ளாகவுங்
கண்டம திலாதகண்ட
ககனமா கவுநிறைந் திடையறு துள்ளநீ
கண்டிதப் பட்டவுடலி
னுண்ணுணர் விலாதுசிற் றுணர்வாய் விளங்குயிர்க
ளுக்கறிந் தவைகடம்மை
நூங்கறிவு கொடுதெளிந் தருளிலே கூடியொரு
நூனமில் லாநந்தமாம்
விண்ணிடை யுலாவியெமை யடைகுவீ ரம்முறைமை
விவரிக்க வந்திரென்று
மெய்யான திருமேனி யிலகவுரு வங்கொண்டு
மெய்யருள் பெருக்கியருளு
மெண்ணமுண ராதபுன் மதத்தருரு விலையென்பர்
யாங்களுனை விடுவதுண்டோ
விஞ்சிவளை மந்த்ரமலி செந்திலி லமர்ந்தவெழி
லெந்தையே கந்தசிவமே. சா.

கண்டபொரு டன்னிலுங் காணுத பொருளிலுங்
கறையில்விண் ணிடையுமெங்குங்
கலியற நிறைந்தகண் டாகார வவிகார
கருணைவா ருகநிலவி
விண்டலமு மண்டலமும் வந்திக்க வுளநீ
விழுக்கருணை யின்பெருக்கால்

வேதத்தில் வெளியிட்ட விக்கிரக வழிநீ
விளங்குவதை யிலையென்பது
மண்டர்முத லெழுவகை யுயிர்க்குழுவை யுந்தனு
ளடக்கியாள் சருவவலிமை
யயர்விலா துளவெனக் குருவெடுக் குந்திறமை
யணுவுமொல் லாதென்பது
மெண்டிகை யினுந்தகுதி யற்றசொல் லாய்முடியு
மென்பதற் காசங்கையோ
விஞ்சிவளை மந்த்ரமலி செந்திலி லமர்ந்தவெழி
லெந்தையே கந்தசிவமே. எ.

பலநறு மலர்த்தொடை சமர்ப்பித் தருங்கனிகள்
பலகார வர்க்கமசனம்
படைத்தினிய தேங்கா யுடைத்துரிய பூசனம்
பண்ணினவர் கட்குமட்டுங்
கலகலென வணிகெஞ்சிழி குமிலமிட வந்துநீ
கருணைசெய் தருள்வையென்றுங்
கண்டவிட னெல்லா நினைந்துகளு ழன்பனைக்
கருதா திருப்பையென்று
முலகமிசை யொருநூ லிருந்துவரை யறையிட்
டுரைப்பதின் றுள்ளன்பெனு
வோதுமொரு கண்ணியி லகண்டபர மதுசிக்க
லூறுதியெனு நூல்களதனை
யிலகுதிரு வடியருளி லெனதெதி ரெழுந்தருளி
யென்னைநீ வைத்தன்முறையே
யிஞ்சிவளை மந்த்ரமலி செந்திலி லமர்ந்தவெழி
லெந்தையே கந்தசிவமே. அ.

காலனை யுதைத்துவிதி முடிகொய்து மலமெய்த
காமரா சனையெரித்துக்
கலைமதியொ டரியண்ட ரெவரையும் வெகுண்டமுக்
கண்ணனொரு பாதியென்னு
நிஷ்கா ரணிசர்வ லோகரட் சகிதுழாய்
முடிமகா விஷ்ணுபகினி
முக்கோண சக்கரி சடக்கரி பருப்பதி
முலைப்பய சருந்திமகிழுஞ்
சிலைமே யண்டநிரை வைக்கின்ற பரவெளித்
திட்பமும் விரிந்துசூழுஞ்
சித்தவெளி தன்னிமேல நானுள்ள நிலைமையுந்
தெற்றென வுணர்ந்ததீத
மேலமேல யெய்தாத தாழ்வா னுதித்தவெற்
கினிவரா நெறியையருளா
யிஞ்சிவளை மந்த்ரமலி செந்திலி லமர்ந்தவெழி
லெந்தையே கந்தசிவமே. ௬

திராய திரவியப் பிரபுவை யடுத்தெளிஞர்
சேவனஞ் செய்யுமுறைபோற்
றேவாதி தேவனென் னுமுனை நா னடுத்தெனது
சிந்தையி னைக்கணெல்லா
மனோநாயி லேயவித் தத்துவித முத்திநிறை
வடையவென் றுறுதிகொண்டே
னறைபுமிம் முறையிலொரு நீயுநா னுந்தொந்த
வாட்டியனும் பூத்தியனுமென்
முளையிடற் கோரைய மின்றுன தியற்கையி
னுவகையென் கண்ணில்வளர
வொருகிருபை புரிதியரு ளருணகிரி புகழீச
வுபதிடத முனிவர் முதலே

பிரபைபக லற்றபர வெளியிலெக் காலமு
மிருக்குமின் பப்பெருக்கே
யிஞ்சிவளை மங்கைமலி சோதியி லமர்ந்தவெழி
லெந்தையே கந்தசிவமே. ௧௨.

## திருப்பழநிமலை.

ஆதிசல வம்புலி யெலாமொளிர் செவ்விண்ணின் மணி
யனையமணி முடியிலங்க
வகனுள்வட வரையைச் சாடவல்ல யோதிடந்
கானமொய்ம் பணிதுலங்க
நாதியா ரெனக்குவரிசி சரநுயிர் முருக்குமொரு
நலிவில்வடி வேல்விளங்க
நடுவற்ற வினைப் பிசாசுகள் பிரிந்தங்கு
ணடைவிட் டுளங்கலங்க
வேழமிவ ரிந்த்ராதி திசைநாதர் தலைநாதர்
வெருவுற் றடிவணங்க
விண்டலமு மண்டலமு மசைவுற்று நிலைபிசகி
மேருகிரி யுங்குலுங்க
வாழிமுடி வெணநவிர மேறுமுதல் வாவென்ற
னாறுகேட வென் றுவருவா
யுலகனைத் தும்புகழ் திருப்பழநி மலைமேவு
மோங்கார குருநாதனே. ௧.

கன்மீணாகண் மணியே கதிக்குரிய ஞானமே
கருணையே கருணைரசமே
கருவினிற் கருவே தொழும்பனே னிதயவான்
கமலமே கமலமணமே

விண்ணே விண்ணொளியேநல் வேதமே வேதாந்தமே
மேதக வெறுக்கையரசே
வித்தார மானபுவ னப்பரப் பெங்கணும்
வியாபித்து நிற்குநிறைவே
தண்ணேறு நின்னடியை நண்ணாத பாவிபொய்
சாலவுஞ் சொற்றபாவி
தக்கோ ரிடத்துறவு பண்ணாத பாவிவெகு
தவறுக ளிழைத்தபாவி
யுண்ணே ரிலாதபடு பாவிநா னுன்னரு
ளுறுதுய்ய விடனுமுண்டோ
வுலகனைத் தும்புகழ் திருப்பழநி மலைமேவு
மோங்கார குருநாதனே. ௨.

எத்தனை படித்தாலும் வஞ்சனை பொறாமைதா
மென்னைவிட் டகலவில்லையே
யிதமாக வெவ்வளவு சொன்னாலு மடமன
திணங்கிநின் றுருகவில்லையே
பத்திநெறி யார்நட்பு மெய்தவிலை யினியென்ன
பண்ணுவே னின்கடைக்கண்
பார்வையென் பக்கல்வரு மேல்வம்பு போமின்பு
பற்றுமென் கண்ணனெஞ்சஞ்
சுத்தம தடைந்தபி னவற்குரிய நிருமிதத்
தொழினல்கு திவ்யவயனை
சுகிர்தவருள் வாரியே தூய்மன வெளிக்குளே
சுடருமா நந்தவடிவே
யுத்தமத் திற்கெலா முத்தம விலாசமா
யுள்ளவொரு பெரியபொருளே
யுலகனைத் தும்புகழ் திருப்பழநி மலைமேவு
மோங்கார குருநாதனே. ௩.

நாட்டுப் படர்ப்பிணிகள் சோற்றுக்குரம்பையை
நசிப்பதோ சங்கையில்லை
நாளாகு மேலருட் காளாவனென்று
நடலையோ கொஞ்சமில்லை
கோட்டுக் குசத்திரதி கொண்கனலர் சொரிகின்ற
கொடுமையோ மெத்தமெத்த
கூறுமித் துயரெலா மிச்சிறுவனெவ்விதங்
கொண்டுதெளி வானென்னவுன்
ஞட்டிக வுளஞ்சிறிது கருதிடா தோவடியர்
தாபஞ் செகுக்கும்வள்ளால்
சரதவைச் சுரியசம் பந்தபரி பூரணத்
தண்ணருட் பெருவாரியே
யோட்டிற் பெரும்பலி யெடுத்துண்ட வொருவற்
குரைத்தமா மந்த்ரகுருவே
யுலகனைத் தும்புகழ் திருப்பழநி மலைமேவு
மோங்கார குருநாதனே. ௪.

நெடியவுவர் சூழுமிப் பெரியநிலை தனிலுன்
னிஜாநந்த மடையநல்லோர்
நெக்குருகு பத்தியோ டெண்ணில்பல் காலநிலை
நின்றவ ருரைத்தநெறியிற்
கொடியமன தைத்திருத் திக்தபஞ் செய்கிறார்
கொங்கைமின் னார்நிதம்பக்
குழியிலே விழுநமக் கெந்தவா றறுவந்து
கூடுமென் றுள்கியுள்கிப்
பிடிபட்ட வுழையெனக் குழையுமென் னெஞ்சைநின்
பெரியதிரு வுள்ளமறியும்
பேயினுங் கடையனே னெனினுமுனை நம்பெனைப்
பீடையி னிறுத்தன்முறையோ

வுடலினுக் குயிராகி யுயிரினுக் கறிவாகி
யொளிர்கின்ற பரமபதியே
யுலகனைத் தும்புகழ் திருப்பழநி மலைமேவு
மோங்கார குருநாதனே. ௫.

சந்ததமு மிகையற விளங்குபர சிவயோக
தண்டா யுதப்பிரமமே
தண்ணளியை நாடுநர்க் கின்னமுத சாகரத்
தாரையைப் பொழிமாரியே
யெந்தையே யருளரு ளெனக்கதறி னேன்யனை
திரங்கினா யில்லையினிமே
லெப்படி யலந்தைபொய்த் தின்புவந் தணையுமென்
றிதயமிக் கயர்கின்றதே
வந்தநா ளொட்டிங் கிழைத்துள்ள தீமைபெரு
மலைபோ லிருப்பினும்வெளி
மணிமுன்ன ரேயிமக் குலமழிதல் போலழிய
வந்துநீ யுண்மைகூற
வுந்தியிடை நின்றுன்னை யடையுமா திருவுளத்
தொல்லையோ ரெணங்கொளாயோ
வுலகனைத் தும்புகழ் திருப்பழநி மலைமேவு
மோங்கார குருநாதனே. ௬.

கருப்பையி லிராநின்ற வுயிர்தனக் குப்போன
கங்கிரம மாயளித்துங்
கல்லினுட் டங்குதே ரைக்குரிமை யாயவா
காரநித முங்கொடுத்துந்
திரப்படு கிளைக்குணவு தேடியங் குதவியுந்
திதிசெய்நிழ லுள்ளவுன்றன்

சேவடிகளைத் தொழுஞ் சிவனை யிரட்சித்தஞ்
செய்யாது விடுவைகொல்லோ
விருப்புள ரகத்திடை வதிந்துதிமி ரம்போழும்
விகுணமெய்ஞ் ஞானயோக
வித்தார வாழ்வுதந் தெக்காலு மழிபாத
வீடுபெறு மாறுகங்கை
புருப்பட விடாதிந்த வுருவோடு முடிவுசெய
வுள்குமெம் பெரியபொருளே
புலகனைத் தும்புகழ் திருப்பழநி மலைமேவு
மோங்கார குருநாதனே. ௭

கணையன்ன தாரைவிழி கொடுமெள்ள நோக்கிக்
கருத்தைக் கெடுத்தெவரையுங்
கமழ்மஞ்ச ளணைமீ திருத்தியின் னுரைதந்து
காமா கமப்படிக்குக்
கணைவளைகள் கலகலென வுபயகர மலர்கொண்டு
கைச்சரச வரிசைபலவுங்
காட்டிவத னத்தோடு வதனம்வைத் தினியநற்
கனியென்ன வுடல்சுவைத்துப்
பணையம் பறித்தவுடன் மனைவிட் டகற்றும்
பகட்டிகளி னட்பொழிஇப்
பரமான நின்னையே நினையுமொரு நெஞ்சமென்
பானியிர வருடியாண
ருணர்வற்ற பதகருக் குதவாத தெய்வமே
யோதரிய வேதமுதலே
யுலகனைத் தும்புகழ் திருப்பழநி மலைமேவு
மோங்கார குருநாதனே. ௮

அல்லேலறு முகிலொன்று நின்றேரரைக்கடிகை
யாசார மாரிபெயினு
மாயிரங் கிரணங்க ளவிரநிமை நேரம்விண்
ணனலிகன லைச்செய்யினும்
வல்லாண்மை தெவ்வுளும்வங் கூழிமைப் போதெங்கு
மல்கிவிற லாவீசினும்
வாரிதிகள் கிஞ்சித்து மூனைகொளினு மிப்பெரிய
வையக மிருக்குமோவிங்
கெல்லாமு ணக்கினைக் குள்ளா யிருந்தவை
யிருக்கின்ற பேருதவியை
யெண்ணும னன்னடவை நண்ணும னுன்னடிக
ளெந்நாளு முன்னுதிகே
யுல்லாச மென்றுலக மயலினுழி தருமண்ணோ
யோயானும் யாவுமுணர்வோ
யுலகனைத் தும்புகழ் திருப்பழநி மலைமேவு
மோங்கார குருநாதனே. ௬௯.

உலகிலெச் செல்வமுந் தவவிழுப் பத்தினு
னுண்டாகு முன்பினுக
வுறவுள்ள துன்பெலா நீதிமு னநீதிபோ
லொழியுமென் றிறைவனூல்கள்
சொனும்வண்மை யானுமற் றுத்திபநு பவமெனச்
சொல்லளவை யானுமந்தத்
துகளறு தவத்தினின் றுஞ்செல்வ மிலையென்று
துணிவதுந் தவமானது
நலனற்ற பொய்யுரை வியர்ப்பிவைக ளாலழிவு
நண்ணுமென வுய்த்துணர்வது
நாளுளு நற்றவத் துயர்வதுந் தவமுள்ள
நல்லவர்க் கேயுண்டிநா

ளுலகின்ற வெற்குமவ் வூழுள்ள தோசெலா
யுரனருண கிரியடிகளே
யுலகனைத் தும்புகழ் திருப்பழநி மலைமேவு
மோங்கார குருநாதனே. கரு.

## திருவேரகம்.

சீர்மல்கு வாதுளச் சுருதிறுவல் வண்ணஞ்
சிறப்புள்ள பிரதமமகா
சிருட்டியின் மகேசுர ருளக்கமல மதினின்றோர்
திவ்யபிர மக்குழவியா
யேர்மல்கு தேவர்தொழ வெளிவந்தவ் வீசுரர்க்
கினியசுத னய்நின்றுமே
லிடையிடை மகாவிற லுருத்ரர்பெரு மானு
லிழைக்கின்ற வெகுவிமோதகச்
சார்மல் கவாந்தர சிருட்டியிற் சீகண்டர்
தன்குமர னென்னவந்து
சத்யசன் மார்க்கவடி யாரைப் புரந்தருள்
சதாசிவப் பொருளேதுரால்
வேர்மல் ககங்கார விடபியா நிற்குமெனை
மெய்யடியில் வைக்கநினைதி
விரமுள தேவர்தவ மேவுறுவர் தொழுதகதிரு
வேரக மமர்ந்தவேளே. க.

தந்திர மிழுற்றுசிவ சாதாக்கி யமுநற்
சதாசிவமு மீசானமாய்த்
தாவறு மமூர்த்திசா தாக்கியமு மீசனுஞ்
சத்தியோ ஜாதமுகமாய்

வந்தனைகொண்மூர்த்திசா தாக்யமும் பிரமீச
னுந்தளிம வாமமுகமாய்
மாசுதீர் கர்த்ருசா தாக்கியமு மீசுரனும்
வளர்தென் னகோரமுகமா
யிந்திரக் கன்மசா தாக்கியமு மீசான
விசையனுந் தற்புருஷமா
யிகலின்*மா சாதாக்கி யமுமந்த மூர்த்தியு
மிசைந்தவொ ரதோவதனமாய்
விந்தைதர நீவடிவு கொண்டமுறை யுயிர்களின்
மேல்வைத்த கருணையன்றோ
பிரமுனி தேவர்தவ மேவுறுவர் தொழுதிரு
வேரக மமர்ந்தவேளே. உ

பெரிதாய புவனகா ரியநிமித் தங்கிரியை
பேதற்ற ஞானமிச்சை
பிரபாவ வாதியம் பரையென்னு நாமம்
பிறங்கைந்து சத்திகளுட
னரிதாய சிற்சத்தி கூடியொ ருகுமிவ்
வாறுமே யுனதங்கமா
யவிராளி யறியாத வாதிகட் குன்றன்மை
யறிவதற் கெளிதாவழா
வுரிமைகெழு ஞானமு முலப்பற்ற கிரியையு
முறங்குயிர்கள் கண்ணில்வளர்வா
னுணர்வுகிளர் தெய்வானை வள்ளியெனு மிருவரையு
முபயபக் கத்தமர்த்தி
விரிவாய கருணையொ டிருக்குமென் னப்பவென்
விண்ணப்ப மங்கிகரியாய்

---

* மாசாதாக்கியமென்றது, சிவதாதான்மிய சிற்சக்தியிற் பத்தி லொருகூறு வலியுள்ள சத்திசம்பந்தமாய மஹாசாதாக்கியத்தை.

வீரமுள தேவர்தவ மேவுறுவர் தொழுதிரு
வேரக மமர்ந்தவேளே. ௫

எவ்வுயிரு மெம்முயிரி னுளவென்னு முண்மைதனை
யாவருமுணர்ந்துய்யுமா
றிகல்பெற்ற விஜயன்கை வில்லடியி னானுதல்
லெழிலுற்ற வரிமர்த்தனன்
வெவ்விய வணிப்பிரம் படியானை மழிவித்த
மாதேவ னைபெரியோன்
மவ்வுயிர்த் தொகைகளுக் குரியவநு பவநன்கு
மல்கவென் றுமையைவாம
சவ்வியத் தைக்கியஞ் செய்தனன முறையையுன்
சண்முகத் தொன்றாகவே
சார்ந்துநிற் கக்கொண்ட கோலநிலை யோராத
சதியர்க்கு மெற்குமிந்நாள்
வெவ்வினை விளாதவிளை வெத்தனைகொ லெத்தனைகொல்
வித்தகப் பத்தர்பதியே
வீரமுள தேவர்தவ மேவுறுவர் தொழுதிரு
வேரக மமர்ந்தவேளே. ௬

எம்முடைய வடிவினிற் புராதனக் கோலமே
யிக்குழவி யாயதென்று
மெமக்குமிம் மூர்த்திக்கு மெக்காலு மொருபேத
மின்றிந்த மூர்த்திதன்னைத்
தம்முடைய புந்தியிற் கருதிநனி போற்றினோர்
தாழ்வற்ற சீருமறிவுஞ்
சாயுஜ்ய பதவியும் பெற்றுய்வ ரென்றுமச்
சம்புவே வாய்மலர்ந்தன்
றும்மென்னு மக்கரத் தானுமை யெனப்பெய
ருறும்பனைக் குரைசெய்ததை

யோதுமுயர் காந்தமுமி வுண்மையுண ராதவர்க்
கோதிலிதை யென்விவாத
வெம்மையற் றுண்மையுணர் வாம்விபுத ரறிகின்ற
மெய்ப்பரஞ் சோதிவடிவே
வீரமுள தேவர்தவ மேவுறுவர் தொழுததிரு
வேரக மமர்ந்தவேளே. ரு.

கோதற்ற நிருவாண தீக்ஷையின் மூப்பிளமை
கொள்ளமுறை யில்லையொல்லாக்
கோணெதறு மந்தவுயர் தீக்ஷையிம் மூர்த்திமுன்
கோடலெளி தாகுமென்று
தீதற்ற வுயிர்கட் குணர்த்திடு நிமித்தமுஞ்
செறியருளின் மேனுவன்ற
செயனனி விருத்தியுற வென்றுமுக் கட்பரன்
சிஷ்யபா வஞ்செய்தவோர்
நீதத்தை யுணராத வுணர்வுமுனே யறியுமோ
நிகரற்ற வின்பவன்பே
நித்யபரி பூரண வெகண்டசிவ நிட்டையி
னிலாவேக பரமசாம
வேதத்தி லேசுப்ர மணியோ மெனக்கிளரு
மெய்ம்மொழிக் குரியபொருளே
வீரமுள தேவர்தவ மேவுறுவர் தொழுததிரு
வேரக மமர்ந்தவேளே. சு.

எங்கணு மிருந்துமறை வாயபா வஸ்துவை
யென்றுதன் னநுபவத்தி
லெய்தவொரு வன்கூடி யறிவனோ வப்பொழு
தெழும்புமா நந்தவடிவே

சங்கரன் சுதனை சிவசுப்ர மண்யபிர
சந்நமென் றறிவரறிஞர்
சாற்றுமிப் பொருணிட்க ளாதித வுண்மையைச்
சாருமென நானுமறிவேன்
மங்கள குணாளகுக வித்தீர்வை பற்றியிலை
மறைகா யெனக்கணித்து
வழுத்துவ தலாதன்னை நாதன மெனப்பன்ன
வாயில்லை சிறுவரையுமால்
வெங்கணர வச்சிர சழுங்கநட மாடுசிகி
மேனிலவு மாணிக்கமே
வீரமுள தேவர்தவ மேவுறுவர் தொழுதிரு
வேரக மமர்ந்தவேளே. எ.

பலநிறக் கோக்களின் பால்களெல் லாநிறப்
பண்பினா லேகமாகப்
பார்க்கின்ற தெய்வநற் சைவத்தின் மூர்த்திகள்
பலருளா ரெனினுமுண்மை
கலையாவொர் நீர்மையை யுணர்ந்துமுன் கிருபையைக்
கௌமார சமயமென்னைக்
கழறுவார் பேதப் படுத்தியிங் கப்படிக்
கழறினூஉ மென்னசைவ
நிலைகுறையு மோவைந்து மாறுமொன் றென்றுள்ள
நேர்குறையு மோசொன்னவா
நிஜநிலையி லென்னைவாழ் விக்கவரு தெய்வமே
நிபிடவின் பப்பிழம்பே
மெலியாத தத்துவக் யாணிக ளகந்தோறு
மிளிர்பரஞ் சோதிவடிவே
வீரமுள தேவர்தவ மேவுறுவர் தொழுதிரு
வேரக மமர்ந்தவேளே. அ.

சத்தாய தானே யசத்தா மசித்தினுஞ்
சதசத் தெனுஞ்சித்தினுஞ்
சகைலற்ற வத்துவித சத்தத் திரண்டற்ற
தன்மையா நிற்குநிறைவே
முத்தனை வினைமுகை துமிக்கவுள சித்தனை
மோனவா னந்தமுகிலே
முத்தொழில் களுக்குரிய கர்த்தனை யென்சன்ம
மூலகளைய வருமத்தனை
சித்தநிலை யறியாத சிறியனுக் கந்தநிலை
சித்திக்க வறிவுணர்த்திச்
சிற்ககன வட்டத்தி லேமறைந் தந்தனை
தெவுளுமே னிலையளித்தாள்
வித்தைப் பெருங்கட லகத்திய னகத்தினியிர்
வித்தக விலாசவிண்ணே
விரமுள தேவர்தவ மேவுறுவர் தொழுதகிரு
வேரக மமர்ந்தவேள்ளே. சக.

மின்னெறியு மணிமேயாக நிறைமௌலி யாறினும்
விளங்குபிர காசமல்க
வீரமுள வாகுவணி பளபளென மின்னியுயர்
விண்மணெங் கும்பிறங்க
வன்னமென் னடைபயிலெ னன்னையிரு வருமினிய
வன்புகெழு மொழிகள்பன்ன
வருணகிரி முனிகண்டு பூசித்த வடிகளி
லநந்தகிண் கிணிகளலற
வன்னமயின் மீதிவர்ந் தென்னெடிய குறைதீரும்
வரநல்க நீவரவினம்
வைகலோ வாரமோ மாதமோ வருடமோ
வயசுமுடி வோவறிகிலேன்

மின்னனைத் தங்சோதி யென்னநடு வெளியிலெழு
மெய்ஞ்ஞான வாதிக்கமே
விழுமுள தேவர்தவ பேவுறவர் தொழுதிரு
வேரக மமர்ந்தவேளே. ௧௦.

## திருக்குன்றுதோரூடல்.

நாலத் துதிக்கும்மை யம்பஞ் சுவைத்தபிறு
ஞூமிக் கயின் றுவாய்மை
நவிழும்பா ரகலியம் போல்வளர்ந் தழிவான
நலபெது மழியாவெனக்
அலைத் தமாலத்தி லேதுயின் றேழுறையை
யயனும் புகழ்ந்தவுன்சே
வடியொன் றலாதுபிற தெய்வந் தொழுபன
தளித்தவருள் போலின் றுமென்
காலத்தை வாளா கழிக்கா ததீதசிவ
கைவல்ய மருவவருளாய்
கல்லாமணக் கெட்டாத வில்லனை விரிந்துமெய்க்
கண்ணுளர் காணுமாறு
மாலைத் துணங்கறலு நீமத் திவாவுமின்
மகாநிட்டை நிலையில்வருவாய்
மங்காத வின்பர்செழி குன்றுதோ ரூடல்வதி
மஞ்சார் பெருந்தகையனே. ௧.

ஆச்சரிய வுலகங்க ளத்தனையு முண்டுசெய்
தங்கிங் கெனுதவண்ண
மகண்டமா நின்றுமுக் காலுமழி வற்றசத்
தாயுள்ள பரமபதியே

தீச்செய றணர்ந்தோர் தேடுகுரு மணியே
சிறந்தவளி கொடுவந்துநீ
செங்கழைச் சாறோ கனிந்தமுக் கனியோ
திரண்டகண் டோவமுதமோ
காய்ச்சியுற வுற்றிய பயத்திலின் சக்கரை
கலந்துசெய் துள்ளபாகோ
கட்டிமக ரந்தமோ வென்னவொரு மொழிசொலக்
கருணையி னுணர்ந்ததனைநான்
மாச்சிறுகு விபுலைவாழ் வைத்தள்ளி விழிமூடி
மௌனியாய் வாழ்வதெந்நாண்
மங்காத வின்பர்செறி குன்றுதோ றுடல்வதி
மஞ்சார் பெருந்தகையனே. ௨.

அப்புமிலை சடையனன் பர்க்கினிய வன்பநின்
னடியவர்க் கெளியவன்பே
ராநந்த நடனவடி யிச்சையோ மிகவெனக்
கங்ஙனே வஞ்சநெஞ்சஞ்
செப்பொன் றெழுப்புமுன மெண்ணிலா விடயங்கள்
சிந்தித்து மலைகிறதிதைத்
தேற்றியென் வலிகொண்டு மாற்றிவிட் டானுநற்
செங்கதிர் மறைந்தகங்குல்
கப்பியபி னுண்டுசய னிக்குமப் போழ்தென்
கருத்தழிய மதிமருண்டு
கண்டனவுங் காணாத னவுமாம் விகாரங்கள்
காணிலைமை யோயவிலையே
மப்பற்ற கூவலர்கண் மனதுகுடி கொண்டநீ
வந்துசரி பண்ணவேண்டு
மங்காத வின்பர்செறி குன்றுதோ றுடல்வதி
மஞ்சார் பெருந்தகையனே. ௩.

நிலையாத விக்காய முயிரோ டிருக்கும்வரை
நெடியபிர பஞ்சவெளியா
னிதிகிஞ் சித்துமின் றநியாய மேதேட
நேருமென் றிச்சரீரந்
தொலையவொரு தந்திரம் பண்ணவென் றுனுமென்
சொல்லுக் கடங்காமனந்
துடித்துவா திக்கிறது பிறிதொரு நினைப்பேபெறு
தோற்றத்தி னுட்டுப்புடைத்
தலைவனம் பாலபயம் வைத்துமா னவயோனி
தனினுழைத் தெனைநினையெனுத்
தந்தவுட னிங்குமெனி னெந்தவுடல் வாய்க்குமோ
சரியன்றி தென்கின்றது
மலைவில்குக சம்புவா முனைநம்பு வோருமிம்
மாதிரி மயங்கன்முறையோ
மங்காத வின்பர்செறி குன்றுதோ ருடல்வதி
மஞ்சார் பெருந்தகையனே. ௪.

அல்லிருளை யொத்தவள கக்கொப்பி லேயணியு
மணியிலே பணியிலேமை
யஞ்சனக் கீற்றிலே கிஞ்சுக வுதட்டிலே
யம்பகப் பார்வைதனிலே
பல்லிலே சக்கரைச் சொல்லிலே வட்டப்
பறம்பிலே கண்டையிட்ட
பட்டுவட் டத்திலே பட்டையனை ஞாணிலே
பாதசா லக்குழகிலே
கல்லனைய மனமுங் கரைந்திட நடந்துகை
காட்டிப் பகட்டறனிலே
கதுமெனவெ னெஞ்சுசென் றுனைமறந் திழிகரைசக்
கடலிடை யழுங்கலமோ

மல்லையுற் றறுதின மனத்தையுன் பானன்கு
வைக்கவரு டந்துகோடி
மங்காத வின்பர்செறி குன்றுதோ ருடல்வதி
மஞ்சார் பெருந்தகையனே. ரு.

வண்ணமுண்ட யொருதுரும் பாலமரர் வலியெலா
மக்னமடை யப்பண்ணியு
மழுமிருக முழுவையதண் மதகரிப் போர்வைபிறை
வாரியர வந்தரித்தும்
விண்ணவ ரலக்கணற வென்றுபெரு முந்நகரம்
வேவமுறு வல்விளைத்தும்
வேதனரி யுந்தேடி யறிவரிய பேரொளி
விரித்துமுள வொருவன்முன்னே
தண்ணவக் குடையனின் றலர்விடுத் தானெனுஞ்
சரிதமிவ் வுலகிலுளதேற்
சருகனைய வெற்கந்த மதனஞ்சு வன்கொனுன்
றண்ணளி கிடைக்குமாயின்
மண்ணவரும் விண்ணவரு மென்வய மெனச்சொல்ல
வாயுண்டு வாழ்வுமுண்டே
மங்காத வின்பர்செறி குன்றுதோ ருடல்வதி
மஞ்சார் பெருந்தகையனே. சு.

குடைய்விதி விகாரவுரு வின்றியெவை யுங்கண்டு
கொள்சர்வ சாட்சியாகிக்
கோவர ரெவர்க்குமிறை யாயெக் கழுத்தமுளர்
கொள்கைக்கு மோர்குரவனுய்க்
கலிவிஞ்சு கலியுகந் தனினுமங் காமகிமை
காட்டுமொரு கர்த்தவ்யமாய்க்

கவினொடு விளங்குபுள வென்பரம தந்தையே
கருவெல்லு முன்னையுள்ளிநான்
மெலிநீர்மை யைச்சிறிது மறியாத மக்கள்போல்
வியனுள்ள மினுமிருப்பின்
மெய்யடிமை யாகிநா னுய்யுநிலை மேவுநல்
விரத்தியுந் தானெய்துமோ
மலினமன மானதுந் தூலையொத்து நிற்குமோ
மாயுமோ வீணிலந்தோ
மங்காத வின்பர்செறி குன்றுதோ றாடல்வதி
மஞ்சார் பெருந்தகையனே. ௭.

ஆர்கலிச ணீர்சுவற வசலவன் சிலைதுகள்க
ளாகியா காசமூச
வண்டபகி ரண்டமெனு மண்டைகள் குலுங்கவிற
லட்டமத கரியிரட்டப்
பார்முழுது மொருதலைப் பாரமாகக்கொண்ட
பவனரா ஜேந்த்ரனெளியப்
பலபணை விண்மீன முதிரத் தயித்திய
பதாதியிறை நெஞ்சமஞ்ச
வேர்மல்கு நெடியசதம் வீசிப் பறக்குமயி
லேறுங் குமாரவீர
வென்றைக் கெழுந்தருளி வருவையோ வென்றலையி
லிணையடிப் பூவையிட்டு
வார்நிலையி லெந்நாளு மெம்மடிமை நீயெனு
வாய்மலர்ந் தமுதுநல்க
மங்காத வின்பர்செறி குன்றுதோ றாடல்வதி
மஞ்சார் பெருந்தகையனே. ௮.

நாலாறு தீக்குணமு மாயாத வன்மனதி
னாலேல் விளைந்தவிடலை
நல்லருட் பார்வையெனு மழைபொழிந் ததிலென்னை
நனையவிட் டெக்கழுவியன்
பாலே யணைத்துநின் பாலிலை யிருத்திமெய்ப்
பாலைப் புகட்டியந்தப்
பாலினது மகிமையிற் போதங் குளிர்ந்துபொற்
பண்பெறி யுற்றதேகங்
கோலா சலம்போல வேதிமிற வைக்குமொரு
கொள்கையெனை யென்றுகுறுகுங்
கோதற்ற செல்வச் சிரோரத் னமேவைத்த
குறியில்விரி யறிவுவெளியில்
வாலாமை யின்றிப்ர காசித்து நிற்பவர்கண்
மருவுபே ரின்பவைப்பே
மங்காத வின்பர்செறி குன்றுதோ ருடல்வதி
மஞ்சார் பெருந்தகையனே.. கூ.

மின்னுயி னும்வந்து வந்தவெ ளொளித்திடும்
விடக்குட லொரீஇயாவி
வெளியேறின் மீண்டுமதி லேவருவ தின்றிதனை
மெய்யென் றிருந்துசெளரி
தன்னுணை யின்படி பிடிக்கவுட் பட்டுறுவல்
சானிலையி னுழலவோ
சராகவுல கினரிவன் பேயனோ பித்தனோ
சனியன் பிடித்தவுயிரோ
வெந்நாளு மறிவற்ற பேதையோ வென்றிகழ
வெம்பிரா னுன்னைநாடி
யிகத்தைத் துறந்துதற வறவிருஞ் செல்வத்
திருக்கவரு ளாய்கொல்விபுதர்

மன்னார் குழாமடு கணாளதிரு வருணகிரி
மனதுக் கியைந்தகுருவே
மங்காத வின்பர்செறி குன்றுதோ றாடல்வதி
மஞ்சார் பெருந்தகையனே. ௧௦.

---

## திருச்சோலைமலை.

---

பரியேற நினையொருவன் முதுகேற வலியற்ற
பண்புபோ லுன்பதத்தைப்
பார்க்கவதி மோகுற்றம் மார்க்கநெறி யறியாது
பலவித நினைந்துருப்ப
வெரியின்மெழு கெனவுருகு கின்றே னதற்கொர்தடை
யிலைகொலோ நின்கணான்னை
யேழைபங் காளனென் றோதுமுறை மைக்குநீ
யென்னவகை சொல்வைபெரிய
பரிவொடு திருக்கரத் தாலெனை யணைத்தெனது
பருவர லகற்றியருளாய்
பாரப் பணாமகுட சேடனைச் சிறுவிரற்
பணியா மிலைந்தகரிய
அரியலம் பிகையருட் டொண்டர்கற் கண்டெனுஞ்
சுகவருட் கருவூலமே
தோகைமயி லேறிநட மாடுவள நீடுநற்
சோலைமலை மேவுகுகனே. ௧.

பேசரிய நிர்க்குணப் பிரமமென் றோதிடிற்
பெரிதான வண்டநிரையைப்
பிறப்பித் திரட்சித் தழிக்கின்ற பெற்றிகள்
பேசச் சரிப்படாவொண்

டேசுடைய சகுணமென் றேதிடின் விகாரங்கள்
சேருமத் தன்மயங்காச்
செல்வமெனு மத்துவித முத்தியொன் றுண்டெனச்
செப்பச் சரிப்படாதோ
நேசிற வுரைக்குமிவ் விருதிறத் துட்பகுதி
யின்குணமதே சகுணமஃ
தின்னிலையை நிகமநிர்க் குணமென்ற தாகுமிதை
யேயீச னெண்குணமெனச்
சூசனைசொல் சைவநூ லும்பகர்ந் திடுமெனத்
துணியுமெற் கிருதெய்வமோ
தோகைமயி லேறிநட மாடுவள நீடுநற்
சோலைமலை மேவுகுகனே. உ.

எத்தனை வகைத்தூய வொளிகளொரு சேரினுமொ
ரிரவியா காவன்னண
மெவ்வளவு புத்தேள்க ளிவ்வுல கிருப்பினு
மிழுக்கில்சிவ சத்தத்தி
லத்துவித குகமுழக் கத்தி லிலகுனக்
கணுவுமிணை யாகாவெனற்
காசங்கை யெட்டுணையு மில்லையது போலுன்ற
னருண்மொழி வரங்கண்மந்த்ர
நித்தநிலை மைக்கோவி னீள்புண்ணி யஞ்செல்வ
நெறிஞான நிலையுமென்று
நிதானிக்க வல்லுவரு னருண்ஞானி கட்கெந்
நிலத்திருடி முனிவரேனைத்
தொத்தருஞ் சமமெனச் சொல்வரோ வத்தகைய
சொத்துவ மெனக்கும்வருமோ
தோகைமயி லேறிநட மாடுவள நீடுநற்
சோலைமலை மேவுகுகனே. ௩.

கோடரம் போலொன்றி லேயிருந் தொன்றிற்
குதித்துழி தருஞ்சிந்தையேன்
குதிகொளக் கோடரம் யாதொன்று பற்றுமொரு
கொள்கைபோ லென்றனிதயப்
பிடரத் துளவுனைப் பற்றிப் பிடித்தபிடி
பிறழாது நிற்கவறியேன்
பெண்டுகள் புலம்பல்போ லேபுலம் பிடவிப்
பிதற்றுமட் டுங்கற்றுளே
னேடரிய நின்றிரு வுளத்திவனு நமையே
நினைக்கின்ற பிராணியென்னு
நிதானித் தநுக்ரகித் தான்மட்டு முய்யுநெறி
நிகழுநின் கிருபையாதோ
சூடக மடந்தைமய னஞ்சென வகன்றவர்
சுவாமியா யுள்ளபெரியோய்
தோகைமயி லேறிநட மாடுவள நீடுநற்
சோலைமலை மேவுகனே. ௬.

அநிரத புரத்தினைத் தனதுடைமை யாநம்பி
யபலமா முலகநடையை
யநுபவஞ் செய்துசுக மடையலா மென்றுநா
ளவம்விடுத் திறுதிநாளிற்
பனியிரவி முன்னின்ற பண்புறழ வந்தகன்
பரிசனமு முனிலாது
பரிபூர ணாநந்த ஞானப்ர வாகப்
பரப்பாமு னடிநாடுபு
தனியே யிருந்திரும் பொத்தவென் னெஞ்சமது
சலரூப மாய்க்கரைந்து
சடமாய மெய்விதிர் விதிர்க்கக் குழைந்துகட்
டண்ணீர் பெருக்கெடுக்கத்

தொனிசெய்யு நாத்தழு தழுக்கநல் லன்பிலே
சொக்கிக் கிடக்கவருடி
தோகைமயி லேறிநட மாடுவேள நீடுநற்
சோலைமலை மேவுகுகனே. ௫.

கொடுமைநோ லாமைவந் தணுகா தகற்றுநற்
குணமெனுங் கோடிசுற்றிக்
குவலயம் புகழுநின் றிருவடிகண் மறவாத
கொள்கையங் கியையணிந்துன்
னடியவர வருக்குநா னடிமையெனு மாநந்த
மாமங்க வத்திரம்பூண்
டந்தணர் சதாகால மாநனி விரும்புமரு
ளாயமுண் டாசுகட்டிப்
படர்மோன மென்னுநெற் றித்திலத மிட்டரிய
பாவனச் சோடுதொட்டுப்
பகைஞரெவ ருங்கண்டு வெருவுறத் துறவறப்
பாக்கியக் கோல்பிடித்துச்
சுடர்பரவு மேலூர் விலாசகோ சத்திலே
சுற்றிநான் வருவதென்றோ
தோகைமயி லேறிநட மாடுவேள நீடுநற்
சோலைமலை மேவுகுகனே. சு.

அலைகடலி லுய்புயிரை யெண்ணினும் விண்ணிலே
யடருடுக் களையெண்ணினு
மகிலநுண் மணல்களைக் கணிதமது செயினுமே
மூழியளவைச்சொல்லினு
நிலையான வுலகம் படைத்தகா லெல்லையை
நிதானிக் கினும்புடவிமே

னெட்டுட லிழுந்தவனா யோதினு மிழக்கவினி
நிற்பர்தொகை கண்டறையினும்
புலராத தீவினைய ரெய்தியம தண்டனைப்
பொலிவையொரு கணிதமிடினும்
புலன்வழி புகுந்துதிரி தருமனக் கள்வனின்
போக்கைக் குணிக்கொணாதே
தொலையாத வாணவ வனத்தையரு ளெரிகொண்டு
சுட்டுத் தகிக்குமழலே
தோகைமயி லேறிநட மாடுவள நீடுநற்
சோலைமலை மேவுகுகனே. ௭.

மாமேவு ஞானம் பயந்தமக டூஉவை
மாதவத் துப்பணினது
பலரடி பணிந்துகுற மகளழ குளாளென்ன
மதர்மனங் கனிவுற்றுநீ
காமேவி வெற்பினுறை கானவ னுருக்கொண்டு
கதிர்செறி தினைப்புனத்திற்
கன்னியர் சிகாமணி வனப்பையிரு கண்ணினுங்
கண்டுமயல் பொங்கியின்பச்
சீமேவு சிவயோகி வடிவொன் றெடுத்துத்
திருட்டுத் தனங்கள்செய்து
திருமண முடித்தவரு ளாக்கச் சிறப்பையெவர்
சிந்தித்து வாழவறிவார்
தூமேவு தொண்டரறி வாரதனை யிப்பெரிய
தோஷிக்கு மென்றருளுவாய்
தோகைமயி லேறிநட மாடுவள நீடுநற்
சோலைமலை மேவுகுகனே. அ.

தொந்தபந் தத்தினை யகைத்தவழி ஞர்க்கினிது
சுடரொரு சிவக்கொழுந்தே
தொலையாத வுற்பவப் பிணிதொலைய வெதிர்வந்து
தோன்றுமரு மாமருந்தே
யந்தமடி யற்றசிற் பரவெளியி னிகழுமோ
ரகமினிக் குங்கரும்பே
யன்பர்க ளுளப்பதும மலர்நடுவி லூறுமின்
னளியருந் திடுசுரும்பே
யெங்கெந்த நெறியிடை யிறங்கிவழி பட்டவரு
மீடேற வருவிருந்தே
யிடைவிடா துன்னைநா னெண்ணியெண் ணிச்சித்த
டனுங்குரு டொழிந்துகண்டே
தொந்தனை யிலாதசுக முஞ்சுகா தீதமுஞ்
சொந்தமென நிற்கவந்தா
டோகைமயி லேறிநட மாடுவள நீடுநற்
சோலைமலை மேவுகுகனே. கூ.

தக்கோர்கள் சந்ததமு முழுகுசிவ கங்கையிற்
றலைமுழுகி யுள்ளூரிலே
தகையாக மலர்திவ்ய மலர்களை யெடுத்தரிய
தலமெனும் புலியூரிலுன்
பொக்கமி லடிக்கணெழி லர்ச்சனை புரிந்தெனது
புந்தியி னினைந்தவெண்ணம்
போலநிறை வேறிநல் லாநந்த மண்ணவருள்
புரிவதினி யென்றுபுகலாய்
சக்ரதரன் முதலான புத்தேளிர் சுகர்வாமர்
தசரத விராமன்மொய்ம்பு
தங்குமுசு குந்தனுஞ் சந்தமுனி யெந்தையுஞ்
சாலவந் தித்ததேவே

துக்கமண வாதபர தத்வப்ர காசமே,
சுத்தவெண் குணவஸ்துவே
தோகைமயி லேறிநட மாடுவள நீடுநற்
சோலைமலை மேவுதகனே. ௧௦.

## திருவிராமேச்சுரம்.

திருவளர் சதாசிவ சொரூபமா யவிர்கின்ற
சிவலிங்க வடிவத்தையென்
றிட்டிகண் டிடுபோது நங்கடவு ளிதென்று
சிந்தனைசெய் தைந்துமுகமோ
டுருவள ரதோமுகமு மாகநனி பாவித்தெ
னுள்ளநடு வினுமமர்த்தி
யுபயமின் றேகமா நோக்குமென் னோக்கமிந்
தள்குமா றருள்செய்வையே
லருளினை வியந்துகவி பாடுவே னாடுவே
னாவிது விசித்ரமென்பே
னானந்த மானந்த மென்றுகுதி போடுவே
னன்பர்காள் வம்மினென்பேன்
மருமலர் வனத்திலுறை முனிவர்வள் ளாலருள்
வராவிடி னியாதுசெய்வேன்
வளமொழு கிராமேசர் தளிமேலை வாயிலில்
வளர்குமர குருநாதனே. ௧.

தந்தையுந் தாயுஞ் சகோதரங் களுநல்ல
தயவாக விங்கிருந்தென்
சடமதை விடுத்தியம னுயிர்வலித் தேகெல்லை
சற்றுமுத வாராயிடை

யெந்தையெனு,நீயுதவு வாயல்ல வோவுன்னை
யெப்படி மறந்திருப்பே
னிடரீயு முன்வினைத் தொடர்பான் மறக்கினுமெ
னிதயத் திருந்துதூண்டி
வெந்தழற் சருகெனச் செய்தந்த வினையையும்
விதேககை வல்யவாழ்வாம்
வீடுபெற ஞானபர யோகினி னிறுத்தலுன்
மேலுள்ள கடமையன்றோ
மந்தமதி யுயிர்களுக் கருளுமா றின்பவருள்
வடிவான பெரியபொருளே
வளமொழு கிராமேசர் தளிமேலை வாயிலில்
வளர்குமர குருநாதனே. உ.

கம்மியர்கள் செய்யுருக் களிலுஞ் சுயம்புலிங்
கங்களிலு மாமனுவிலுங்
கயிலாச கிரியிலும் பகிரண்ட வெளியிலுங்
கனவிந்து நாதத்திலு
மும்மவுன நிபுணர்க ளினைப்பிலு மறுவன்பர்
மொய்கொண்ட பேரவையிலு
முளரிரவி மதியிலும் பசுவென்னு முயிரிலு
முயங்கிநீ நிற்பையெனினுஞ்
சும்மா விராமலே சும்மா விருக்குமொரு
சுத்தநிலை தன்னிலெற்குத்
தொடர்போ டெழுந்தருளி யெங்குநிறை வாயுள்ள
சூக்கத்தை யறிவித்தரு
மம்மர்க ளெலாமறப் புரிதிமெய் யறிவான
மதர்மழைப் பெருவாரியே
வளமொழு கிராமேசர் தளிமேலை வாயிலில்
வளர்குமர குருநாதனே. ங.

அயனரி வலாரிக ளடைந்தபவுள் செல்லா
மடங்காத வுன்பவுள்சிலை
யற்பபாகங்களென் றறைகின்ற மெய்ந்நூ
லறிந்துறுதி கொண்டதமியேன்
சுயம்ப்ரகா சத்தே சடர்ந்தசத தளகமல
சோபிதச் சரணங்களைத்
துதிபண்ணி யாளாக லாமென் றுரைதரு
சொல்வதெல் லாமறியுநீ
யுயர்கிரிக் கல்லென்ன வுள்ளமது காட்டிறு
னுய்யும்வகை யுண்டோவிதற்
கொருஞாய நீயே பணிக்கிலெற் கநுகூல
மொழியா துதிக்குமன்றே
வயவான வல்லவிற் படியாம லடியானை
வம்மினென் றெதிரழைப்போய்
வளமொழு கிராமேசர் தளிர்மலை வாயிலில்
வளர்குமர குருநாதனே. ௪.

வெடிதருங் கொடியகுண வீணரொடு பொருதுவெகு
விரவா தம்புகலவும்
வேசைகொ ளுலுத்தர்குவி கூட்டத்திலேகூடி
மிறைமிஞ்சு பழிகொள்ளவுங்
கொடிதரும் பிணிகளநு தினமுமென் னுடறனைக்
கொள்ளைகொண் டுண்டுமிகவுங்
கூழெனும் பொருளின்மேல் வேணவா வுற்றுழல்
குரங்கினுங் கேடாகவுந்
துடியிடை மடந்தையர்கண் மோகவா ரிதியிலே
தோயவு மிருந்தேனலாற்
சுவாமிபரு ளாநந்தம் வேட்டகோ ராத்திரந்
தொழுகன் கிருந்தேனிலை

மடியறு மகாஞான தேசிகா நந்தவிவை
மன்னித் தளாவியருள்வாய்
வளமொழு கிராமேசர் தளிமேலை வாயிலில்
வளர்குமர குருநாதனே. ரு.

கத்தியுங் கருதியும் பாடியுந் தேடியுங்
கண்டபடி தண்டனிட்டுங்
கண்ணீர் வடித்துமுயிர் நிலையொடுக் கியுமென்
கருத்துமுற் றுதுபற்றிச்
சித்தஞ் சலித்துனை விடாமற் பிடித்தபிடி
செவ்வனே நிற்கநீதான்
செய்தகரு ணைக்குமா றின்றெனினு மெனையே
திருட்டற்ற நின்னடிமையாப்
பத்தியொ டேகை யடைத்தே னடைத்தேன்வி
பாதமுத லடைதலந்தம்
பண்ணுகுற் றேவல்களை யிட்டருடி யினியெனது
பாழ்த்தநெஞ் சாறுயினேன்
மத்தியி லெதேனுமிறை செயினுமன் னிப்பதுன்
மாட்சிமைக் குரியகடனே
வளமொழு கிராமேசர் தளிமேலை வாயிலில்
வளர்குமர குருநாதனே. சா.

பரமனருண் மொழியாய ரெளரவச் சுருதியின்
பனிரண்டு சூத்திரத்தைப்
பற்றியுள தென்மொழிச் சிவஞான போதநற்
பனுவற் பொருட்கியைந்த
திருவுந்தி யார்நெஞ்சு விடுதூது சிவஞான
சித்தியார் * மெய்விளக்கந்

* மெய்விளக்கம்=உண்மைவிளக்கம்.

திருவருட் பயனுண்மை நெறிவிளக் கம்புகழ்
சிறந்தவிரு பாவிருபது
சாதநுவல் * பஃறொடை கொடிக்கவி சிவப்ரகா
சம்வினா வெண்பாவுரன்
றருகளிற் றுப்படி † நிராகரண மெனுமினிய
சைவசித் தாந்தநூல்கண்
மரபாய் விளக்குநெறி தெளிவே மயக்கன்று
மனம்வைத் தம்முடிவையருள்வாய்
வளமொழு கிராமேசர் தளிமேலை வாயிலில்
வளர்குமர குருநாதனே. ௭.

முத்தமிழ்க் கடலான சீகாழி மாமுனி
முதுக்குறைவு விஞ்சுமப்பர்
முருகுகிள ராரூரர் திருவாத வூரார்
முடங்குகடி பொன்பதின்மர்
தத்துவத் தெளிவுடைய பட்டினத் தடிகளுயர்
தகைகொண்ட வருணகிரியார்
தாவில்சிவ வாக்கியர் தவம்பெருகு திருமூலர்
தாயுமா னவரென்பவர்
சுத்தமுறு வேதாந்த சித்தாந்த சமரச
சுபாவமா யமுதநெறியாய்ச்
சொற்றவுயர் வாக்குகளு மென்சம்ம தத்திலா
துணிபுக் கியைந்ததுணிபே
மத்தமுடை யென்னைநீ யத்துணிபின் மாறாது
வைத்தருள வேண்டுமென்றே
வளமொழு கிராமேசர் தளிமேலை வாயிலில்
வளர்குமர குருநாதனே. ௮.

* பஃறொடை=போற்றிப் பஃறொடை.
† நிராகரணம்=சங்கற்ப நிராகரணம்.

பங்கயம் போனல்ல விழிதா னிருப்பினும்
பகலவன் வெளிச்சமின்றிப்
பார்ப்பதுண் டோவொன்றை யன்னணம் பார்க்குமது
பக்கலெதி ருற்றபொருளை
யங்கமொடு நோக்குமே யல்லாது தன்வடிவை
யறியுமோ தன்றனுவுளே
யறிவா யிருந்தம்பர் நோக்கியுள வுயிர்தனையு
மறியுமோ வையவிந்தச்
சங்கிரக மாகவே மன்னுயிர்க டம்மையுந்
தலைவனையு மறியாதெதிர்
சந்தித்த பொருளறியு மானனும் விழியாடி
தன்முன் னறிந்துகொளல்போன்
மங்காத வுன்னருட் கண்ணாடி முன்முதல்கள்
மறையாது கண்டுகொளலாம்
வளமொழு கிராமேசர் தளிமேலை வாயிலில்
வளர்குமர குருநாதனே. ௯.

கல்லினு மிரும்பினுங் கடுவயிர வாயினுங்
காசினியி னுருரிக்கக்
கற்றவர்கள் வந்தாலு மென்மனக் கல்லினைப்
கண்டுபின் னிடுவரந்தோ
சொல்லரிய நின்சரண பங்கேச மக்கலிற்
சுகமாக மலருங்கொலோ
துகளற்ற வொருகருணை புரியினை னுய்ப்பும்வகை
தோன்றுமிஞ் ஞாலவாழ்வு
நில்லா தெனக்கருதி முதனூ லுரைக்குநெறி
நிஜமென் றுணர்ந்தநுதின
நேசித்த வாருணியு நிஜவருணை முனிவனு
நிரம்பவந் தித்தபெரிய

வல்லப மிதுக்கவொர் சிதாகாச ராஜனெவன்
மனவெம்பல் காதியருளாய்
வளமொழு கிராமமேசர் தளிமேலை வாயிலில்
வளர்குமர குருநாதனே. ௧௦.

---

## திருப்புலியூர்.

அறிவான வருளுக்கு மொருபெரிய பொருளா
யகண்டமா யந்தமில்லா
வானந்த வாரமா யுள்ளநீ விரிவாய
வகிலகா ரியநிமித்தம்
வறிதிலா வைந்துமுக மாறுமுக மானாய்
மகாசத்தி யாகிநின்றாய்
வழியடிமை யானவர்க ணாற்றுயர் செகுக்கவே
வளவுவடி வேகொண்டனே
குறியாத வொருகுறிக் குள்ளிருக்க வறிவுக்
குளிர்ச்சியை யெனக்கிருப்பான்
குருவடிவு கொண்டுவர வெண்ணிறை யிலேயே
குற்சித வநந்தைமோக
வெறிநா றியோகவை வல்யசன் பயஞான
வீரப்ர தாபவரசே
வீடுதரு ஞானநட மாடுபுலி யூரில்வளர்
மீளிவடி வேலிறைவனே. ௧.

ஆதார மின்னது நிராதார மின்னதென்
றற்பமுந் தெரிவலியிலா
வசடரு மெனைப்பற்றி வசைபேசி யெள்கியதை
யறியுமே நின்றிருவுளம்

வாதாடி வாதூடி யிளையுமென் மேனண்பு
வைத்தவர்கள் கண்ணின்முன்னே
மகிமைபெற் றுன்கிணைக ளுய்ய வருடிநன்
மாமறைக் கொடியுயர்த்த
வேதா விரிக்கரும் பிரணவப் பொருள்சொலும்
வித்வசா மர்த்யநிபுண
விசிததூ ளிப்பிரிய விரதநம் புக்கினிய
விமலவின் பக்குழியமே
மீதானர் குடியையீ டேற்றிய பிரானே
விசித்ரமயி லூருமுருகே
விடுதரு ஞானநட மாடுபுலி யூரில்வளர்
மீளிவடி வேலிறைவனே. ௨.

புனுகுசவ் வாதுபூ சிக்கொள வெனச்சென்று
புழுதிபூ சிக்கொண்டது
போலவுனை யண்டிநா னுளாய தன்மையைப்
புகலவுண் னானுமிஙனே
மனமான கல்லினைத் தோணிவடி வாக்கியதை
மாண்புசா றிருவடியிலே
வார்த்துய்ய மாற்றென்று நாந்தா மறிந்திலோ
மாசிலா வவனுமறியா
னெனநா னினைத்துவிட வென்றாலு மிவ்வுலக
மீந்தபர னேமுடிப்பா
னெனவாகு மிலைநாம் விரும்புநிலை யறியா
னெனப்படர வெனினுமொருவர்
வினவாமல் யாவுமறி வாய்மற் றெவிதமென
விளம்புவே னின்கருத்தை
விடுதரு ஞானநட மாடுபுலி யூரில்வளர்
மீளிவடி வேலிறைவனே. ௩.

என்றைக்கு னருள்வந்து கூடுமோ கூடுமோ
வென்றுளந் தளருமெளியே
னிநயந் தெரிந்தநீ குழகந் தயங்குவடி
விலகவென் னருகுகுறுகி
யின்றைக்கு னெண்ணநிறை வேறிற்றெ மன்பநிற்
கினியென்ன தாழ்வெனுங்கீ
ரெப்பொழுது கண்டுகளி மீக்கொள்ளு வேனைய
விகபா மிரண்டினுக்கு
மொன்றாக நின்றருளு மொருதெய்வ மேசொலா
வுரையொன்றி லுள்ளபொருளே
யோதரிய மெய்ஞ்ஞான பானுவே யருணெறிக்
குதவாத வுட்பகையையும்
வென்றிகொண் டிலகன்ப ராதிக்க வின்பே
விவேகயோ காநந்தமே
விடுதரு ஞானநட மாடுபுலி யூரில்வளர்
மீளிவடி வேலிறைவனே. ௨.

எண்ணியவொ ரெண்ணங்கை கூடாமை யுள்ளியென்
னெண்ணமினி யேதுவருமோ
வென்றுமிக வுந்திகைக் கின்றதே குறையெலா
மெவ்வள வியம்பியுமினங்
கண்ணிலா னென்னவெனை வைத்தாய் படித்ததுங்
கருதினது மென்னபயனே
காலமெல் லாம்வறிதி லேகழித் துப்புறங்
காடடைந் திட்டமேலோ
தண்ணளி பெருக்கியெனை யாளநீ போகிறாய்
சரதவருண் மார்க்கத்திலே
சாமுன்ன மேமுத்தி சொலவில்லை யோவெனது
சைவசித் தாந்தமுதலே

விண்ணவர்கள் புணிபரா நந்தகுரு வேயாதி
விந்துநா தாதீதனே
வீடுதரு ஞானநட மாடுபுலி யூரில்வளர்
பீளிவடி வேலிறைவனே. ரு.

சலிலநா ரச்செறி வொதுக்கினவை யிருகரந்
தட்டுமுன் கூடுமெந்தத்
தன்மையினு மதிவிளைவு கொண்டுகுவி நீருள்ள
சஞ்சலக் குப்பைநாளு
மலிகின்ற வன்றிம்மி யுங்குன்ற வில்லையே
மலவிருளி னுளிருந்து
மாதவஞ் செய்யவிட மாமோ விளக்கின்றி
மையிருளி னுள்பொருளை
யுலகிலெவ ரறிவருன் னருளலா தேவர்மெய்
யுத்தியோ கத்துயர்ந்தா
ருயர்கருணை செய்துகவ லட்டிடா யருணகிரி
யுள்ளத் தமர்ந்தகுருவே
மெலிவினாற் சட்சமய தேவாகி யவைகட்கு
மேலாகி நின்றநிறைவே
வீடுதரு ஞானநட மாடுபுலி யூரில்வளர்
பீளிவடி வேலிறைவனே. சு.

---

## திருவருணை.

வேலைசூ ழிஞ்ஞால வாழ்வொரு துரும்பென்று
மேலான் வறிவைநாடி.
வெற்புயர் சுரத்தேகி விளைகந்த மூலமுதிர்
மென்சரு கயின்றெல்லிலு

மாயையினு ணிற்குநிலை பிசகா தெடுத்தடிமைப்
வருந்தவழி பட்டுநாளும்
வாழ்பவர்க ளிருதயங் குடிகொண்ட தெய்வமே
மாடுவீ டென்றுநேடிச்
சேலைதொடர் மகளிர்படு குழிதனில் விழுந்தன்று
செய்தபல் கறியுமமுதும்
திருத்திகர மாகமுப் போதும் புசித்தவிவு
திரிதர வுழன்றுதுயிலிக்
காலனின் னருள்பெறுவ தேதென மலைக்குமென்
கவலெந்த வாறுபாறுங்
கருணையடி யவர்பரவ விலகுதிரு வருணைவளர்
கருதரிய முருகையனே. ௧.

வாக்குமன தாலளப் பரியவுனை நேசிக்கு
மார்க்கங்க ளாவனந்த
வகையவையு ளுள்ளீர மின்றா னருந்தரினும்
வாழுயிர் சவட்டுவழுவுந்
தேக்குருவெழி யுண்ணிழிவு நற்சீவன் முத்தியைச்
சேர்ந்தபின் விதேகமுத்தி
சேருமுறை சொல்லாது செத்தபின் முத்தியது
சேரலா மென்றுசொல்லும்
போக்குவர வானவிழி முத்திமுடி வுகளும்
பொருந்தியுள மார்க்கங்களைப்
புந்தியிற் சிறிதுநா னங்கிகரி யேன்முன்
புகன்றவை முரண்படாமற்
காக்கின்ற சைவசித் தாந்தமொன் றேயென்
கருத்துக் கிசைந்தநெறிகாண்
கருணையடி யவர்பரவ விலகுதிரு வருணைவளர்
கருதரிய முருகையனே. ௨.

இவ்வுலகு மேலுலகு கீழுலகு பகிரண்ட
வெல்லைகளி னுஞ்சனித்த
வெப்பொருளி னும்பெருகி நிற்பதா கச்சுருதி
யெல்லா மியம்புமிடியாற்
பவ்வமது சூழ்ந்த வசுமதியி லென்றிட்டி
பட்டவரை பகலுமல்லும்
பார்த்துனைக் காணுவொர் பித்தம் பிடித்தென்ன
பணுவோ மெனச்சுலவுகால்
செவ்வனே நின்னுடை யகத்தின்க ணேக்கென்று
தேற்றிறுண் ணறிவுதந்து
சிந்தனைக் கெட்டாம லெங்ஙன மொளித்தனை
சிதாகாச பரதெய்வமே
கவ்வையற் றவ்விடங் கண்டுன் விபூதியென்
கண்ணே யிருக்கவருளாய்
கருணையடி யவர்பரவ விலகுதிரு வருணைவளர்
கருதரிய முருகையனே. ௩..

நீரிழிவு குட்டமதி சாரங் கிராணிசுர
நீங்கா வகட்டுவலிகண்
ணீழல்படு வன்கொடிய சன்னிகுன் மம்பனேய்
நெஞ்சிருமல் காசமூலஞ்
சீரிழிய வடர்வாதம் வெட்டைவிளர் சோகைபுண்
டீராத பிணிபலவுமுன்
றிருநாம மந்திரஞ் செப்பினச் செவ்வியே
செயலற்று வியுமதனை
மாரிபோ னனியுச் சரித்துப் பழிச்செனது
மனமாரி வியவில்லையே
மலிகின்ற காளிதச் செம்புறழ வுயிர்களின்
மதிதனை மறைத்தபாசக்

காரிருடறக்குமெய்ச் சோதியே யெனையுங்
கடைக்கணித் தருளகினையாய்
கருணையடி யவர்பரவ விலகுதிரு வருணைவளர்
கருதரிய முருகையனே. ச.

திரைகடலி னிமிழ்முரச மதியவொண் குடையிளந்
தென்றலந் தேர்கதலிமீன்
நீபொழுது கன்னன்முனி நாரியளி யோதையெழில்
சேர்பகழி யாலம்வரியார்
பரபிருத மெக்காள மிரதமுறி புட்கரம்
பணைநகில முளகோமளப்
பாவையர்க டந்திரஞ் சூழ்வோன் வசந்தன்ரதி
பாரியென வுள்ளமோகன்
பிரதிதின மும்பெரிய போராடி யென்றனற்
பெற்றியைப் பிரமைசெய்து
பித்தம் பிடித்தநாய் போலவே யயர்கின்ற
பிசகைநீ கண்டியாத
கரணந் தனைப்பன்ன வேண்டுமென் றேவடிமை
காதலித் திட்டவண்ணங்
கருணையடி யவர்பரவ விலகுதிரு வருணைவளர்
கருதரிய முருகையனே. ரு.

வெள்ளைமலி வெள்ளைமிலை வெள்ளைவிடை வள்ளலுடை
வெள்ளைமலை ஞெள்ளலாய
விபூதியெல் லாமருளு மபிராமி சிவகாமி
விதரணச் சித்திபலவு
முள்ளநல சித்தர்கண மெல்லாமு னடிமையே
யோங்கார வுருவமுற்றிவ்

வுலகினி லுலாவுமுயிர் முத்தரொடு பத்தர்களு
முன்னடிமை யன்றிவேறே
வள்ளிபுனை வள்ளிசுர குஞ்சரி மனோகரா
மதர்வருண கிரிபுங்கவா
வாசா மகோசர விலாசகரு ணாலயவென்
மனதிடை நிமிர்ந்தபொல்லாக்
கள்ளவலி காதியுய ருள்ளந் தனைத்தந்து
கரிசற்ற நிலையில்லையாய்
கருணையடி யவர்பரவ விலகுதிரு வருணைவளர்
கருதரிய முருகையனே. கா.

---

## திருக்குமரகோட்டம்.

நீரகங் கொண்டவா வர்த்தமிக் கனியா
நெருங்கித் தவழ்ந்துலாவா
நிற்கும் பரங்கிரியு மம்பணங் கந்தியிலை
நீள்கேளி குலைகள்சாய்க்கக்
கோரகைகண் முதலிய பதங்கங்க ளாளுங்
குலாவவுள செந்தினகருங்
குயிலரிய தகுதியோ ருறைபழநி மலையுங்
குளிர்ந்தசெங் கமலமவிழு
மேரகமு முயர்குன்று தோறாட லும்புவன
மெங்கும் புகழ்ந்துபரவ
விலகுமொரு சோலைமலை யுந்தமிய னேனெஞ்ச
மென்றுநீ குடியிருந்து
கூரலு னந்தபுத் தாளினன் றேவுனைக்
கூடினே னென்றுவப்பேன்

கூற்றனுயி ருண்டபர மேட்டிசுத னென்குமர
கோட்டம தமர்ந்தகுகனே. ௧.

உற்றவுட னீர்மையா லுன்றனக் கடிமையென்
றுள்ளிநற் பணிபுரியவு
முலவிலரு சிவனெனு நீர்மையான் மலைவற்ற
வுனதமிச மாநின்றுசீர்
பெற்றுயவு மத்துவித மெனுநீர்மை யாலே
பிரித்திரண் டொன்றெனாது
பேசரிய சின்முத்தி னைத்துணிவி னிற்கவும்
பேதையே னுகியருளான்
முற்றுபொழு தன்றோ வெனக்குள வியாகாத
மூலந் தமிக்கவெங்கண்
முதன்ஞான வெய்யோ னுதித்தா னெனப்பறை
முழக்குவேன் யாருமறியக்
குற்றமில் சதாநந்த சிற்சபையி னிர்த்தமிடு
குழகா வநாதிமழவா
கூற்றனுயி ருண்டபர மேட்டிசுத னென்குமர
கோட்டம தமர்ந்தகுகனே. ௨.

புலன்வென்ற சிவயோக வாட்டியர்க ளுறழ்விற்
பொதிர்ந்துவெளி யாகின்றநீ
புன்பத்தி யொல்லுநர் கடைத்தேற வானிப்
புவிப்புலத் தங்கங்கெழி
லிலகிடு திருக்கோவில் கொண்டுற்ற கருணைதனை
யெண்ணியோ சிக்கினிங்கே
யெவருக்கு மருளுறு தென்னலா மிப்பெரிய
வீரத்தி லங்கியன்போல்

விலகுவது நான்மட்டு மெந்தவித மெவ்விதமு
மேவுவது திண்ணமன்றே
விசேடமண் ணாதிபர நாதபரி யந்தமா
விரியுமுப் பத்தாறினுங்
குலமற வளாவியவை கட்குமப் பாலிலவு
கோதற்ற பரமபதியே
கூற்றனுயி ருண்டபர மேட்டிசுத னென்குமர
கோட்டம தமர்ந்தகுகனே. ௬.

ஒருகொம்பி லேயிருந் தொருகொம்பி லேதவ்வி
யுழல்கின்ற வானரம்போ
லொன்றினை நினைந்துமற் றொன்றினைக் கருதுமன
மோயுமா றமலயோகம்
புரிகின்ற நிலைமையிற் கருவிகர ணங்களைப்
பொன்றிட விழைத்துனருளிற்
பொலிந்துநின் னோடுபுண ராதுநா முதலென்று
புந்தியற் பழுமடங்கா
மருள்கொண்டு சுழல்கின்ற வெம்பர்வழி வீண்வேறு
மார்க்கமு மெனக்குவேண்டா
மாறாத சிவராஜ யோகத்தி லென்மன
மடங்கவரு டந்துகோடி
குருமணி யெவர்க்குங் குருத்துவ மளிக்குமொரு
குருவே குமாரகுருவே
கூற்றனுயி ருண்டபர மேட்டிசுத னென்குமர
கோட்டம தமர்ந்தகுகனே. ௭.

பாசத் தமிழ்ந்திய பசுக்களி னிமித்தமருள்
பாலித்து நூல்களருள்பு

பண்ணியுங் காட்டியவொர் புண்யகுரு மூர்த்திநின்
  பழநெறியை மீறியேயித்
தேசத்தி லிழிதொழில் கொடுங்காதை புரிகுநர்
  திருந்துநடை கொண்டுளார்பாற்
சிக்குறு பொறுமைகொண் டுயர்நா லருத்தங்கள்
  செய்கைக் கிணங்கவேறு
பேசியவ் விதிகளைத் தம்வழி நடத்தவுள
  பெயருக் கெய்துகதியைப்
பிரிவுசெய் தோதவோ நஞ்சமுக மாகப்
  பிறங்குங்கொ லெந்தநாளுங்
கோசிகம் புகழுநின் னிணைவழு வாவழி
  கொடுத்தியென் னைசயரசே
கூற்றனுயி ருண்டபர மேட்டிசுத னென்குமர
  கோட்டம தமர்ந்தகுகனே. ௫.

சிவஞா னக்கிரிகை களைமறைத் துளவாம
  தேவரது திரோதசத்தி
சிறிதுமா றியபோது மர்த்தபா கந்தணந்
  திடுபோது மற்பயாக
மோவுறு நெஞ்சிநின் றிடுபோது முயிர்கட்
  குயர்ந்தசத் திநிபாதமா
யோதுகுறி யுண்டாகு மென்று*மிரு கேந்திர
  முரைக்கின்ற விபரத்திலே
பாவியே னுக்கேது மிலைகொலோ நின்னருட்
  பவுள்சினை யவாவியொன்றும்

---

* மிருகேந்திராகம ஞானபாதத்தின் பஞ்சகிருத்தியப் பிரகரணம் அ-வது சுலோகம்,

பலியாது வறியனு நிற்கவோ வப்பெரிய
பாழுருவம் வந்ததென்று
கூவியிக் கழுமெனக் கார்தஞ்ச மாமோகை
கூருணா கிரியீசனே
கூற்றனுயி ருண்டபர மேட்டிசுத னென்குமர
கோட்டம தமர்ந்தகுகனே. கூ.

## திருத்தணிகை.

பேசரிய வேதங்க ளாகம புராணங்கள்
பிரமமிரு திகளுமொண்மை
பெருகுகம லாசனக் கலைமகளு மசலையிற்
பேர்பெற்ற கவிஞரெல்லா
மாசையுட னுயுள்பரி யந்தநின தமைதிமர
பயரா தெடுத்துறையினு
மனுவினுக் கொட்டுமோ மனதினுக் கெட்டுமோ
வந்தோ சிறுத்தநெஞ்சார்
தாசன் புகழ்ந்ததைப் பாடுவது மெங்ஙனே
சருவதா ரகதெய்வமே
சச்சிதா நந்தசிவ சைதன்ய மேசமய
சஞ்சீவி யேசந்ததச்
சூசிகெழு நின்னருளி னுய்ய வொருகருணை
துரிதத்தி லீதியீதி
சுப்பிர மதர்ப்பவிர் திருத்தணிகை வெற்பினுறை
சுப்ரமணி யப்பிரமமே. க.

நெஞ்சுழை நினைப்பவர் களுக்கெலா முதவியா
நின்றலக் கண்டவிர்த்து

நித்யபரி பூரணா நந்தவாழ் வொன்றையே
நேயமா கக்கொடுத்துக்
கஞ்சமலர் யோனிகரு மத்திடை விடாதினிய
கருணையருள் வள்ளலென்னைக்
கருதிநிதம் வாடுமடி யேற்கிங்கொ ராதரவு
கனவினு மிலாமைபற்றிப்
பஞ்சையென வெண்ணியோ பரிபாக மெய்தாத
பண்பதனை யெண்ணியோநீ
பராமுகஞ் செய்வதா யென்றுவே னப்பனே
பக்ஷமெப் படியும்வேண்டுந்
துஞ்சுபர தத்துவ விலாசவிண் ணேதொண்டர்
சுத்தநெஞ் சுற்றதிருவே
சுப்பிர மதர்ப்பவிர் திருத்தணிகை வெற்பினுறை
சுப்ரமணி யப்பிரமமே. ௨.

ஆதிமுத லாகவுனை யண்டியென் னுள்ளமதை
யறிவித்து நின்றநிலையு
மதற்பின்னர் நான்பட்ட வவதியா லிங்கேநர
மறிவித்து நிற்குநிலையும்
பேதமில் பெரியைநீ யறிவையே யித்யாதி
பெற்றிகளு நின்செயலினாற்
பெற்றேனெ னாதுபிற கடவுளர்கள் செயலெனப்
பேசுவனோ வுன்கருணைதான்
வாதனையி லின்னுமெனை வைக்குமென் றுலிறையும்
வாழ்வதுண் டோவென்மனு
வம்பிலே போமோ வழக்காடி யெப்படியும்
வாங்குவே னன்னியாயஞ்
சோதிகட் கெல்லாமொர் சோதியே யப்பெருஞ்
சோதிநடு வானபொருளே

சுப்பிர மதர்ப்பவிர் திருத்தணிகை வெற்பிலுறை
சுப்ரமணி யப்பிரமமே. ௯.

இருக்காதி மறையாக மம்புரா ணுதிமுறை
யென்பனவு மவைகள்பன்னு
மெழிலான திரிமூர்த்தி யாதிபல தேவுருவ
ரெங்குமொளிர் பிரமம்வருணம்
பெருக்கான வாசார புண்ணியம்பூசனை
பிதிர்க்கடன் சரியையாதி
பேதமா மந்திரங் கொல்லாமை யூனுண்டு
பிழையாமை யென்பனவுமிப்
பொருப்பேறு முலகெங்கு முண்டோ வெனச்சிறுமை
புகலுவோ ராவுடம்பின்
புலமெங்கு முதிரமுஞ் சிறுமடியி னல்லார்கள்
புரிவொடுண் ணமிழ்தமும்போற்
சுருக்கமுள விப்பூமி மேலென்று மநுமுனிவர்
சொற்றநடு வோர்கிலாரே
சுப்பிர மதர்ப்பவிர் திருத்தணிகை வெற்பிலுறை
சுப்ரமணி யப்பிரமமே. ௰.

நாடோறு மீனைந்து கதலியோ னிக்கென்னு
நாலைந் திணைக்குனித்து
நடலைமலர் தூவலா லெட்டுநிகர் *சடுவைநா
ளுடிமன மாறிநாலின்
கூடா வுலர்ந்தேழி னில்லாது நலிகின்ற
கோட்டாலை யிரியவருடி
கூளிகெழு நாலமையொ டையிருந் தசைகூவி
கோமக ளெனத்திகழ்ந்து

---

* சடு=ஆறு.

வாடாத தொடராட வோரிரண் டோராறுவன்
வாமம்வதி பன்னிருகணன்
மகிமைமலி பதினொரு முனிக்குளன் டமிழருளும்
வரதவென் றிவையுகைத்தோய்
தாடோணி யாடவலர் தாயொன் றிரண்டுமுனி
துதிசெய்த வடிகளரசே
சுப்பிர மதர்ப்பவிர் திருத்தணிகை வெற்பினுறை
சுப்ரமணி யப்பிரமமே. ௫.

என்னைநீ பணியென் றெனக்கறிவு தந்தநா
ளெந்தநா ளந்தநாடொட்
டிந்தநாள் வரையுமுன் றன்னையே கூவினே
னெவனெனை வுசாவினாயின்
றன்னுடைய சமுகத்தி லேனுமென் குறையெடுத்
தோதிவதி லறியவெனினு
முரியவர்க ளில்லையெளி யேன்மிக மயங்கிட
வொளித்தவிட முந்தெரிகிலே
னிங்கிலந் தன்னிலே நின்னறிவு கொண்டவர்க
ளெவரையுங் கண்டிறைஞ்சி
யின்னநடை யின்னபடி யென்றுணர வென்றுனு
மிதுவரையி லுங்கண்டிலேன்
சொன்னமொழி விபலமா குங்கொலோ வருணகிரி
சுவாமியே சுகநேமியே
சுப்பிர மதர்ப்பவிர் திருத்தணிகை வெற்பினுறை
சுப்ரமணி யப்பிரமமே. ௬.

---

# திருமலை.



விரிகடற் றிரைமணல் கொளிக்குமஞ் செந்திலில்
விரிஞ்சனிந் திரனாதியோர்
விருப்புற்ற படிபூஜை செய்தவுட னுங்கட்கு
வேண்டும்வர மருள்வனென்னத்
திருவாய் மலர்ந்தபோழ் துன்னடியை மறவாத
செல்வமே யருளென்றவர்
செய்தவின் னப்பமே யெனதுவின் னப்பமுந்
திருவுளத் தெனையடைக்கும்
புரிவான பேரருள் புரிந்தெனைக் கோடியென்
போதம்விளை யாதநிலையிற்
பூரண வியோமமா நிறைவான தெய்வமே
பொறிகரண மென்பவைகளுக்
கரியதுரி யாதீத வறிவுச் சுகாநந்த
வாழியே யன்பர்மன்னே
யளிசெறிந் தறைவளம் பெருகுதிரு மலைமிசை
யமர்ந்தசிவ குகசம்புவே. ௧.

கண்ணொன்று பார்க்கக் கருத்தொன்று நேடிடக்
கையொன்று செய்யவுளைகொள்
காதொன்று கேட்கநடு நாவொன்று பேசநின்
கழலிணை மறந்துபூஜை
பண்ணிற் பயன்படா தென்றுல கியம்பினும்
பழுதறு பதார்த்தங்களைப்
பரமனுக் கென்றீவ திற்சிறிது புண்ணியம்
பரிவொடெய் தாதோவென

வெண்ணியது செய்யவெனி னுய்பத்தி வேண்டுமதை
யெய்திடின் விதுப்புவிட்ட
வெழிலாய யோகமே யாகுமப் பத்தியு
மெனக்குச் சிறக்கவிலையா
லண்ணலே யென்பூஜை யெவ்வழியி னுனக்
கானதா கக்களிப்பே
னளிசெறிந் தறைவளம் பெருகுதிரு மலைமிசை
யமர்ந்தசிவ குகசம்புவே. உ.

மங்கல சிவாகம முரைக்கின்ற படிதாச
மார்க்கத்தி லேகுறித்த
வடிவினின் மறைந்திருந் தும்புத்ர நெறியினன்
மந்திர வுருப்பெருக்காற்
றங்காத கடைதலிற் பொறியென விளங்கியுஞ்
சகசசக மார்க்கமதனிற்
றண்சுனை பிதுக்குழி யிறங்குபால் போலவுந்
தாவில்சன் மார்க்கமதனிற்
பங்கமி லிளங்கன் றினைப்பூர்வ வீற்றுப்
பசுத்தா னணைத்தணைத்துப்
பரிவொடு நினைத்தபோ தெல்லா மருத்துமொரு
பண்பெனவு நீயருள்வதி
லங்கத மிலாதசன் மார்க்கவின் பேபெற்
களித்தியென் னுசையமுதே
யளிசெறிந் தறைவளம் பெருகுதிரு மலைமிசை
யமர்ந்தசிவ குகசம்புவே. ௩.

ஞானமில் லாதுகதி சேரொணு தென்றந்த
ஞானத்தை யெய்துபருவ

நாலென வருத்தநிறை யிற்சரியை கிரியையினு
நாசிவரு வாசியருகல்
சாணிநத யோகிலும் வரும்பத விடம்பெறச்
சம்மத மிலாதுஞான
சாயுஜ்ய சத்யபர முத்தியை விரும்புவோர்
தரணியாள் செல்வத்தையும்
வானவர்கள் பேற்றையும் பிரமனூர் வாழ்வையும்
வைகுந்த வாக்கத்தையு
மருவநினை வாரோ மடங்கல்சிறு தேரையை
வலிக்குமோ பசிமல்கினு
மாஞிமயில் லாதவப் பரமுத்தி தன்னையே
யடையவென் றுனையடைந்தே
னளிசெயிந் தறைவளம் பெருகுதிரு மலைமிசை
யமர்ந்தசிவ குகசம்புவே. ௯.

விண்ணிலொளிர் கோணிலை கணித்துப் பலாபலன்
விளம்பிப் பிழைத்திடுதொழில்
வித்துவத் திறமைகொண் டுலகிலெவர் பேரினும்
விநோதமுள பாடல்பாடி
யெண்ணற்ற புளுகரா யுய்கின்ற தொழில்சுகிர்த
மிதிலென மருந்துவஞ்செய்
தின்புற்று வாழ்தொழி லிழிந்தலோ கங்களை
யிலங்கரும் பொன்னெனச்செய்
துண்ணுதொழி லாலம்ப யோகத்தி னுற்சித்
துஞற்றிநா ளட்டிடுதொழி
லுணர்வின்மா யாவிதொழி லெல்லா மவாவுற்
றுழன்றுதிரி பேய்க்கோலமா
மண்ணரிய நின்னருள் விரும்பறி வுளாருமிவ்
வலைதொழில்க ளச்சுவாரோ

வளிசெறிந் தறைவளம் பெருகுதிரு மலைமிசை
யமர்ந்தசிவ குகசம்புவே. ரு.

தனியே யிருந்துகண் மூடியையம் புலவழித்
தடமடைத் துள்ளியங்குஞ்
சதுர்வித மனுதிகா ணங்களை யொடுக்கியொரு
சமநிலையி னின் றுனை ருளிற்
கனிவுற் றிராதபுன் மதியனே னெனினுமுன்
கருணைப்ர தாபமகிமை
கழறுநன் னூல்களின் சம்மதப் படிநிதங்
கத்துவதை விட்டதுண்டோ
புனிதமொடு கேட்டவர்கள் கண்டவர்கள் பாலினும்
புகழினை மதித்துவிரிவாய்ப்
போதித்து மகிழ்முறைமை நீத்ததுண் டோநீ
புறம்பென் றெனைக்கழிக்க
வகிமாலி னஞ்சனிப் பற்றபர தெய்வமே
யருணகிரி புகழண்ணலே
யளிசெறிந் தறைவளம் பெருகுதிரு மலைமிசை
யமர்ந்தசிவ குகசம்புவே. சு.

---

## திருக்கயிலாசமலை.

சாதுக்க ளடிகளை வணங்காத தலையென்ன
தலைஞான சற்குருமுகந்
தரிசனஞ் செய்யாத கண்ணென்ன கண்ணமல
தந்திரஞ் சுருதிமுறைக
ளோதுமுறை கேளாத செவியென்ன செவியென்று
முறுதியுள தெய்வஸ்துதி

யுண்மையொடு செய்யாத வாயென்ன வாய்பற்
றொழித்திரப் போர்களுக்குக்
காதலா யீயாத கையென்ன கைபெரிய
கர்த்தர்வர் சஸ்தலத்தைக்
கருதிவழி நடவாத காலென்ன கால்கொடிய
கம்பலைக் கேதுவாய
தீதுகண் டொருவாத சிந்தையென் சிந்தையென்
சிந்தையி லமர்ந்தபொருளே
திருநீடு பதியாய கயிலாச மலைமேவு
சிவஞான குருசாமியே. க.

மைக்கணுடை விலைமாதர் கட்குநா ணின்றுமுடி
மன்னர்க்கு நேயமின்று
வலியகொலை யாளர்க் கிரக்கமின் றோவாத
மாதவர்க் கேதமின்று
விக்கின மிலாவிரச வாதிக்கு மிடியின்று
விண்ணவர்க் கிறுதியின்று
வேரிநுகர் வர்க்குமுறை யின்றடங் காமோக
வெறியர்க்கு ரோசமின்று
மக்களைப் பெற்றவர் களுக்குமல டின்றரிவை
மக்களே பெற்றவர்க்கு
மானமின் றடர்கடன் பட்டபெயர் கட்கிங்கு
மனமகிழ்வு சற்றுமின்று
திக்கனைத் தும்பரவு னடிதொழு பவர்க்குமறு
சென்மநோ யென்பதின்று
திருநீடு பதியாய கயிலாச மலைமேவு
சிவஞான குருசாமியே. உ.

மாமந்த்ர வாதிக்கு மமதையுண் டெத்துணையு
மாசற்ற கவிஞர்கட்கு
மண்டலி யிருக்கும்வரை புகழுண்டு பின்னிடா
வலிகொள்போர் வீரருக்குப்
பூமியிற் கீர்த்தியுண் டிரும்வள்ளி யோர்க்குரிய
புண்யபோ கங்களுண்டு
பொய்க்கிளவி கனவினும் புகலாத வர்க்குநற்
புந்தியிற் புனிதமுண்டு
நாமருவு காயகற் பந்துய்த்த வர்க்குநரை
தோன்றாத மேனியுண்டு
சோதிடங் கற்றவர் களுக்குமுக் காலநிலை
சொல்லவல் லாண்மையுண்டு
சேமந் தழைக்குநின் னடியவர்க் குச்சகல
செல்வப் பெருக்குமுண்டே
திருநீடு பதிபாய கயிலாச மலைமேவு
சிவஞான குருசாமியே. ௫.

ஊன்பொதி ரமுக்குடம் பிற்குமுயி ரிற்குமிங்
குதவுநின் பண்டங்களி
லொதுக்காத வைகொள லொதுக்கியவை தள்ளலிறை
யொருவனைச் சிந்தைபுரிதன்
மான்மருண் மயக்கெலா மெற்றாத னறும்பத்தி
மாறாது நிலைகொள்ளுதன்
மற்றுமுள வியல்பனைத் தும்புறம் போகவிடன்
மனதிற்ற னியல்புகண்டு
தான்கவலை மிக்குறாத றன்பிழை பொறுக்குமொரு
தகைமையென் பதுதேடுத
றலைவனார் வல்லமைக் கொல்லாத முறைகண்டு
சந்தத மிரங்கலென்னுந்

தேன்மலர்க் கழலன்பர் செய்கையொன் பதையுமிச்
சிறியனே னென் மருவலென்றோ
திருநீடு பதியாய கயிலாச மலைமேவு
சிவஞான குருசாமியே. ௬.

காமமதி போஜனப் பிரீதிபகை லோபமுட்
காய்தன்*மடி மாயாவகங்
காரமெனு மெழுபாத கங்களை யகற்றிக்
கலங்காத கூர்த்தபுத்தி
யேமனை யுறக்குநல் லோர்ப்பிகல் கடைப்பிடி
யெனுங்குண மிரண்டிரண்டு
மெய்திநீ ளுணவைச யிரண்டுமின் றுண்ணியல்பு
மிடையிட்டு வாய்மொழிதலும்
பூமிதனில் வெப்பமொடு தட்பம் பொறுத்தலும்
புதுமணம் விரும்பாமையும்
புடைவரை யறுத்துறையு மாதனத் தமர்தலும்
பொருவறு தவத்தங்கமாந்
தேமல ரடித்தொண்ட ரிவைகளை மதித்துறுவர்
சிறியனே னுறுவதென்றோ
திருநீடு பதியாய கயிலாச மலைமேவு
சிவஞான குருசாமியே. ௭.

†பத்தைப் பெருக்குவா ரெட்டொன்றை மூடுவார்
பதினாறி னொருபாதியிற்

---

* மடி=சோம்பு.

† பத்து=நற்குணம் பத்து. விபரம்.—மெய்யுரை, நல்வார்த்தை, இனியவையியம்பல், பயன்படுசொலல் எனும் வாக்கினற்குணம் ௪. கோயில்வலம்வரல், தவம்புரிதல், தானஞ்செயல் எனுங் காயநற்குணம் ௩. அருணினைவு, அவாவறுத்தல், தவப்பற்று எனும் மனநற்குணம் ௩.

பாயாது கட்டுவா ரேழைவலி பண்ணுவார்
பகையாறை யுந்துறப்பார்
சத்தமுத லைந்தையு மடக்குவார் நான்கைத்
தகைந்தொன் றிரண்டைவெல்வார்
தாவற விரண்டையுங் கூட்டுவா ரொன்றையே
சாருவார் தலையிமேலே
யெத்தலமு மங்ஙனே பார்ப்பா ருதிப்புநொடி
யெல்லாநின் னருளின்செய
லென்றுபெரி துஞ்சிந்தை பூரிப்பர் நிபுணரில்
லேழையே னென்கொடுப்பேன்
சித்தனே யத்துவித முத்தனே நித்தனே
தேசுமிக் கார்கத்தனே
திருநீடு பதியாய கயிலாச மலைமேவு
சிவஞான குருசாமியே. ௬.

அங்கமது பழுதென்ன வுருமாறி யெச்செயலு
மற்றவரை யொப்பவருவா
ரைந்துதல நீண்டுமற் றைந்துதல மிருதுவா
யாறிட முயர்ந்துசெவ்வி
தங்கவோ ரேழிடஞ் சிந்தூரம் போனிறந்
தரவிரண் டொன்றுகுறுகிச்
சாருமொரு மூவிடம் விசாலமா மூன்றிடந்
தாழலட் சணமதாக
வெங்கும்வரு வாரேது மறிகிலார் போலவு
மிருப்பார்கள் யாவுமறைவா
ரிதயத்தி லன்பிலா வெருமைகட் கருள்செயா
ரிதமான வர்க்கருளுவார்
செங்கமல பாதமுரு கையநின் னன்பரவர்
தெரிசன மெனக்குமெங்ஙனே

திருநீடு பதியாய கயிலாச மலைமேவு
சிவஞான குருசாமியே. எ.

காட்டிலு நலங்கிளரு நாட்டிலு மிருப்பார்கள்
ககனநிலை யிலுமிருப்பார்
கருதரிய வஸ்துவொடு சேரவென் றுடறனைக்
கருதார்கள் கற்பமுண்பா
ரோட்டிலுங் கையிலும் பொற்பாச னத்திலு
முளங்கனிந் துண்டுமகிழ்வா
ரொன்றுமுண் ணாமலு மிருப்பார்க ணல்லுலவை
யுண்பார்க ளமுதமுண்பார்
தாட்டிகளை யெளிமைப் படுத்துவார் தாபந்தர்
தமையாச ராக்கிவைப்பார்
தையலரை வேண்டுவார் தள்ளியும் பேசுவார்
தாவிவே றுடலுறுழைவார்
தேட்டமுள யாவும் படைப்பாரு னருளுளார்
சிறியனே னென்கொடுப்பேன்
திருநீடு பதியாய கயிலாச மலைமேவு
சிவஞான குருசாமியே. அ.

தண்டிகையி லேறுவார் தரைமிசை நடப்பார்
தளங்கள்புடை சூழவருவார்
தனியாயு நிற்பார் தராதரங் கெட்டுத்
தயங்குபவர் போலுழலுவார்
சண்டித் தனஞ்செய்து தெருவிற் கிடப்பார்
சதாநந்த மாயாடுவார்
தரையினிற் றுயிலுவா ரணையிற் படுப்பார்
சமாதியிலு மினிதிருப்பா

ரண்டமெல் லாமொடியி லேசுற்று வார்பின்னு
மசையாமெவார் நிலையினிற்பா
ரசலபுவ னத்தையங் கையிலே காட்டுவா
ரங்கே யடக்கிவிடுவார்
தெண்டிரைக் கடல்சுலா முலகினின் சீடரவர்
சித்தளவை கூறுபவரார்
திருநீடு பதியாய கயிலாச மலைமேவு
சிவஞான குருசாமியே. கூ

பருவமொரு மூன்றணையு மாறுவார் விண்ணிற்
பறப்பார்த முடன்மறைப்பார்
பகலையிர வாக்குவா ரிரவுபக லாக்குவார்
பார்ப்பரிய பரமாணுவைப்
பெருமுண்ட மாக்குவா ரதனையணு வாக்குவார்
பின்னுமுன் னுஞ்செல்லுவார்
பிதகத் தட்டையோ டாகவனை வாரதைப்
பீதக மெனப்பண்ணுவா
ரருமையா கியவட்ட சித்தியுங் கண்டுள
மடங்கிமெய்ஞ் ஞானபீடத்
தமர்ந்துனது பதநலன் சேருவார் நின்சீட
ரருளிலேன் யாதுசெய்வேன்
றெருளருண கிரிநாதன் மளமளென வென்றறை
திருப்புகழ் துளைத்தசெவியோய்
திருநீடு பதியாய கயிலாச மலைமேவு
சிவஞான குருசாமியே. க0.

---

## சண்முகாநந்தசிவம்.



தவனனிற் கிரணமுள் ளதுபோலு மப்புவிற்
றட்பம திருத்தல்போலுஞ்
சலரகித மலரகித வவிரோத வவிகார
சாலம்ப ரகிதசத்ய
வவிதவே காகார தத்துவா தீதமா
யவிர்பரப் பிரமமதனி
லநாதியா யொருசத்தி யுண்டதனை யருளென்று
மளவிலா ஞானமென்று
மூவமான மில்பிரம கிரணமென் றுஞ்சுருதி
யோதுமிதை யேயம்மையென்
றுரைதருவ ரப்பெரிய பிரமத்தை யப்பனெனு
மொருசிவ னெனத்தெரிப்பார்
தவமருவு விழுமியோ ரவ்வம்மை யப்பனைத்
தனியனை னறிவதென்றோ
சராசர மெலாநிறை பராபர சதாநடன
சண்முகா நந்தசிவமே. க.

ஞானமி லசேதனப் பிரபஞ்ச வுற்பந்ந
நந்*தாதி காரணமென
நவின்மாயை யைத்துணைக் காரண மெனுந்தனது
நல்லருளி னுடத்து
மூனமி னிமித்தகா ரணமாக வுஞ்சொற்ற
வுபயகா ரணமுந்தனை

---

* ஆதிகாரணம்=முதற்காரணம். இதனைக் குடத்துக்கு மண் போல உபாதாநமென்ப.

பொழிக்கிலா நிலைமையா லவைகட்கு முதலென
வுரைக்குமோர் சிரேஃடமதனுன்
மானமறு மூலகா ரணமாக வுங்கிஞ்ச
மதியுடைப் புற்கலரெலா
மலரடிக் கனவரத மடிமையா கவுமன்னு
மாதேவ வருள்கென்னுமா
தானவிரு தயமேமைத யர்க்கினிய நீயெனைத்
தந்துட் கலந்துகோடி
சராசர மெலாநிறை பராபர சதாநடன
சண்முகா நந்தசிவமே. ௨.

அருளான சிவசக்தி தனிலாயி ரத்திலொன்
றுயபரை யோடுநின்றே
னைந்தொழி லைப்பரம வுள்ளத் தடைப்பதையு
மப்பரையி லாயிரத்தோர்
பிரிவான வாதியொடு நின்றுதனை நீப்பினும்
பிரிவற வியாபித்திடு
பெற்றியையு மவ்வாதி தனிலாயி ரத்தொன்று
பேரவுள விச்சையொடுநின்
றுருவான வடிவைப் பிரேரிக்கு நிலையையு
முரைத்தவிச் சையிலாயிரத்
தொன்றுய வறிவினின் றறிவருளு நிலையையு
முணர்த்தறிவி லத்துணைக்கீர்
தரவான கிரியைநின் றயருமைந் தொழிலையுந்
தனியனே னறிவதென்றே
சராசர மெலாநிறை பராபர சதாநடன
சண்முகா நந்தசிவமே. ௩.

பணாமுதற் கிரியைவனா யுளவைந்து சத்திசம்
பந்தத்தி னாலழுக்கில்
பரமாயை தன்னின்முறை யேயணு சிருணாதயம்
பரவியா பிணிவியோமை
கணாவிரி யனந்தைந லனாதையென் பரநாத
கலைகணணி வந்தவைகளாற்
காரியப் படு*மபர நாதகலை யைந்தையுங்
கறையற்ற †சூக்குமைமுத
லுணாதருமொ ணைந்துபர விந்துகலை யானடை
யுயர்ந்திடு ‡நிவிர்த்தியாதி
யோதபர விந்துவின் கலைகளோ ணாந்தையு
முணர்த்துமரு ணெறியினின்று
தணாயிலினி துய்கின்ற விழுமியோர் தன்மையித்
தாசற்கும் வருவதெந்நாள்
சராசர மெலாநிறை பராபர சதாநடன
சண்முகா நந்தசிவமே. ௬.

தத்தென்னும் வசனமது துவமென்னும் வசனநீ
தத்துவ விரண்டுபொருளுஞ்
சார்தலா னாயென்னு மசியென்று குருசொலுஞ்
சரதவே தாந்தமொழியை

---

* அபரநாதகலையைந்தாவன=ஊர்த்துவகை, மோசிகை, ரோசிகை, தீபிகை, இந்திகை.

† சூக்குமை, அதிசூக்குமை, மிருதை, அமிருதை, வியாபினி.

‡ நிவிர்த்தி, பிரதிஷ்டை, வித்தை, சாந்தி, சாந்தியாதீதை. இவற்றுள் சாந்தியாதீதையைப் பராசத்திக்கும், சாந்தியை ஆதிசத்திக்கு மெனுமுறையாய் அவரோகணக் கிரமமாகக்கொள்க.

வித்தக விவேகிக ளுணர்ந்து மாயாமோக
விளைவென்னு மனதடக்கி
விவேகமே பிரமவடி வென்றதை யறிந்தயும்
விதேககைவல்யமின்பை
*நத்திமுது சஞ்சிதமொ டாகாமி யத்தையு
நசித்தெய்து மாளியாக
நாளிமேல தொலைபிரா ரத்தமது தீரும்வணா
ஞானியர் வாழ்வரன்றே
சத்தான கடவுளே யத்தகைய வாழ்வைநீ
தரவென்று கண்டுபெகிழ்வேன்
சராசர மெலாநிறை பராபர சதாநடன
சண்முகா நந்தசிவமே. ரு.

சருவசங் காரகா லத்துஞ் சிதாபாசர்
தம்மியல் புணர்ந்திடாமற்
றண்ணிய வசுத்தமா யாகார ணத்திலே
தங்கல்கா ரணகேவலஞ்
சருவவுல குஞ்சிருட் டித்துவரு காலுயிர்கள்
சதுர்யோனி புக்குமரண
சனனங்க ளோயாது கொண்டுழலல் காரணச்
சகலமச் சகலமதிலே
கருமமல பரிபாக விருவினையி னொப்புநீ
கண்டகா லத்தவைகளைக்
காருண்ய மெய்க்குரவ னாகவந் தருளிற்
கடாக்ஷித்து மலமறுத்துத்
தருமநிமிர் தன்னடியில் வைத்தனுயர் சுத்தமிது
தானே யெனக்கும்வேண்டுஞ்

* நத்தி=விரும்பி.

சராசர மெலாநிறை பராபர சதாநடன
சண்முகா நந்தசிவமே. ௬

பாகசா லைப்பண்ட மெவ்வள விருப்பினும்
பாவகத் தீமுதன்மைபோற்
பரகதி பெறற்காய பத்திதவ யோகாதி
பலதொழி லிருந்தாலுமோர்
சோகமு மிலாநல் விவேகபதி ஞானவொண்
சோதியே முதன்மையிதனைத்
தொடராத பத்திவை ராக்கியமு மிருவகைத்
தொடர்பையே மருவுமதனு
லாகுநெறி யுய்த்துணர்ந் தறிவைப் பிடித்தபிடி
யாகநனி பற்றவெங்க
ளத்தனு முன்னிரு பதத்துணையை யுற்றேற
யனுதஞ் சாதிக்குமா
தாகமுள மேதாவி யோர்நெறியி லென்னைநீ
சந்தத நிறீஇயருளாய்
சராசர மெலாநிறை பராபர சதாநடன
சண்முகா நந்தசிவமே. ௭

பற்றற் றிருத்தலே பிறவாத பேறென்று
பரமனரு ளூற்றுவாழாய்
பாடுடைய துறவிகட் கெங்ஙனந் தம்மறிவு
பரிபூர ணத்தையெய்து
முற்றத் துறந்ததிரு வாதவூ ரார்மூவர்
மூலர்வெண் காடர்கிரியார்
முது*வள்ள லாயுமா னவராதி பெரியோர்கண்
முதல்வன் றனைப்பிடித்துக்

* வள்ளல்—கண்ணுடைய வள்ளல். இவர் ஒழிவிலொடுக்க நூ[illegible]

தெற்றுற்ற முத்திநிலை சேர்ந்ததையு மிவ்வுலகு
செவ்வெனத் தெரியுமன்றோ
செய்கரும வெக்யாதி பொதுவல்ல பத்தியுந்
தெளிவுமே பொதுவாமிதைச்
சற்றுநா னணவாம னிற்பதென் றுனது
தாசர்பே றண்ணுவேனோ
சராசர மெலாநிறை பராபர சதாநடன
சண்முகா நந்தசிவமே. ௮

பெருந்துறவி லேறினும் பத்திவை ராக்கியம்
பிசகா திருக்கவேண்டும்
பிறழாத பிரமநிஷ் டாநுபவ நாளும்
பிறங்கநனி புரியவேண்டுங்
கருதுமிந் நெறியற்ற வூகமது பூரணங்
காணாது கண்ணப்பனார்
கனிவுற்ற பத்தியா லேயாறு நாளிற்
கருப்புகா வீடுபெற்றா
ரருந்தவ முளார்பலரு மதுகொண்டு நல்வீ
டடைந்ததும் பிரமாணிய
மாதறொட் டளிகொண் டுபாசநா மூர்த்தியரு
ளாலெவரு முத்திபெறலாந்
தருமகுண தெய்வமே தயவுசெய் தென்னையுந்
றாசர்களி மேனிறுத்தாய்
சராசர மெலாநிறை பராபர சதாநடன
சண்முகா நந்தசிவமே. ௯

துயரார் புறப்பற் றறுதவர்க் குள்விழைவு
தொலையாது தொலையுமாயிற்

சுத்தவி டடைவதுஞ் சத்திய மசத்தியந்
துவ்வாத துறவெய்துபு
முயனிலையி லெய்தறிவு பொன்னிற் பதித்துள்ள
முழுமணியை யொக்குமாதர்
மூசிவளை யில்லறத் தெய்துபே ரறிவா
முதுக்குறை விரும்பின்மணியா
மியலிவ் விரண்டறிவும் வழிபடுதெய் வத்தினுடை
யிணையடித் தகவுகொண்டே
யேற்றுய்ய வேண்டுமில் லாவிடி லவம்போ
மெனுந்துணிவி னிற்குமெற்குன்
றயவிரங் காவிடின் வருங்கதி யெதோசோண
சயிலநா மத்தனரசே
சராசர மெலாநிறை பராபர சதாநடன
சண்முகா நந்தசிவமே. க0.

---

## நிட்களாநந்தகுகன்.

நின்னுடைய ராஜ்யமோ நித்யத்வ கைவல்ய
நிதமார ணந்துதிக்கு
நின்னுடைய நாமமோ சீவர்களை முத்தியி
னிறுத்திடு மகாமந்திர
நின்னுடைய வடிவமோ வதிரேக மறைதந்த்ர
நெடியகலை யாதியுணர்வு
நின்னுடைய சஸ்திரமோ விருளிக லறுக்குமிக
னீடுமெய்ஞ் ஞானசத்தி
நின்னுடைய வாகன மதோமாயை துவஜமோ
நிழனிலவு மூர்த்தமாயை

நின்னுடைய வுருவத்தி லணிகின்ற பொருள்களோ
நிமிர்சீவ செல்வமூல
நின்னுடைய விடவல மமர்ந்தவிரு சத்தியோ
நிஜஞான நிகரில்கிரியை
நின்னுடைய வடிநினைவர் வழிதடைவ தெந்நமோ
நிட்களா நந்தகுகனே. க.

பாமநின் வடிவையென் பூழ்திவிழி காணாத
பழுதுள்ள தேனுநிகளம்
பயிலோசை கேட்டுமணி யொன்றம்ப ருண்டென்று
படுநிச்ச யங்கோடல்போல்
விரிககன வெளியிலே கதிர்மதி யுடுக்களுமிவ்
விபுலத்தொர் வித்திலெண்ணில்
விளைவும்வெள் ளைன்புதசை பொலிவிக்ர கத்திலதி
விச்சித்ர மாகவைந்து
கருவிகளு முட்சொப்ப னத்துருவு மாகநனி
காண்கின்ற குறிகளாலோர்
கத்தனுண் டெனுநிச்ச யங்கொண்ட நானுமிக்
காசினி விரும்பிமுடிவி
னிரயவதி காரமற லிக்குமுன் னேழைபோ
னிற்பனோ வொப்பிலாத
நிமலபரி பூரணப் பிரம்ப்ர காசமே
நிட்களா நந்தகுகனே. உ.

வழிஞனொருவன்செல்வ வந்தனு வதுகண்டு
மாவழுக் காறுகொள்வோர்
மாதவ மிலாவொருவ னத்தவங் தனினுளு
மல்குவது கண்டன்னவா

றறிவினின் மதித்தழுக் காறுகொண் டவ்விரத
மயர்வதற் குள்ளபடியே
யாதரங் கொள்கிலா ரிதனைநுண் ணுணர்வுளோ
ராயினிதின் மட்டுமேதோ
செறிவுறுவன் மோசமொன் றுண்டென்ன வறிவரித்
தீர்வையை யுணர்ந்துமினிநான்
றேயவிவ காரத்தி னிற்பதெப் படிசொலாய்
சிந்தித்த வாதிறம்பா
நெறிகொடுத் தருளின்ப மீதூர வருடியென்
னெஞ்சுகுடி கொண்டபொருளே
நினைவினுக் கெட்டாத நிலையிடை விளங்கமல
நிட்களா நந்தகுகனே. ௩.

தேவார பாராய ணம்பணிச் சிலர்தொண்டு
செய்துசிலர் பத்திமையுடன்
சிவசரித் திரமதே கேட்டநு தினஞ்சிலர்
திருந்துசிவ விரதமெல்லா
மாவலோ டிழைத்துட றுறந்துசிலர் மாயக்கி
யாதிகள் குயிற்றிச்சில
ரன்பருக் குத்தொண்டு செய்துசிலர் யானதம
தாகவந் தித்துச்சிலர்
பாவினம் பாடிப் புகழ்ந்துசிலர் மந்திரம்
பரவிச் செபித்துச்சிலர்
பானிற விபூதியிற் பேரன்பு கொண்டுசிலர்
படர்கா லடக்கிச்சிலர்
நீவரிய மும்மல மிகந்துகுரு வருணெறியி
னின்றுசிலர் கதியெய்திய
நிலைமைக ளனைத்துமுன் பேரருள் விலாசமே
நிட்களா நந்தகுகனே. ௪.

இந்தவுல கஞ்சதூர்ப் பூதங்க ளன்றியிறை
யென்பதில்லை யென்றுமேனு
ளிசைத்தவுல காயதப் பாவிபெண் போகமே
யின்பமா முத்தியென்றான்
றந்நூபுகல் புத்தனாங் கந்தநா சத்தையுஞ்
சமணர்முக் குணாவோய்மையுங்
தகையில்பிர பாகர ரிருங்கன்ம வொழிவையுஞ்
சமமதத் தவருருவையும்
பந்தபா ஷாணமா மார்க்கிகளு ளழிவையும்
பாற்கரிய ருயிரழிவையும்
பாடுகிளர் சங்க்ராந்த நெறியர்கர ணந்திரிபு
பட்டசிவ கரணத்தையு
நிந்தையில் லாதபர முத்தியென் றார்களவை
நிறைவாய கதியல்லவே
நிஜாநந்த மானவுனை யடைகின்ற கதிநிறைவு
நிட்களா நந்தகுகனே. ௫.

எடுத்தநூ லத்தினை விடுத்தரிய பரகதியை
யெய்துநெறி யுண்டென்பதற்
கேனுதி மெய்ப்பொருளர் பெருமிழலை யார்கரி
யெடுத்தநூ லத்தொடருடா
ணடுத்தமுத முற்றதற் காரூரர் சோதியி
லடைந்ததற் கமணசிங்க
மமலலிங் கத்துழி யடைந்ததற் காளாய
ராக்கைவே றுயதற்கு
நடித்ததிரு நந்தனார் சாட்சிமுத் தாவரமு
ஞாலமிசை வீழாமலே
ஞானவெளி யுற்றதற் கேசில்சுகர் வாதவூர்
நாயனார் கரியாமுப

நிடத்தின்முடி வானவெம் பெருமவிவை களினுனை
நினைக்குமெற் கேதுவருமோ
நித்யதக ராலய சிதாநந்த சோதியே
நிட்களா நந்தகுகனே. ௬.

காமமுத லியவிடுத லியமமவ் வாசனை
கதிக்கா தகற்றனியமங்
காசினிரு பாதிகம தாயுறைத லாதனங்
கடமடா திகளைமெய்யாக்
காமுறு மனத்தையிரு தயகுசே சயமதிற்
கட்டுவது பிராணயமங்
கட்டுநிலை யிற்றுய ரிலாதுணர்வை நேடல்குழு
கப்பிரத் தியாகாரநன்
னெமமொடு பரமென்னு முன்கணுயர் மனதினை
நிறுத்துவது நிமிர்தாரணை
நிஜரூப மாயுன்னை நாடுத றியானமோர்
நேர்மையொ டகம்புறத்து
நேமமின் றொளியாக நிற்பது சமாதியென
நிச்சயஞ் செய்யுநெறிநா
னின்றுய்ய வொருநீ கடைக்கணித் தருள்செயாய்
நிட்களா நந்தகுகனே. ௭.

சம்பவ விநாசமா மலிகன்ம மாமலத்
தளையெனும் பாசமெல்லாந்
தத்துவப் பிரதான வறிவான சோதியது
சவிசெய்ய வந்நன்மறையுஞ்
செம்பிலே புளியிடப் பிரகாச மாகுமது
தினமுமிழை யாதுவிட்டாற்

செறிகா ளிதம்பின்னு மூறுமன் றேவிச்
சிரேணிபோ னித்யவெண்ண
மும்பிசகு ருநிட்டை யும்புரித னன்றம்பர்
முதிர்சுத்தி செய்தசெம்பு
மூடமுக் கென்றுமே ருதிலகல் போலுறழ்வு
முற்றிற் கெடாதியங்கு
நிம்பமுண் ணூதுபே ரின்பமுண வெண்ணுவார்
நெஞ்சுணர்ந் தருள்பெருமவென்
னெஞ்சையு முணர்ந்துநான் வேண்டுறழ் வளித்தருடி
நிட்களா நந்தகுகனே. அ.

தேகாதி பிரபஞ்ச மாம்புறப் பற்றையுந்
தேகத்தி னுட்டேகமாச்
செறிகின்ற கரணாதி யாமகப் பற்றையுந்
திட்டமா விட்டவர்க்குப்
போகாத துக்கப் பிறப்பென்னும் விதைகளைப்
பொய்யாது நல்குகன்ம
பூருகத் திற்குவே ரறுதல்வே ளாண்மையே
பொய்யின்றி மெய்யாகிய
யோகேறி னோர்க்குமி லபிக்கின்ற பண்பிதே
யுன்னடிய னேனைவகளை
யூகித் துணர்ந்தற விடுத்தரு வாநந்த
வோகையெய் தாதொழிவனோ
நிராச மில்பரம வென்றுயர் தகித்திட
நெருப்பான தெய்வமுதலே
நித்யபரி பூரண வகண்டதத் துவபோத
நிட்களா நந்தகுகனே. கூ.

பலபுருடர் போகத்தை நச்சுபொது மாதெனப்
 பலதேவ லோகபோகப்
பரிவைநச் சாதுகற் புடையபெண் ணெனப்பவொரு
 பரகதியை நச்சியிச்சை
திலமளவு மில்லாம லாங்கார மதனிற்
 செனித்தூதை யைப்போலவே
திரிதரா நின்றசுழன் மனதினை யடக்கிவரு
 திமிரம் பிளந்தருளினை
லிலகியரு ளறிவிக்க வறிவிழி மலர்ந்துன்னை
 யிடையரு மற்கண்டுகொண்
டெந்நாளும் வாழ்வதே நல்லுத்தி யில்லுத்தி
 யேதுக்கு நித்திரையினு
நிலவுமுணர் வொன்றுமே துஞ்சா திருப்பதெனு
 நிச்சய மறிந்துமெந்தாய்
நிறைகருணை யருணகிரி புகழ்பெரிய தெய்வமே
 நிட்களா நந்தகுகனே. கo.

---

## சரவணபவாநந்தன்.

பரதார நசையா லிராவணன் பட்டனன்
 பற்றிய *துவேஷமதனாற்
பாறின னிரணியன் பட்டர்†காம முற்றிரப்
 பண்ணின னரகாசுரன்
மருவிய குரோதத்தி னாலே பகாசுரன்
 மடிந்தன னுலோபமதனன்

---

* துவேஷம்=தனக்கொருவர்செய்த தீங்குக்குப்பதிற்றீங்குசெய்யுங்குணம் †காமம்=தனதான்யர்திகளை மேன்மேலுந்தேடுங்குணம்.

மாண்டன னகித்துவசன் *மோகமேரான் றலிரா
மன்றந்தை சென்றான்†மதப்
பிரமையிற் கார்த்தவீ ரியனுயி ரிழந்தனன்
பிழைமலி பொறாமையொன் றாற்
பீடுகெழு சிசுபால னுள்ளாவி பொன்றினன்
பேசிவை யெலாமுள்ளவென்
சரிதையே தாமோ வெனத்துரால் கூறெனது
தாபமென் றிரியுமெந்தாய்
சலனமறு மெய்ஞ்ஞான நிமலசுக சன்யாச
சரவண பவாநந்தனே. க.

தனக்குவரு கின்றதுயர் பிறருக்கும் வரவென்று
சந்தத நினைந்தவருளுட்
சன்சட மிழந்தா னதேவிதம் பிறர்சுகஞ்
சார்வதோ வென்னுமியல்பின்
மனமிஞ்சி யொருபுண்ட ரீகவசு தேவனு
மடிந்தன னிடம்பமொன்றால்
வாழ்விழந் தானம்ப ரீஷனிவ ணற்கெவர்சு
மானமென் னுங்குணத்தாற்
கனமுள சலந்தரா சுரனுயிர் துறந்தனன்
கதழ்வகங் காரமதனாற்
கறுவுமது கைடவ ரழிந்தனர் வரத்தொடு
கதித்தபல மும்பெருத்துந்
தனகற்ற விக்குண மெலாமுள்ள வெற்குனது
சரணமெப் படியெய்துமோ

* மோகம்=தான்தேடியபொருளில் அதிக விசுவாசசித்தம்.

† மதம்=ஐசுவரியத்தா லாணவம்படைத்துக் கிருத்தியாகிருத்தியந் தெரியாதுநடக்குங்குணம்.

சலனமறு மெய்ஞ்ஞான நிமலசுக சன்யாச
சரவண பவாநந்தனே. ௨.

பசிதாக மொழிபொருட் டன்னபா னாதிகள்
பட்சித்து மாந்திவிடுகை
பண்ணுமல சலவாதை யென்னும்விட யத்தகம்
பற்றிடுத லிச்சையென்று
மசிதவரு ணூலிலும் பரமபதி பாலினு
முரன்கொள்விசு வாசமொன்றே
யுயர்பக்தி யென்றுமன வாக்குட லொருங்குபட்
டெற்றநற் கருமங்களே
நிசமருவு பரமவை ராக்யமென் றுந்தவர்
நிகழ்த்துமொரு மூன்றிலிச்சை
நிறைகதி யளிப்பதிலை மற்றிரண் டானுமந்
நெறியைத் தொடர்ந்துகொளலாந்
தசமா திரத்திலு நிறைந்தபெரி யோயிதைத்
தமியேனு மணுவதென்றோ
சலனமறு மெய்ஞ்ஞான நிமலசுக சன்யாச
சரவண பவாநந்தனே. ௩.

மகமிக வியற்றினோர் சதமகன் பதிசேர்வர்
மறுவில்கோ தானமிட்டோர்
மருவுவார் கோலோகம் வைராக்கி யப்பேறு
வைகுண்ட மாகுமன்பின்
விகலமறு பத்திக் கரும்பிரம லோகம்வரும்
விஞ்சுசகு ணத்தினுக்கு
விமலனது சாலோக மனமவுன நிட்டைக்கு
மிளிருந் தபோலோகமெய்

புகலொரு விரத்திக்கு ரூபமா மாசில்குரு
போதைக்கு நற்சமீபம்
பூர்த்திஞா னத்தினுக் கசிமுத்தி யென்றறிஞர்
போதிப்ப ரொன்றிலேனுந்
தகுதியா நிற்கவொல் லாவேழை யேனுனது
தாடஞ்ச மெனநம்பினேன்
சலனமறு மெய்ஞ்ஞான நிமலசுக சன்யாச
சரவண பவாநந்தனே. ௬.

தலையா னடத்தல்கோ தானஞ் சதாசிவ
சரித்திரங் கானடையிடந்
தாவிப் பறப்பதுயர் சிவபூஜை வாயுகதி
தகவன்பர் பூஜைகுருமுன்
னிலைமனே கதியெனு முன்னோர் நிகழ்த்தாளி
நேரெனத் தெரிதலாலே
நிநிமல பரமகுரு வாய்வந்து நானிற்கு
நிலைதரற் காமுபாய
மலைவான புந்தியுழி யறிகிலேன் மற்றொருவர்
வந்துவழி காட்டவுமிலை
வாரிதிகள் போலுள்ள நிகமாக மங்களும்
வழுத்துவ தநந்தபேதந்
தலைவனு முனைநம்பு நானிங்ஙனென்செய்கே
னந்தோ தயாநேமியே
சலனமறு மெய்ஞ்ஞான நிமலசுக சன்யாச
சரவண பவாநந்தனே. ௫.

துற்சங்க வற்சித முதற்றலம் விவேகநுவல்
சுவடிகள் பயின்றுபழக

றுவிநில முமேவடணை தாமித்திடுதன் மூன்றெனச்
சொலுநில முணர்ச்சிமலர்தல்
பொற்புறுஞ் சதுர்நிலம் பிசிமறுத் தேதவம்
புரிதலைந் தாவதுநிலம்
போதநிகழ் திரிபுடி யவித்தத்து விதமதர்வு
பூப்பதா றுவதுநிலந்
தற்பர சிவாநந்த வஸ்துநிலை நின்றவா
தானுநின் றிடுவதேழாந்
தலமென வுணர்ந்தநா னெழென்னு நிலைனேய
சாருமா றுணைநம்பினேன்
சற்சனர்க ளடிகளே யத்தைபடை வழியைநீ
தரவென்று கண்டுவப்பேன்
சலனமறு மெய்ஞ்ஞான நிமலசுக சன்யாச
சரவண பவாநந்தனே. ௬.

உத்தம மகாமந் திரஞ்செபித் ததனிச
முணர்ந்துமெய்த் தத்துவத்தி
லுள்ளம்வைக் கின்றமந் திரயோக மந்திரத்
தொடுபிரா ணாயாமமு
நித்தலுஞ் செய்பரிச யோகமந் திரமின்றி
நிலையாய தத்துவத்தி
னெஞ்சமொன் றிடுபாவ யோகமுட லுலகெலா
நேரின்று மறைபவிண்போற்
சித்தமிசை நன்குபா வித்திடு மபாவஞ்
செகத்தைநினை யாதகத்திற்
சிவனையுன் னிடுமகா யோகமென வைவகை
தெரிக்கின்ற ஞானயோகிற்
சத்துவவு னருளின்றி நானிற்க வல்லனோ
சற்றுமச் சத்தியளியாய்

சலனமறு மெய்ஞ்ஞான நிமலசுக சன்யாச
சரவண பவாநந்தனே. எ.

நாமரூ பச்சகத் திந்திரிய விடயமா
ஞடிந்த்ரி யங்கள்கரண
நான்கிற்கும் விடயமிந் நான்குமுணர் சிவற்கு
நண்ணுவிட யஞ்சீவனுஞ்
சேமமுயர் சிவசாட் சிக்குவிட யம்மது
சிறந்தவறி விற்குவிடயந்
தெள்ளறி வெனுஞ்சேத னம்பிரம சைதன்ய
தெய்வத் தினுக்குவிடய
மாமந்த வொருதெய்வ மொன்றிற்கும் விடயமா
காதெனலு முப்பொருளிலே
யடங்கலா லாகமத் தீறறையு மாறுணே
யளாவியுய வின்கெண்ணினேன்
றமதஞ் செய்யாது கோடலுன் கடமையே
சைவசம யச்செல்வமே
சலனமறு மெய்ஞ்ஞான நிமலசுக சன்யாச
சரவண பவாநந்தனே. அ.

துக்கமது தொலையவென் னிற்றேக மெனவுள்ள
தொக்குமுத லொழியவேண்டுந்
தொக்குமுத லொழியவென் னிற்சருவ கன்மமுந்
துஞ்சியற வேண்டுமவைகள்
விக்கினப் படவெனி னிராகத் துவேஷாதி
வீடுற வேண்டுமவைதாம்
வீடவென் னிற்றுரபி மானந் தொலைந்துகெட
வேண்டுமது போகவென்னிற்

பொக்கவழி வேகமது பொன்றலுற வேண்டுமது
பொன்றவெளி னஞ்ஞானவல்
போயொழிய வேண்டுமது போகவெளி ஞான்மசுக
போதம துதிக்கவேண்டுந்
தக்கபுக ழுடையவென் னப்பவிதை நானினிச்
சார்வதுன் னருடுறந்தோ
சலனமறு மெய்ஞ்ஞான நிமலசுக சன்யாச
சரவண பவாநந்தனே. கூ.

பிறப்பிறப் பென்பவை தரும்பல விருப்பொடு
பிணக்கார் வெறுப்பகன்று
பேதக வழக்குஞ் சழக்குங் கடந்துட்
பிணைந்தவிருண் மலமகன்று
விறப்பென்னு மச்சமு மகிழ்ச்சியு மகன்றுயிர்
விளங்குதரி சனமகன்று
மேல்கீழ் புறஞ்சிறிது பெரிதுநீ ளங்காலம்
வினையிரண் டொன்றெனாது
துறக்கமே லோர்புகழ் வியோமபரி பூரண
சுகப்பிரம மாமுன்னொடு
தோயுநா ளெந்தநா ளெந்தநா ரேமோ
சொல்லியரு ளல்லலணையிற்
சறுக்கிநிதம் வீழ்கிறே னுளருண கிரியெந்தை
சாமியே யருணேமியே
சலனமறு மெய்ஞ்ஞான நிமலசுக சன்யாச
சரவண பவாநந்தனே. க0

# ஆநந்தமுகில்.



அன்னங் கொடுத்தவர்கண் முன்னநோ கச்சொன்ன
வநியாய மோவுணவிலே
யாலமிட் டுக்கொலை புரிந்தபவ மோபெரிய
வடிகளை மறந்தவகமோ
தன்னையே பெரிதென வறைந்தவதி பாவமோ
சவைகளில் வழக்கோரமாச்
சாற்றிய வநீதமோ பொய்ச்சத்தி யஞ்செய்த
தாழ்வோ வனேகவுயிரைத்
தின்றதுரி தங்களோ திவ்யகுண தெய்வம்வாழ்
சினகர மழித்தசெடியோ
திரிகரண சுத்தமில் லாதுமா மந்த்ரஞ்
செபித்தபிச கோவந்தெனை
முன்னேற வொட்டாம லாணைபுரி கின்றதே
முருகவந் தருள்செயாயோ
முத்தரொடு சித்தரும் பருகுமமிர் தம்பொழிய
மூடுமா நந்தமுகிலே. க.

அண்டினவ ருக்கின்ன றந்ததவ றோதுன்பி
லாதரித் திட்டவர்களுக்
கல்லகண் டஞ்செய்த கொடுமையோ நின்னடிக
ளடிவணங் காதவகமோ
சண்டாளர் தொடர்பினை விதும்பிய பிறந்தையோ
சாலப்பொய் சொற்றபிசகோ
சத்திரஞ் சாலைக ளழித்தபா தகமோ
சலத்திற் புணர்ந்ததவறோ

பண்டாய மறைகளைப் பழிசொன்ன பாவமோ
பகலிற் புணர்ந்தபுகரோ
பதிவிரத மல்குமட மகளிரைக் காதலிற்
படரும்வினை யோவந்ததனை
முண்டாள னுக்கிமுறி யடிமைகொள் கின்றதே
முருகவந் தருள்செயாயோ
முத்தரொடு சித்தரும் பருகுமமிர் தம்பொழிய
மூடுமோ நந்தமுகிலே. ௨.

சித்தநிலை மாறினோர் பொருள்கொண்ட குற்றமோ
தெய்வவிகழ் செய்தசெடியோ
சிசுவதை விருத்தியோ திருடிய கொழிப்போ
சிவாகம மிகழ்ந்ததீதோ
சத்தியச் சைவர்ப் பழித்தபிழை யோபரம
தன்மம்விற் றுண்டதவறோ
தான்சாக நஞ்சுண்ட தோடமோ சண்டாளர்
சாதிவினை செய்தகோதோ
குத்திரஞ் செய்வாரை மெச்சிய பிறந்தையோ
கூலிகள் குறைத்தகுறையோ
கோபத்தை யேசதா நேசித்த பாவமோ
குடிகேட னுண்பயனோ
முத்திநெறி கூடாம லெனைவளைக் கின்றதே
முருகவந் தருள்செயாயோ
முத்தரொடு சித்தரும் பருகுமமிர் தம்பொழிய
மூடுமோ நந்தமுகிலே. ௩.

வேதியரை நிந்தித்த தவறோ விவேகரற
வேட்கையை மறுத்தமறமோ

மெய்யன்பர் புரிவிழும நோன்புகட் கிடையூறு
விளையவினை செய்தமிறையோ
சூதகப் பெண்களைத் தொட்டுறை யோதெய்வ
தூடணங் கேட்டபிசகோ
சொன்னசொற் றவறாது நடவாத தோடமோ
சூதுவழி நின்றபலனோ
பாதகத் தொழின்மூல மாடகந் தேடியுள
பாவமோ பாவியின்கைப்
பலியுண்ட பழுதோ சதாகால மாயெனைப்
படர்துயர்க் கடலமிழ்த்தி
முதறி வுதிக்காம லலையவிடு கின்றதே
முருகவந் தருள்செயாயோ
முத்தரொடு சித்தரும் பருகுமமிர் தம்பொழிய
மூடுமா நந்தமுகிலே. ௪.

படிகமுத வாலோபி யாகிவந் தோரகடு
பற்றவைத் துண்டபவமோ
படர்கொடி மரஞ்செடிகள் வட்கலுற வெட்டிப்
பலக்கே டிழைத்தபலனோ
மடிநழுவு மின்கண்மேன் மனம்வைத்த மறமோவுன்
மாணடி மறந்தவடுவோ
மகத்தாய நிற்குமற் றொருதேவை யிணைசொன்ன
வழுவோ பொருட்பெண்டுகள்
கடிதடங் காணியென வுள்ளிமனை வியைவிட்ட
கன்மமோ கருணையற்ற
கதைகளுக் கேசெவி கொடுத்தகறை யோவெனைக்
காமரோ டத்திருத்தி
முடிவில்கவ லைக்கலியின் மீதலைக் கின்றதே
முருகவந் தருள்செயாயோ

முத்தரொடு சித்தரும் பருகுமமிர் தம்பொழிய
மூடுமோ நந்தமுகிலே. ரு.

கள்ளுண்டு தள்ளாடி நின்றமதி மோசமோ
கஞ்சாவு மபினும்வெறியுங்
கைகண்ட கற்பமென வுண்டமதி கேடோ
கணக்கில்வஞ் சித்தகசடோ
பள்ளர்க ளெனத்தினம் வதஞ்செய்து புன்பிசித
பக்ஷணம் பணியபவமோ
பக்ஷமது பாராட்டி வைத்தபிறர் சொத்தைமறு
படியில்லை யென்றபழுதோ
வுள்ளொன்றும் வெளியொன்று மாய்க்குத்தி ரம்பேசி
யூதியம் விழைந்தகரிலோ
வுன்னுடைய தளிகளி லசுத்தம் புரிந்தடிக
ளுழைமீறி நின்றபிழையோ
முள்ளுமுள் ளாயெனை வடிக்கின்ற தேபரம
முருகவந் தருள்செயாயோ
முத்தரொடு சித்தரும் பருகுமமிர் தம்பொழிய
மூடுமோ நந்தமுகிலே. சு.

பிரியலர்க் கிரிபாய பிழையோ பிதாவன்னை
பெண்டமர் மனக்கொதிப்போ
பெரியபொரு ளெனுமுன்னை யிலையென்ற களுடமோ
பேயடிமை யானபுளாயோ
பரதார விச்சையின் பலனோ துணைத்ரோக
பாவமோ குருசாபமோ
பத்திநெறி யாளர்ப் பிழைத்தபிழை யோநீதி
பல்கவகி லத்தையாளு

பரசன்மனை குருவண்ணன் மாதுலன் றேவிகளை
யணையவுன் னியதிமையோ
வந்தணர்க் கிடுவதா யுறுதிமொழி செய்தவா
றளியா வரிப்போவெனே
முரணுய துன்பினுழை வித்தலைக் கின்றதே
முருகவந் தருள்செயாயோ
முத்தரொடு சித்தரும் பருகுமமிர் தம்பொழிய
மூடுமா நந்தமுகிலே. ௭

நாவிதர்வண் ணார்கூலி நல்காத பிழையோ
நங்கையர்கள் கொங்கைகண்டே
னயனங்க ளைச்செல்ல விட்டபிழை யோவிரத
நாளிற் பிணைந்ததீதோ
பாவலர்கள் சாபமோ பரமவுன் கோபமோ
பத்தர்கண் மனஸ்தாபமோ
பாலுண்டு புள்ளுவந் தெய்தபழி யோதிவ்ய
பதிபூசை விட்டகுறையோ
கோவதை புரிந்தமா கொடுமையோ கன்றுகள்
குடிக்கின்ற பால்கறந்த
குற்றமோ விதவையைத் தொட்டவழு வோநல்ல
கொள்கைநிமி ராமலென்னை
மூவிழும மானகெபி யுட்டள்ளு கின்றதே
முருகவந் தருள்செயாயோ
முத்தரொடு சித்தரும் பருகுமமிர் தம்பொழிய
மூடுமா நந்தமுகிலே. அ

புனிதர்நெஞ் சங்கலுழ வசைசொன்ன கனுடமோ
பொய்ந்நூ றெரித்தபுரையோ

புருடர்மண மங்கைகளை மித்ரபே தஞ்செய்த
புகரோ பண்த்தவாவா
லகியாய நெஞ்சமுற் றஃகஞ் சுருக்கிவிற்
றகவோகை கொண்டவகமோ
வரன்விண்டு முதலியோர் நிலயநீர் நிலைகளி
லசுத்தம திழைத்தமறமோ
சனிபோ லெனைத்தொட் டலைக்கின்ற தேதினது
தண்ணளியை யுள்கொளுமற்
றண்டமிழ்க் குறுமுனி பகீரத னிராகவன்
றண்டுமுனி வரன்வாசுகி
முனிவர்சுர ரெவ்வரு மிறைஞ்சுபது மச்சரண
முருகவந் தருள்செயாயோ
முத்தரொடு சித்தரும் பருகுமமிர் தம்பொழிய
மூடுமா நந்தமுகிலே. கூ.

சுத்தமா நல்லறிவு தோன்றாத பாதகன்
றுதைபொய் யுளேனென்னினுஞ்
சொல்லுறுதி யில்லாத பொல்லாத வஞ்சகன்
சூதக விநாசனெனினும்
பத்திநெறி பழகாத பாமரன் கொடுமையே
பண்ணுமுழு மட்டியெனினும்
பழிபாவம் யாவுமொன் றாகக் குழீஇயவோர்
பருவுரு வுளேனென்னினு
மெத்தனை சழக்கின னிழைத்திருந் தானுநா
னின்னுமறி யாதுசெயினு
மெப்படியு மாதரித் திமிழருளிகைத்துநீ
யெனையாள லுன்பரங்காண்
முத்திமுத லேபுகழ் படித்தகோ ணுடுமறை
முடிவான கர்த்தவ்யமே

முத்தரொடு சித்தரும் பருகுமமிர் தம்பொழிய
மூடுமா நந்தமுகிலே. க0.

## குகப்பிரமம்.

அண்டபகி ரண்டங்க ளாத்தம் வயப்பட
வட்கியெதி ராளியிலரா
யரிபோல நெடுநா ளிருந்தரசு செய்தபே
ரரசர்பெரு வாழ்வுமமுக
முண்டதே வர்க்குரிய கோனுய் விளங்கொருவ
னுத்தியு நிலைப்புறும
லொழிந்தவிவ ரத்தைப் புராதன புராணங்க
ளோதுண்மை கண்டிருந்துந்
தண்டிகைக ளும்பல்க ளுகைத்துவெகு ஜம்பமொடு
தரணியி லிருந்தவர்களுந்
தலம்விட் டலங்கோல மாயதை யறிந்துஞ்
சதாமாசை யாசைதனிலே
மண்டிமன மடிகின்ற மாயமென் சொல்லுவேன்
மனமாசு போழுமெந்தாய்
மதிவளரு மிதயமனை மலரிலொளி யாயென்று
மருவொரு குகப்பிரமமே. க.

உன்னருள் பெறுமலிவ் வுலகினி லிருக்கும்வரை
யொழியுமோ தீயசெய்கை
யொழிவதின் றெழிவதின் றுடுபதிக் கலைபோல
வொன்றினுக் கொன்றுமேலா
மன்னியே நாளுக்கு நாளா வளர்ந்தாதன்
மறலிகை யாயபின்னும்

வரும்பிறவி தோறுமதி புன்கணே தந்துநனி
வாதிக்க வல்லதன்றோ
வன்னேகுரு தெய்வமா யுள்ளமுதல் வாவிந்த
வவதிக்கு ளெனேவிடாதிவ்
வம்புவியு மாசினியு முன்றுச னென்னவோ
ரபிதான மேதையிதி
மன்னுயி ரனேத்தையு மணேத்தா தரிக்குமொரு
வள்ளலே நல்லவுறவே
மதிவளரு மிதயமனை மலரிலொளி யாயென்று
மருவொரு குகப்பிரமமே. உ.

உள்ளன் புளார்மிக்க வசைபேசி யேசிடினு
முன்செவிக் கின்பமேயவ்
வுள்ளன் பிலாரமித துதிகளேச் சொல்லினு
முனக்கரு வருப்பாதஞெட்
டெள்ளளவு முள்ளன்பி லாதவென் றுதியுனக்
கேறுமோ விழியுமோவென்
றேங்குகிற தேமனந் தேம்புகிற தேதினே
மிரக்கமுற் றென்றுபிறிதோர்
கள்ளமனை தைக்களேந் துள்ளன் புறச்செய்து
காதலா கக்கலப்பாய்
கத்தனே நித்தனே சித்தனே சுத்தனே
கதிகருது வோரெவர்க்கும்
வள்ளலே மெய்யன்ப ருள்ளமுத வெள்ளமே
மங்காத மணிவிளக்கே
மதிவளரு மிதயமனை மலரிலொளி யாயென்று
மருவொரு குகப்பிரமமே. ௩.

காயா புரித்திமிர கானத்தி னூடுயிர்
கபடப்புன் மேய்ந்துதினமுங்
காமத் தடாகத்து நீர்குடித் துயர்வெருட்
கடுவழி திரிந்துலாவித்
தேயாது வளர்பஞ்ச வண்ணவசு வத்திற்
சிறந்தவை ராக்கியமெனுஞ்
சேணநா லங்கபடி யென்பன சுமத்தித்
திறம்பியெவ் வாற்றினானுஞ்
சாயாது புக்தியங் கடிவாளம் வாயிற்
றரிப்பித் திவர்ந்துமெனச்
சவுக்கா லடித்துசித மேலூர் நடைக்கனே
சலசமென நானடத்தி
மாயாத சிற்சபையி னடுவே குதித்துன்
மலர்ப்பதங் காண்பதென்றோ
மதிவளரு மிதயமலர் மலரிலொளி யாயென்று
மருவொரு குகப்பிரமமே. ௬.

ஆசைப் பிசாசென்னு மனதையொரு மந்திரத்
தசையாது கட்டிநல்ல
வறிவதனை யொட்டியே பதுமா தனத்திடை
யமர்ந்துநடு நாடிபற்றி
யேசற்ற வாதார தேவதைக ளத்தனையு
மிதவோடு தரிசித்தவ
ணைந்தாய் பராசத்தி யருள்கொண்டு மூலத்
தெழுந்தகுண் டலிசத்திதா
னேசைதரு மாறுகீழ் மேலாக வுள்ளதுளை
யொன்பானு நனியடைத்துள்
ளொருவழிப் பட்டரிய கண்டங் கடந்தமுத
முண்டுமிளிர் வாயில்வழியாய்

வாசமுட னேசென் றகண்டமதை யெய்துசக
மார்க்கம தென்க்குமாமோ
மதிவளரு மிதயமனை மலரிலொளி யாயென்று
மருவொரு குகப்பிரமமே. ௫.

இரவினுட லயர்வுபடு நித்திரையி னுறுகன
வெவற்றினு முனைப்புகழ்வதொன்
றில்லாத வெவ்வளவு விபரீத வேடிக்கை
யேற்றியென் னிருதயத்திற்
பரவினை புரிகின்ற மனதைநா னேசவோ
பாழ்த்தவம் மனதையங்ஙன்
பண்ணினவ ரார்கொலென் றாகிக்கி னீயெனப்
பகரவிட னுண்டாமதைக்
கருதியுன் மீதுகுறை கூறவோ வெங்கணுங்
கருத்ருஞ் செயலெவைக்குங்
காரணமு மாயதற் கப்புற மெனச்சொலொரு
காரணமு மாகநிற்கும்
வரைவிலா வுன்னையுங் குறைகூற வெப்படியென்
மனதினிது சம்மதிக்கு
மதிவளரு மிதயமனை மலரிலொளி யாயென்று
மருவொரு குகப்பிரமமே. ௬.

அகிலமிசை வதிதருஞ் சருவவுயிர் களுமிந்த
வவனிதனின் முன்பிறகை
வாசைமலி விற்றேடி யுளவினை யிரண்டினையு
மநுபவித் துத்தீருத
லிகமறுமை களினுமுண் டெனமறை யுரைத்தபடி
யாம்பாவ மீட்டினமையா

லின்று வெனுங்கருங் கடலிலே வீழ்ந்தன
மெனக்கருத வெனினுநாளும்
புகழ்ந்துனே நினைந்திட்ட புண்ணிய மெனுந்தோணி
பொள்ளென வெடுக்கவுளதாற்
புரையற்ற கரைசேர லாமென்ற நிச்சயம்
பொய்யா துதிப்பதன்றி
மகிமையருண் முன்வினைக ளிலையென்ற தீர்வையென்
மனதைவிட் டகலவிலையே
மதிவளரு மிதயமனை மலரிலொளி யாயென்று
மருவொரு குகப்பிரமமே. ௭.

சிங்கார மாருந்த தக்கோபு ரத்தினது
சிகரத்தி லடைதுகளையுந்
திடமுடை நெடுங்கடலை யேறிநூ றிப்புதுமை
திகழுவே செய்யலாமோண்
சங்கூரு மாழ்வாவி வதியையமா னவர்செய்
சமர்த்திறல் வெளியேற்றலாந்
தலைதனை யளாவியொரு மிதமில்குப் பைக்குவடு
தனையினின் றிடினுமதனைச்
சங்கார மாக்கவெரி மூட்டலா மென்பெசந்
தசைகளா லேசமைந்த
சரீரத்தி னுளவழுக் கத்தனையும் வெப்புறு
சலம்பெய்து கழுவிவிடலா
மங்காத வாபாச மனமாசை நீக்கவொரு
வழியில்லை யுனையன்றியே
மதிவளரு மிதயமனை மலரிலொளி யாயென்று
மருவொரு குகப்பிரமமே. ௮.

பொறையென்னு நற்பசும் பயிர்கருக் கிடுமனற்
பூடென்னு நோனமையைப்
பொருந்தாத பெரியோர் சரண்பேணு மாதரம்
புந்தியிற் கொண்டவெற்குக்
குறைவிறுதி யெத்துணையு மில்பெரிய வின்பவருள்
கூர்ந்துமெய் யறிவினின்று
குருமொழி யுணர்த்தியசி பதகதியு நல்குமொரு
குருதெய்வ மதுவேயெனு
மறைமுறை யிசைத்தவண முதல்வழி கொடுத்துநடு
வழியினீ யென்னைவிட்டு
மறைகின்ற காரண மியாதோ வறிந்திலேன்
மயலற விளக்கியருளாய்
மறையவனு மிறையவனு மரியமனை யிதலையனு
மனதிடை யவாவின்பமே
மதிவளரு மிதயமனை மலரிலொளி யாயென்று
மருவொரு குகப்பிரமமே. ௯.

பொய்வாழ்வு வையகம் பொய்யென் றடங்கவென்
புனைமன தடங்கிகிட்டை
புரியவொரு காலத்து நணிகண்டி லேனெனது
புதையிடை யிருந்துமிரு
மெய்வாய் கணுதியிந் திரியங்க ளெல்லாம்
விரும்பியென் சம்மதத்தை
மேவியோ தூங்குகின் றனவிவை யனைத்துக்கு
மேலாய துட்டமனது
செய்கைவிட் டுள்ளடங் கித்துரிய நித்திரை
செயுங்கொலோ செய்திடற்குச்
செய்யுமொரு தந்திரஞ் செய்யவென் றுலுநான்
செய்யும்வகை யேதுமறியேன்

மையல்கொண் டருணகிரி வந்தித்த கடவுளே
மயறபுத் தென்னையாளாய்
மதிவளரு மிதயமனை மலரிலொளி யாயென்று
மருவொரு குகப்பிரமமே. கo.

---

## பூரணாநந்தகுகன்.

---

காரணமுயர் மணிகொடு வனைந்தமுடி தன்னைக்
கரோடிமுடி யிற்றரித்தோர்
கண்டனைக டண்டனைகள் செய்துபுவி யாவையுங்
கைவயம் பண்ணினாரு
மூணுருசி பல்குமறு சுவையொடு நுகர்ந்துவிள
ரூறித் தடித்தயாக்கை
யொளியெழி றிலைக்கின்ற தருணமங் கையர்மைய
லுற்றுமென் பஞ்சுபெய்த
சேணமிசை யுயர்திண்டு தலையணை பொருந்தவஞ்
சிறுமிகளொ டாடலாடித்
தெவிட்டாத வாநந்த மீதெனச் சிந்திப்பர்
தேகத்தை நைக்குநிழல்கள்
பூணியல்பு போக்கியுயிர் போகா திருப்பர்கொல்
புகழ்தந் தெனக்கருளிய
பொற்புறுவர் நச்சுமொரு சிற்பர வெளிக்குள்வளர்
பூரண நந்தகுகனே. க.

ஆசிலா நன்னிருவி கற்பச் சமாதியை
யடைந்துபே ராநந்தமா
மமுதுண் டிழுக்காத பேறுபெற வேதனையி
லாவூாச ஞைக்ஷயமொடு

நாசமின் மனோநாச முந்துணிசெய் தத்துவக்
ஞானமும் வேண்டுமென்று
நவிலரிய வேதாந்த நூல்களக் கிடுதலா
னைவைக ளைப்பொருந்தித்
தேசுகிள ருன்றனைச் சேரநீ பெரியவருள்
செய்திபொரு செயிருமில்லாச்
சின்மய விலாசமே யென்மனதி லூறுநற்
றேனே யதீதரென்றும்
பூசைபுரி பரமகா ருண்யப் பிழம்பே
புராதன தீதவெளியே
பொற்புறுவர் நச்சுமொரு சிற்பர வெளிக்குள்வளர்
பூரண நந்தகுகனே. ௨.

சுழல்கதலி போலவே யுழல்கின்ற மனதைச்
சுவாபப் படுத்தியங்னே
சும்மா விருப்பதரி தரிதென வசிட்டமுனி
சொன்னதா வாசிட்டநூல்
கழறுவதி னுமன் னணநல்ல கல்விமுறை
கற்றுச் சதாநிட்டையே
கருதியவொர் தாயுமா னவர்சொன்ன தானுமிக்
காசினியி லெவருமதிலே
பழகமுடி யாதென வபக்குவர்கள் பின்னிடைவர்
பகருள வறிந்தநானுன்
படர்கருணை வலியினதை யெவ்விதத் தும்வசம்
பண்ணுது விடுவதுண்டோ
பொழிகின்ற தண்ணளிக் கொண்டலே யின்பப்
பொருப்பே யபேதவுணர்வே
பொற்புறுவர் நச்சுமொரு சிற்பர வெளிக்குள்வளர்
பூரண நந்தகுகனே. ௩.

தேயநனி துவளநத னிரரும் பப்பணந்
தேடிவெகு பாடுபட்டுச்
செத்தபிற குறுமனோர்க் கொருசிறிது முதவாத
தேவிமக வுறவுகண்மேற்
றுயவளி மிக்குவைத் திட்டுநினை விட்டுமா
தாபத்தி லேயுழன்று
தனுவினிற் பிணியுற்று விரிபாய லொட்டிவன்
றருமனதி காரத்தினா
லாயவிவ் வுலகைத் தணந்தபின் னிரயத்தி
லாழுவா ரறிவில்லிக
ளச்சமு மயக்கறிவு மிச்சையு மழுக்காறு
மாங்கார வாபாசமும்
போயின வெனச்சிந்தை மகிழ்வார்க ணொழிகருது
புகழ்தந் தென்க்கருளிய
பொற்புறுவர் நச்சுமொரு சிற்பர வெளிக்குள்வளர்
பூரணா நந்தகுகனே. ௬.

அண்ணனின் மனதினுக் கருவருப் பாயுள
வலாபக் கொடும்பாடலை
யமையுமிசை யிற்பாடு பொழுதுதன் றலைதனை
யசைத்துவெண் முறுவறெரியக்
கண்ணைமே லசெருகி யிதழ்வா யிழித்துநிமிர்
காயநடு நனிகுலுக்கிக்
கரமசைத் தத்தம் பிடித்தூட் களிக்குங்
கசட்டுப் பெரும்பாவியை
நண்ணியுற வாடியிசை கேட்பவரு மேபாவ
நாடுவா ரவருடம்பை
நசிக்கவரு சன்னியி னிழுப்பென வலைக்கவனு
நசைஇக்க னுற்றகண்ணைப்

புண்ணென் றுரைத்திடவு மாசங்கை யென்கொலோ
புகழ்ந்தீர் தெனக்கருளிய
பொற்புறுவர் நச்சுமொரு சிற்பர வெளிக்குள்வளர்
பூரணா நந்தகுகனே. ௫.

மங்கள குணாளமுரு கையவுன் பெரியவருண்
மல்கத் துறந்தபெரியோர்
வரிற்சென் றழைக்கலா மிருசரண் பணியலாம்
வட்டத்தின் மேல்வைக்கலா
மங்கழலி லம்புதம் பெய்யலா மெய்யலா
மலர்கொண் டருச்சிக்கலா
மரும்புகை கொடுக்கலா மஞ்சோதி காட்டலா
மாசிகூ றிப்புகழலாஞ்
சங்கையோ டின்னமுத மேந்தலா மண்ணிலே
சற்சங்க நீத்தகுடிலச்
சதியாளர் பெருமூட ரவநிந்தை யினர்மோகர்
சற்சனர்கள் போலமுதிய
புங்கவர்க ளாலேமேன் மைக்குவா யாலே
புலம்புநர்க் கிவைகளாமோ
பொற்புறுவர் நச்சுமொரு சிற்பர வெளிக்குள்வளர்
பூரணா நந்தகுகனே. சா.

நில்லாத யாக்கையினை நின்கருணை யான்விட்டு
நிலைகொள்ளும் யோகிதன்னை
நீதமே குடிகொண்ட நீதிபர னென்னலா
நித்தியா நந்தனெனலா
முல்லாச சற்கார்ய சம்பன்ன னென்னலா
மோதரிய வள்ளலெனலா

முலகமுழு துங்கட்டி யாளிறைவ னென்னலா
மோவாத செல்வனெனலாஞ்
சல்லாப சகசசம் போகியென லாமதி
தயாளகுண சீலனெனலாஞ்
சதியாளர் பொருள்கவர் பொருட்டவர்க் கிங்கொரு
தடையின் றளப்பிலாத
புல்லறிவி னற்றுதிகள் சொல்வரிழி புல்லரே
புகழ்தந் தெனக்கருளிய
பொற்புறுவர் நச்சுமொரு சிற்பர வெளிக்குள்வளர்
பூரண நந்தகுகனே. எ.

மெய்யான வாறெழுத் துண்மையை யுணர்ந்துளொளி
வெளிகண்ட வருளாளனே
வேளைப் பழித்தவழ காயதுரை யென்னலாம்
வித்தைக்கு வித்தென்னலாந்
தெய்வமதி திமிர்திவ்ய குருவென்ன லாமிக்க
சீர்பெருகு தன்மனெனலாந்
திருமகள் விலாசமுத லாளியென லாம்வண்மை
திகழ்சார்வ பூமனெனலாந்
தொய்யாத தோள்வலிச் சதுரனென லாமின்மை
தொடராத பிரபுவெனலாந்
தோமில்பர பாக்கியச் சாமியென லாநறுந்
தூய்யநெறி யாளனெனலாம்
பொய்யான காமிகட் கிம்மொழிகள் சொல்லவோ
புகழ்தந் தெனக்கருளிய
பொற்புறுவர் நச்சுமொரு சிற்பர வெளிக்குள்வளர்
பூரண நந்தகுகனே. அ.

மூலமுத லாதார மாறிற்கு மேனிற்கு
மூதண்ட வெளிகண்டமா
மோனசன காதியரை யொத்துளார் தம்மையே
முற்றும்விட் டவரென்னலாஞ்
சீலசிவ ராஜ்ஜிய மகத்துக்க ளெனலாம்வி
சேடசிற் கண்ணரெனலாந்
தேடரிய நம்பரம குருதெய்வ மெனலாமெய்
திகழ்பெரிய வறிஞரெனலாங்
காலமொரு மூன்றுமுணர் போதரென லாநல்ல
கடவுள்கர்த் தவ்யமெனலாங்
களிபெருகு பரமுத்த ரென்னலா மிடிமையிற்
காவியுடை வீக்கிமிக்கோர்
போலப் பிதற்றிவரு வார்க்கிவைகள் சொல்லவோ
புகழ்தந் தெனக்கருளிய
பொற்புறுவர் நச்சுமொரு சிற்பர வெளிக்குள்வளர்
பூரணா நந்தகுகனே. கூ.

இனியவட மொழிபமுத முண்டுதென் மொழிவார
மென்றகட லைக்குடித்தே தா
ரிணையிலா வுன்சரிதை கூறும்வலி கொண்டன்பி
லேறுமொரு கச்சியப்பர்
மனதிடை வதிந்தபொரு ளோவிணை நாரதன்
மனக்கவ றபுத்தபதியே
மாணு றெழுத்துச்ச ரிப்பவர் நினைப்பினை
மதித்தரு ளருட்பாவையே
கனிமலர்க டந்தம்பர் களிர்நிழற் செய்யருங்
கானமார் மலயமுனிவன்
கருதுமொரு கடவுளே கருணைபெரு கருணகிரி
கவிகளி லமர்ந்தபரம

புனிதனை குமரகுரு தாசனென வெற்குமொரு
புகழ்தந்த வாபுணர்ந்தாள்
பொற்புறுவர் நச்சுமொரு சிற்பர வெளிக்குள்வளர்
பூரணா நந்தகுகனே. க0.

---

## குந்துகால்.

தந்தனன தந்தனன தந்தனன தந்தனன
தந்தனன தந்ததான.

அம்புதநி றைந்துவிரி வெண்டிரையு லம்புவிழு
மம்பெருகு குந்துகாலி
லந்தணர்வி ரும்புமலர் தந்திடும ரம்பலவ
டர்ந்திடவ ளம்பொயாத
பம்பரமு றழ்ந்தவிர்கு ரும்பைகட ருஞ்சிறு
பசுந்தழைசெ றிந்தகேளி
பம்பிநிழ றந்திடவ மைந்ததளி யின்கணே
படுஞ்சடைநி லந்துழாவச்
செம்புநிற வம்பரம ணிந்துகர மொன்றிலொரு
தெண்டதுவி ளங்கவாசச்
செங்கழலி லொண்குறடி லங்கவளி யன்பர்க
டினந்தினமி றைஞ்சிவாழச்
சம்ப்ரமமு டன்றிகழ ருந்தவனி ரும்பரம
சங்கரிப யந்தசூர
சண்டன்முரு கன்குமர னென்றுதொழு கின்றவர்கள்
சஞ்சலம கன்றுபோகும். க.

தன்னத்த தத்ததன தன்னத்த தத்ததன
தன்னத்த தந்ததான.

கம்மற்சி மிக்கிமிலை மென்மெய்ப்ப ரத்தையர்கள்
கண்மைக்க கன்றுமோக
கன்மப்ப வக்கவையை யுண்மைப்ப தத்திறமை
கண்ணிச்சி றந்தவீர
வம்மைக்க டுத்தலையி னுன்னித்த றிக்குமுர
மண்ணிக்க டிந்தரூத
வந்திற்க மெய்ப்பரம நன்மைப்ப யிர்ச்செயுந
லன்மக்கள் வந்துசேருஞ்
செம்மைச்சி வப்பிதழி மென்முட் கடுக்கைபுனை
தென்மொய்த்த குந்துகாலிற்
சின்முத்தி னாக்கரமு டன்மத்த கச்சடைநி
லன்முட்ட நின்றதேவை
யிம்மைக்க ணுற்றிறுதி யின்முற்ற ளிக்குமிறை
யெம்மைக்கொ ளந்தகாரி
யின்மைத்து னிக்குமுரு கென்னத்து திப்பர்துய
ரெண்ணிப்ப றந்துபோகும். ௨.

தனதனன தானதன தனதனன தானதன
தனதனன தானதனன.

அமரர்களை யேவல்கொள வதிவலிமை சானிருத
ரறவெவர்கணை யேவும்விறலோ
னனலியின மீளிதவ வியன்மருவி ராகவன
தணையெனுமொர் சேதுவிடையே
விமலவிளை மாமலர்க ளவிழுமடர் காநிறையும்
விரதர்குவி *காலினரிதீர்

* குந்துகாலென்பது காலெனத் தலைக்குறை விகாரமாயிற்று.

விசதமலி நீறுருவ முழுதுநனி தோயவெழில்
விளைவிரத வேடமொடுவாழ்
சுமவதன மாமுனியை யரிமருக வேன்முருக
சுரர்நரர்கண் மாதவர்கடாந்
தொழுமினிரு நீலஞுமலிமிலிவரு மீசவறு
சுடருமொரு சோதிவடிவாக்
குமரகுரு தாசனிதம் வழிபடுசு ரேசசிவ
குருபரசு வாமியெனவே
குணமொடுசெ தாநஹுகி யடிபரவு மானுடர்கள்
குறைகடுகி யோடியிடுமே. ௩.

தனதாந்த தந்தன தனதாந்த தந்தன
தனதாந்த தந்ததான.

முடிபூண்ட மண்டலீ கருமாண்டொ முழும்பருநன்
முடைமாந்து கின்றபேயின்
முகையாங்க ணங்களோ டருண்மாந்த ரும்பையார்
முனியாண்டி யும்பனுளு
மடியாம்ப தங்களை தொழுதாங்க லர்ந்தபூ
வணிவேய்ந்தி லங்குவேணி
யதுதான்று லங்கவே யணிசான்ற செக்கைமீ
தடல்சேர்ந்த தண்டமோடு
வடிவேய்ந்த வண்டுபா டடர்பூங்க டஞ்சதா
வளர்பாம்ப னென்றதீவுண்
மடனீண்ட கந்தகை தகையீந்து சம்புமா
மணலோங்கு குந்துகாலிற்
குடியாண்ட மர்ந்ததே வனையாம்ப லந்தணர்
குழைநான்ற கொன்றைசூடுங்

படிறின் ஞானகல ருடல்பி ரேரக
மெனச்சொ லும்பரம மாயையுந்
துணிமல் குன்னையறி யாவ ணந்திரைசெய்
தொழில்வி ளைத்திடு திரோதையுந்
தொல்லை யைந்துதலை யாமி வற்றுளிரு
தொழில்பு ரிந்திடு திரோதைதான்
கணித மில்லுனை விரும்பு வாரிருள்
கடத்து மெற்குமருள் செயவருள்
காம நாசர்குரு நாத னேயமரர்
கர்த்த னனகதி ரேசனே. உ.

நாச மெய்துசட மேய்ப்ப வாதனையு
நாதன் செய்புதுவ தாவெணி
நவில ருங்கரும சனன மில்லையென
நவிலும் வாதிகளிவ் வுலகிலே
யாசி னல்லவய வங்க ளாகவு
மலக்க ணூரவைகள் பழுதுமா
யமைய வந்தமுறை மைக்கு மூலம
தறைந்தி டார்புவியின் மாண்டுளா
ரீச னணைசெலு நரக சொர்க்கநிலை
யெய்தி மீளுவதை யில்லையென்
றியம்பி னலெளிது வலிதி லாதநடு
வாமெ னுந்துணிவு மோர்கிலார்
காசி னிக்கணிவர் நடையை நின்னடியர்
கருது வார்கொலோர் கணுவினுங்
காம நாசர்குரு நாத னேயமரர்
கர்த்த னனகதி ரேசனே. ங.

எப்பொ ருட்குமிறை நீயெ னக்கருதி
யெந்த வேளையு மிறைஞ்சிடு '
மென்னை நீதவற விட்டி டிற்புவியி
லென்ன மேன்மையுர னுண்டெனக்
கொப்ப ருதநவ சித்தர் சந்ததமு
முன்ன னோக்கியதி ரேகமே
யுறும னந்தவித மாய சித்திக
ளுவந்த ளித்தகிரு பேசனே
யப்ப னேசரத முத்த னேகயிலை
யத்த னேயரு ணிருத்தனே
யன்பர் கட்கழிவி லின்ப நல்குபர
மாப்த னேயுனது ஞாட்பருட்
கப்ப லேறுபு பிறப்பெ னுங்கடல்
கடக்க வோர்கருணை செய்குதி
காம நாசர்குரு நாத னேயமரர்
கர்த்த னானகதி ரேசனே. ௪.

கூடம் வெஞ்சின முலோப மென்னுமதி
கோது காய்த்திடு பலாசியைக்
குடில மோகவலர் வாளி யானுலவு
குற்சிதம் பெருகு பாத்தியைக்
கீட மொய்த்தவி யிடங்க ளைக்கொடிய
கிருது நாய்வதி யரங்கினைக்
கிருபை யென்னுமுய ரருளி னுக்கயல்செய்
கேத வூற்றெழு மசும்பினை
யேட லற்றவழி வினர் நாளுநிலை
யென்றி ருந்துகடை நாளிலே
யின்னன் மேவியுரி சட்டை தன்னையிவ
ணென்ன தென்றினு மிருப்பனோ

காட கத்திரையை யூட றுத்தனது
களியி லுய்யவருள் செய்குதி
காம நாசர்குரு நாத னேயமரர்
கர்த்த னானகதி ரேசனே. ௫.

மிடிபொ றுத்தசமு சார வல்லலில்
விழுந்த ழுங்கிமன நோயினான்
வெய்ய வேதனை யடைந்து மாமிச
விழுப்ப டர்ந்தமல வாக்கையிற்
குடியி ருந்தவர்க ணிலைக லைந்துரிய
கூடி ழுப்பினும் வினைப்படிக்
கும்பி பாகமெனு நிரய மண்மியனார்
கொள்ள நேரிடு மெனாவுன
தடிப ணிந்துகுறை கூறி நிற்குமெனை
யாத ரித்தருள வேண்டுமா
லறிவி னுக்கறிவு மாய னந்தமறை
யறிவ தற்கரிய பெரிதுமாய்க்
கடிய ரத்தமணி யுருவு மாயிலகு
கரவி லார்கள்குல தெய்வமே
காம நாசர்குரு நாத னேயமரர்
கர்த்த னானக்தி ரேசனே. ௬.

என்று மீறில்கதி சொல்லு நான்மறையு
ளெசுரெ னும்பழைய மறையிலே
யிசைய நின்றுநவில் பிரக தாரணிய
மெனும்வி சேடவுப நிடதவாக்
கொன்றி லேயுளப டிக்கும் மேதினியி
லுய்ப்பி ராணிகளி லெவரெவ

ருள்ளு ளேயெவனை மெவனை மெண்ணிடுவெ
　　ருறுவ ரேயவனை மவனைமால்
குன்ற லற்றநினை யழிவி லாதமடர்
　　குறைவெ னக்கருதி மாண்டனார்
கூறு மென்கணுமவ் வாறு சூழுணர்வு
　　குறுகு மோவடிமை கொண்டபின்
கன்றெ னக்கதறி நின்ற வர்க்கருள்செய்
　　கபிலை யேகருணை வள்ளலே
காம நாசர்குரு நாத னேயமரர்
　　கர்த்த னேகதி ரேசனே. ௭.

அங்கி மேலினி திருக்க வுஞ்சிருணை
　　மாய தைச்சுவனை மாக்கவு
மகில முட்குழி யகழ்ந்தி ருக்கவு
　　மனந்த லோடுணை வொழிக்கவு
மங்குல் விண்ணிடை நடக்க வும்படன
　　மாக வெம்முறையு நுவலவும்
வான தீதர்களை யேவல் கொள்ளவு
　　மலிந்த சித்திக ளுளார்களும்
பங்க மற்றவெளி கண்டு கொள்வர்கொல்
　　பதம்ப ணிந்தருள் படைத்தவர்
பார்த்தி டற்கருமை யல்ல வேயெனது
　　பரிவி லூறினிய வமிர்தமே
கங்கு லெல்லென லிலாவ கண்டசுக
　　ககன மேககன வட்டமே
காம நாசர்குரு நாத னேயமரர்
　　கர்த்த னேகதி ரேசனே. ௮.

வறுமை யென்னொர் பிணி யிற்பி ணங்கிமன
மறுகி வாடுவ தலாதுழன்
மனது சித்திர விளக்கெ னச்சமைய
மாத்தி ரைப்பொழுது மறிகிலேன்
சிறுவ னைச்சிறி தணைக்க வென்றுனது
திருவு ளத்தினி திருந்திடிற்
சித்த மிப்படி மயங்கு மோபுரையில்
செல்வ மென்னையு மொறுக்குமோ
வறிஞர் தம்மிரு தயச்ச ரோசவளி
யதைய ருந்திமகிழ் தும்பியே
யதுவி தென் றுகரு தாத டங்குபிர
மாது பூதியி லுரைதங்
குறையி லாதில கறுதி யேயெனது
கரிச றுத்தருள்செய் தெய்வமே
காம நாசர்குரு நாத னேயமரர்
கர்த்த ஞனகதி ரேசனே. ௬.

அஞ்சு ரும்புவிழு முண்ட கக்குரவ
னப்ப னுக்கிளைய சேயெனு
மைங்க ணைக்கிழவன் வந்து லாவுமக
மான விச்சட மெடுத்துநான்
பஞ்ச ரப்பறவை போல வீதறுதி
பட்ட பங்கமது போதுமால்
பாவ நாசமெனு நின்வி ழிப்பரிசு
பற்றி யென்றனைக ளாயுள
பஞ்ச பாசமு மறுத்தெ னைப்பெரிய
பார்வை கொண்டுதரி சித்தவண்
பரம ஞமுனை யறிந்த ளாவிமிகை
பாற்று மார்க்கமினி வேண்டுமீ

கஞ்ச வியடியி னருளி னின்றுபுகழ்
கழறி னோற்கருள் புரிந்துமேனாய்
காம நாசர்குரு நாத னேயமரர்
கர்த்த ஞனகதி ரேசனே. க0.

---

## சரவணபவன்.

பன்னிருசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

இந்துள மாமலர் சந்தத மணிபர
மேந்த்ர வடாநநமின்
னிலகு துவாதச ஹஸ்த சரோருக
வேரல ரம்பகமா
மந்திர வேலவ சுந்தர சேகர
மண்டல குண்டலகோ
மாகதர் புகழ்கிரு பாகர சீதர
மாலரி சோதரியின்
மைந்த குணாலய வண்டர் சேனுபதி
மங்கல மஞ்சிதநன்
மாதவர் சேதன காரண பூரண
மான்மக ளன்பகுக
கந்த பராபர சந்திர நூபுர
கண்டக ரந்தகவெண்
காடுறை வோர்குரு நாத வெனக்கருள்
கனசர வணபவனே. க.

மிக்க சுவேத விடைக்கட வுட்கு
விருப்புடை யேணமலே

மெச்சிடு வர்க்கருள் சித்ர விசித்ர
விலாச சதாவிசித
முக்க ணுருத்திரை யற்புத வித்தக
முக்ய வுமைக்கினிய
முருக வளைக்குற மகண்மரு வெற்புஜ
முதலவ வித்துருமச்
செக்கர் நிறப்பத முத்தைய சத்திப
செச்சை மணக்குமெழிற்
சிந்தூர வடிவ சிகாவள வாகன
சிற்பர தற்பரசே
யுக்க விலோதன நித்யகல் யாணமெய்
யோக தயாளகுண
வொப்பறு விறலயி லிறைவ வெனக்கரு
ளொருசர வணபவனே. உ.

பங்கய வம்பகி பண்டு மனேன்மணி
பந்து முலைக்கௌரி
பரம சொரூபி விலாச வுலாச
பராபரை யாதிசிவ
சங்கரி சங்கரி தங்கை மணந்தரு
தாரணி காபாலி
தருண சகாய குணங்கெழு நாரி
சதாநட ஞநந்தி
புங்கவி யம்பிகை யின்ப சுமங்கலை
புன்க ணிலாயுவதி
புதுமல ரணிசிலை தனைய பகோதய
பூரண வாரணசீர்
தங்கிய கிண்கிணி தண்டை சிலம்பு
சதங்கை முழங்குமிரு

சரண வெனக்கரு ளிகபர நாயக
சயசர வணபவனே. ௩.

செங்கனி வாய்வளை மங்கை சௌந்தரி
திங்க ளியங்குமதி
சித்ர நகைச்சிவ சக்தி பருப்பதி
செப்பு முலைக்குமரி
மங்குலின் விஞ்சிய கொந்தள வம்பிகை
மஞ்சுள மாமகிஷ
மர்த்தனி நிர்த்தனி பத்மினி சற்குணி
மன்னு பணுபரணி
துங்க துரந்தரி யிங்கித மங்கள
சுந்தரி வாமிமஹா
சுத்த மெய்ஞ்ஞான சொரூபி பவானி
சுதந்தரி முதன்மாதா
வெங்கு நிறைந்த நிரந்தரி நந்தன
வென்ற னுயிர்த்துணைவ
விருடிக ணுத சுரேச வெனக்கரு
ளிடுசர வணபவனே. ௪.

சேம நலங்கிளர் சாமளை கோமளை
சீலி மஹாநூலி
செல்வ ஹிமாசல செல்வி யகாரி
சிகாத வகோரிநறுங்
கோமள கும்ப பயோதர சண்டிகை
கோல வராகிசத
கோடி ரவிப்ரபை வீசு முடிப்பர
குடிலை யருட்புவனை

மாமலம் வெந்தழி யிம மிருந்திடு
மோதரி யெண்டோளி
மயிலை விழிக்கரு ணாகரி நந்தன
மால்பிர மர்க்கரிய
சாமி யெனுஞ்சய வீர வரோதய
சமய சகாயவருட்
சாகர மாமொரு நாத வெனக்கரு
டருசர வணபவனே. ௫.

பாம்பணி யந்தரி யந்தர வும்பர்
படர்ந்து வணங்கமரி
பாமக ளுஞ்சுக சிமக ளும்விரி
பார்மக ளும்புகழுஞ்
சாம்பவி யெண்குணி யோங்குபு ராந்தகி
சந்தத கல்யாணி
தாதகி சண்பக மாலிகை புனைகுண
சாலி மஹாசூலி
காம்பர விந்த வயற்றரு தந்தைம
காகடல் வண்ணனரிக்
கண்ண னெனுந்திரு விண்டு சகோதரி
காதல வோமுருக
தேம்பொலி நீப வலங்கன் மிலைந்திடு
செந்திறன் மொய்ம்பவருஞ்
சேகர சேகர தேவ வெனக்கருள்
சிவசர வணபவனே. ௬.

ஆகவ வீர நிசாசர யூக
மழுங்கி மடிந்திடவு

மாதவ னம்புலி நாகம் வசுந்தரா
யாவு நலங்கொளவு
மாகர் வணங்கு திகம்பரி திரிபுரை
வண்டன வமுதுணவு
மலைவிலி தந்த மஹாசுக சுந்தர
மைந்த மஹாமௌன
யோக கிர்பாகர சாகர தேசிக
வோவிய வேலவகல்
லொண்மை மிகுஞ்சிவ சம்ப்ரம சங்கர
வொளிர்பதி னெண்கண்ண
வேக பராபர ஜீவ தயாபர
வென்று மிளங்குமர
வென்னுயிர் நாயக மாகிய மாமயி
லிவர்சர வணபவனே. எ.

குழலி விதுக்கிடை நம்ப னாறும்புனல்
கொன்றை யணிந்தசிவன்
குஞ்சித பாத னெனுஞ்சபை நாதன்மு
குந்த னவாமுசித
வெழுகொழு குங்குக சாரச லோசன
னுண வரிந்தமனு
மறைமறை வாணியி னூர்வல நான்முக
வந்தண னும்புகழுங்
கழலயி ராணி யனுமய வாரணி
காரணி நாரணியொண்
கைலையை யாள்சிவ காமி சுகேசுரி
கான்முளை யாயமரர்
தொழுவுள ஷண்முக தேவ கிராதர்
சுவாமி யெனப்பணியுஞ்

சோதி நிலாவு சொரூப வெனக்கருள்
சுசசர வணபவனே. ௮.

ஏர்பெரு குந்தட லங்கையை யாளு
மிராவண காதகன்வல்
லிகல்கெட வேயடர் கீசக சேனைபொ
டேகிய ரகுராமன்
பார்புகழ் பஞ்சவர் நேச சகாயகொ
பால பிரான்மருக
படாறு கஜமுக ஞரனிமிர் சிவகண
பதியிறை மகனுயி
சீர்வளர் பருவத வர்த்தனி நந்தன
சிவபிர ணவசாமி
சிவசம யவுறுவர் கருது மஹேச
சிலம்பல றுஞ்சரண
நீர்நில மாருத மாதிர மழலுயிர்
நிலவிருள் வலிகளிடை
நிறைசரு வேச குமார வெனக்கரு
ணிஜசர வணபவனே. ௬.

ஓதிம மேசி பிகஞ்சிவ றாதுண
மொகர முலாவுவள
முயரோர் சிவேதை மலேக்குறு முனிவ
னுவந்து பணிந்தபத
நாத வுபாசகர் நேச கிர்பாகர
நாயக மாமௌன
ஞான நிதான சதாசிவ தாரக
நாயகி மாதேவி

காதல பாதல பூதல மீதல
காரண மாயைமுதால்
கருணை மலர்ச்சியி னருணை கிரிக்கொரு
கதியருள் சிற்கடவுள்
பூத னைசந்ய புராண புராதன
போத விலாசவருட்
போக சமாஜ விசாக வெனக்கருள்
புரிசா வணபவனே. க0.

---

## நவரத்தினமீக்கூற்று.

சந்தப்பா.

தந்தன தானன தந்தன தானத்
தந்தன தானன தானு தானு
தந்தன தானன தந்தன தானத்
தந்தன தானன தானு தானு—தனதானு.

இந்துப கிரதி தங்கிய வேணிக்
குன்றவி லானருள் பாலா சீலா
விந்திரை யாளனெ னுந்திரு மாலிற்
கின்புள மாமரு மானே தேனே மயிமேலேறி
யிந்துள மாலையி லங்கிடு மார்புக்
கந்தகிர் பேசவி சாகா நாகா
வெங்குதி லாவிட னந்தர தேசுக்
குண்டல மாமறை மூலா சாலா வடிவேலா
வந்தமி லாதவ சுந்தரை மீதிற்
றொந்தை யேதரு தீதே றுதே
யைம்பொறி சேர்மன மிஞ்சவி டாதுட்

கொண்டவர் காணும காபோ தானூ புரபாதா
வம்புய யோனிய ருந்தொழில் பேணிக்
கொண்டவ னேமதி நாதா நீதா
வம்புநி சாசரர் கும்புகண் மாளத்
திண்படை யேவிய வீரா தீரா வெளியேனு
னிந்திய வாதைகண் மண்டுத லானற்
சிந்தனை வாடுபு கூகூ கூகூ
வென்றுக ணீர்விட லுன்பெரு நீர்மைக்
கொன்றும ரோவைய வாவா வாவா விரைவாயே
யெங்கணு மேயது ரந்தர மேதைத்
துங்கப ராபர வேதா தாதா
வென்குரு வேயரு ளன்பர்ச தாநச்
சின்குரு வேபர மாயா வியா நெடுவாழ்வோய்
சந்தத நீயெனு ணின்றுகெ டாவப்
பந்தமெ லாநனி தீதீ தீதீ
சம்புச தாசிவ வம்பர மீபொற்
செங்கழன் மாமலர் தாதா தாதா சருவேசா
சங்கரி யாயிதி கம்பரி காமர்ச்
சுந்தரி மாலினி சேயா தூயா
தண்டமிழ் மாமுனி கும்பிடு கோலப்
பங்கய பாதப கேசா வீசா விறையோனே. க.

தனதன தானத் தனத்த தனதன
தனதன தானத் தனத்த தனதன
தனதன தானத் தனத்த தனதன—தனதானு.

அறுமுடி மேவத் தரித்த முடிகளொ
டலர்முக மாறிற் சொலிக்கு மொளியையு
மழகுள காதிற் றொடுத்த குழையையு மணிமார்மே

லனளி நிலாவைப் பழித்த பணியையு
மளிவிழு வாசக் கடப்ப வரியையு
மயில்வடி வேல்கைப் பரித்த வெழிலையு மணைமீதார்
செறிபணி யாரச் சரப்பெ ருமையையும்
விரைகமழ் தாளிற் றொனிக்கு மரவொடு
சிகிமிசை நேருற் றிருக்கு மியலையு மொருபாலே
சிலைநுத லாள்வச் சிரத்தன் மகளையு
மொருபுற மேனற் குறத்தி தனையுமோர்
தெருளொடு காணக் கிடைக்கு நெறியினி னடவாமே
மருநெறி யாளர்க் குரித்து மிகவுள
மடர்சொ லுலாசப் பிதற்ற லிடையுமுன்
மனமதை வீணிற் செலுத்தி யறுதின நிலையாமோர்
வழிதெரி யாமற் சகத்து வெறியெனு
மிருவினை யாசைப் பரப்பு ளினும்விழ
வலைதனை வீசிப் பிணிக்க விறனம னுகமாயா
மூடியவ னாகித் திகைத்தி டுதலல
தடியவ னாகிப் பிழைத்தி டுதலெனு
முடிவறி யாமற் பதைக்கு மெளியன திடர்தீராய்
முகிலன கூரற் படைத்த வுமையவ
டிரிபுரை கானக் குசத்தி கரமமர்
முருகச ரோசப் பதத்து விமலவெ மிறையோனே. ௨.

தனதன தனதன தனதன தனதன
தனதன தனதன தனதன தனதன
தனதன தனதன தனதன தனதன—தனதானு.

நெடியவெ ழுநரலை கொதிகொள வுமலைகள்
கடகட கடெனநி லமிசைவி ழவுமவ
னியுநப முமுழல வுமசுரர் பரிகரி தவிடாயே

நிகழுமழ லனலி கிரணமு முதுமறை
யநிறையவு மமரர் சயசய வெனவவ
நிசிசர ரலறியு ளுயிர்விட வுமொரயில் கொடுவீறு
கொடியக ரிமுகவன் வரைமுக னுரமுள
வரிமுக னசுரரி னரசனொ டவனடர்
குலமுழு வதுமற நிமிடமு ளமர்தரு மொருவீரா
குளிரல ரடவிசெ றிவளை தனிலுறைகு
றவர்மக ளையருள் விரகொடு மருவிய
குமரகு ருபரச ரவணப வகுகவ னகநாதா
படியிடை யநுதின மறநெறி யொழுகியு
ளிருசர ணிணையவு மருளது பெறவும்வி
பலவினை வொழியவு மருள்புரி கிறவிதி யறியாயோ
பகவதி மதுபதி விமலைய மலைகிரி
புணரபரை புவனைக வுரிகும ரிபதுமை
பயிரவி யருமறை தொழுசிவை மரகத வயிராணி
யடிகள்ச னனி*பிர யுதரவி யொளிவிடு
கயிலைம லையில்வளர் சடையரன் மனமகி
ழரியவு மைமுருக னெனுமிமை யவர்பணி பரமேசா
வகிலம திலலையு மவலம னதையுள
வடியனு னையறியும் வகையையு ணரவினி
யருள்புரி யருள்புரி யெழிலுறு மறுமுக விறையோனே.

தனன தந்தன தானன தந்தன
தனன தந்தன தானன தந்தன
தனன தந்தன தானன தந்தன—தனதானா.

உசித வம்பல வாணர்வி ரும்புப
கவதி யம்பிகை மாலினி மங்கள
வுமைப ரம்பரை யாமளை சங்கரி சகன்மாதா

---

* பிரயுதம்=பத்துலக்ஷம்.

வொளிரி ருங்குய வாரியை யந்தரி
யமலை குண்டலி தேவிதி கம்பரி ,
யொசிம ருங்குடை நாரிம தங்கியின் மருமானே
கசமு கந்திகழ் சோணித வைங்கர
முடைய வன்றுணை வாவெரு சுந்தர
கனக குண்டல சீதள சண்முக சகதீசா
ககன வும்பர்கள் மேயவ ரந்தைக
டொலைய வெஞ்சின மாயவண் மைந்தர்கள்
கடக கங்கண மோடவர் வன்கைகள் பொடியாமா
நிசித வெஞ்சர வாளிசொ ரிந்தொரு
நொடியில் வென்றவ னேயரு ளொன்றுனை
நினையு மன்பினெ நாளுமி றைஞ்செனை மகிமைநாவே
நிதம லிந்திட ரேதரு கின்றதி
தகல வின்றொரு பாயமி டும்படி
நினைவ ணங்கின னேயிது சங்கதி யறியாயோ
பசியெ ழுந்தமு தானத ருந்திட
மிகுப யங்கர மோகொளு மென்றன
பலவ கந்தைகள் யாவுமி ரிந்தற வருடாராய்
பலரு ரங்கிகள் போலொளி ருந்திரு
முகந றுங்குற மாதைம ணந்தருள்
பரவ வெங்கணு மாகநி றைந்தவெ மிறையோனே.௪.

தனனதன தனனதன தனதந்த தத்தனன
தனனதன தனனதன தனதந்த தத்தனன
தனனதன தனனதன தனதந்த தத்தனன—தனதானா.

கரியகுழன் மிசையலர்கண் மிகவுந்த ரித்துபய
செவிகளிடை நறியசெவி மலர்நன்க மர்த்தியளி
கமதிலொளி பெருகுசிறு திலகங்க ளிட்டுமுலை யுரமேலே

கனகனக பணியணிக ளவையுங்கி டக்கவிரு
கரமருவு வளைகள்கல கலவென்றொ லிக்கவரி
கலசமெயி றுயர்சிகரி களைவென்று முட்டுமிரு முலைவாரார்
சரிகைகளி னரிகள்பள பளவென்றி மைக்கவளை
தனில்கலையி ரதனமணி கிரணந்த ரச்சிறிய
சரணமிசை பரிபுரப ரியகஞ்சொ லிக்கநெடு மறுகூடே
சபரவிரு விழியசிய யிலிணுங்க திக்கநகை
களின்மறுவி லரிணமலி தரளம்பி றக்கவன
சமலர்முக மதிலினிய குழகங்கு திக்கவிடை துடிபோலே
தெரியவிள வனமனைய நடைகொண்டு தக்கபயி
லதுவிளைய வுலவுகையின் மயறந்தெ வர்க்குமறு [ரே
தினமனையு முறைமையுழி யுளசொம்பொ னத்தனையும் வருமா
செயும்வகைபல் பணியளவில் விசனங்கொ டுக்கவுள
பழிமனதை யுடைமகளிர் சுகநஞ்செ னக்கருது
தெளிவையினி நினதடிமை பெறவுன்றி ருக்கருணை யதுதாரா
பரியதிரு வரிவிதியு மமரந்தொ டுத்தபொழு
தனைநொடியி லருணகிரி வடிவொன்றெ டுத்தசடை
யரனுடைய விடமருவு முமைசங்க ரிக்கினிய முருகோனே
யசுரருர நெறிவுபட நடனஞ்செய் நற்பசிய
தழைஞமலி தனிலிவரு மகளங்க சித்தனென
வடிபுகழு மடியவரை யுளநின் றளிக்குமரு ளிறையோனே.

தாந்த தந்தன தாந்த தந்தன
தாந்த தந்தன தாந்த தந்தன
தாந்த தந்தன தாந்த தந்தன—தனதானா.

நீண்ட சம்பம கேந்தி ரன்களை
யோங்கு மங்கமெ லாம்ப கம்பெற
நேர்ந்த துந்துணி சான்ற சந்திர னொளிதானே

நீங்கி யஞ்சன மாங்க ருங்கறை
சார்ந்த துங்கடல் சூழ்ந்த லங்கையி
னீண்ட சண்டையி னுண்ட கண்டக னடியோடே
மாண்ட துங்கபி வேந்த னெஞ்சிலெ
லோன்கு லன்கணை பாய்ந்த துங்குண
வாஞ்சை மிஞ்சிய பாண்டு மைந்தர்கள் பகைராசா
மாய்ந்த துந்தவர் தோன்ற செந்தவ
மோய்ந்த துங்கடி யாங்கு ழம்புக
டோய்ந்தகொங்கையர் வீம்பினென்றிருண் மலநூரூ
ராண்ட வன்கழல் சேர்ந்த தொண்டர்க
டோர்ந்த றைந்ததை யோர்ந்து கொண்டவெ
ஞந்த ரங்கநி ஜாம்பு ஜந்தனில் வளர்தேவே
யாழ்ந்த தண்கடல் போன்ற கங்கையி
னீந்தி வந்தகி லாண்ட மெங்கணு
மாண்ட ருந்தவர் வேண்டு சங்கரி யுடையோர்வார்
பூண்ட தின்சுவை மாந்தி யிந்துளம்
வேய்ந்து புங்கவர் வேண்டல் கண்டொளிர்
பூங்க ரந்தனின் ஞாங்கர் கொண்டுட களனூடே
போந்தெ திர்ந்தவர் சாய்ந்தி றும்படி
காய்ந்த கந்தசு ரேந்த்ர நின்கழல்
பூண்ப தந்தர வேண்டு மெங்குல விறையோனே. சு.

தானன தானத் தனத்த தந்தன
தானன தானத் தனத்த தந்தன
தானன தானத் தனத்த தந்தன—தனதானா.

பூவையர் மேற்றி ருக்க வுந்தட
மாகிய தாலத் துதிக்க வும்பல
பூடண மேலிற் றரிக்க வுந்தவழ் சிலபோதே

போளியு ளுவைப் புசிக்க வுந்துக
ளேறிடு தூசைத் தொடுக்க வுஞ்சிறு
போதக ரோடெக் களிக்க வும்புவி நடைகூடா
மேவிய சோரித் துவக்கெ லும்புள
பூதிய மோடிப் பெருக்க வுஞ்செழு
மேதைக ளூபித் தடிக்க வும்பொது மகள்வீடாம்
வீதியி ராவிற் கிடக்க வுந்தெளி
வாளிகள் காணிற் சிரிக்க வும்பொரு
வேள்சர மார்பைத் துளைக்க வும்பெரு மயலாமா
வாவலின் மாதர்க் கலக்க வும்பிதிர்
தேடிய காசைத் தொலைக்க வுங்குடி
யார்பல ரேசிப் பழிக்க வும்பின ருரியோர்தா
மாடவ டேடிப் பிணிக்க வுஞ்சமு
சாரமு ளாடித் திகைக்க வும்பட
ராமய மீறிக் குறைக்க வுங்கடை சியிலேமா
தீவிர மாகக் கணிச்சி யந்தக
ஞதனை நாடிப் பிடிக்க வும்புதை
தீமுது காணிற் படுக்க வுங்கரு நுழையாமே
சீதள நாளைத் துதிக்க வுஞ்சுக
வாரியை வாரிக் குடிக்க வும்புகழ்
சேரரு டாசிற் சபைக்க டம்பவெ மிறையோனே. எ.

தத்தத் தத்தன தத்தன தந்தன
தத்தத் தத்தன தத்தன தந்தன
தத்தத் தத்தன தத்தன தந்தன—தனதானு.

தட்டச் சக்கிரி யைப்புனே சங்கரர்
பக்கத் துற்றிணே யற்றெருளி ரம்பிகை
சத்துச் சத்திப ருப்பதி தந்தநன் முருகோனே

தத்தித் தத்திதி தத்தத திங்கண
தத்தித் தத்திதி தத்தத திங்கண
தத்தித் தத்திதி தத்தன வென்றெழி னடமேதா
னெட்டுத் திக்குந டித்தசி கண்டியி
லெக்கிப் புத்தமு தக்கனி யென்பது
தொட்டுப் பொற்புவி சுற்றிய சம்ப்ரம சகதிசா
வெற்கைச் சத்திபி டித்தசு ரன்கக
னத்துக் குப்பைகண் முற்றுமொ ழிந்திட
விட்டப் பத்தர்த ழைத்திட வந்தசண் முகதேவே
சுட்டுக் கொட்டைப ரப்பியி லங்கையொர்
பத்துச் சித்ரமு டித்தலை யன்றிரள்
சுற்றத் தைக்கணை விட்டடல் கொண்டவன் மருமானே
துக்கத் தைத்தெறு பொற்கிரி செந்தில்வ
ளத்தைப் பெற்றுயர் பொற்புறு குன்றுகள்
சொற்கத் துக்கணை தத்துமி ருந்துள குருநாதா
பட்டுப் பட்டமு லைத்திடு மங்கமெ
டுத்துப் பெற்றப லத்தினை யண்டர்வி
பத்துச் செற்றுள சித்தம றிந்தது மிலையோமா
பக்கத் தைப்பெறு மிச்சைம லிந்தவெ
னைச்சுத் தத்துழி வைத்தரு ளன்பர்கள்
பத்திக் குட்படு பெற்றிகொ ளெண்குண விறையோனே.

தனதன தானந் தனதன தனதன
தனதன தானந் தனதன தனதன
தனதன தானந் தனதன தனதன—தனதானா.

நவமணி யார்சந் திரவரி புனைபத
முடையகு காசுந் தரவுர மதிலதி
நறைசொரி நீபம் புரள்கர பதியெனும் வடிவேலா

நறுமமு தோர்சந் ததமடி பணிமுத
லவமறை யாவுந் துதிபணு மொருபதி
நடனவு லாசம் பெருகிடு மவையமர் நடநாதா
வெவர்தொழு தானுந் திருவரு டருமிக
பரகுரு வேகுன் றவர்மகண் மகிழ்வுற
வெழின்மயி லேறுஞ் சரவண பவசிவ சுகதேவா
வெனையொரு போதும் பிரிவற விருளென
வுறைமலம் யாவுங் கெடுகெடு கெடுகெடு
விகலிடர் யாவுஞ் சுடுசுடு சுடுசுடு மலைவாமா
கவலைகள் யாவும் பொடிபொடி பொடிபொடி
தொடர்பவம் யாவுந் தடுதடு தடுதடு
கமழ்பத நாளுங் கொடுகொடு கொடுகொடு பரிவாலே
கனைகடல் சூழும் புவியினு னடியவ
ரிருதய மேவும் பரமசின் மயமிகு
கடிமண நாறுங் குழன்மலை மகளுமை முதன்மாதா
சிவையணி யார்சங் கரிபயி ரவிதிரி
புரைபரை மீனங் கணிமர கதவலி
சிலைநுத லாரம் பிகையுடை யொருதிரு முருகோனே
திசைமுக னூர்தங் கெருவம ழியவுயர்
பிரணவ மாகும் பொருளெவி னவநக
சிறுமையி லாவின் பருணகி ரிபுகழு மிறையோனே. ௬௨.

---

## உட்பகையொழிக்கமனு.

நாற்பத்தெண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அங்கமுடை யங்கதே சத்திலள வற்றவழி
வாநந்த வாரிகவியு

மநாதியா யுளதிரு வனந்தபுரம் வதிதந்
    ததிதமணி மௌலிசூடி
யல்லலை யொழித்தினிய வமிழ்தத்தை யூட்டுநிலை
    யறனெனுங் கோல்பிடித்துள்
ளறிவரும் பேரருளி னுலிலகு மொருசுத்த
    வரியா சனத்தினிதிருந்
தண்டரடி பரவிடவு மன்பரக மகிழ்வுறவு
    மன்பைவா னெனவளர்த்தி
யசலமென வுளபுவன மெங்கணு நிலாவுதண்
    ணளிவிழி களைப்பரப்பி
யரசது புரிந்திடும் பரமசிவ சண்முகா
    நந்தவற் புதவிலாச
வத்துவித பூரணப் பரமரா ஜாதிரு
    வடிச்சமூ கத்தினுக்குச்
சங்கைகொ ளவித்தைமா நகரிடை வசிக்குஞ்
    சதாசிவ மதத்திலுபய
தசவயதி னுட்படப் பாவெனுங் குமரகுரு
    தாசனென் போனியன்ற
சாட்டாங்க தண்டன் சமர்ப்பித் தனேகதுதி
    தந்தகத் தினும்வணங்கிச்
சரதமா யெழுதிந்த மனுவென்னை யென்னிற்
    சதாநா னிருந்துவந்த
தலத்தைக் கடந்துசஞ் சலநகரை யெய்தியதி
    சங்கடப் பட்டதற்பின்
சரியில்லை யிங்கிருப் பதுநமக் கென்றெந்
    தலத்தினைக் குறுகியெளியேன்
றயைகிளரு மருளையர் தயவுசிறு வரைகொடத்
    தலமே யிருந்துகொண்டு

சந்ததமு முறைவதற் கீச்சுவர பத்திமைத்
தம்பத்தை நாட்டியதன்மீ
மங்காத பாசவை ராக்யவலை போட்டுநிறை
மதியெனுங் கூரைவேய்ந்து
வருகின்ற வமையத்தி னுட்டயன் மருங்குகளில்
வாசமது செய்துவந்த
வஞ்சக மிகுந்தகா மத்தேவ னொருவனிழி
மகனாய முனிவனொருவன்
வன்னெஞ் சுலோபநா யக்கனொரு வன்பொரு
மதச்சேர்வை காரனொருவன்
வசைகொண்மோ காசாரி யொருவனுத வாதபொறை
மங்கப்ப பிள்ளையொருவன்
மாணாதி வருடத்தி னைந்தா றெனப்பகர்
மகாசட்ட திட்டங்களை
மதியாது வந்தவர்க டட்டநட் டாருடன்
வளைந்துசின் னபின்னமா
வாய்பேசு முன்னரே பித்துன்னை யாரடா
மனைகட்ட விட்டவரெனக்
கங்குகரை யில்லா வலாபப் பெருந்திரைக்
கடலிலே யெனையமிழ்த்திக்
கரையேற வொட்டாதம் முனிவனவ் வாழ்கடற்
கரையரு கிருந்துகொண்டு
கையோடு கையறைந் தகரங் கடித்துவிழி
கள்சிவந் திடவிழித்துக்
காட்டிவா தவிடுபொடி யாக்குவ னெனுஞ்செல்வி
கடவுளர் திருக்கருணையாற்
கண்ணினுக் கெட்டாம லோடிவந் தேன்விறற்
கசடரை விடாதழைத்துக்

கழுமியுள சட்டப் படிக்குநிமிர் நீதியொரு
கடுகளவும் விலகாமலே
கண்டித்து ஞாயங் கொடுத்தெனது கண்ணிலுள
கம்பலை யொதுங்கியிரியக்
கருணை கடாக்ஷவரு ளாலெந்த நாளுநனி
காக்கப் பிரார்த்தித்தனே. ௧.

---

# பெரும்பேறு.

## இருபத்துநான்குசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருவளர் பரங்கிரி திருச்செந்தி லஞ்சோலை
திருவேர கம்பழநிமா
திரங்குன் றுதோருட லென்றறையும் வரைகளிற்
சேர்திருத் தணிகைபொதிகை
சித்தர்மலை கந்தகிரி திருவேங்க டஞ்சிறிய
திருமலை விராலியோங்க
றிருவுரு விலங்கல்ரஜி தாசலங் கழுகோதி
சிவசயிலம் வெள்ளியசல
மருவளரு மேருகிரி சீசயில நீலகிரி
மயிலநா கஞ்சிகண்டி
மலைகொல்லி மலைபன்றி மலையருண கிரியென்னு
மலைபுள்ளி ருக்கும்வே ளூர்
வள்ளியூர் குமரகோட் டங்கொடும ளூர்கதிரை
மகிமைசால் சமராபுரி
வனப்பேப ழிலஞ்சிந லடிப்பா டுடுப்பைநகர்
மதுகைவே லூரெண்கணூர்

குருவள ரரும்பூண்டி நன்செய்நிமிர் மேட்டுக்
குடித்தலந் தில்லைமுதலாங்
கோவில்களி னும்பரம பத்தர்களி னிருதய
குசேசயங் களினுமுறைவாய்
குயிலரிய வண்டங்க ளெங்கணு மிருப்பாய்
குணித்துப் பிரிக்கவரிதாய்க்
குடிலங்க ளுக்குமொரு குடிலமென நிற்பாய்
குரங்குவா ரெண்ணுவண்ண
மருவளரு முள்ளத்து ளேயுணர்ந் தருளுவா
யடியனென் றுன்புதபுத
வாற்றுநின் பேருளத் துள்கா திருப்பினு
ளிட முனைப்பனெந்தா
யயில்வேலு மாண்டலைத் துவஜமு மலங்கவென்
னம்மைதெய் வானைவல்லி
யருகிருந் தருளமா மயிலுகைத் தெதிரில்வந்
தருள்பெரும் பேற்றுமுருகே. க.

---

ஆ திருப்பாடல் - உகரு.

---

## உள்ளூர்ச்சிவசுப்ரமணியர்சதகம்.

---

பன்னிருசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருவேறும் வேதநவி லொருவர்குரு வேநந்தி
தெளியவுரை தந்தகுருவே
சிவமகிமை நாரதற் கோதுகுரு வேபொதிகை
திகழ்முனிக் கருள்செய்குருவே

கருதரிய வொருசொல்லை யாறுபெயர் பக்குவங்
        கண்டன்று சொற்றகுருவே
    கங்குல்பக லற்றபே ரின்பவீ டடையரா
        கவனுக் குரைத்தகுருவே
யிருளற வெனச்சுக முனிக்கருள்செய் குருவேயெ
        ணிதயத் தமர்ந்தகுருவே
    யேதிலுணர் வுயர்வாம தேவர்குரு வேயுலக
        மெங்குமவிர் கின்றகுருவே
திருவுள முவந்தருள் புரிந்தென்னை யாளரோ
        தித்திக்கு முத்திமுதலே
    தெள்ளமுதி னுஞ்சலதி பொங்கு*முள் ளூரில்வளர்
        சிவசுப்ர மணியதேவே. க.

ஆக்கைக்கு மாவிக்கு மாதார மாயிருந்
        தாட்டுவிக் கின்றசிவமே
    யறிவினுக் கறிவா யிருந்ததனை யறிவிக்க
        வறிவா யியங்குசிவமே
வாக்குக்கு மனதுக்கு மெட்டாத வத்துவித
        வஸ்துவா யுள்ளசிவமே
    வளர்பிறவி யாழ்கடல் கடக்குநர் களுக்குறுதி
        மல்குபுணை யாகுசிவமே
சூக்குமங் கட்குமொரு சூக்கும மெனப்பனுவல்
        சொல்லழிவி லாதசிவமே
    தொல்லைவினை யாவுந் துமித்துமதி யமுதச்
        சுகாநந்த வீடெய்துவான்
சீக்கிர மெனைத்தடுத் தடிமைகொண் டாளரோ
        தித்திக்கு முத்திமுதலே

* உள்ளூர்=அறிவிருக்குந்தலம்.

தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. உ.

மானமறு பேரண்ட பகிரண்ட மெங்கணு
மலிந்துள விலாசவொளியே
மாயைநெடு வலிகடிந் தருணெறியி னின்றுளார்
வழிபட் டடைந்தவொளியே
ஞானிகள் புலத்திறையு மனுகாம லருள்போழு
ஞானவா னந்தவொளியே
நலிவில்பே ரின்பவீ டென்றும்ப்ர காசிக்க
நாளுளு நிலவுமொளியே
யூனரம் பென்புரு வினுக்குள்வதி தருமுயிர்க
ளுண்ணிலையி லொளிருமொளியே
யுற்றுணர வுரியவிழி யாயவொளி யேயென்ற
னுள்ளத்தை நேர்படுத்தித்
தேனிற் சிறந்ததிரு வருளளித் தாளரோ
திக்கிக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. ௩.

போதவெளி யாயுள்ள நாதநிலை மேலொளிசெய்
பொருவறு சுயஞ்சோதியே
பூதப்ர பஞ்சநிலை யெங்கணு நிறைந்தபரி
பூரண வியன்சோதியே
கோதில்சிவ ராஜயோ கத்திருவர் முன்னர்க்
குதிக்குஞ் செழுஞ்சோதியே
குன்றுத பேரின்ப மன்றக மிலங்குமொரு
கோலப் பரஞ்சோதியே

மூதறி வெனுங்கடலின் மூழ்கறிஞர் போதத்தை
மூசியின் னுஞ்சோதியே
மூடவடி யேன்மூல விருளிரிய வென்னுளு
முயங்குசெம் பொற்சோதியே
நீதிலா நந்தமா வருள்புரிந் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. ௪.

அண்டமெனு முண்டைபல வருள்வெளியில் வைத்தகண்
டாகார மானபொருளே
யளவற்ற பெரியவெளி பெரியவெளி யென்றறிஞ
ரன்றயுமொரு பெரியபொருளே
பண்டுநான் மறையந்த மாகத் திகழ்ந்துமுப்
பாழ்கடந் துள்ளபொருளே
பல்லுரு வினுங்கலந் தறிவின ரறியப்
படாதவியல் புடையபொருளே
தொண்டர்க ளகப்புலங் குடிகொடெந் நாளுமொரு
துணையின் றியங்குபொருளே
துரியமெய்ஞ் ஞானப் பெருஞ்சோதி யாயேழை
துயர்நூற வந்தபொருளே
செண்டுமுலை யார்மையல் சீத்தென்னை யாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. ௫.

முத்தர்க டெவிட்டப் புசித்துக் களிக்குநிஜ
மோனவா நந்தவமுதே

முப்பாழ் கடந்துளவொர் சிற்பர நபத்தினடு
மூலத்து நல்லவமுதே
பத்திமையர் பத்திவயி ராக்கிய நிலைக்குமா
பண்ணுநிலை யின்பவமுதே
பவக்கலி கடக்கவுள் வலித்துத் துறந்தவர்
பசிக்கெடுத் துண்ணுமமுதே
நித்தமுனை நினையுமென் புந்திகரு துற்றபடி
நிலையின்றி யோடுநெஞ்சை
நேர்பட நடத்தியைம் பொறிகளை யடக்குமொரு
நெறிநின் றெனைத்தெரிந்துன்
சித்தொடுங் கூடியினி துய்யவெனை யாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. ௬.

நில்லாத பிரபஞ்ச வாழ்விலுழ லாருள
நிறைந்தநித் யாநந்தமே
நிட்டையின் மனோலயங் கண்டபொழு துச்சிமே
னிற்குநித் யாநந்தமே
பொல்லாத மனமருட் டுன்பினை யெருக்குசிவ
போதநித் யாநந்தமே
புகலரிய பதிஞான கதிநாடு நர்க்கருள்
புரக்குநித் யாநந்தமே
பல்லா யிரங்கோடி யண்டங்க ளெங்கணும்
பரவுநித் யாநந்தமே
பத்தனென தெண்ணக் குறிப்பினை யறிந்தினிப்
பருவரல்க ளுள்ளநெறியிற்
செல்லாது செய்துனக் காளாக வாளரோ
தித்திக்கு முத்திமுதலே

தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வாழ்
சிவசுப்ர மணியதேவே. ௭.

ஆதார மாறிற்கு மாதார மாயிருந்
தரசுபுரி கின்றவரசே
யண்டவெளி தன்னிலே யாநந்த நிர்த்தமி
டகண்டசிவ போகவரசே
மாதா பிதாவாக நின்றென்னை யிரக்ஷித்து
மதிபதர் கொடுத்தவரசே
யாறுபி மானவச டறவன்பர் பக்கலேதன்
வருஷிக்கு முகிலினரசே
சூதா முடங்குகா திடுமொரு மருந்தைச்
சுறுக்கினி லுரைக்குமரசே
தோற்றமே மையும்வகுக் காளுமர சேதொண்டர்
தோத்திர மதிக்குமரசே
நீதான செயிர்துமித் தென்னைநீ யாளமோரா
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வாழ்
சிவசுப்ர மணியதேவே. ௮.

ஈரேழு லோகமெல் லாம்வகுத் திடையின்றி
யேகநிறை வானபரமே
வெளியனை யணைத்தழிவி லாதவநு பூதிதர
வீசனு மருவுபரமே
நிராத கோசபா சப்பின்ன லைத்தொண்டர்.
சேதித் தறிந்தபரமே
செப்பரிய பேரின்ப வாரியிறை யாமன்னு
சின்மயா நந்தபரமே
பேரூர் குலங்குடி பிறப்பிறப் பென்பனவைகள்
பேசவிசை யாதபரமே

பிண்டநீ டண்டபந் தங்கடந் துன்பதம்
பெற்றுமுட் டாதசெல்வச்
சீரோ டிருக்கவருள் செய்தென்னை யாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூறில்வளர்
சிவசுப்ர மணியதேவே. கூ.

முக்குண மிலாதசட் குணசாசு வதமேயாக
முதல்வனா யுள்ளிறையே
மும்மலங் களுமிலா நின்மல நிராகார
மோனவருண் மூலவிறையே
மிக்களி யுளர்க்கமுத நற்கனியை நல்கருள்
விருக்கமா மன்னுமிறையே
வேதாந்த மேடிமுடி வறியாத வற்புத
விலாசப்ர காசவிறையே
தூக்கசுக மொட்டுணர்வு முற்பவ மயக்கமுந்
தொடரா வதீதவிறையே
துவிதத்தை நீக்கியத் துவிதத்தி னினைநெஞ்சர்
தோயின்பி னிற்குமிறையே
திக்கொன் றிலாவென்னை யாதரித் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூறில்வளர்
சிவசுப்ர மணியதேவே. க0.

ஆதித்தர் கடவுளா யவிர்பொருளை யாலம்ப
மற்றுண்மை யுற்றபொருளை
யபிதான வபிதேய நீத்தவொரு பொருளையென
யன்பா வளர்த்தபொருளை

நாதத்தி னந்தமா யுளபொருளை யிதயத்தி
னடுவே யமர்ந்தபொருளை
ஞானவா றுநிறைந் தெங்குமுள பொருளையென்
னட்புக் குகந்தபொருளை
வாதத்தி னாலளவி டற்கரிய பொருளையென்
மனுவிற் கிரங்குபொருளை
வழியடிய வர்க்கன்மை நொதுமலர்க் கதிநாத
மாகநின் றுள்ளபொருளை
ஏதத் திருப்பரிவி னல்கியெனை யாளரோ
திக்கு முத்திமுதலே
தெள்ளமி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. கக.

சகலபுத் தேள்களு மிறைஞ்சிப் பழிச்சுஞ்
சதாநந்த நாயகத்தைச்
சர்வபரி பூரண வனாத சிதாகாச
சபைநடன நாயகத்தைச்
சகமாயை மருவாத மௌனமெய்ஞ் ஞானிகளி
தயமேவு நாயகத்தைச்
சந்தேகர் நெஞ்சினில் லாதசிவ ஞானோ
தயப்பிரம நாயகத்தை
யகரவுயி ரைப்போல விகபர மிரண்டினு
மளாவியவிர் நாயகத்தை
யறிவதற் கெண்ணினே னறிவுதந் தறிவித்
தருட்பரவை யிடையமிழ்த்தித்
திகழுநின் சேவடியில் வதியவைத் தாளரோ
திக்கு முத்திமுதலே
தெள்ளமி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. கஉ.

அடியுநடு முடியுமற் றறிவரிய பெரிதா
யலங்கும் பராபரத்தை
யருவுமற் றுருவுமற் றருவுருவு மற்றெவையு
மறியும் பராபரத்தை
மிடியுமருண் மடியுமற் றறவிது வெனுர்கண்
விளங்கும் பராபரத்தை
மிறைகுறைக ளின்றிச் சிதாகாச மெனமின்னி
விரியும் பராபரத்தைக்
குடியுமில் வெருவுமற் றெனேநசைஇ யென்னுட்
குதிக்கும் பராபரத்தைக்
கொடியனே னுணராது குவலய மயக்கினனி
குலேகிறேன் குலேயாமலே
திடவருளி னின்றுணர வருள்புரிந் தாளரோ
திக்திக்கு முக்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. கங.

ஓங்கார சத்தத்தி னுதவடி வாகியுள்
ளூமையா நிற்குமொன்றை
யூமையெனு மாமோன முடிவான பொருளா
யுறங்கா திருக்குமொன்றை
யாங்கார நோயினை யறுத்தபெரி யோரறிவி
லநுதினம் விளங்குமொன்றை
யாபாச மிறையுமில் லாதபர வெளிமுழு
தளாவிநிறை வானவொன்றைத்
தூங்காத பக்குவர்க் கருள்செய்ய விறைவடிவு
தூய்மையிற் கொள்ளுமொன்றைத்
துகளற்ற திவ்யதே ஜோமயா நந்தவொளி
சுடர்பருதி யாயவொன்றைத்

தீங்கேயி யுமிலெனக் கினிதுதவி யாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. கச.

அலலறுவ லபலமுஞ் சபலமுஞ் சலனமு
மசஞ்சலமு மில்லாததை
யாசையு நிராசையு மடந்தரு மிடம்பமு
மழுக்காறு மில்லாததைத்
துவிதவுரை யேகவுரை கூறுபவர் வாதமுஞ்
சூனியமு மில்லாததைச்
சுத்தமு மசுத்தமுந் துக்கமு மகிழ்ச்சியுஞ்
சுட்டுணர்வு மில்லாததை
யவனெனலு மவளெனலு மவரெனலு மதுவெனலு
மவையெனலு மில்லாததை
யறியாத சிறியே னறிந்துய்ய நின்னையே
யண்டினே னகிலமெனையுஞ்
சிவமா முனக்குரிய தொண்டனென வாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. கரு.

பொய்யாத தாரகப் பொருளா யிருந்தருள்
புரிந்திடு சதாசிவத்தைப்
போதத்தி னிடைநின் றுணர்ச்சிதரு கின்றபரி
பூரண சதாசிவத்தை
மெய்யான வாநந்த நிர்த்தன விருஞ்சபை
விளங்கொரு சதாசிவத்தை

வித்தவெளி யென்னவிட னற்றுநிலை யுற்றெங்கு
மேவிய சதாசிவத்தை
நையா வகண்டபதி ஞானச் சுயஞ்சோதி
நடுவவிர் சதாசிவத்தை
நாடா தளப்பிலக நாடிமதி கெட்டகடை
நாயனே னின்னுமதனைச்
செய்யாது னிருபதந் தொழவேவி யாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளமி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. கசு.

மாசற்ற வுள்ளூர் வெளித்தெருவி லேபொங்கி
வழியுஞா னமுதத்தை
மாயைக் கடற்குளமி ழாதவ ரெடுத்துண்ணு
மதுரஞா னமுதத்தை
யாசைக் கசப்பினை யடித்துத் துரத்திடு
மதீதஞா னமுதத்தை
யன்பர்க ளகப்புலங் கங்குகரை யில்லா
தலம்புஞா னமுதத்தை
மாசொட்டு மரணசன னங்களை யறக்களைய
வல்லஞா னமுதத்தை
மனமகிழ்ந் தேயெனக் கூட்டியூட் டிப்பொலா
மலவிரு ளோடாமிரித்துத்
தேசுற்ற செம்பொற் பதங்கொடுத் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளமி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. கஎ.

இவ்வள வெனச்சொலற் கமையா தெனுமறை
யியம்புஞ் சுகோதயத்தை
யென்றைக்கு வருமோ வெனுவப்பி யாசிகளு
ளெண்ணுஞ் சுகோதயத்தைக்
கவ்வையொடு தெவ்வமு மிலாதபதி நிட்டையிற்
காணொரு சுகோதயத்தைக்
கறையற்ற வருவமன நற்சிவன் முத்தருட்
கனியுஞ் சுகோதயத்தை
யொவ்வருவ மனமுமில் பரமுத்த ரிடையுறு
துறையுஞ் சுகோதயத்தை
யுன்னருளின் வலிகொண்டு பெறவென்று கருதினே
னுள்ளுவந் தருளிநாளுஞ்
செவ்விய திருக்கழற் காளாக வாளரோ
திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. கஅ.

அட்டாங்க நிட்டையினு மெட்டாத வத்துவெனு
மத்துவித சின்மயத்தை
யாநந்த மேயியல்ப தாயகண் டாகார
மானசிவ சின்மயத்தைத்
தட்டாத சுத்தவெளி தன்னினிறை வானசிவ
சாயுஜ்ய சின்மயத்தைத்
தானென்ப தின்றியது தானென் றுணர்ந்தவுயிர்
சார்பரம சின்மயத்தைக்
கிட்டாத மட்டியைக் கிட்டவர வொட்டாத
கேடற்ற சின்மயத்தைக்
கிருபையண வாவறிய னேனறிய வென்றுனது
கிருபையை யவாவுகின்றேன்

சிட்டனிவ னெனவந்தவ் வாறுசெய் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. ககூ.

இறப்புறு பிறப்பின்றி யென்றுமொரு நீர்கொண்ட
வேகபரி பூரணத்தை
யெத்துணை விகாரமு மிலாவமல வறிவா
யிலங்குபரி பூரணத்தை
யறப்பொரு ளருட்பொருள் விரும்புவா ருள்ளுணர்ந்
தருள்செய்பரி பூரணத்தை
யறிஞர்தங் கண்ணே யறிந்தத்து விதமென்
றடைந்தபரி பூரணத்தைக்
குறிப்பினு மதிப்பினு மடங்காத வொருதன்மை
கொண்டபரி பூரணத்தைக்
கோதில்வே தாந்தசித் தாந்தசம ரசநிபுணர்
கூறுபரி பூரணத்தைச்
சிறப்புட னளாவிநான் வாழநீ யாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. உ0.

நிலமென்று நீரென்று மனலென்றும் வளியென்று
நிறையுமா காயமென்று
நிறதமென் றும்பரிச மென்றுமுரு வென்றுமறு
நீர்மைநவி லிரசமென்று
நவிகந்த மென்றுமொலி வாக்கென்று நிலைமீ
நடக்கின்ற பாதமென்று

நல்கவுள கரமென்று மலவிசர்க் கஞ்செய்யு
நாளவிந் திரியமென்று
நிலவுசுக் கிலம்விடு முபத்தமென் றுந்தொனி
நிகழ்ச்சியுறி சுருதியென்று
நிற்குநிர லுறியநினை நித்தலு நினைக்கிறே
னிட்டையி லுணர்த்தியருளித்
திலகமலி யுன்னடிப் போதில்லைத் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. உக.

தொக்குவென் றுந்துணிகொள் சக்குவென் றுஞ்சுவைக
டுய்க்கின்ற தாலுவென்றுந்
துர்க்கந்த நற்கந்த மறிநாடி யென்றுநகை
தொட்டுழலு மனமதென்றுந்
தக்கபடி நிச்சயஞ் செய்புத்தி யென்றும்யோ
சனைபணுஞ் சித்தமென்றுந்
தன்னக மெழுப்பிடு மகங்கார மென்றுமிவை
தருகின்ற பகுதியென்று
நிக்கிரக மாகாத வாணவத் தைச்சிறிது
நீக்குமொரு கருவியென்று
நிற்குநிர லுறியநினை நித்தலு நினைக்கிறே
னிட்டையி லுணர்த்தியருளித்
திக்கற்ற வென்னையுன் னடியில்வைத் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. உஉ.

கலையிலே தோன்றிஞா னத்தினை யெழுப்பரிய
கருமத்து வித்தையென் றுங்
கருமவவ் வித்தையி னுதித்திச்சை யின்செயல்
களைத்தரு மராகமென் றுங்
கலையொடு பிறந்துகரு மப்பலனை யுள்ளநாள்
காறுமீ நியதியென் றுங்
காலமென் றுங்கலா தியினின் றெழும்பியிரு
கன்மநுகர் புருடனென்று
நிலைகொண்மோ கினிமாயை யென்றுமைங் கூறுக
நிகழ்சுத்த மாயையென் று
நிற்குநிர லறியநினை நித்தனு நினைக்கிறை
னிட்டையி னுணர்த்தியருளிச்
சிலைமதன் செயனறு வடிவில்வைத் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. ௨௫.

சுத்தமா மாயையின் றோற்றமோ டாந்தில்வினை
சோர்சுத்த வித்தையென் றுந்
தொழிலேறி ஞானங் குறைந்ததத் துவமெனச்
சொல்லுமீச் சுவரமென் று
முத்தமக் கிரியையு முயர்ந்தவறி வுஞ்சதா
வொத்தவொரு தத்வமென் று
மோவாத கிரியையா யுளசத்தி யென்றுமே
லுணர்வுள்ள சிவமதென் று
நித்திய மகாமாயை யென்னும்விந் துவிலே
நிலாவுசிவம் வருவதென் று
நிற்குநிர லறியநினை நித்தனு நினைக்கிறை
னிட்டையி னுணர்த்தியருளிச்

சித்திர மலர்ச்சரண வாழ்வில்வைத் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளமுதி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. உச.

சுத்தமை யசுத்தசுத் தாசுத்த முதல்களிற்
றொழிலைந்து மருள்வலிகொடு
சோர்வறச் செயவருவ நான்குருவ நான்கொன்று
தொந்தமா வுளவென்றுமா
லெத்தலங் களிலுமத் தொழில்கள்செய றன்மையினி
லெங்குநிறை வாகியென்று
மெதிராகு முன்னிலையி லிச்சைஞா னங்கிரியை
யென்னுமொரு மூன்றிலொன்று
நித்தம் படர்க்கையிற் *பத்தெனப் பகர்வதொடு
நிக†ழைந் திடத்துமென்று
நிற்குநிர லயியநினை நித்தனு நினைக்கிறே
னிட்டையி லுணர்த்தியருளிச்
செத்திலடி யார்திருவில் வைத்தென்னை யாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளமுதி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. உரு

பற்றிடு மறைதிகர ணங்களை யெழுத்துக்கள்
பரிவொடு நடத்துமென்றும்
பலமுடை யெழுத்துக்க ளைத்தலைவ ரேதொழிற்
படநடத் திடுவரென்றுஞ்

---

* மனம், புத்தி, சித்தம், அகங்காரம், உள்ளம், அகாரம், உகாரம், மகாரம், விந்து, நாதம் ஆ. கo.

† பிரமன், விஷ்ணு, உருத்திரன், மயேசுரன், சதாசிவன் ஆ. ரு.

சொற்றவத் தலைவர்களை யிச்சைஞா னங்கிரியை
சேர்வற நடத்துமென்றுந்
துகளிலம் மூன்றுமே லாதிபரா களுமரிய
துரியவரு ளின்கணொன்று
நெற்றிமே னின்றுவெளி கண்டுளார் தெளிநா
ணிகழ்த்துசர தப்படிக்கு
நிற்குநிர லறியநினை நித்தலு நினைக்கிறே
னிட்டையி லுணர்த்தியருளிச்
சிற்றறிஞ ரறியாத திருவில்லைத் தாளரோ
திக்கிக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. உகூ.

ஆணவ மறைப்புள்ள விஞ்ஞான கலருளே
யணுசதா சிவரென்றுமா
வட்டவித் தேசுர ரரிப்பற்ற வேழ்கோடி
யருண்மகா மந்த்ரரென்று
மாணுடைப் பிரளயா கலருளீ ரெண்மர்கண்
வயங்கி ருருத்ரரென்றும்
வண்மையுந் திண்மையு மமைந்தவுரு விற்றேசு
மல்குசத ருத்ரரென்று
நீணிலச் சகலருட் பிரமன்மா லாதியா
நிகழுயி ரனந்தமென்று
நிற்குநிர லறியநினை நித்தலு நினைக்கிறே
னிட்டையி லுணர்த்தியருளிச்
சேணமரர் பரசுநின் னடியில்லைத் தாளரோ
திக்கிக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. உஎ.

செம்பிற் களிம்பரிசி யிற்றவிடு போலவே
செறிவொரு களங்கமென்றுஞ்
சிதைவின்மா யையினின்று சிட்டியிற் புத்தியைச்
சேர்பழங் கன்மமென்று
மம்பார கன்மமே சஞ்சித பிராரத்த
வாகாமி யங்களென்று
மதிர்த்தவிரு மலமன்றி மாயையெனு மோர்மல
மசுத்தமொடு சுத்தமென்று
நிம்பமுட னின்பமுஞ் செய்யாதி சத்தியென
நிகழுந் திரோதையென்று
நிற்குநிர லறியநினை நித்தலு நினைக்கிற
னிட்டையி லுணர்த்தியருளிச்
சிம்புமரி யங்கழற் றிருவில்லைத் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. உஅ.

கிஞ்சிக்ஞ னென்றினுங் கூடா திருப்பதே
கேவல வவத்தையென்றுங்
கிளர்தத்து வங்களோ டேகூடி நிற்பதே
கேடற்ற சகலமென்றுந்
துஞ்சாது துஞ்சியச் சகலகே வலமற்ற
துறையண்ணல் சுத்தமென்றுஞ்
சுத்தவருள் கொடுதனைக் கண்டபிற கருளிலே
தோய்தல்பரை போகமென்று
நெஞ்சற்ற வறிவாகி யருளினுட் பொருளண்ண
னிலையென்று நூல்கள்சொலுமா
நிற்குநிர லறியநினை நித்தலு நினைக்கிற
னிட்டையி லுணர்த்தியருளிச்

செஞ்சரண மலர்களுக் கடிமையா வாளரோ
திக்திக்கு முத்திமுதலே
தெள்ளமி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. உகூ.

பூதமுத லைம்பொகை யாறு றெனுஞ்சடப்
பொருளுங் கதிதமென் றும்
போக்கொடு வரத்துமில் லாதவொரு பூரணப்
பொருளாக வுள்ளதென் றுந்
தேசமொடு காலமும் பகைமையொடு கேண்மையுந்
திரிபுலேவு மற்றதென் றுஞ்
சிறுமையொடு பெருமையுஞ் சிந்தைநிர்ச் சிந்தையுஞ்
செயிர்தயில யதார்த்தமென் று
நீதமறை யெல்லா மிழற்றுவது போலறிவு
நிபுணருஞ் சொல்வரதிலே
நிற்குநிர லறியநினை நித்தலு நினைக்கிறே
னிட்டையி லுணர்த்தியருளிச்
சேவாரிசவடித் திருவில்லைத் தாளரோ
திந்திக்கு முத்திமுதலே
தெள்ளமி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. ௩0.

காசாசை கொண்டே கலங்குகிற *தோஷிநற்
கல்விகல் லாததோஷி
கற்றோர் களைக்கண்டு பணியாத தோஷிகெடு
கயவருற வுற்றதோஷி
யாசார மொருசிறிது மில்லாத தோஷிமண்
ணாசையே கொண்டதோஷி

* தோஷத்தையுடையவன் தோஷி. தோஷம்=குற்றம்.

யாசானை நிந்திக்த தோஷியனை நிமிடமு
மறத்தைநினை யாததோஷி
பேசாத பேச்சினைப் பேசிடுந் தோஷிவசை
பேசப் பிறந்ததோஷி
பிறருடைய விடுபெற வுள்கினே னெந்தைநின்
பெரியதிரு வுளமகிழ்ந்து
தேஜோ மயாநந்த வாழ்வுதந் தாளோரா
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. ருக.

எல்லா மறிந்தவ ரெனைப்போல வுலகின்மிசை
யெவரென் றறைந்ததோஷி
யெந்நேர முங்குடும் பக்கவலை கொண்டங்கு
மிங்குமலை கின்றதோஷி
புல்லாச வீணர்களைச் சொல்லியதி லேகட்
டுரைத்துச் சிரித்ததோஷி
பூணுடலை வலியகற் கோட்டையா வெண்ணிநல்
லுணர்வற்று நின்றதோஷி
நல்லார்கள் பொல்லார்க ளெல்லார்கள் பாலும்வெறி
நாய்போல் விழுந்ததோஷி
நல்லவழி கூடும் படிக்குள்கி னேனிந்த
ஞாலத் துயர்க்கடற்குட்
செல்லா திழுத்தலைத் தன்பிறை லாளோரா
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. ருஉ.

வஞ்சிநிக ருக்கமட மங்கையர்க ளின்பமே
மாவின்ப மென்றதோஷி

வாய்க்குருசி யாகப் புசிப்பதே பேரின்ப
வாழ்வென நினைத்ததோஷி
கஞ்சுளி யணிந்துடற் கண்டைமடி புனைவதே
கண்டபல னென்றதோஷி
கந்தகத் தூரிபரி மளவத்தர் திமிர்வதே
கைகண்ட தென்றதோஷி
யஞ்சலின் றிவ்வுலக வுத்தியி லிருப்பதே
யரியபே றென்றதோஷி
யகடவிக டம்புரிந் துய்வதே யென்றைக்கு
மாநந்த மென்றதோஷி
செஞ்சரண மடையவென வுள்கினே னாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. ௲௲.

பொருவற்ற தெய்வமெனல் பொய்யென்ற தோஷியவி
பூதமெய் யென்றதோஷி
புரிவினைப் பிறவியெனல் பொய்யென்ற தோஷியுயிர்
புதிதுமெய் யென்றதோஷி
மருளிலா வறிவுநெறி பொய்யென்ற தோஷிசுக
மார்க்கமெய் யென்றதோஷி
மங்காத முத்தியெனல் பொய்யென்ற தோஷியுயிர்
மாய்தன்மெய் யென்றதோஷி
அரியரது வேதகலை பொய்யென்ற தோஷியென்
சொற்கண்மெய் யென்றதோஷி
தோன்றியழி கின்றநிலை மேலறிய வென்றே
தொடர்ந்தே னயர்ந்தவினைக
டிருவருளி னலிரிய வன்புசெய் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே

தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. ௩௪.

வேதாக மங்களல் லாதபுன் கதைகளை
விரும்பிப் படித்ததோவஷி
வேசையர்க ளாசைகொண் டாசையை யழித்துள்ள
வெட்கமுங் கெட்டதோவஷி
மாதரார் மிதுனித்த மார்க்கவகை சொலிவிணர்
மகிழ்கான் மகிழ்ந்ததோவஷி
வாசமலர் கொண்டையிற் சூடித் தெருத்தோறு
மதிகெட் டலைந்ததோவஷி
கோதுறுங் குத்திரம் புரிவோ ரெவர்க்குமொரு
குருவா யிருந்ததோவஷி
குறைவற்ற கைவல்ய முறவுள்கி னேனெண்
குணம்பெருகு பரதெய்வமே
தீதெலா மோட்டிவழி காட்டியெனை யாளரோ
திக்கிக்கு முக்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. ௩௫.

வையத்து மாந்தரை யடக்கிநாம் வாழவென
மந்திரங் கற்றதோவஷி
மதிகேளறி யுட்குதித் தொருவரறி யாதுகர
வடமிக விழைத்ததோவஷி
பையோ வெனவலற வகதிக ளகம்புக்
கதட்டிப் பறித்ததோவஷி
யாருக்கு மஞ்சாத மிண்டனா கத்திரிந்
தறிவழது கெட்டதோவஷி

பொய்யிற் பிழைக்குநர்கள் செய்கைக் கிணங்கியே
புகழ்சீறிது மற்றதோஷி
பூரணா நந்தநிலை யுறவுள்கி னேனினிப்
பொய்யாத குற்றேறவனுன்
செய்யும் படிக்குநனி செய்தென்று மாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. ருசு.

பேய்களைப் பூசைசெய் தனுவிதுசெய் வேனென்று
பேசித் திரிந்ததோஷி
பெரியோர்க ளான்றி சொல்லியிற் புலியினது
பெற்றியே கொண்டதோஷி
வாய்மதம் பேசியா காவல் லிடும்பரொடு
வழிநடந் திட்டதோஷி
வாங்கிய கடன்கொடா மல்வழக் கிட்டதனை
வாங்கவிலை யென்றதோஷி
தாய்தந்தை முதலியோர் தமையிகழ்ந் தொழியாத
சஞ்சலங் கொண்டதோஷி
தருமத்தை விற்றுண்ட தோஷிநா னுகலிற்
றகவுடைய வருள்பெருக்கிச்
சேயென வணைத்தர் தரித்தருளி யாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. ருஎ.

நன்னெறியி னின்றுபணி கின்றவடி யார்சொத்தை
நட்டமது செய்ததோஷி
நாடோறு நாய்போ லலைந்துபொரு ளாசையா
னுளைக் கழித்ததோஷி

தன்னிலைமை தனைநினைந் தெந்நேர முந்திவ்ய
சஞ்சல மிலாததோஷி
தவமிழைப் போர்களை யிழைக்கவொட் டாமற்
றடுத்துமகிழ் வுற்றதோஷி
கன்னியர் குழுக்கண்டு கைவீசி நடைதந்து
காதலொடு சென்றதோஷி
கருணையின் ஞானந்த முறவுள்கி னேனலினுற
கழன்முண்ட கத்தையெனது
சென்னியிற் சூட்டுவிக் கடிமைகொண் டாளரோ
திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. ௯அ.

எங்கண்மத முங்கண்மத மென்றுபல திறவாத
மிட்டறிவை விட்டதோஷி
யிதுதெய்வ மதுதெய்வ மென்றுநிலை கொள்ளாம
லீடழிந் திட்டதோஷி
கொங்கைநிமிர் மங்கையரை யுற்றுற்று நோக்கிவிழி
குருடுபட் டுள்ளதோஷி
குடிகார ரோடுகட் கூடிக் குடித்துக்
குலாவித் திரிந்ததோஷி
கங்குல்பக லுள்ளீர மின்றியுயிர் வதைசெய்து
கறிசமைத் துண்டதோஷி
காவலரை வஞ்சித்த தோஷிநா னுகலிற்
கருணைகொண் டமுதர்புகழுஞ்
செங்கழன் மதர்ப்பினை யளித்தென்று மாளரோ
திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. ௯௯.

துட்டத் தனங்கட்கு வித்தான தோஷிநர
துதிசதா செய்தமேதோஷி
சுந்தரி களைப்புணர வசியமது தேடித்
துரும்பா மெலிந்தமேதோஷி
கட்டுக் கடங்காத பட்டிமா டொப்பவே
கண்டபடி சென்றமேதோஷி
காலிகளின் மேலிருஞ் சுமைவைத் தடித்துண்டு
கருணையை யிழந்தமேதோஷி
மட்டற்ற பித்தைகளை வட்டிக் களித்துநிதம்
வர்த்தக மிழைத்தமேதோஷி
மாகதி பெறற்காய நெறிதன்னை நேடினேன்
மனமுவந் தருள்வழியில்வாழ்
சிட்டனிவ னென்றுதிரு வடிகொடுத் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. ௪௦.

எவ்வுயிரு மறிவென் றிராதவ் வுயிர்க்கெலா
மெமனு யிருந்ததுட்ட
னெனக்கீ டொருவ லிருப்பரோ வென்றிக
லியம்பிய பொலாததுட்ட
னெவ்வாத செயல்களுக் கொவ்வாத மக்களையு
மொவ்வவே செய்ததுட்ட
னூரார்கள் சொத்தின்மே லாசையுற் றிதமோச
வுரைபல வுரைத்ததுட்ட
னைவியர்க ணையமுற் றங்காடி நாய்போ
லலைந்துபுக ழற்றதுட்ட
னத்தனை யிகழ்ந்திட்ட துட்டனு றைதலா
மெலவன் பைப்பெருக்கித்

திவ்விய சதாநந்த விடளித் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. ௬௧.

வேதநிஜ நூலீறு கேட்டிவை வெறுஞ்சொலென
விட்டுலகி னின்றதுட்டன்
வித்துவா னென்று கவிதைபல பாடியே
வீணு டொலைத்ததுட்டன்
வாதவினை யாற்பிரபு வாவே னெனுவுலகை
மதியாம னின்றதுட்டன்
வாலிப ருடன்கூடி யரியரன் கோயில்களில்
வனிதமயல் கொண்டதுட்டன்
பாதகஞ் செய்யப் படாதென்று சொல்லியப்
பாதகஞ் செய்ததுட்டன்
பங்காளி வஞ்சகத் துட்டனு னுகலிற்
பரமவன் மைப்பெருக்கிச்
சேதகப் பாதச் செருக்களித் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. ௬௨.

பொருணட்பி லாசையுற் றதிகார வவைகளிற்
பொய்யுரை புகன்றதுட்டன்
புண்ணியஞ் செய்கிறே னென்றுபிறர் காணப்
பொருந்தா தளித்ததுட்ட
னொருவரு நமக்குநிக ராகாரெ னுன்மத்த
மோயாது கொண்டதுட்ட

னுல்லாச வுடையுடீஇ யெல்லாரும் வீணனென்
றுன்னிட நடந்ததுட்டன்
குருவைப் பணிந்துபொரு ளறியாத துட்டனிடு
கூலிகள் குறைத்ததுட்டன்
குல்லையபி னுண்மருட் டுட்டனை நைகலிற்
குறைவிலன் பைப்பெருக்கித்
திருவளரு மடிமதர்வு விடளித் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. ௪௫.

நல்லமணி தன்போ லியம்பியுள் ளுக்குளே
நஞ்சா யிருந்ததுட்டன்
ஞாயத் தலத்திலே பக்ஷபா தம்பேசி
ஞாயங் கெடுத்ததுட்ட
னெல்லினு மிருட்டினுங் கள்ளத் தனத்தையே
யிதயத்தில் வைத்ததுட்ட
னேழைக் கிரக்கமுற் றையமிடு வோர்களை
யிடாதுதடை தந்ததுட்டன்
புல்லறி வுளாரைச் சினேகித் தடாதவறு
போகத்தில் வீழ்ந்ததுட்டன்
புண்ணியம தில்லாத துட்டனை நைகலிற்
புரணவன் பைப்பெருக்கிச்
செல்லொணு நெறிதடுத் தடியளித் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. ௪௬.

பொய்வருத லோராத நாய்போல வுண்பதே
புத்தியென வோதுதுட்டன்
புறணிபேசிப் பேசியொருவர்க்கு மாகாத
புல்லர்கட் கானதுட்டன்
பேய்களுக் கடிமையாய் நின்சரண நாடாது
பேயா வுழன்றதுட்டன்
பிறருக்கு நமதுதுயர் வரவென்று கருதிடும்
பெற்றிநனி கொண்டதுட்ட
னெய்வந்த காலையிற் பேய்களைக் கும்பிட்டு
நோன்மையை மறந்ததுட்ட
னேலாமை மிகுந்துடைய துட்டனை யகலா
னுகைவிலன் பைப்பெருக்கித்
தீயிற் புகார்பெற்ற வடியளிக் காளோரா
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. ௨௫.

கனவாட கப்புதையல் பெறவென்று கோவிலிற்
காலைமா லையும்வணங்கிக்
கருதிய படிக்கது வராதபோ திதுவெறுங்
கல்லென் றுரைத்ததுட்டன்
மனைமகா ரிசுளைகளை மனநோவ விட்டுமறு
மனைதேடி நின்றதுட்டன்
மறநடைய னைப்புகழ்ந் தவரிடும் பொருள்பலவும்
வாங்கிமகிழ் வுற்றதுட்டன்
மனதின்ன தறிவின்ன தென்றினி துணர்ந்துநல்
வழியினட வாததுட்டன்
மாதவனை வைதுள்ள துட்டனை யசைவின்
வன்மையன் பைப்பெருக்கித்

தினமுநின் சேவடி யிருக்கவின் றுளரோ
திக்திக்கு முக்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளுரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. சுசு.

வந்தவரை வம்பினென் றழையாத துட்டனுயர்
மறையோரை வைததுட்டன்
மடவிதவை யைக்கூடி யுண்டாய கருவினை
மருந்தா லழித்ததுட்ட
னந்தன மடந்தட மழித்திட்ட துட்டனன்
னட்பைப் பகைத்ததுட்ட
னவினுரையி லேதவறு காணினுஞ் சொன்னதே
ஞாயமென் றேதுதுட்டன்
சொந்தமில் லாததைச் சொந்தமது செயவெனத்
தொந்தரைகள் செய்ததுட்டன்
சோரர்தஞ் சொத்துண்ட துட்டனு னுகலிற்
றுகளிலன் பைப்பெருக்கிச்
சிந்தாத செல்வமது தந்தென்று மாளரோ
திக்திக்கு முக்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளுரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. சுஎ.

ஞானநூ லின்படி நடக்கமன மில்லாமன்
ஞானமே தென்றதுட்ட
னரஜன்ம மாப்பிறந் தெவரறிந் தாரெனு
நல்லவரை யெள்குதுட்டன்
ஞானவா னுனவர்கள் சாகா திருந்தார்கொ
னவினுவீ ரென்றதுட்ட

னன்னருயர் தேவால யச்சொத்தை விற்றுண்டு
நல்குரவு நண்ணுதுட்டன்
ஞானமுனி போலவே பொய்வேட மிட்டன்பர்
நற்பொருள் கவர்ந்ததுட்ட
னடையைக் குறைத்திட்ட துட்டனு ளுகலி
னலங்கொளன் பைப்பெருக்கித்
தேனினு மினிக்குமமு தம்பகுத் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. ௪௮.

முதலைக் கனவினுங் காணுது முதலாளு
முதலாளி யென்றதுட்டன்
முன்னென்று பின்னென்று பேசியே சிக்கெட்ட
மூதேவி யாயதுட்ட
னுதவிபுரி கின்றவர்க் கவதிபுரி துட்டனுயு
முயிர்களை வதைத்ததுட்ட
னுற்றபிணி தீர்த்தவர்க் கோதிய படிக்கொன்று
முதவா தலைத்ததுட்ட
னிதவான நீதிக ளியம்புநூ லர்த்தத்தை
யேற்றபடி சொற்றதுட்ட
னெறிமூட்டி யிறுமாந்த துட்டனு ளுகலி
னியாணரன் பைப்பெருக்கிச்
சிதமருவு நின்சரண வாழ்வளித் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. ௪௯.

ஏசறு மன்ஞானசக நிட்டை புரிவோ
ரிருக்கையை யழித்ததுட்ட
னில்லாத விடயத்தை யுண்டென்னு முறுதிமுறி
யெழுதிக் கொடுத்ததுட்டன்
றேசிகனை வஞ்சித்த துட்டன் மனுவென்கின்ற
சீர்மையில் லாததுட்டன்
செய்வதெல் லாஞ்செய்து தெய்வமே யிப்படிச்
செய்ததே யென்றதுட்ட
னூசில்பதி விரதையை யடவென்ற துட்டனின்
னருளைப் பழித்ததுட்ட
னாணிலும் பெண்ணிலுந் துட்டனா னாகவி
னகண்டவன் மைப்பெருக்கித்
தேசுடைய வன்சரண வின்பளித் தாளமோ
திக்திக்கு முக்திமுகமே
தெள்ளழி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. * ரு0.

வந்தவழி யெந்தவழி யென்றுணர வோர்நிலையின்
மனநிற்ற லெக்காலமோ

---

* ககூ-முதல் ருo-வரையுள்ள இருபது பாட்டுகளிலும் கூறப்படுகிற குற்றங்கள் பலவுள் இந்நூல் பாடவந்த பிறப்பில் நூலாசிரியர் சிலசெய்து சிலசெய்யாதிருப்பினுஞ் செய்யாத சிலவற்றை முன்னைய பிறப்புகளிற் செய்திருக்கலாமெனும் அநுமானத் தாபனமாகவும், குயின்ற குற்றங்களைப் பிறருமறிந்து செய்தலொழிந்து நன்னெறியினடக்க வறிவுறுத்தொரு நற்போதகமாகவு மேலைப் பாடல்களி லவைகளை விளக்கியருளினரென இங்ஙனம் பொருள் கோடல்வேண்டும். ஆநந்தமுகிலெனும் பதிகத்தில் ஐயவினாவாக வரும் ஓகாரங்களும் இவ்வநுமானத் தாபனத்தை யுறுதிப்படுத்தும்.

மருளற்ற திருவரு ளலாதுநிலை யிலையென்ற
மதிபெறுவ தெக்காலமோ
சந்ததமு மனமடக் குஞ்சாத கங்கொடு
தவம்புரிவ தெக்காலமோ
சலிமன்று ளாநந்த நடைகண்டு மகிழ்தொண்டர்
சார்புறுவ தெக்காலமோ
மந்தமதி யாளர்கட் கெட்டாத சிவசமய
வாழ்வடைவ தெக்காலமோ
வாய்த்தசன் மம்பழுது படுமோ வெனத்தின
மயங்குமென் முன்புவந்து
செந்திருக் கமலவடி யருணிறுவி யாளரோ
தித்திக்கு முக்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. ருக.

பகிர்முக மனத்தையுள் வலிக்கின்ற பூரகம்
பயிறலினி யெக்காலமோ
பாழாகு மனதையுட் பந்தகஞ் செய்புகும்
பகமேவ லெக்காலமோ
கரனகும் பகநின்று வெளிவிடு மிரேசகங்
கண்டுயர்வ தெக்காலமோ
கண்ணினுக் குக்கண் ணெனத்திகழு மறிவான
கண்பெறுவ தெக்காலமோ
மகிமையுள பெரியபொரு ளொக்கணு மிருக்கின்ற
மரபறிவ தெக்காலமோ
வாய்த்தசன் மம்பழுது படுமோ வெனத்தின
மயங்குமென் முன்புவந்து
திகிறபு திருச்சரண வருணிறுவி யாளரோ
தித்திக்கு முக்திமுதலே

தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. ருஉ.

தங்கா தெழுந்துநா லங்குலங் கழிவதைத்
தடைபுரிவ தெக்காலமோ
சலனமில் லாததீ பத்தையொத் துள்ளுளே
சாதிப்ப தெக்காலமோ
கங்கா ஜலம்போல வேயுருகி யென்னுருக்
கண்டறிவ தெக்காலமோ
கன்மமல மெல்லா மொரீஇயொரு திருவருட்
கன்மமுற லெக்காலமோ
மங்காத மதியமிழ்த முண்டுமற் றுண்பதை
மறந்தமர்வ தெக்காலமோ
வாய்த்தசன் மம்பழுது படுமோ வெனத்தின
மயங்குமென் முன்புவந்து
சிங்காத பெரியதிரு வருணிறுவி யாளமோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. ருங.

சருவவல் லமையுடைத் தனியருளொ ளுதுசூர்
கடியவெழ லெக்காலமோ
தனியே யிருந்துவிழி மூடவோ ருறுதியெழு
தருகால மெக்காலமோ
பொருபுல னெலாமொருவி யறியாத புதுவிடம்
புக்கணைவ தெக்காலமோ
புரையற்ற சதுர்வேத முடிபாக நிற்குமொரு
பொருளறிவ தெக்காலமோ

வருதலும் போதலு மிலாதவொரு பெருவாழ்வு
மருவிடுவ தெக்காலமோ
வாய்த்தசன் மம்பழுது படுமோ வெனத்தின
மயங்குமென் முன்புவந்து
திருவளர் பரப்பிரம வருணிறுவி யாளரோ
திக்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. ருச.

கைதவந் திமிரா தகந்தையை யடக்கக்
கருத்துறுவ தெக்காலமோ
கண்டவிட னெல்லா முனைத்தொழு திருக்குமொரு
களிபெய்த லெக்காலமோ
வையுணர்வு மெற்குளே யைக்கியப் பட்டிரு
ணிற்ப தெக்காலமோ
வாசற்ற பரிபூர ணாநந்த மாயுள்ள
வறிவறிவ தெக்காலமோ
மையிருண் மலக்கட் டறுத்தவடி யாருற்ற
வாழ்வடைவ தெக்காலமோ
வாய்த்தசன் மம்பழுது படுமோ வெனத்தின
மயங்குமென் முன்புவந்து
தெய்வங்கள் சூழ்தெய்வ வருணிறுவி யாளரோ
திக்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. ருரு.

பேராசை யில்லாவொர் பேராசை கொண்டுற்ற
பேதெற்ற லெக்காலமோ

பெருமையில் லாதவொரு பெருமைகொண் டறிவற்ற
பெருமைவிட லெக்காலமோ
போராடு மறுவனைப் போராடி வென்றரிய
புகழ்பெறுவ தெக்காலமோ
பொறிமயங் காமலைம் பொறியையு மொடுக்கியுட்
போக்கறிவ தெக்காலமோ
வாராத கம்பலைகள் வரினுமென் மனநனி
மகிழ்ந்துய்வ தெக்காலமோ
வாய்த்தசன் மம்பழுது படுமோ வெனத்தின
மயங்குமென் முன்புவந்து
சேராரு நிஜமோத வருணிறுவி யாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. ௫௬.

பாடும் படிக்குப் பதம்பெற வரும்பாடு
படநினைவ தெக்காலமோ
பாவையர்க ணேயமொரு போதுமுத வாதெனும்
பண்பணைவ தெக்காலமோ
வாடுமர வைப்பிடித் தாடாது கூண்டிடை
யடைத்திடுவ தெக்காலமோ
வன்மேனி யந்தகன் செயலெனக் கயலென
வடங்கியுற லெக்காலமோ
மாடுதே டித்தேடி யலையாது நின்சரண
வாழ்வெய்த லெக்காலமோ
வாய்த்தசன் மம்பழுது படுமோ வெனத்தின
மயங்குமென் முன்புவந்து
தேடரிய சிற்சுகன வருணிறுவி யாளரோ
தித்திக்கு முத்திமுதலே

தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. ருஎ.

காற்றுக் கயிற்றினின் றுடுமிப் பாவைபொய்க்
கனவாத லெக்காலமோ
காயகற் பங்குளிகை தேடியலை யாதுசிவ
கற்பமுண லெக்காலமோ
தோற்றங்கள் யாவையும் விரித்துச் சுருக்குகிற
சூதறிவ தெக்காலமோ
சொல்லரிய வாறத்து வாவுங் கடக்குமொரு
தொழிலேற லெக்காலமோ
மாற்றமி லதீதசிவ ஞானநிலை யாளரடி
வந்திப்ப தெக்காலமோ
வாய்த்தசன் மம்பழுது படுமோ வெனத்தின
மயங்குமென் முன்புவந்து
சிற்றமறு மன்பர்கரு தருணிறுவி யாளரோ
திக்கிக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. ருஅ.

காமாதி களைவிட் டிருக்குநிய மத்திற்
கருத்துறுவ தெக்காலமோ
கருத்திலெழு வாசனை யடக்கவெனு நியமநிலை
கைக்கொள்வ தெக்காலமோ
பேமா முபாதியோ ரேழுமில் லாதனம்
பெற்றமர்வ தெக்காலமோ
பிராணபத் தனமாகு மனதிரோ தனநன்கு
பேணியுற லெக்காலமோ

மாமா சறும்படி பிரத்தியா காரநிலை
மன்னிடுவ தெக்காலமோ
வாய்த்தசன் மம்பழுது படுமோ வெனத்தின
மயங்குமென் முன்புவந்து
சீமே வதீதர்கரு தருணிறுவி யாளரோ
திக்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. ருசு.

விடயவா தனைகெடுத் துன்னரிய தாரணையின்
மேவியிட லெக்காலமோ
மிளிர்கந்த தெய்வத்தை முன்னொரு தியானத்தில்
விரிகின்ற தெக்காலமோ
தடையற்ற சுகநிருவி கற்பச் சமாதியிற்
சயனிப்ப தெக்காலமோ
சைவசன் மார்க்கமுடி வுற்றோ மெனுங்களி
தலைக்கேற லெக்காலமோ
வடகயிலை தென்கயிலை யிறைவரா சீர்வாதம்
வந்தணைவ தெக்காலமோ
வாய்த்தசன் மம்பழுது படுமோ வெனத்தின
மயங்குமென் முன்புவந்து
திடஞான நிலையான வருணிறுவி யாளரோ
திக்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. சு0.

தானுநிழல் கொண்டதிரு நந்திதரு நன்னெறி
தனக்குநா னியைவதென்றோ

சனற்குமர முனிசத்ய ஞானதரி சனி*பரஞ்
சவியுண்மை யுணர்வதென்றோ
மாணுடைய மெய்கண்ட தேவர்பே ரருணந்தி
வளர்கருணை யெய்தலென்றோ
மறைஞான தேசிக ருமாபதி சிவாசாரி
மார்க்கமதி பெறுவதென்றோ
ஆணசை துறந்தரு ணமச்சிவா யப்பிரபு
வுற்றவழி நண்ணலென்றோ
வுயரறி விலாவேழை யறிகிலே னுன்னையே
யுள்ளபடி நம்பினேனால்
சேணமுதர் பேணரிய தெய்வமே யாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. ௬௧

சற்குணர் தொழுஞ்சிவப் பிரகாச சித்தரது
தண்ணளி பொருந்தலென்றோ
தகைநம சிவாயரரு ளுளசிவப் பிரகாசர்
தங்கிருபை சேர்வதென்றோ
நற்கலைச் சிறுமுநிவர் திருவருட் டுணையென்னு
ணலியாது நிமிர்வதென்றோ
ஞானவருண் ஞானசம் பந்தர்வா கீசர்பத
நாடிநனி நிற்பதென்றோ
வுற்பவ மொழிந்தவன் றொண்டர்தங் கருணைக்
குரித்தா நிலைப்பதென்றோ
வுயரறி விலாவேழை யறிகிலே னுன்னையே
யுள்ளபடி நம்பினேனால்

* பரஞ்சவி=பரஞ்சோதிமுனிவர். சவி - ஒளி, சோதி.

சிற்சபையி னிர்த்தமிடு தெய்வமே யாளரோ
தித்திக்கு முத்தமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. கூஉ.

பரமுத்த னைதிரு வாதவூ ரான்சென்ற
பாதையைத் தெரிவதென்றோ
பட்டினத் துப்பிள்ளை பத்ரகிரி யார்நின்ற
பண்பையினி துணர்வதென்றோ
திருவுளத் திற்கினிய வருணகிரி நக்கீரர்
சென்றநெறி சேர்வதென்றோ
சேக்கிழார் நம்பிபதி ராவடிகள் கல்லாடர்
திருநெறியி னிற்பதென்றோ
வுரவிளம் பெருமா னறுங்கபிலர் நற்பரண
ருற்றநடை பற்றலென்றோ
வுயரறி விலாவேழை யறிகிலே னுன்னையே
யுள்ளபடி நம்பினேனால்
தெரிவரிய வறிவான தெய்வமே யாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. கூங.

வையந் துறந்தசிவ வாக்கியர் குறட்புலவர்
மாணருள் விரும்பலென்றோ
வண்மைகெழு தாயுமா னவரருட் கண்ணுடைய
வள்ளலருள் கொள்ளலென்றோ
சைவபா டியநீல கண்டரர தத்தரொரு
சம்புவரு ளூறுவதென்றோ

சாரா வளிக்குரு மணித்திரய தேசிகர்
தடங்கருணை மேவலென்றோ
வுய்யுநெறி நின்றவடி யாரெவரு மென்னுடைய
வுள்ளத்து ளொளிர்வதென்றோ
வுயரறி விலாவேழை யறிகிலே னுன்னையே
யுள்ளபடி நம்பினேனால்
தெய்வங்கள் புகழருட் டெய்வமே யாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. ௬௪.

சென்றதையும் வருவதையு முன்னாவொ ருறுதியென்
சிந்தையின் முளைப்பதென்றோ
தெய்வமெனு மொருபித் தனாரதங் கொண்டன்பர்
செயல்பேணி நிற்பதென்றோ
கன்றுகற் றாவகன் றாலென்ன நின் றாணைக்
கருதினா னழுவதென்றோ
கையைப் பிடித்துன்றன் மெய்ம்மைப் பதிக்குக்
கடத்திநீ போவதென்றோ
வொன்றிற்கு மஞ்சற்க வென்றுநீ சொல்லுமோ
ருறுதியுரை கேட்பதென்றோ
வுயரறி விலாவேழை யறிகிலே னுன்னையே
யுள்ளபடி நம்பினேனால்
சென்றுவரு மனாரிலார் தெய்வமே யாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. ௬௫.

மதபேத வம்புகளு மாளுபி மானமு
மறந்தறிவை நேடலென்றோ
மனைவியுந் தமருமலை புனலின்மெழு குமிழியென
மனதுறுதி கோடலென்றோ
விதயவெளி நடுவான பொருளைச் சதாகால
மிதயத்தில் வைப்பதென்றோ
விருவினைத் தொடர்பில்வரு முடலைக் கடந்தெண்ணு
மெணமற் றிருப்பதென்றோ
வுததிபோன் மெய்ஞ்ஞான வெள்ளமது பொங்கவதி
னுழைமூழ்கி மகிழ்வதென்றோ
வுயரறி விலாவேழை யறிகிலே னுன்னையே
யுள்ளபடி நம்பினேனால்
சிதடரறி யாதபர தெய்வமே யாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. ௬௬.

கோவில்வா யிகணல்கு பலனுக்கு மேனல்கொர்
கோவிலுண் ணுழைவதென்றோ
கொடிசெடி மரத்தலர்கள் கொய்யாம லமைதியங்
குசுமமே கோடலென்றோ
சேவொளிரு நின்னடியி லதனையர்ச் சித்தெனது
சிந்தைகளி கூர்வதென்றோ
திருவாய் மலர்ந்தெமக் கடிமைநீ யென்றநின்
செப்பியருள் புரிவதென்றோ
வோவிய வுருப்போல வாயிடை யிருந்துநா
னுன்னொடு விராவலென்றோ
வுயரறி விலாவேழை யறிகிலே னுன்னையே
யுள்ளபடி நம்பினேனால்

சிவர்கள் பழிச்சுபர தெய்வமே யாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. சுஎ.

பொற்புறு சிவாநந்த பூமியி லிருக்குமோர்
புதையலை யெடுப்பதென்றோ
புகரற்ற பூர்ணோதி லேகியஞ் செய்துமுப்
போதும் புசிப்பதென்றோ
விற்புருவ விழிசிவந் திடலகிரி யேறியவ்
விழிசெருகி நிற்பதென்றோ
விசமநின் மலசங்க ரகிதநிர்க் குணபரம
வெளியிற் படுப்பதென்றோ
வுற்பவப் பிணிதணந் திடையறா வாநந்த
வுண்மையொ டளாவலென்றோ
வுயரறி விலாவேழை யறிகிலே னுன்னையே
யுள்ளபடி நம்பினேனால்
சிற்பர விலாசகுக தெய்வமே யாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. சுஅ.

நாமரூ பங்களின் றெங்குநிறை யறிவையே
நாடிநா னழிவதென்றோ
நாற்றச் சரீரத்தை வாட்டித் தவத்தையே
நாளுநனி யீட்ட லென்றோ
காமிகட் காகாத வத்துவித பூரணங்
கரிசற்று மிளிர்வதென்றோ

கருதிய படிக்குனது கருணைமுகி லென்னைக்
கவிந்துபொழி கின்றதென்றோ
வூமர்போ லேயிருந் ததிலுமது வென்றுகண்
டொன்றுக நிற்பதென்றோ
வுயரறி விலாவேழை யறிகிலே னுன்னையே
யுள்ளபடி நம்பினேனால்
தேமலர்ச் சரணன்பர் தெய்வமே யாளரோ
சித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. சுசு.

ஆசற்ற சின்முத்தி ரைக்குறியி லொன்றிரண்
டாகாம னிற்பதென்றோ
வங்ஙன மனோநாச நிலைவந்து கைகூடி
யசைவற் றிருப்பதென்றோ
பாசவிரு ளாமிரவு பாறவெளி வருகின்ற
பருதிதரி சிப்பதென்றோ
பகலிர விலாதசுய நிலைமையிது வாமெனும்
பரிசுநன் குணர்வதென்றோ
வோசைமணி மண்டப நடுக்கணுற் றங்குள்ள
வுண்மைகண் டேறலென்றோ
வுயரறி விலாவேழை யறிகிலே னுன்னையே
யுள்ளபடி நம்பினேனால்
தேசுமிக் குடையபர தெய்வமே யாளரோ
சித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. எ0.

சிங்கலி லதீதசிவ சாதுசங் கத்தினைச்
சேரவருள் புரியொணுதோ
சிவயோக மன்றிமற் றெல்லா மயக்கென்று
தேறவருள் புரியொணுதோ
பங்கமில் லாதவொ ரருட்சத்தி யென்னுளே
பதியவருள் புரியொணுதோ
பார்க்குமிட னெல்லா நிறைந்தசத் தென்னவே
பார்க்கவருள் புரியொணுதோ
விங்கென்று மங்கென்று மில்லாம லெங்கணு
மிருக்கவருள் புரியொணுதோ
வென்றுகரு திக்கலுழ் மென்னெஞ்ச மகிழுமா
றிறைநீ கடைக்கணித்துத்
திங்கணிகர் போதகனி யுண்டென்னை யாளரோ
சித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. எக.

ஓவுத லிலாததுலை யொத்தசத் திநிபாத
முறவொரருள் புரியொணுதோ
வோயாத கவலைகளு முதவாத செய்கைகளு
மோயவருள் புரியொணுதோ
சாவினை வுப்வினை வென்றுநினை சஞ்சலந்
தணியவருள் புரியொணுதோ
தத்துவ சமூகந் தணந்தென்னை யறிமதி
தழைக்கவருள் புரியொணுதோ
வேவமி லெனக்கறிவ தாநிற்த முன்னறிவை
யெய்தவருள் புரியொணுதோ
வென்றுகரு திக்கலுழ் மென்னெஞ்ச மகிழுமா
றிறைநீ கடைக்கணித்துத்

தீவிர மறுக்குநிலை வைத்தென்னை யாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. எஉ.

கறைநெஞ் சளார்சிறிது கருதுமா கருதாது
கருதவருள் புரியொணாதோ
கங்குல்பக லாகவந் நாட்டமா நின்றுனைக்
காணவருள் புரியொணாதோ
குறையாத பேரின்ப வெள்ளம் படிந்துளே
குளிரவருள் புரியொணாதோ
கூறரிய சுகநல்கு பெருவாழ்வை நான்கொள்ளை
கொள்ளவருள் புரியொணாதோ
விறைமைசால் கண்ணுடைய வள்ளல்குரு சொனவணா
மிருக்கவருள் புரியொணாதோ
வென்றுகரு திக்கனுமு மென்னெஞ்சு மகிழுமா
றிறைநீ கடைக்கணித்துச்
சிறுமையணு காநிலை நிறீஇயெனை யாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. எங.

மினுமினு வெனுமணி யுருட்டலில் வராதென்று
மிஞ்சவருள் புரியொணாதோ
மேனடி நினைதல்போ தாதென நிரோதனம்
விளக்கவருள் புரியொணாதோ
துணியகல் சுழுத்தியிற் சுகமில்லை யெனவுனித்
துணியவருள் புரியொணாதோ

துலைதூர மோவென்று மலையாது வழிகண்டு
தொடரவருள் புரியொணாதோ,
வினையற்ற துரியா தீதத்திலே சும்மா
விருக்கவருள் புரியொணாதோ
வென்றுகரு திக்கலுழு மென்னெஞ்சு மகிழுமா
றிறைநீ கடைக்கணித்துத்
தினியுற்ற வருணிலை நிறீஇயெனை யாளவோ
சித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. எச.

பத்திவயி ராக்கியப் பெட்டியா வென்னுளம்
படியவருள் புரியொணாதோ
பரமாநு பூதிப்ர வாகமென் முன்னமேர
பாயவருள் புரியொணாதோ
சித்தர்க ளுலாவுநற் சதுரகிரி வெளியிலே
திரியவருள் புரியொணாதோ
தேசுமிக வுந்தரும் பொதிகா சலத்துளே
செல்லவருள் புரியொணாதோ
வெத்திசையு நின்றுனது சித்தையறி யும்படிக்
கேற்றியருள் புரியொணாதோ
வென்றுகரு திக்கலுழு மென்னெஞ்சு மகிழுமா
றிறைநீ கடைக்கணித்துச்
செத்திலா முத்தியி னிறீஇயெனை யாளவோ
சித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. எ௫.

சாமமறை வாக்கிய மதிற்றெம்ப தப்பொரு
டனைக்கொளருள் புரியொணுதோ
தகைமைசா றற்பதப் பொருணணி யுணர்ந்துணர்வு
தங்கவருள் புரியொணுதோ
மாமகிமை யுளவசி பதப்பொருளுணர்ந்துபயின்
மார்க்கமருள் புரியொணுதோ
வழுத்தந்த முத்திறமு நின்னருளி லாமென
மதிக்கவருள் புரியொணுதோ
வீமநிலை சேர்முன்ன ரீமநிலை யைக்கண்
டிருக்கவருள் புரியொணுதோ
வென்றுகரு திக்கலுழு மென்னெஞ்சு மகிழுமா
றிறைநீ கடைக்கணித்துச்
சேமநிலை யைக்கொடுத் தென்றுமெனை யாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. ௪௯.

தொம்பதந் தன்னிலா காமியத் தின்வலி
சுருங்கவருள் புரியொணுதோ
துகளற்ற தத்பதந் தன்னிலே சஞ்சிதந்
தொலையவருள் புரியொணுதோ
வம்பதத் தசியிற் பிராரத் துவப்பெருமை
யழியவருள் புரியொணுதோ
வதிர்த்தமுத னடுவிலே யாணவமு மாயையு
மடங்கவருள் புரியொணுதோ
இம்பர்விடு கிறகடையி லேகன்ம வன்மல
மிறக்கவருள் புரியொணுதோ
வென்றுகரு திக்கலுழு மென்னெஞ்சு மகிழுமா
றிறைநீ கடைக்கணித்துச்

செம்பரம முத்தியி னிறீஇயெனை யாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. எஎ.

ஆதியிற் சுத்தனு நிற்குநிலை தனிலிச்சை
யல்கவருள் புரியொணுதோ
வடுத்ததி லருட்செல்வ னுநிலயி லேயறி
வடங்கவருள் புரியொணுதோ
வாதனை யிலாதகடை யிற்கிரியை விடுகின்ற
மார்க்கமருள் புரியொணுதோ
மாண்புடைய வக்கடையி லொன்றிரண் டற்றசுக
மருவவருள் புரியொணுதோ
வேதமில் லாதசிவ சாயுஜ்ய மதெனை
விருக்கவருள் புரியொணுதோ
வென்றுகரு திக்கனுமு மென்னெஞ்சு மகிழுமா
றிறைநீ கடைக்கணித்துத்
தீதில்பதி ஞானகதி நல்கியெனை யாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. எஅ.

ஒட்டாரு நட்டார்க ளாகும் படிக்கோ
ருபாயமருள் புரியொணுதோ
ஆறனை பூதபரி ணுமவட லிவ்வளவி
லொழியவருள் புரியொணுதோ
கிட்டிய வினைப்போக பூதசா ரமுமினிக்
கெடவொரருள் புரியொணுதோ
கேவல மிலாதவொரு கேவல மெனக்குக்
கிடைக்கவருள் புரியொணுதோ

வெட்டற்ற வக்கேவ லங்கொளசி பதமா
யிருக்கவருள் புரியொணாதோ
வென்றுகரு திக்கனுபூ மென்னெஞ்சு மகிழுமா
றிறைநீ கடைக்கணித்துச்
சிட்டரடை யுங்கதி யளித்தென்னை யாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. எகூ.

கல்லினுங் கடியவென் னெஞ்சங் கரைந்துனைக்
கருதவருள் புரியொணாதோ
கதிதனை யவாவிய காந்தத் திருந்துளங்
கனியவருள் புரியொணாதோ
வல்லிலும் பகலிலுந் திருவருட் கடலிலே
யமிழவருள் புரியொணாதோ
வங்கணே யாழ்பழம் பூவண் டுறழுந்துபே
றண்ணவருள் புரியொணாதோ
வெல்லாரு முன்றெண்டனென்றெனைச் சொல்லுமுறை
யேறவருள் புரியொணாதோ
வென்றுகரு திக்கனுமு மென்னெஞ்சு மகிழுமா
றிறைநீ கடைக்கணித்துச்
செல்லல்வர லில்லமுத நல்கியெனை யாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. அ0.

தாயாய வாநந்த ரூபிமா தேவியரு
டையின்றி யென்னுள்வரவுந்

சற்பரி வராகிமா சூலிமா குமரிமா
தங்கியரு ளென்னுள்வரவுந்
தூயகுண வம்பிகை மனோன்மணி பவானியருள்
சொந்தமுட னென்னுள்வரவுஞ்
சுந்தரி திகம்பரி பராசத்தி யின்பவரு
டோகமற வென்னுள்வரவு
மாயமர கதவல்லி வாலைபரி பூரணி
வழங்குமரு ளென்னுள்வரவு
மாசற்ற வாமியரு ணேசத்தொ டேயென்னுள்
வரவுநீ யருள்புரிந்து
தேயாத பேறெனுந் திருவளித் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. அக.

மனமா சறுக்கலை மாணிக்க வல்லியருண்
மளமளன வென்னுள்வரவும்
வரதமுடை யபிடேக வல்லியரு ளொல்லையின்
மயங்காம லென்னுள்வரவுங்
கனயோக மல்கமுத வல்லிதன் போகவருள்
கரிசின்றி யென்னுள்வரவுங்
கரும்பனைய மொழிதருங் கற்பகப் பெயர்வல்லி
கருணையரு ளென்னுள்வரவு
மனகவொண் மைத்தரள வல்லிபே ரின்பவரு
ளட்டியின் றென்னுள்வரவு
மாநந்த வல்லியுடை யருளென்னுள் வரவுமென்
னையனீ யருள்புரிந்து
செனனமீ றில்லாத திருவளித் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே

தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. அ௨.

பஞ்சின்மெல் லடிவிழும வமிர்தகுண வல்லியின்
பரமவரு ளென்னுள்வரவும்
பங்கயன் பணிமகா மங்களே சுவரியின்
பசுமையரு ளென்னுள்வரவும்
விஞ்சைவரர் பரவுநல் வேலெனடுங் கண்ணியின்
விகதவரு ளென்னுள்வரவும்
விட்டகுறை தொட்டகுறை கிட்டவர வேபுரியு
மெல்லியரு ளென்னுள்வரவுஞ்
சஞ்சல வசஞ்சலப் பொருளெங்கு நிறையுமொரு
சத்தியரு ளென்னுள்வரவுந்
தமபாவ சங்காரி யருளென்னுள் வரவுமென்
சாமிநீ யருள்புரிந்து
செஞ்சரோ சப்பதத் திருவளித் தாளரோ
திக்கிக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. அ௩.

மின்னொளி யனந்தமுமிழ் வதனவழ கம்மையின்
விமலவரு ளென்னுள்வரவு
மிகைதெறுங் காவியங் கண்ணிமா கண்ணியின்
விளக்கவரு ளென்னுள்வரவுங்
கன்னலின் கண்டுறழ மொழிமகா வாணிமுக்
கண்ணியரு ளென்னுள்வரவுங்
கவினுள சகச்ரகம லத்திடை யிருக்குமொரு
கன்னியரு ளென்னுள்வரவு

மின்னலை யெருக்கியருள் சோமகலை நாயகியி
னேசிலரு ளென்னுள்வரவு,
மேர்கொண்ட சிவயோக நாயகியி னருள்வரவு
மெந்தைநீ யருள்புரிந்து
தென்னிலகு மலரடித் திருவளித் தாளரோ
திக்திக்கு முத்திமுதலை
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. அச.

அங்கயற் கண்ணியபி ராமிகா மக்கணி
யகண்டவரு ளென்னுள்வரவு
மண்டபகி ரண்டங்க ளீன்றவென் னம்மையரு
ளன்புகொண் டென்னுள்வரவுஞ்
சங்கடங் காதுசிவ சாம்பவி நிரந்தரி
சகாயவரு ளென்னுள்வரவுஞ்
சர்வபுவ னேசுரி தயாபரி யகாரியின்
சரதவரு ளென்னுள்வரவுந்
துங்ககலி யாணிசரு வாணியபி ராணியரு
டுரிதமா வென்னுள்வரவுஞ்
சுத்தசிவ சத்தியரு ளென்னுள்வர வும்பெரிய
சோதிநீ யருள்புரிந்து
சிங்கா நிரந்தரத் திருவளித் தாளரோ
திக்திக்கு முத்திமுதலை
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. அரு.

அட்டமா சித்திதரு முத்தமியி னல்லரு
ளகங்குளிர வென்னுள்வரவு

மாதிருடு வந்தமில் லாதகரு ணாகரியி
னருடவரு ளென்னுள்வரவு
மீட்டநிமிர் தொண்டரக முற்றபெரு நாயகியி
னீரவரு ளென்னுள்வரவு
மெவ்வுயிரு மெம்மக்க ளென்பவளி னின்பவரு
ளீடின்றி யென்னுள்வரவுங்
கட்டழ கெலாமுடைய பருவத வருத்தனிய
கண்டவரு ளென்னுள்வரவுங்
கருதரு மிலக்குமியி னருளென்னுள் வரவுமெங்
கடவுணீ யருள்புரிந்து
திட்டமறு பூரணத் திருவளித் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. அசு.

ஆற்றலுடை நித்திய சுகாநந்தி போரு
ளளப்பின்றி யென்னுள்வரவு
மாநந்த வாரியென நிறையுநிட் களவிமலை
யாணரரு ளென்னுள்வரவுங்
கூற்றுல் விளக்கரிய வாதிசிவ சத்தியின்
கோதிலரு ளென்னுள்வரவுங்
குற்சித மெலாமடு மகோரநிர்த் தனியங்
குசத்தியரு ளென்னுள்வரவு
முற்றமலி நின்மல நிராகார சத்தியரு
ளுரிமையோ டென்னுள்வரவு
மோங்கார சத்தியரு ளென்னுள்வர வும்பெரிய
வொருவனீ யருள்புரிந்து
தேற்றவுறழ் வோர்கருது திருவளித் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே

தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. அஎ.

ஒன்பது மணிப்பிரபை வீசுமுடி நாரணியி
னுசிதவரு ளென்னுள்வரவு
முண்மைப் பரம்பொருளை யகலாத சிற்சத்தி
யொப்பிலரு ளென்னுள்வரவு
நன்குமெழு புங்கவியொர் பகவதி பராபரைசெய்
நறியவரு ளென்னுள்வரவு
ஞானவா நந்தமுகி லானபர தேவதையி
னலிவிலரு ளென்னுள்வரவு
மன்பரு ணடிக்கின்ற வாநந்த நிர்த்தனியி
ணவரு ளென்னுள்வரவு
மந்தரியி னருளென்னுள் வரவுமெம் பரமனு
யவிருநீ யருள்புரிந்து
தென்புல மிலாதவொரு திருவளித் தாளரோ
திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. அஅ.

துப்பிதழ்ச் சாரதை பழிச்சுருத் திரையுடைய
சுத்தவரு ளென்னுள்வரவுஞ்
சோதிவடி வானசரு வேசுரி மகேசுரி
துளக்கவரு ளென்னுள்வரவு
மெப்பொழுது முள்ளதிரு மங்கைஜக தம்பிகையி
னேதிலரு ளென்னுள்வரவு
மெழில்பெருகு சங்கரி சகோதரி யெனுஞ்சிற்
றிடைச்சியரு ளென்னுள்வரவு

மொப்பின்மா லினிவடுகி நீலலோ சனியமலை
யோகையரு ளென்னுள்வரவு
மொளிமல்கு காந்திமதி யருளென்னுள் வரவுமுள்
ளுணருநீ யருள்புரிந்து
செப்பரிய வீடெனுந் திருவளித் தாளமேரா
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. அகூ.

சிந்தைதிக முஞ்சித்தர் கட்கருஞ் சித்துதவு
செல்வியரு ளென்னுள்வரவுந்
தில்லையி னடம்புரியு மன்னைசிவ காமிதரு
தெய்வவரு ளென்னுள்வரவு
மிந்தவுல கின்பாசம் வெந்திட வுபாயமிடு
மிறைவியரு ளென்னுள்வரவு
மெவ்வுயிர்த் தொகையினு மிருந்துவிளை யாடுமையி
னேமவரு ளென்னுள்வரவுங்
கொந்தலர்க் குழலிசிவ சங்கரி சிவாநந்தி
குடிலையரு ளென்னுள்வரவுங்
கோதிமிரி புரைகௌரி யருளென்னுள் வரவுமெங்
குரவனீ யருள்புரிந்து
செந்தே சிகப்பதத் திருவளித் தாளமேரா
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. கூ0.

பித்தேறு பித்தம் பிடித்திடா தத்துவித
பித்தம் பிடித்தேகவும்

பேசாத பெருமையைப் பேணுதற் கெனதுவாய்
பேசாதென் வயமாகவுஞ்
செத்தாலும் விட்டுவிடு வேனோ வெனச்சிந்தை
திடமாய் நிலைத்தேறவுந்
தேடருமுனைப்புறந் தேடியலை யாதபடி
தேடியென் னுட்காணவு
மெத்தொழில் புரித்திடினும் வைத்தகுறி பிறழா
திருந்தமுத மேசேரவு
மெண்ணினே னெண்ணக் குறிப்பினை யறிந்தென்று
மிவனமக் கடிமையெனவே
சித்தர்கள் பராவுனடி யருள்புரிந் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. ௬௰௧.

பொருடேடி யுளமகிழு மிழுதையா காதபடி
பொருடேடி யுளமகிழவும்
போக்குவர வறியாத மூர்க்கனா காதபடி
போக்கோடு வரவறியவு
மருவையுரு வென்கின்ற சிதடனா காதபடி
யருவையுரு வென்றறியவு
மவனிவ னெனச்சொலுங கரிசனா காதபடி
யவனிவனொ டென்றறியவு
மிருளையொளி யென்கின்ற குருடனா காதபடி
யிருளையொளி யென்றறியவு
மெண்ணினே னெண்ணக் குறிப்பினை யறிந்தென்று
மிவனமக் கடிமையெனவே
திருவளர் சிவானந்த வருள்புரிந் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே

தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. ௬௨.

தீங்கா மவாநினைவு தீந்துநல் லுணர்வொன்று
தீயாது மிஞ்சியிடவுந்
தெய்வவட நீழலிற் சொல்லாது சொன்னதைச்
சிந்தையு ணிறீஇயிடவுந்
தூங்காது தூங்கித் திளைப்போர்கள் கொண்டவொரு
தூக்கமென் பதையெய்தவுஞ்
சொற்பன மிலாதவொரு சொற்பன மெனுந்திவ்ய
சொற்பனங் கண்டுகொளவு
மேங்காம லெங்குமோ ரேக்கமது கொண்டுநா
னேங்கியேங் கிக்கனியவு
மெண்ணினை னெண்ணக் குறிப்பினை யறிந்தென்று
மிவனமக் கடிமையெனவே
தேங்காலி னன்பர்கரு தருள்புரிந் தாளரோ
திக்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. ௬௩.

மேலூர் வியோமா லயக்கோபு ரத்துடை
வெளிக்கடை கடப்பதற்கும்
விச்சித்ர மானபிர காரத்தை வலம்வந்து
மெய்த்துதிகள் செய்வதற்கு
நாலாறு திறமாகு நாதமணி மேடையினை
நண்ணிவந் திப்பதற்கு
ஞானப்ர காசம்ப்ர காசிக்கும் வத்துவை
நடுக்கண்டு கொள்வதற்கு

மேலாமை யின்றிநிட் களசங்க ரகிதவின்
பென்னுநிலை யுறுவதற்கு
மெண்ணிநீன னெண்ணக் குறிப்பினை யறிந்தென்று
மிவனமக் கடிமையெனவே
சீலாநல் கென்பவர்கொ ளருள்புரிந் தாளரோ ,
திக்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. கூச.

சன்மமுற் சன்மங்கள் போலபல மாகாது
சபலமது பெற்றுய்யவுந்
தத்துவா தீதமெனு மொருபெரிய தத்துவந்
தனையே யடைந்துய்யவும்
புன்மனப் புன்மையர்கள் புன்மொழி யவாவிடும்
புன்மையை வரைந்துய்யவும்
புனிறுமர பென்னீர்மை மருவா திருக்குமொரு
புதுமையை புணர்ந்துய்யவு
மென்செய்கை நின்செய்கை நின்செய்கையென்செய்கை
யென்னுநிலை யுற்றுய்யவு
மெண்ணிநீன னெண்ணக் குறிப்பினை யறிந்தென்று
மிவனமக் கடிமையெனவே
சின்மயா நந்தசிவ வருள்புரிந் தாளரோ
திக்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. கூரு.

தவறுய விளரிமுழு துந்தவிர வுங்கருத
றவிரா திருப்பதற்குஞ்

சத்தின்மு னெலாஞ்சூனி யங்கொலென் றறையுமா
தரிசித்து நிற்பதற்குங்
கவலைமா கடலிலே குடையாம லின்னருட்
கடலிலே குடைவதற்குங்
கருவூறா யின்னுமடை யாமலின் னமுதவார்
கலியூறா யடைவதற்கு
மிவனவ னெனுஞ்சிந்தை யிறையுமின் றலர்வண்டி
ணியல்பாக வமர்வதற்கு
மெண்ணினை னெண்ணக் குறிப்பினை யறிந்தென்று
மிவனமக் கடிமையெனவே
சிவஞான கைவல்ய வருள்புரிந் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. சுசு.

பாசநிட் டாபரர்கள் போலவே யந்நிட்டை
பண்ணு துளேசெல்லவும்
பசுஞான நிட்டையுந் திடமன் றெனுவதிற்
படியாது மேலேறவு
மாசற்ற பதிநிட்டை தன்னிலே நானறிவு
மயமா யிருந்தவிரவு
மறைஞான சம்பந்த முனிசொன்ன முடிவாக
மௌனமே கைக்கொள்ளவு
மேசிலா துள்ளவிந் நிலையன்றி வேறுநிலை
யிலையெதிலு மென்றமரவு
மெண்ணினை னெண்ணக் குறிப்பினை யறிந்தென்று
மிவனமக் கடிமையெனவே
தேசசு மலிந்தவடி யருள்புரிந் தாளரோ
தித்திக்கு முத்திமுதலே

தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. கூள.

நெஞ்சம் பதைப்பற்ற நெஞ்சமா கத்தேறி
நெஞ்சையந் நெஞ்சறியவு
நிலவுநன் மனவெளியி லொருநினைவு சலமின்றி
நிலையாக நின்றுன்னவுந்
துஞ்சாத வெனையங்க ணேகண்டு திருவருட்
டுணைவலியை நானுணரவுஞ்
சுத்தவியல் பாமருளி லென்செயலு மறிவுஞ்
சுதந்தர மிழந்துறையவு
மெஞ்சிறுமை நாறிறைவ னையவுன் னெடுநா
ளிருந்தபடி யாநிற்கவு
மெண்ணினே னெண்ணக் குறிப்பினை யறிந்தென்று
மிவனமக் கடிமையெனவே
செஞ்சரண வன்பர்விழை யருள்புரிந் தாளரோ
திக்திக்கு முக்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. கூஅ.

சளசள வெனப்பேசு நாவினை யடக்கிச்
சவம்போ லொடுங்கிடற்குஞ்
சகலசேக வலம்வந்து தாக்காம லங்கமேன
சாகாது செத்திடற்கு
மளமள வெனக்கருணை மழையினு லபிடேக
மதிமகன் செய்திடற்கு
மாசற்ற சுடலைதனி லுடன்முழுது மொருஞான
வன்னியா னீற்றிடற்கு

மிளவலெய் பிதிரா முறைடனை யிணைப்பதற்
கேசில்பிண் டம்போடவு
மெண்ணினை னெண்ணக் குறிப்பினை யறிந்தென்று
மிவனமக் கடிமையெனவே
தெளிவுள சுகாநந்த வருள்புரிந் தாளமோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. கூகூ.

சரியையுங் கிரியையும் புதுமணக் கோலச்
சடங்கென நினைந்துகொளவுஞ்
சகயோக மணவறையுண் மணமகளு மகனுமுள
தரமென வறிந்துகொளவு
மரியமெய்ஞ் ஞானமபி மானமச் சந்துறந்
தணைதலென வுய்த்துணரவு
மங்கணுண் டாகுமின் பதையிருவ ருஞ்சொலா
வதிகுய்ய மெனவோரவு
மெரிநிரய யாதனையை நாறருண கிரிநிலையு
மிதுவே யெனத்தெளியவு
மெண்ணினை னெண்ணக் குறிப்பினை யறிந்தென்று
மிவனமக் கடிமையெனவே
திரிபுகே டில்லினிய வருள்புரிந் தாளமோ
தித்திக்கு முத்திமுதலே
தெள்ளறி வெனுஞ்சலதி பொங்குமுள் ளூரில்வளர்
சிவசுப்ர மணியதேவே. க00.

---

# போசவுலாச.

வேறு பன்னிருசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

போசவு லாசவி லாசப கேசவ பூர்வச தாசிவனே
போதவி பூபரி பூசிகி வாகன பூதகிர் பாகரனே
யீசம கேசவி சேஷவி சாகசு ரேசப ராபரனே
யேககி யாதத யாளவ காதமி லாதுச தாநினைவோர்
நேசவ ரோதய பீமவி ராமவ நேகக லாநிதியே
நீதவி வேகசொ ரூபபி ராமண னேபிர சாதசிதா
காசச காரர காரவ காரண காரப வாகுகமா
காரண பூரண தாரக னேகறை காதிவி ராவுதியே. க.

---

ஆ. திருப்பாடல் - ௫௧௧.

---

## அனையனடி நாடுமனமே.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். *

விதுவொழி னறுந்தும்பை மதலையர வங்கமடம்
விறலும்பல் வியாளவதளார்
நதிபெறுழி யின்கொம்பு வளரறுகு வெள்ளென்பு
நவியமணி கின்றவினை றமேயா
ணிதவொடு விரும்புமுமை மகனெனு மகண்டருக
ணிணையிலரு ளின்பமுறநீ
யதுவிது வெனும்பெரிய சுழலினுழ லாமலயி
லனையனடி நாடுமனமே. க.

---

* இவ்விருத்தத்தினுடைய அடிகளின் கடைச்சீர்களை மா-மா எனப்பிரித்து எழுசீ ரென்பாருமுளர்.

இதியென வுழன் றுலக மயல்விழை முசுண்டருற
வெனுநிலை நிலாதுபரம
நிதியெனு நலஞ்சதத மருளொரு கடம்பனது
நிறைகருணை மேவவடியார்
துதிபணி யிறைஞ்சுமொரு பெரியபொரு ளங்கியவி
சொரிகுந ரவாவுமுலக
ரதிபதி சிறந்தகுரு பரணிமல னைவயி
லரையனடி நாடுமனமே. ௨.

கடல்கவி யனந்தைமிசை முடையுரு வணைந்துவரு
கருமமற வரைகடுகளாம்
படலமுய ரும்பருறை பதியினை வளைந்துமிளிர்
பருதியை மறைக்கவிறல்சா
னடனமிடு மஞ்சிகியின் முதுகிடை யிருந்துமர
ணமிலரிட நணுகியுயுமா
றடலசுர னெஞ்சம் பிளந்தவிக லுடையவயி
லரையனடி நாடுமனமே. ௩.

பொய்யொன்றை விட்டவ ரிடங்கலுட மிலைகெட்ட
பொய்பொன் றிருக்குமெனினே
மெய்யன்ப ரென்னுரை பொருந்தா ரருந்தவமும்
வீயுமத னன்முதலினீ
செய்யுஞ் செயற்கனைத்து பொய்யின்றி முன்சொனபொய்
சிதையும் படிக்குமதன்மே
லையந் தணந்தவரு ளணவும் படிக்குமயி
லரையனடி நாடுமனமே. ௪.

விவேகவிற லேறுதிசை நாதரரு ளாளவ
விநாசிபர மேசவருளீ

யுவாவென நிலாவுகனி யாலுலகை யேகண
முளேமயிலி லேவருமனு
துவாதச புயாசல வெனுநனி பராவிய
சுவாமிபத மேவுலகா
மவாவினி வராதபடி வேதகுரு நாதனயி
லனையனடி நாடுமனமே. * ரு.

மிடியுடைய நினதுபழ வினைகிழிய முனைகிழிய
மிகைகிழிய வசுரனெலியா
மிடிகிழிய முடிகிழிய மிடறணியு மணிகிழிய
விணையிலக வலிகிழியமா
மடிகிழிய நடிகிழிய வகடுமுது கிடைகிழிய
மதிகிழிய விதிகிழியவோ
டடியொடுயி ரதுகிழிய நொடியிலெழு தருமொரயி
லனையனடி நாடுமனமே. சு.

தனதத்த தனதத்த தனதத்த தனனதன
தனனதன தானனதனு.

வழிவிட்டு விசுவத்தி னுழனிற்கு ளுளபெரிய
மருளிரிய மாதவமிலார்
மொழிபற்றி மருவுற்ற பவமற்று ளவேவுபடு
முரணிரிய வாதைமிகவீ
கழிவற்று வரவற்று நிலைநிற்க வருணகிரி
கவியணிய வாவியணிதே
வழிவற்ற பரனெப்பி றுடிகொட்டு முருகனயி
லனையனடி நாடுமனமே. எ.

---

* இதுமுத லிரண்டு பாட்டும் ஒற்றிலாச்செய்யுள்.

# பொன்னவிர்மேனி.

வேறு அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பொன்னவிர்மேனிவேண்மண்பொருண்மகள்கேட்கவில்லை
மன்னில மதிக்குஞ் சித்தி வரங்களைக் கேட்க வில்லை
சென்னிக ணெருங்க வீழ்ந்து தேவர்கள் பரவும் பாதந்
தன்னையே கேட்டே னீதான் றயவுகூர்ந் தளித்தி லாயே.

இருள்செறி யிரவில்விண்ணோங்கிருப்பைசூழ்தோப்பினூடு
விரிதலை வெள்ளி யாங்கு வீழவவ் வொளியைப் பார்த்து
மருண்மருட் செயலோ பச்சை மயிலிறைவரவோவென்று
வெருவியுண்மகிழ்ந்துபின்னைமெய்யறிந்தகநொந்தேனே.

இருளொளி முன்னை நில்லா தெரிமுன்னை நுணைநில் லாது
பொருண்முனைபொய்தானில்லாதென்றறிசரதம்போலுன்
னருண்முனை வினைநில் லாதென் றறிந்தவர்விரும்புமந்தத்
தெருளருள்பெறுவாறுனுந்தேடியுள்ளுடைந்தேன்வேலோய்.

வீட்டினை யவாமெய் யன்பர் விருப்பறிந் தருளும் வள்ளால்
பாட்டொடுபழிச்சென்னைக்கப்பரிசுங்கண்டருளல்வேண்டுந்
தாட்டிய வலதீண் டேதுந் தந்தருள் புரியோ நாமுன்
பாட்டிலேபோவென்றோர்சொற்பணிக்கினுநலமேயன்றே.

உன்னைநா ளுடி நாடி யொருபய னறியே னேழ
யென்னதான்செய்வேனிஃதையெவரிடமிசைப்பேனீண்டுப்
பின்னையோர் புகலுங் காணேன் பெரியிறை யுனையல் லாம
லெந்நிலங் களினு முண்டோ வியம்புதியிகல்வேன்மன்னே.

வன்மனத் தார்கள் கண்ணும் வறுமையைச் சிறிது நேரந்
தன்மையொ டுணைத்தாலன்னோர் சல்லியொன்றேனுமீவா

ரென்னுடை யெளிமை யெல்லா மியம்பியுமெவளேனு
முன்மன மிரங்கா தென்னையோ தறு முகத்தேதம் மானே.௬.

நாளுனை கூறிக்கூறி நடுவழி விடுவா னென்றோர்
கோளறு குமர வேளின் குளிர்திரு வுளத்தேக முன்னி
யாவருள் கொடாதுவாளா விருப்பைகொலடியேனுன்றன்
றாளிணை வலித்தே சாவேன் சரதமீ தறிந்து கொள்ளே.

இப்படிப் பலகோடித்து மிரங்கில னென்று னென்னைக்
கப்புறுகருத்துக் கொள்வா னமக்குமோர்கவலின்றென்று
னெப்பறுமிதயத்துள்ளேயுறுதிசெய்தொளித்துக்கொண்டாய்
துப்படி யீந்தா லன்றித் தொலையுங்கொ லென்னை தவாவே.

நடத்தைநேர் போதா திந்நா ணமருள் புரியா மென்றே
விடத்தையுண்டவர்தாந்தந்தமலையொன்றினைப்பாயென்னைக்
கடத்தினுள்விளக்குப்போலக்கடத்தினுளமைத்தாய்செய்யுந்
திடத்தைநீபுரப்பாமேயனென்றேர்வதிற்றடையென்சொல்லே.

பையலோடிணங்கேலென்னும்பழமொழிப்படியோவுன்றன்
றுய்யமெய் யுளத்து ளுள்கித் தோன்றிடா திருப்பாய் நல்ல
மெய்யுணர் வாய மேலும் பையலென் றுள்க லாங்கொல்
செய்யதீ வணைப்பே ரந்தை தெய்வமே கருணைசெய்யே.

---

## கருணாகரவேலன்.

### கட்டளைகலிப்பா.

மண்டலத்துயிர் யாவையு மாண்முதால்
வண்டு மொய்க்குநன் மஞ்சரி மொய்ம்பினோய்

கொண்ட லைப்பழித் துள்ள வருட்கொடைக்
கோமே யென்றனை யாளவென் றன்பினென்
வெண்ட மிழ்ச்சொலுங் கேட்டருள் செய்வையோ
விதி நாய்போ லலைந்திடச் செய்வையோ
வண்டர் பூதி யடைந்திடச் செய்வையோ
வறிகி லேன்கரு ணாகர வேலனே. க.

வஞ்ச னையறி வினர்க ணம்புமிவ்
வாழ்வி லேயுழன் றிப்புலை யாக்கைதான்
றுஞ்ச வந்தகன் கையிற் கொடுப்பையோ
சூழ்ந்து சூழ்ந்தினுங் கத்திடச் செய்வையோ
நஞ்ச முண்டு நடித்தவர் செம்மலே
நங்கை வள்ளிதெய் வானை மணாளனே
கஞ்ச மெல்லடி யிந்தெனை யாள்வையோ
காண்கி லேன்கரு ணாகர வேலனே. உ.

தாயு நீபெற்ற தந்தையு நீமணந்
தாளு நீசொந்தத் தம்பியு நீதந்தை
தாயு நீயன்னை தாயுநீ யண்ணனீ
தாதை யின்மரு மானுநீ மாமனீ
சேயு மாமியு நீதொடர்ந் தோருநீ
தேவு நீயிறை யோனுநீ மன்னுநீ
யாயு மென்னக நீபுக் கிருந்தெனை
யாண்டு கொள்கரு ணாகர வேலனே. ௩.

அன்பெ னுந்தட்ப மானதென் னெஞ்சகத்
தளவை யின்றெழுந் தோங்கிப் பரம்பவு
மென்பு நெக்குடைந் தென்வச நானின்றி
யிருகண் ணுலுங்கண் ணீருகுத் தேசிலா

வின்பு தோன்றவுஞ் செய்யொரு நீர்மையை
யென்று தந்தருள் வாயெழி லெங்கைய
துன்பி னின்று சுவர்க்கப் புரந்தவோர்
சுவாமி யேகரு ணாகர வேலனே. ௪.

நீரி னாம் படர்ந்தது போலெனு
ணீக்க மின்றி நிறைந்தவஞ் ஞானமாங்
காரி ருட்டைத் துமிக்க வெளிச்சமே
காட்டு ஞான விளக்கினை யேற்றவிந்
நேரம் வந்தரு ணீட்ட வுனக்கயர்
நேம மேது மறிந்தில னினித
நாரொ டும்படர் வேனினை யொப்பிலா
ஞாட்பு டைக்கரு ணாகர வேலனே. ௫.

மூன்றி ரண்டு புலன்வென் றகண்டமா
மோன ஞானமெய் விட்புல மன்னிநின்
றூன்ற வின்பம தொன்றையே யிச்சிப்பா
ரந்த ரங்கத்திற் றித்திக்குந் தித்திப்பை
மூன்றி ரண்டையும் வென்றறி யாதநான்
மோகித் திம்பர்த் தியங்கித் திகைக்கிறே
னீன்ற நின்னரு ளென்பக்க மாகுநா
ளெந்த நாள்கரு ணாகர வேலனே. ௬.

தண்ண ளித்தெய்வ ரத்தின மாமுனைச்
சந்த தஞ்சிந்தை செய்கின்ற நானுநா
னுண்ணு முண்டியு முண்டிக ளாற்புட்டி
யுறுமு டம்புமுள் ளாக்கையு நோக்கமுங்
கண்ணிக் கண்ணிக் கலங்குநா னிற்கின்ற
கண்ணா தாமிந்தப் பூமியும் பூமிமீ

தென்ன வுள்ளமெல் லாமல மாகுமே
 யென்செய் வேன்கரு ணாகர வேலனே. எ.

சாலி யைக்குத்துங் காலத்தி லேயெழுந்
 தண்டு லத்தினை யேய்ப்ப மனத்தினைக்
கால முஞ்செய் தியானத்தி னலிருள்
 கண்டி தப்பட் டிலங்குமெய்ஞ் ஞானமென்
ஞேுலி டுஞ்சுரு திப்படிக் கேயுனே
 யுள்ளி னேனரு ளூற்றுவந் திப்பொலா
ஞால நச்சு மயக்கைவற் சித்தரு
 ணட்டி யாள்கரு ணாகர வேலனே. அ.

எண்ணி லாதபல் கால்களைக் கொண்டுல
 கெங்க மோர்கணத் தேது மனத்தையாங்
கண்ணி வைத்துப் பிடித்து வளைத்துளே
 கட்டி நானல்ல காரிய வேடறு
யெண்ண மற்ற சுகத்தை யடைந்தினி
 யெந்தை நின்னருண் மன்னும் வெளிக்குளே
மண்ணி கந்துய்பு மார்க்கத்தி னிற்கவென்
 மாட்டு வாகரு ணாகர வேலனே. கூ.

கன்னி மாரறு வர்க்கட்ட சித்தியைக்
 காத லாவன் றதிர்த்த பிரானுறை
கன்னி நாட்டங் கயற்கண்ணி தன்னகங்
 கண்கு ளிர்ப்புற வுள்ளகைக் கிள்ளையே
தென்ன விர்ந்துயர் தென்கயி லைப்பதிச்
 செல்வ னுக்குந் திருப்புகழ் செப்பிய
வென்னை யாளுடை யானுக்குஞ் சாமியே
 யென்னை யீகரு ணாகர வேலனே. க0.

# சிகிவாகனன்.

---

## கட்டளைக்கலித்துறை.

புனலை மலைந்து நடிக்கவர் வாக்குப் புகனெறியே
சனனமொழிக்கு மகராழி விக்குமோர் சாமியெனக்
குனையல திந்த வுலகினர் யாரு முரைப்பதென்னின்
மனது திருத்தி யடையாது காண்சிகி வாகனனே. க.

பொருள்பெற வென்றிரும் பொய்பல பேசிப் பொறிதணைந்த
மருள்பிடித் தாடு மடவர்தங் கேண்மை மறந்துநித்த
வருளை நினைத்தவ் வருள்பெற வந்த வருண்முதனீ
வரும்வைக றனதி தூரங்கொ லோசிகி வாகனனே. உ.

பாசத்தை நீக்கரு ளுன்னடிக் காய பரிவுகொண்டு
தாசத் தொழிற்செயுஞ் சீடனென் றாக்கித் தழைத்தபஞ்ச
கோசத்தை நூறி யெனைக்கொளும் போது குருபணிக்கு
மாசற்ற நின்னரு ளேற்க வான்சிகி வாகனனே. ௩.

ஆத்தர்சொல் லானு மெனுமனத் தானு மளக்கவொண்ணாப்
பூர்த்தி யெனப்படும் வானவ ருமுனைப் போற்றியுய்வான்
சேர்த்த பரிசுத்த நாமங்க ளாயிரஞ் செப்பியுநல்
வார்த்தைக ளானும் புகழ்வரன் றோசிகி வாகனனே. ௪.

நினைக்கு நினைப்புங் கருவி யியக்கமு நின்னலாற்
நினைப்பு மியக்கமு மென்னிற் கலக்குமோர் நீர்மையினி
லெனக்கொர் சுதந்தர முண்டாகிச் செய்த விருவினையாம்
வனத்திடை நின்று மயங்குகின் றேன்சிகி வாகனனே. ௫.

அறிவற்ற கன்மமு மென்றனைத் தேடி யடைவதின்று
பொறிகெட்ட நானு மதுகண்டு கோடற்குப் போவதின்று

குறிதிட்டங் கண்டதைக் கூட்டிப் புசிக்கக் குயிற்றுவது
வறிதற்ற நின்னருள் வல்லமை யேசிகி வாகனனே. சு.

எந்நாளு மென்னைப் பிரியா யெனுமென் னிதயமதி
லந்நாளி லுன்னை நினைபொழு தேயுண் டதற்கொருகே
டிந்நாளி லுற்றதன் றேமெளி யேனிதற் கென்னசெய்வேன்
மன்னூர் பெருக்கி யருள்வா யருஞ்சிகி வாகனனே. எ.

பரபரப் பாநிலம் பொன்றேடு காதலும் பாழ்ஞ்சடரம்
விரிவெடுக் கச்சரு வுண்டுன் றிளைத்து விளைமதனக்
கரகரப் போடுபெண் டோளணை காதலுங் கைக்கொண்டநான்
வருபிறப் பெற்றறற் குனையடுத் தேன்சிகி வாகனனே. அ.

நித்த வனாதி யுறேடு விராவி நிறையுமுத்திக்
கொத்த வணக்கமெ னுள்ளக மன்றெனக் குப்புறம்பென்
றுத்தி பணற்கொரு ஞாயமு மில்லை யுரைத்தபடி
வைத்த குறிக்க ணெழுந்தரு ளாய்சிகி வாகனனே. கூ.

பொன்னுக்கு மண்ணுக்கு மின்னுக்கு மாகப் பொருந்துமனந்
தன்னைக் கெடுத்திடல் விடென்று தேராச்சழக்குநெஞ்சர்க்
குன்னைத் துதிக்கு நெறிகசப் பாமவ ரொட்டெனக்கேன்
வன்னிச் சிலைப்பெய ரோன்பர மாசிகி வாகனனே. கO.

---

## அயிலரசு.

---

கலிவிருத்தம். பண் - நட்டபாடை.

திருநான்முக னரிதேடிய சிரமாவடி யுடையோர்
குருவாகிய குகனேயருள் கூராயென நவிலு
மொருபாதையு மறியாதினு முழிதந்திடல் சரியோ
மருளாதருள் புரியாய்கல வலியாரயி லரசே. க.

குழுகந்திக மூரவம்பல குமிலஞ்செயு னடியே
தொழுதுந்துய ரடையும்படி தொடராம்வித் வசமோ
வழுவென்றுள வினைவென்றிட வரமென்றவு வணியீ
மழுவென்பணி யிறைதந்தவொர் வலியாரயி லரசே. உ.

வனமேவனி லொருமாதுடை மயலால்வளர் தளிர்பூ
நனைமேவிடு திமிசாநிமிர் நாநாகலை நிதிரூர்ப்
புனல்வாரி கடக்கும்படி யருளாகிய புணையீ
மனபூசகர் மனமாசடு வலியாரயி லரசே. ௩.

தமரும்பொரு ணிலமுஞ்சத மென்றுன்னை யெணுதா
ரமருந்தல மதிலேலுழுயு மமராநெறி கூடிக்
குமராகுக முருகாசிவ குரவாவென வோதா
மமர்திர்கதி பெறுமாறருள் வலியாரயி லரசே. ௪.

குகன்மஞ்சடி பாடுஞ்செயல் கொடுநன்கென கொண்டான்
மிருதொந்தனை களினைந்துயிர் விடலாயின னெனவே
சகமைந்தர்கள் சொலவுங்கதி தருநின்னருள் செயுமோ
மகிழும்படி யருளேசெயும் வலியாரயி லரசே. ௫.

மொழிநன்மொழி யோடேகமு முயல்வுந்தரு வாயேற்
சுழிவிண்டிடை யுழலுஞ்சிறு துகள்போலுக விழைவிற்
பழியேனலை யாதுன்னிரு பதமாமமு தடைவேன்
வழிபாடுடை யார்பாலொளிர் வலியாரயி லரசே. ௬.

நாவுந்தளர் வுறுகின்றது நற்றேத்திர நழுவ
நோவுங்குடி கொளுகின்றது நுன்சிந்தை மிகாமற்
கூவின்றலை கிளர்கின்றது குருமேமான மெழாமன்
மாவின்பெனை யெவ்வாறுறும் வலியாரயி லரசே. ௭.

உடலோடுயிர் பகையாயிடி னுயிர்வாழ்வது முளதோ
வடர்கூழொடு மதிலேமுர ணுறலுரு வாமோ

வடியேனொடு நீதான்முனி வானாலுயர் வேனோ
மடன்மாமலர் முடியோயருள் வலியாரயி லரசே. ௮.

நானாரென வறியாமட நாயேனடு வுணர்வின்
கோனாமுனை யறியாற்றலு முளனோகுரு வருளா
னானாரென வறியும்படி நலியாவருள் புரியாய்
வானோரனார் தீர்த்தாணொடு வலியாரயி லரசே. ௯.

இருளாமல மறுத்தாயிடை யெனைநீதர வருளின்
குருவாய்வர வேண்டுங்களி கூர்ந்தேகொள வேண்டு
மருளாலுயர் தண்ணந்தயி ழநுபூதி யறைந்தேதான்
மருமாமலர் கொடுபூசைசெய் வலியாரயி லரசே. ௧௦.

---

## கந்தரிரட்டைமணிமாலை.

### நேரிசைவெண்பா.

பொன்னாய நன்னாடுய் புக்கேதள்க ளாஞ்சுரர்க்கு
மன்னாகி யேனோர்க்கு மாதேவாய்—மன்னுங்
குகனை யுனக்கு*ருவங் கூறினாய ரின்பாஞ்
சுகமென்று மெய்ந்நூல் சொலும். ௧.

### கட்டளைக்கலித்துறை.

சொலுநூ லனைத்தும் விதந்தெடுங் தோதுநற் றோத்திரங்கள்
பலவு முனக்கே பொருந்துமென் றோர்பவர் பாவகிப்பே
ரிலகுமெந் தாய்†சொருபங் கா னுனக்கிச்சை யென்பதொடு
குலைவறு ஞானங் கிரியையு மாமெனக் கூறுவரே. ௨.

---

* உருவம்=வடிவு. † ...பம்=நிலைவடிவு.

### நேரிசைவெண்பா.

கூறுமையி னீயென்றுங் கோலமறை காணுநின்
பேறளவை யாரிங்குப் பேசுவா—ரீறறுமீச
யுன்சுபா வந்தா னுலைவின்றி நிற்றலென்பா
ருன்சுபா வத்தையுணர்ந் தோர். ௩.

### கட்டளைக்கலித்துறை.

ஓராத பேதைநெஞ் சேராத வுண்மையி னுள்ளவனைக்
யாரானுஞ் சொல்லற் கரிய விசேட மதிப்பதென்னி
னேரான தோற்ற மொடுங்கமில் லாம லிருத்தலென்றுஞ்
சீராரு மெங்கள் முருகப் பிரானெனுஞ் சிற்பரனே. ௪.

### நேரிசைவெண்பா.

சிற்பர மாமுனக்குச் செப்பருள்வி யாத்திசொலிற்
பொற்புடை வாரிதிநீர்ப் பூர்த்தியொக்கும்—வற்பார்
வியாபகமுந் நீரளவை விண்மணியை யொக்குந்
தயாபரசந் தோடகுகே சா. ௫.

### கட்டளைக்கலித்துறை.

சாவும் பிறப்பு மருவாவொர் நித்திய தத்துவமா
யாவுந் தனக்கு ளடங்கநின் றேய்தோற்ற நாசமென்னு
நோவில் வருந்தும் பசுக்களை விட்டு ணுழைக்கவெனு
மேவுங் கருணையி னோரா று நின்குணம் வேலவனே. ௬.

### நேரிசைவெண்பா.

வேலவ வென்றே மிழற்றுநர்க் கின்னுக்கஞ்
சால வளிக்குந் தயாநிதியே—கோல
நிறந்தா னினைப்போர்நெஞ் சின்படியா மென்னு
வறிந்தோர்ஞா னஞ்சிதரு தே. ௭.

கட்டளைக்கலித்துறை.

தேவா குமர குருபர சேமச் சிவக்கொழுந்தே
யோவா வுனது விமலமெய்ஞ் ஞானம் விழிக்கொளிபோன்
மூவா விகளின் மனத்திற் கொளியா முயங்குதலிற்
றூவா ருயிர்க்கறி வாஞ்சத்தி யொன்று தழைவுற்றதே.அ.

நேரிசைவெண்பா.

உற்ற சுழுத்திதனின் மூர்ச்சைதனி லொன்றுமின்றி
நிற்றல்போ லேமூட நீர்மையுயிர்—சொற்ற
மனதுடனுஞ் சேரா மனதுமற் றேசே
யுனது திருவருள்சேர்க் கும். கூ.

கட்டளைக்கலித்துறை.

சேர்க்கு மருளின் றகவா னினைப்பது சேர்ந்தபின்னர்ப்
பார்த்த பொருள்கட் கெலாமிச்சை கொண்டு பணும்வினை க
டேர்த்திட வென்று பரிகார தண்டமுஞ் செய்வையந்த
மார்க்கம்வண் ணுன்றெழில் போலாஞ் சடக்கர வாலியனே.

நேரிசைவெண்பா.

வாலறிவா முன்னறிவு வாள்விழிக்குப் பானுவொளி
போல வுளததுதான் புந்திபடர்—ஞாலமிசைச்
சென்றொன்றைச் செய்யுமெனச் செப்பார்கள் கற்றுவல்லோ
ரென்றொண்டை யேற்றகுக னே. கக.

கட்டளைக்கலித்துறை.

குகனே குமர குருவே நினது குருநிறைவு
சகல பொருளிற் சிவணிய தேனுஞ் சடப்பொருள்க
ளகமுன்னு கின்ற வறிவற்ற வத்துக்க ளாதலினுற்
சுகமும்வெந் துக்கமுங் கொள்ளா விவையுயிர்க் கேசொந்தமே.

### நேரிசைவெண்பா.

சொந்தப் படுத்திச் சுகமுற்றார் நல்லுணர்வோர்
சிந்தை மருண்டில்லார் தீழ்ப்புற்றார்—பந்தமிலா
ரோர்ந்துபடர் கந்தாநீ யுண்மைநிலை சேருமென்றன்
றீந்தமறை யுங்கருணை யே. கங.

### கட்டளைக்கலித்துறை.

கருணை தனையறி யாதவ ரேனிக் கருத்தைதாயுயிர்க்
குரிமை யொடுவிதித் தானதி னுலிந்த வூழெல்லாம்
வரவிட னுயிற் றெனவதிர்ப் பார்நல்ல வாலறிவின்
றுரிய மலமறு மோகுக ளுமெங்க ளுத்தமனே. கச.

### நேரிசைவெண்பா.

உத்தமத்தி னுத்தமமா யுள்ளமுரு காபின்னு
மித்துணையிச் சிவ னிறைக்குமென்றவ்—வத்தனென்போ
னேனறி யாதுணர்வா யெய்தினு னென்னுமுன்றன்
ஞானநிறை வென்றறியார் நா. கரு.

### கட்டளைக்கலித்துறை.

நாவான் மனதா ளப்பருங் கந்தநின் னல்லுறழ்வு
தாவான சீவர் வினையைத் தாற்செயுந் தன்மையெல்லாந்
தூவோடு முப்போ தினுநனி காணுந் தொடர்வினையின்
றேவேட்கை யாயெண்ண றன்னையுங் கண்டிடு மெண்ணு*மன்றே.

### நேரிசைவெண்பா.

அன்புற்ற கந்தாநின் னுசிலறி வானதுயிர்
முன்புற்ற கன்மமின்றி மோகத்தாற்—பின்புமுன்னற்

---

* அன்றே=அக்காலமே.

சிந்தித்து முன்னுணரத் *தேவையொன்று மின்றென்னா
நந்தலற்றா ரோர்வார் நயந்து. ௧௭.

கட்டளைக்கலித்துறை.

நயந்த கருணையி னுளைந்து கன்மமு னாற்றுகின்ற
சுயம்பிர காச முருகாநின் கூத்துயிர்த் தூறணைத்து
மியங்கும் படிக்குள்ள தேயந்த வாட்டின்ன மெற்றென்னினோ
துயங்காம லெங்கு நிறைவாய சூக்கும சூத்திரமே. ௧௮.

நேரிசைவெண்பா.

சூத்திர வாட்டிற்றன் றாலமு முள்ளுடம்புஞ்
சோத்திவிட்ட தானுந் தொழிற்பட்டு—மூத்த
வினைப்படிக்கு மிச்சை வினைவின் படிக்கு
மனுபவிக்கும் வேலோ யனு. ௧௯.

கட்டளைக்கலித்துறை.

அணுவான சீவன் பிராரத்து வத்தை யநுபவிக்குங்
குணமேமற்ற போதங்க ளாகாமி யத்தையுங் கூட்டுமிது
மணமாலைப் புல்கு பவன்வேறு மாது மருவலொக்கு
முணர்வோது கந்த ரநுபூதி யத்தனெஞ் சுற்றபொன்னே.

---

* தேவையொன்று மின்றென்றது, ஆணவ அழுக்குடைய சீவனுக்கு நினைவெழுந்தவுடன் யாதொன்றை யிச்சித்தல் சகசம். அது நிமித்தங் கர்த்தாவானவர் தமது நிறைவான ஞானவியாபகத்தை யச்சீவனது ஹிர்தயகருவியின்கண்மட்டும் இல்லாது செய்ய வேண்டுமென்றலும், ஞானத்தாலன்றி யவ்வழுக்கொழியாததால் அவ்வுணர்வைச் சீவனுக்குச் சேரவொட்டாது செய்யவேண்டுமென்றலும் அனுவசியமென்றாம்.

# கந்தரொருபாவொருபஃது.

## கட்டளைக்கலித்துறை.

உலக மியாவுந் தொழுவுள வாதி யொருவனென்னு
நலமலி கந்த சுரேசுர நீயுநின் னல்லறிவி
னிலவு முறழ்வுயிர்க் கூட்ட முநின்னுற் றெழிற்படுமா
பலமலி பாசமு நித்தமென் றேமறை பன்னுமன்றே. ௧.

பன்னு மறைகளுக் கெட்டா வருட்பெரும் பாவகியே
மன்னொரு நீதங்கஞ் சீவன்செம் பச்செம்பின் மல்குகளிம்
பென்ன விருப்பது பாசமென் றேர்நூ லியம்புமுண்மை
தன்னை யுணர்ந்துனை யேத்துவர் காணல்ல சற்சனரே. ௨.

சற்சங்க நாளும் படனஞ்செய் தந்திரஞ் சாற்றுவது
துற்சங்க நீதத பசுவெனுஞ் செப்பின் றுருசொழித்து
நற்செம்ப தாக்கிப்பொன் னயவுன் னேடயி னயகனி
நிற்சங்க மாக்கிக் கொளன்முத்தி யென்று நிசாநந்தனே.

நிசமறி யார்பர னென்னுகிற் பாச நிலையழிந்தே
யுசித முறுதோ ளெனப்புகன் றுன்னைவிட் டோய்வரக
நசிய வடக்கிநின் கண்ணின்று தஞ்செய னந்தியபின்
பிசியிலின் பாமென் றறியாது வேலைப் பிடித்தவனே, ௪.

பிடித்த பிடியை விடாவயி ராக்கியம் பெற்றவர்க்கு
ணடிக்கு முருகா வணுக்கண் மலத்தை நசித்தமுதங்
குடிக்க வருள வெனவே தினமுங் குறுக்கமற்ற
கடிக்கரு மங்களோ ரைந்தையுஞ் செய்வாய் கரிசின்றியே.

கரிசற்ற சேய்நிற் கணித்தா லுயிர்த்தொகை யின்கணக்கும்
பரிவுற் றுரைத்திட லாமென்று தேரும் பலமிறந்தோர

புரிவுற்ற யாவுங் ககதிபெற்ற பின்னர்ப் புரியுமைந்து
பிரிவுற்ற காரிய மேதென்று வாதித்துப் பேசுவரே. ௬

பேசா மவுனச் சிவனே குகனே பெரியவருன்
றேசோ மயத்தை யுறுமுயிர்ச் சத்தி செகமுகம்விட்
டோசால வுண்முக மாயின்ப முண்பதி னீடிலுன்னற்
றேசேறு காரிய மோரைந்துஞ் சத்தெனத் தேறுவரே. ௭

தேறுந் தெளிவைக் கொடுத்தென்னை யாளுந் திருமுருகா
வேறுமு னிச்சையென் சத்தியு ஞானமு மேண்டொழிலு
மாறு முயிர்க்கில யேலது சேதன மாண்பவித்துக்
கூறு மசேதன மாயிருத் தற்கையங் கோளிலையே. ௮

கோளற்ற நின்ற னருட்சத்தி யாதோர் குணவுயிரி
ளூற்ற நெஞ்சுட் பதிந்துநற் பக்குவ மாயதின்மேற்
கேளுற்ற நீவந்து கோடலுண் டென்னக் கெழுதகையுன்
றாளுற்ற தொண்டர்கள் சான்று பராபர சண்முகனே. ௯

சண்முக நிச்சய மோர்ந்து திருப்புகழ் சாற்றினவன்
றெண்மதி யோங்க விழைத்த குகாநெடுந் தீயவினை
கண்மடித் தாளரு டான்பதி வானெனக் கருளுமெல்லு
முண்முகத் துன்னைவைத் தேநிற்ப ரன்ப ருலகிலன்றே. ௧௦

---

## ம ன து.

கலிவிருத்தம். பண் - நட்டபாடை.

உலகம்புகழ் கலைமாமக ளுரியோனெனும் வேதா
சொலுமம்பிர ணவவொண்பொருள் சொனவீச விராயா
கலகஞ்செயெ னகமென்பது கரையும்படி புரிசூர்
தொலையும்படி யருளென்றுசொல் சுகமேவுவை மனதே. ௧.

சாராருப ரேழத்திரி தகரத்தவ மேசெய்
யோரேழிரு டிக்குந்தலை யுடையப்புனல் பெருகக்
கூராரயில் வேல்விட்டிடு குமரேசன தீரம்
வாராவிடி னுமுய்யவொர் வழியேதுசொன் மனதே. உ.

அண்ணாமலை வழியிற்பணை யருகிற்புன லிலையென்
றெண்ணுந்திற னோர்ந்தேயயி லேவித்தெளி வாய
தண்ணாருயர் நன்னீரலை தாவப்புன றந்த
வண்ணாவருள் புரியாயென வறையாயளி மனதே. ௩.

ஏகாதச வேணோர்பதி னொருகைப்படை யாயும்
வாகார்கர மொன்றிற்சிவ வலிதானயி லாயுஞ்
சாகாவரு ளுருவாயும் விளங்கச்சுடர் தனியை
வாகாவென வேத்தாயருள் வழிநாடிய மனதே. ௪.

தாவுங்கயல் விழிவள்ளி தனதுண்மை பொருந்தக்
காவிஞ்சிய வனவேடர்கள் கறுவிக்கலி தருகாற்
கூவும்படி சரணாயுதம் விளித்தேயடல் கொண்டோய்
வாவென்றுசொல் வாழ்வாயருள் வழிநாடிய மனதே. ரு.

தேவென்பவை யாவும்புகழ் சிவசம்புவு முமையு
மேவுங்கயி லாயந்தனின் மிளிருங்கொலு விடையே
தூவிண்சுரர் பரவும்படி சுடருங்குமரேசா
வாவென்றுசொல் வாழ்வாயருள் வழிநாடிய மனதே. சா.

முன்னைத்தவ முற்றுப்பெற மொய்ம்பேறசு ரேச
னென்னப்புவி வந்துன்றனெ டிகலிக்கொலை யயிலாற்
கன்னற்சடம் வகிருண்டு கலாபந்துன நின்றுன்
றன்னைக்கொளு முருகாவரு டாவென்றழு மனதே. எ.

முருகாவரி மருகாவெனே முழுதுங்கொள வுளவோர்
குருவேபுக லினிவேறிலை கூகாவென வுறவோ

ருநிகையழு முனமைபுன தடியேபெற வருளாம்
பொருளீயென வுபர்வந்தனை புரியாயினி மனமே. அ.

தென்றனுவி லென்றும்வதி சிந்தாவுறி வாளன்
மன்றுடி வணங்கும்பெரு மானைமுரு கோனை
யென்றனுடை யென்றனுடை யென்றேவிசு வாசித்
தொன்றுநில கூடும்படி யுயர்வாயினி மனமே. சு.

ஆசைதுமி லாநின்னுடை யநுபூதி யடைந்தே
தேசோடுன தடிமையவர் தெருளாரரு ணகிரி
யாசானென மிளிர்தாரக வரசேயெனை யாளென்
றோசாதனை புரியாயினி யெய்தாய்துயர் மனமே. க0.

---

# எழிலார்சுரும்பு.

---

## எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

எழிலார் சுரும்பு கிளரோதி வாணி யிறைவன் படைக்கு முலகிற்
பழிபாவ வஞ்ச மிகவே புரிந்து படுபாவி யாகி நிதமு
மழல்வீசு கும்பி யிடையாகம் வெந்து கவலா திருக்க வருளாய்
பொழிவார் கதம்ப விரைவீ யலங்கல் புனையந்த காரி பொருளே. க.

சிவபால பைம்பொன் முடியாறு மன்னு சிகரங்கண்மின்னுமெழிலுந்
துவர்வாய் துலங்கு முகமாறு மன்பு சொரிபன்னி ரண்டு விழியுஞ்
சுவவாளு மும்பர் பகைகாது மேநி சுடர்பன்னி ரண்டு கரமுந்
தவவாழ்வு பொங்க வவிர்தாளு நன்கு தரிசிப்ப தென்று தமியேன்.

பனியே கிளர்ந்த புவிமீது பொங்கு பசியான் மடந்தை மயலா
லநியாய மென்னும் வழிநேடி நின்றெ னறிவே யிழந்து கெடவோ
வுனைநா னினைந்து தொழுதே னகண்ட வுணர்வா யியங்கு குகனே
கனிவாய் திறந்து வருகென்று கூறு ரைவயென்று காது புகுமோ.

கலைவாணி பத்தி மையோடே பழிச்சு கழல்வெற்பு மங்கை யுடைய
முலையி மகிழ்ச்சி யமுதங் குடித்த முளைய செழித்த பழநி
மலைமீ திருக்கு மழகா வழுக்கின் மனது டிருக்கு மனகா
வுலைவாயி விட்ட மெழுகா யிருக்கு மெனை நீ யுகப்ப தெஙனே. ௪.

நிலையாய வைம மெனவோது ஞான நிருவாண மேவ நினது
நலியாத பாத மதைநாடி நாடி நலமேது மின்றென் மனது
மலையோர முய்யு மறவேடர் கையின் மறிபோன் மயங்கு கிறதே
கலிகீழ் தயாள மிதுவோ கெடாவொர் கனிய குமார முனியே. ௫.

சடியே றரத்த மெழினீலம் வைத்த சவிரை மிக்க மிலைவேட்
செடிசே ரமித்ரர் பகைவா வுருத்ரர் சிறவா சுவர்க்க நிறைவா
படியா நிலத்தின் மலைபோ லளப்பில் பவமே யமழுங்க வெனபோ
வடிவான மக்க ளுருமேவி நிற்கு மகனோநி நிற்ப வெங்ஙனே. ௬.

துடிடுண்டு டுண்டு டுடுடுண்டு டுண்டு தொகுதொந்த மென்று முரலச்
சுடுகண்ட நின்று நடனஞ்செய் நம்பர் சுதனென்று வந்த பெரியோ
யடிகண்டு கொண்ட வருளன்பர் சொந்த மனுவும் பெறாத சிறியே
னடிவன் கணின்று வருமொய்ம்பர் முன்பெனவல் வென் விளம்பய ௭.

உன்மீது வைத்த நினைவான பற்றை யொருபோது மாற்ற நினையே
னென்மீது வைத்த புரிவாமு னட்பு மிடையா திருக்க வொருகா
லென்மீது பட்ச மிலியா யெனைப்பெ ரிதுநீ மறக்க வரினு
முன்மீது குற்ற முனாயே னெனக்கு ளுணர்வாக வுற்ற குகனே. ௮.

பதிஞான மின்றி யொழியாது சன்ம நிழலென் றுணர்ந்த பரிவோர்
மதியார்க ளிந்த நிலவாழ்வை யென்றன் மடமோக மிஞ்சு மதிதா
னிதியேது மின்றி யிதிபோல வந்த விழிவே விரும்பு கிறதால்
பதியாக வந்தி னருளே புரிந்து னடியி குமார பரனே. ௯.

கரியா நநத்த னிளையோ னெனத்தி கழுமேச கத்து ஞமலிப்
பரியோ யுனைப்பி லருளா னினைத்த படியே சுகிக்க வருண
கிரியார் தமக்கு நெடுவாழ் வளித்த கிருபாளு நித்த நினையே
பிரியாத நட்பி லடியேனை வைத்த பெரியோ யணைத்து மருளே.

---

## திருநிறைந்த சிவம்.

### (அந்தாதி.)

#### கலிவிருத்தம்.

திருநி றைந்த சிவம்பிர மம்பர
மருணி றைந்த வதீதன் பராபரன்
குருநி றைந்த குகன்சம்பு வென்புன
பொருளொன் றுய்ப்பொலி வுற்று நிலாவுமால். க.

நிலனி டத்தும்விண் கண்ணு நெருப்பிலு
முலவைக் கண்ணு முயிர்க்கண் சுடர்க்கணுஞ்
சலிலக் கண்ணு நிறைந்தநின் றன்மையை
யுலகிற் றேர்பவ ராருளை யின்றியே. உ.

இன்று னேரடி யேத்துதல் போலவே
யென்று நான்செய வேதமி லாவருட்
குன்றி லென்னைவை யாய்பகைக் கும்பெலாம்
வென்றி கொண்ட விறற்படை வீரனே. ௩.

வீர னேயடி யார்துயர் வீட்டுமா
தீர னேமறை தேடொரு தெய்வமே
யீர வேறன்னை யேவுதி யென்னுடைக்
கூர மான கொடும்பவக் காட்டிலே. ச

காட்டு வாய்சகம் யாவையுங் கையகஞ்
சூட்டு வாய்மிடி யோர்க்குந் தொகாமுடி,
யோட்டு வாய்நமன் றன்னையு முள்கெனை
யாட்டி ஞயிலை யாருநண் மேலைமேவ. ௫.

மேவு வோரறி மெய்ப்பொரு ளேனுநீ
தாவு ளேன்கணுஞ் சந்தத நின்றனை
பாவி நானறி யேனின்ன பண்பெனத்
தேவ னேயறி யுந்திறல் செய்தியால். ௬.

செய்கை யொன்று மிலாமனின் சேவடி
யெய்த நெஞ்ச மிகந்துன்னு மேவாரடி
பொய்ய னென்றறி சித்தன்று பூத்தபூக்
கொய்த ருச்சிப்ப தென்றருட் குன்றமே. ௭.

குன்ற வில்லி குமாரமுன் னணைநிங்
குன்றெ றிந்த குகாகொடுங் குற்சிதக்
குன்று பீறவுங் கூரயி லோச்சுதி
குன்ற வாணர் குரங்கயி லீசனே. ௮.

ஈசன் வாமத் தியங்குமை மைந்தநின்
னேசி லன்பர்கொன் னேகழிந் தாரெனக்
காசி னூல்கள் கதைத்திடக் கண்டிலேன்
றூச னேற்குஞ் சரண்டரல் வேண்டுமே. ௯.

வேண்டு வார்துன்பு வீட்டுநின் றுள்களுன்
வேண்டி வேண்டி விவேக மிலாமிடி
பூண்ட பாதக னாகிப் புலம்புநீ
ராண்ட நீயறி யாய்கொலெ னத்தனே. ௧௦.

அத்த மின்மனை யம்புவி யொக்கலும்
வித்தை யும்விவ காரமும் வேட்கையுஞ்

செத்தி டுஞ்செவ்வி யென்செயுந் தீதிலா
வத்த னேநின தன்பொன்று காக்குமே. ௧௧.

காக்கை யுண்ணுங் களேபரம் போலவி
னூக்கத் தாழொழி யாதரு ளூட்டியென்
னேக்கம் பூர்த்திசெய் வாயொரு நானமின்
மோக்க வேட்கையர் முன்னரு ளையனே. ௧௨.

ஐய னேயர சேயழ கார்மயில்
வைய மீதிவர் வானவ னேயருண்
மெய்ய னேவிறல் வேலவ னேவெறும்
பொய்ய னேற்கினிப் போக்கிட மெங்ஙனே. ௧௩.

எங்கு முன்பதி யெங்குமுன் னுள்சதா
வெங்கு முன்செய லாக விருந்துநா
னிங்கு வெந்துய ரேற்றிட லென்கொலோ
பொங்கெ ரிப்புழுப் போல வருந்தியே. ௧௪.

வருண வுற்பன்ன மங்குல் குழீஇன்
றுருமு கத்தி லளப்பின்றி யூற்றல்போ
லருண்மு கிற்றிர ளென்க ணுரைதம்
பரவி நின்று பனிப்பதெக் காலமே. ௧௫.

காலன் மூரி கடாவிக் கணிச்சிகொண்
டால மென்னவந் தாவியுங் கொள்வனோ
ஞாலத் தேயுனை நாளுங் குரங்கிடற்
சீல மேய சிவாநந்த வாழியே. ௧௬.

ஆழி சங்க மமர்ந்தகை யண்ணலு
நீழ லிண்டை நிலாவய னும்புக
ழேழை பங்க னிளஞ்சுத வென்றரால்
கீழ லென்றன்பர் கேள்கிள ராதியே. ௧௭.

ஆதி யந்த மிலாப்பர மார்த்தவொண்
சோதி யாயவன் சுத்த சுபாவத்தைப்
பேதை பெற்றன்றி பென்னொரு பேய்மன்
வாதை தீருங்கொ லோவைய வந்தருள். கஅ.

அருளி லாமனுக் குப்பை யெலாமுனைக்
கருத வுங்கருத் தொட்டுமோ கையுமுன்
றிருவு ளப்புரி வாற்றுதி செய்கிறே
னிருளி ரிப்பதென் றேவறி யேனரோ. கக.

அறிவி னுக்கறி வாயரு வானதுங்
குறிகு ணம்பல கூறுரு வானதும்
பொறிபொ லிந்துள பொன்னுல கானதுஞ்
செறிய ருட்சிறப் பன்றோ செழும்பொனே. உ0.

பொன்ன னந்தைபொன் பூண்மட வாணைச
தன்னை நாடி யழுஞ்சக சண்டியா
மென்னை நீயிரண் டின்றி வளாவுநா
ளின்னுந் தூரங்கொ லோவெங்க ளீசனே. உக.

ஈசற் கின்புள மைந்தவொ ரேதிலாத்
தாசற் கின்பரு டந்தை விடாவிசு
வாசத் தாலிங்கண் வாழ்த்திப் பராவுமென்
பாசக் கோளறப் பார்பர தெய்வமே. உஉ.

தெய்வ மென்பது சிந்தை யடங்கினோர்
மெய்வி ழிக்கு வெளிச்சமென் றூமது
பொய்யி னிற்பவர் புந்திக்கு மெட்டுங்கொ
லைய பொய்புழல் வேறுகென்னை யன்முமே. உங.

அண்ண லாரறி வாள ரவாமருட்
கண்ணே கண்மணி யேகரு ணாகர

விண்ணே விண்மணி யேயெனை மேவெனு
வுண்ணி லாவினண் ணேன்கொலோ வுண்மையே. உ௪.

உண்ணி குஞ்ச வுயிர்க்குயி ராயவென்
னண்ண லேயரு ளாநந்த வெள்ளமே
யெண்ண மோய்ந்த விடத்தி லிருக்கநான்
பண்ணும் பூசை பயிற்றலுன் பக்கமே. உ௫.

பக்க மற்றவ ரென்றுமிப் பாழுடல்
புக்கு வாழ்வதின் பென்பரப் புன்மையைப்
பொக்க மற்றவுன் பூரணங் கோடலே
தக்க தென்றெண்ணு நானினிச் சார்வனே. உ௬.

சார்வ காலமு முன்பெருந் தன்மையைச்
சேர்வ தாமொரு சின்மய வாதிக்கஞ்
சூர்ந ணுத சுகாநந்த மென்பதின்
பார்க லாவல்லோ ராரு மறிந்ததே. உ௭.

ஆரெ னக்கதை யன்பொடு மாக்குந
ராரெ னக்கதை யாகாது செய்குந
ராரெ னக்கதை யாக்குவோ ரென்றுநா
ளுளை நித்த மலட்டுகின் றேனரோ. உ௮.

அரனன் றூலின்கி ழுந்தணர் நால்வர்கட்
குரனு டோதாம லோதிய வுண்மையைப்
பிரமை யோடுணர் வோர்பெந்தப் பேறெலாந்
திரண மாநினை யார்கொனற் றெய்வமே. உ௯.

நற்ற மிழ்க்கலை நாதனென் போன்பரி
வுற்று வேண்டுமெய்ஞ் ஞான முணர்த்தியன்
றற்றந் தீர்த்தவ னேயரு ளானெனைப்
பெற்றி லேனின தன்பினைப் பெற்றுமே. ௩0.

பெற்ற தாயும் பிதாவும் வெறுப்பரா
வற்ற வேவ வுளுற்று திருந்தக்கா
விற்றை நான்செய்குற் றேவலை யின்னதென்
றற்ற மில்லோ யளித்தென்னை யாண்டுகொள். ௩௧.

கொண்ட கொள்கைக்கொ ருன மணைந்திடா
தண்டர் நாயக னேயரு ளாற்றினீ
யண்ட மெண்டிக்கு மாநிறை யாற்றலைக்
கண்டு ளங்களி கூர்வலென் கண்ணிலே. ௩௨.

கண்ணி லானருங் கல்விகற் றென்பயன்
றண்ணளீ ரென்றிடிற் றுக மடங்குமோ
விண்ணு மண்ணுந் தொழாகொனின் மேதகத்
தண்ண லம்பெறிற் றன்னிலை தன்னிலே. ௩௩.

தன்ன கந்தனிற் றன்னிசங் கண்டபின்
றன்னை வேறெனச் சாற்றவுந் தாவிலா
வுன்னைத் தானென வோதவு மொவ்வுமோ
வின்ன தென்றியம் பாததொன் றின்றரோ. ௩௪.

இன்றிவ் வாறுசொ லெண்மை யுளேனிலை
நின்று சாதித்து நெஞ்ச மொடுக்கிலேன்
பொன்றி டாதுபொன் றிக்கதி புக்குய்வா
னென்று வாலரு ணீட்டுவை யெந்தையே. ௩௫.

எந்தப் பூசனை செய்யினு மென்னுமுல்
சிந்தை யொன்று திடப்படிற் சித்தியென்
றந்த வேத மறைந்திட வில்லையோ
கந்த னேகரு ணைப்பிர காசமே. ௩௬.

காசி போந்தவ ருங்கறை செய்வரே
லாசி லாதபொன் னுடு மடைவர்கொ

லாசை யாம்புது வாகாமி யங்கெடி
னேசி லாச்சுக மெய்தறி வோங்குமே. ௬௭.

ஒங்க லோங்குஞ் சுரத்தழி யூண்டுயி
னீங்கி மேலவர் நிட்டை பொருந்தியும்
பாங்க ருத்தவம் பண்ணியு நிற்கிறார்
தீங்கி னேற்கொரு செய்கையு மில்லையே. ௬௮.

இல்லி னைத்துறந் தேகினு மென்மனத்
தொல்லை நீங்கினன் றேசுக மெய்துமஃ
தில்லை யேலங்கு மிட்டளந் தோன்றுமா
லொல்லை யெந்தை யொடுக்கென் மனத்தையே. ௬௯.

மனது கூம்பினிஞ் ஞால மறைந்துபோ
மெனும் விவேகமெற் கீந்தனை யின்னமு
மெனை மறந்தெனை யெய்த விழைத்தியா
லனக பூரண மானது வாய்க்கவே. ௪0.

வாய்க்கு மின்பென வாழ்த்துநி னன்பனை
யெய்க்கு மோவிவ் விருஞ்சக மாயையும்
பேய்க்கு ணஞ்செய்து பேதக வாசைதந்
தேய்க்க வுள்ளது மென்மன வல்கலே. ௪௧.

அல்லு மெல்லு மகத்தி லுனைப்பதித்
தல்ல லற்றம லாநந்த பூமியி
னெல்லை யைக்கண் டவர்க்கிங் கொருசெய
லில்லை யில்லை யெனச்சொலும் வேதமே. ௪உ.

வேதஞ் சொற்றது மெய்புறழ் வேயதைப்
போத மற்றவென் புன்மன தாற்பெறற்
கேது மற்றவ னென்றறி வாய்நவில்
வேத முந்துணை கூறு விசாலமே. ௪௩.

விசுவ வின்பினும் விண்ணுல கின்பினு
முசித மாவ தொருங்குப கன்மமும்
விசம மாக விடுத்தரு ணிட்டையே
நசைஇ நின்னடி நாடி நிலைப்பதே. ௪௪.

நிலைநி லாமை நினைந்துதிப் பஞ்சியே
குலைகு லைந்தா குலிக்கின்ற துள்ளமென்
றலைவ னீயிருந் துந்தமி யேனின
மலைய லாமோ வருட்குரு நாதனே. ௪௫.

நாத னேயுனை நாடி யிருக்கையிற்
சீத வேந்தனைச் சேண்புயன் மூடல்போற்
றீதெ லாம்வந்து சிந்தைமொய்க் கின்றவே
நீத மில்லையோ நின்னர சில்லரோ. ௪௬.

அரச னுக்கடங் காக்குடி யேய்ப்பவென்
னிருத யத்திற் கிணங்கி நிலாக்கொடுங்
கரவு நெஞ்சமுங் கண்ணுங்கொ லோநினைப்
பரம னேயருள் பாலிக்க வேண்டுமால். ௪௭.

வேண்டி யன்றோ விசாலப் பவக்கட
றாண்டிக் கண்டார் சதாநந்த ஞானிக
ளாண்ட நீயென்க ணண்புவைத் தாலதைக்
காண்டல் கக்கிஷ மோகருத் தொத்தரோ. ௪௮.

ஒத்த நீர்மை யுறுதவர் தம்மனம்
பெத்தத் தானுரு வாமெய் பிறங்குயிர்
முத்த ருக்கரு வாம்பர முத்தருக்
கத்த வுன்னரு ளாலவை யில்லையே. ௪௯.

இல்லா னென்னறி வில்லாத பேதைபோ
னில்லா துன்னடி நேயத்தில் வைத்தரு

ளல்ல நீர்த்தரு ணைப்பெய ரான்சொலுஞ்
சொல்லிற் காசைகொ டுத்திருத் தோன்றலே. ௫௦.

## இந்துமிலைந்தோன்.

கட்டளைக்கலித்துறை.

இந்து மிலைந்தோன் புரஞ்செறுத் தான்வளை யேந்துநல்வை
குந்த னிலங்கையர் கோன்சினந் தானறுங் கோலமலி
யிந்திர னீடார் வலன்செறுத் தானரு ளேமிகுந்த
கந்தன் றெழும்பர் துயர்செறுத் தான்சர்வ காலமுமே. க.

வேளைச்செம் பொற்கழ லன்பர்செந் தேனை விமலைகொஞ்சுங்
காளைக் குமரனைக் கந்தன் குகனென் கலைவலனை
வாளைப் பொருவிழி வள்ளி யவாவி மருவுநறுந்
தோளொப் பிலியைத் துதிக்குநர்க் காநந்தந் தோன்றிடுமே.

*குரவன் குரத்தி கொழுநனி னன்னை கொழுநன்†முதன்
மருக னுடைத்திருத் தாதையை வேட்டொரு மாகுரத்தி
மருகி யெனுங்குறத் திக்கடங் காநசை வைத்தினிய
பரிவுற்று நின்ற குறவனைத் தேவென்ப பண்ணவரே. ௩.

அந்தே னிருக்குங் குரற்காம தேவியு மாசைகொள்ளும்
பந்தார் குயத்தியொண் டெய்வானை வள்ளி பதியெனதிர்
வந்தாள வேண்டு மியாணர் வினைகளின் வாய்க்குமருஞ்
சந்தான வாழ்வு நிகராகு மோவெனத் தானிங்ஙனே. ௪.

படைத்துப் படைத்துச் சலித்ததின் றெண்கணன் பந்துரக்கை
தொடுத்துத் தொடுத்துச் சலித்ததின் றூலத் தொடைமதன்கை

---

* குரவன் குரத்தி=பிரமாவின் றலைவியாகிய சரச்சுவதி.

† முதன்மருகன்=விக்கினேச்சுரன்.

கெடுத்துக் கெடுத்துச் சலித்ததின் றேமன்கை கேட்பவர்க்குக்
கொடுத்துக் கொடுத்துச் சலித்ததின் றன்கை குகேச்சுரனே.

ஆசைப் பெருக்குடை யாழியி லாழ்ந்தி யனுரதமும்
பூசைக்கிணக்கமின் றேவல்கொள் பாழ்த்த புலைமனத்தின்
மாசைக் கடிந்தினி மாறுப் பெருங்களி வவ்வுதற்கு
நீசற் கிரங்குத லெக்காலம் வேல்பற்றி நின்றவனே. சு.

பேரின்ப நூல்கற்றுப் பேதையர் மோகம் பிடித்தவர்கட்
பார்வை வலையி லகப்பட்ட கோலங்கள் பார்த்தவர்முன்
பாரதைச் செய்தவர் நாமிலஞ் செய்தவ னுடையான்
சார்புடை யீரறி வீரென்பர் விணர்கள் சண்முகனே. எ.

விட்டி லிருக்கும் விளக்கைவிட் டேவெளி யேநெருப்புக்
கேட்டுத் திரியு மதியிலி போலுனைக் கீழ்நிலைமேயார்
நாட்டிற் கருது கிறுரந்த நாட்டமெ னட்டங்கொலோ
பாட்டிற் புகழரு ளைப்பெய ரோற்குற்ற பண்ணவனே. அ.

---

## கந்தர் திருவாரம்.

கலிவிருத்தம். பண் - இந்தளம்.

கபமா முகனவன் கரனுர் துணைவா
வுயர்சீர் விடையே றுமையா டனயா
தயவா யருளே தரவா தணியா
நயமா னசுகோ தயநா னுறவே. க.

அடிநா முடியின் றழியா வெளியாய்
மடியா வுருவாய் மறைநா யகமாய்
வடிவே லரசா வளர்வா கையனே
யடியே னிறையா யருடந் தருளே. உ.

இரவும் பகலு மெளியே னுரியோர்
பரவுங் கழலைப் பணியும் படிநல்
லருடந் திடுவா யகிலந் தொழுவே
வருமஞ் சிகியில் வரும்வா னவனே. ௩.

அசுரர்க் கிறையீ டழியப் பணிவாழ்
நிசிதக் கரவே னிலவத் தமியேன்
கசிவுற் றசொன்மா லைகணித் தணிவா
னுசிதத் தொடுவந் தருளுந் தமனே. ௪.

தேவா வுனைநா டியபின் றினையின்
மூவா சைகெடும் படியான் மொழியும்
பாவா வனசெம் பயனும் வணமான்
மேவா தருளாய் மிடல்வே லவனே. ௫.

பாவக் கடலிற் படியோ ருயிர்தா
ணுவிற் பெயர்மந் திரமே நவிலிற்
றேவர்க் கருமா டுறுமே சிறியேன்
பாவிற் கருளா தெனைபா வகியே. ௬.

பெண்ணா கியபே யெனைவந் துபெரும்
புண்ணா கியநீர் பொசியுங் குழியின்
கண்ணே தளுமோ கழல்கொண் டபினும்
விண்ணா டர்பரா விகல்வே லரசே. ௭.

எல்லா மதமுங் கனாகண் டிடநீ
வல்லாண் மைபுரந் தலர்வா ளிமதன்
பொல்லா மயலிற் புகவே புரிநீ
ருல்லா சமகா குகனே யுனையே. ௮.

காமக் கனலிற் கருகுந் தமியேன்
சாமிக் கடிமைப் படவுந் தரமோ

பூமிக் குளுணைப் புகழ்வோ னையரும்
பூமிக் குள்விடும் பொருவே லிறையே, ௯.

இச்சைக் கடிமைப் படுமென் னுழையுன்
செச்சைச் சரணந் திகழும் படியுண்
மெச்சித் தகவீ திகெடா விறல்சால்
பச்சைப் பரிமேல் வருமெம் பரனே. ௧௦.

இரவும் பகலும் பிரியா வெனுடை
பரசே யிதுகா ளஞர்நா னுறவென்
றொருதே வுளதோ வுனையன் றபரத்
தெரியே னெளியேன் மயிலூர் சிவனே. ௧௧.

மனதா ரவெனுன் மயிலூர் குககோந்
தனையா டியதின் றிலமுன் றளையாம்
வினைவா தனைவந் தெனைமே யினதாற்
றுனவாய் முடியத் தருவாய் கரமே. ௧௨.

மையார் கலிசூழ் மகிநின் னொருவி
நொய்யே னுயுமா றுளதோ நுவலாய்
பெய்யா ரடியார் விழையஞ் சாறு
துய்யா முருகா சுபசோ பனனே. ௧௩.

ஒளிரே யனுளமிங் கெதிலென் பனைநீ
தெளிவா யறிவாய் சிறியே னிதயங்
களிகூ ரருள்கூ ரவெனுய் கழுதுண்
ணளிநீ பமிகப் புனையம் பரனே. ௧௪.

எந்தா வெளியே னிகலா மிடரா
னேந்தேன் மிகமே னுதிசே ரருடான்
றந்தா ணெடுவாழ் வுடையந் தரியின்
மைந்தா குமரா வடிவே லவனே. ௧௫.

நிலைமே னினையே நினையா துவயா
வலைவோ ரெவரோ வவர்தா மவிவார்
பலநா ணினையே படர்நா னுமிவண்
வலைமீ னெனவா தலைன்வேன் மனனே. க௬.

தரையோர் புகழும் படிதந் திரமாப்
புரிவோர் புணியம் பலியா ததுபோற்
றரைமீ நினையே கருதுந் தவமும்
விரைவா யிறுமோ மிளிர்வேன் மனனே. க௭.

பணியா பரணன் மகிழும் படிநீ
திணிஞா னநிசஞ் சொனதீர் வையிறை
லணிமா தியருந் தொழினின் றுமதே
துணிபா குமனு மயதூ யவனே. க௮.

சன்மப் பிணியைத் தணியச் செயுமுன்
னன்மைத் தயவா மமிழ்தத் தினைநான்
றின்னப் பணியாய் திருவாழ் குறமின்
றன்னைத் தழுவுந் தனிநா யகனே. க௯.

வாசங் கமழ்பா தருகா மறவா
நேசம் பணியுண் ணிறைபே ருணர்வின்
றேசந் திகழச் சிவயோ கமதைத்
தாசன் பெறுவா னருள்சந் ததமே. உ0.

கானங் குறமா திதழ்மா கனியின்
றேனுண் டருகா குழகா தெருளோர்
கோனென் றுளவே லவனே குயிறைன்
ஞானம் பெறவோர் நடனம் புரியே. உக.

ஆதா ரவுனு டணவென் றனைமே
லாதா நிலைநின் றிடமு டருளைத்

தாதா வெனவே தனிவா துசெயும்
போதோ வருள்வாய் பொருவே லிறையே. உஉ.

வித்தைத் திறமே துமிலா மிடியேன்
கத்திக் கதறிக் கழல்பா டவருள்
வைத்தெற் குணர்வா யதுபோன் மறையாச்
சித்திற் குளும்வைத் தருள்சே யவனே. உ௩.

தருவார் தருவார் சரணங் களையென்
திருபா தமிறைஞ் சிடுவோர் புலவா
முருமே வுவரோ வுயர்வீ டிலராத்
திருமான் மருகா சிவசே யவனே. உ௪.

முகமொன் றுமைமுன் முகமொன் றருண்முன்
முகமொன் றமர்முன் முகமொன் றுளிமுன்
முகமொன் றிருநங் கையர்மா முகமுன்
முகமொன் றடியார் முனநின் றிடுமே. உ௫.

முகமொன் றுயர்விண் முகமொன் றெருகீழ்
முகமொன் றுதெறு தொருமா முகமேன்
முகமொன் றுவடா ததமோர் முகமென்
முகநின் றருள்சண் முகவற் குளமே. உ௬.

சுரம்விண் டுநிலங் களினுந் தொழுவோ
ருரனெவ் வணமவ் வணநின் றுதவுங்
கரமுஞ் சிரமும் பலவே கருள்போ
மூரன்மைந் தனெனுங் குகனுக் கறிவே. உ௭.

ஈசன் குணமெண் குணமென் றிறைநூல்
பேசெண் குணமும் பிரியா விறையோ
னைசஞ் சனனஞ் சனைநா குமிலாத்
தேசந் திகழ்சண் முகதே வுளமே. உ௮.

தவமே நிமிருட் சமயந் தனிலூஉ
மவமே பயின்மற் றதிலும் பொதுவா
யெவனின் றுளனோ வவனே யெனையாள்
சிவனென் றறையுஞ் சிவசண் முகனே. உ௯.

நாவன் மையுளோர் நவிலெண் ணறுமாப்
பாவண் மையினும் படியா தவனுய்க்
காவென் பவர்தந் துயரங் கடியெந்
தேவென் றுளனே லவனே சிவனே. ௩0.

சீர்வே தகுலன் றிருநா விறையோ
னாரூ ரனரு வருள்வா தவுரா
னாரார் தமிழின் பறியா தியிரு
ளூர்வா னவனே யொருசே யவனே. ௩௧.

திருமா லயனென் டிசைநின் றுளருஞ்
செருவா னவருஞ் சிவசங் கரனு
ருருவென் றுணர்வோ ரறிவா யொளிரு
மொருகந் தபிரா னுயிர்நா யகனே. ௩௨.

காலுஞ் சிலையுங் கலிசா றனுவுஞ்
சீலந் திமிர்தஞ் சிரமீ திடுவோர்
கோலங் களுணர்ந் துளமே குளிர்வோன்
பாலன் குமரன் பதமே கதியே. ௩௩.

ஆதா ரபிரா னருணா டுநர்கட்
கோதா மொழியா லுபதே சமருண்
மீதா னபரா பரவே லவனே
நீதா னெறியாய் நினையாய் மனனே. ௩௪.

ஆலா சியமான் மியவா டலெலாம்
வாலா மையின்மா வளஞா னகிரிப்

பாலோ ரிறைகா ணவெனப் பணிவேனே
காலா யுதகே தனபுங் கவனே. ௩௫.

கோன் சுகனோ் கிளரொள் ளருணைப்
பேரன் குகன்வி ணவரன் பிரமன்
சூரன் முசுமா முகனீள் சுகமே
சேரும் படிசெய் பவனென் சிவனே. ௩௬.

## அவனியாசை.

கட்டளைக்கலிப்பா.

அவனி யாசை யெலாஞ்சிக லென்றரு
வன்புக் காணே ரடித்துணை காண்டலென்
றிவரு நெஞ்சசை யாநிலை நிற்பதென்
றெங்கு நின்னன்ப ருகை வுலாவலென்
றுவமை யற்ற சிவாநந்த வெள்ளமே
யுண்மை யாய பரம்பொரு ளேயிருங்
கவலை நூறிறு மாப்பளித் தாளுமெங்
கர்த்த னேகந்த மாதன மூர்த்தியே. க.

நாசி நாவிழி காதுட லைந்தையு
ஞால நாடாம லேதடை செய்யினு
மாசை யாலகக் கண்ணுழல் பேய்மன
மனைநொ டிப்பொழு தேனு மடங்குமோ
தேசி கன்றய வொன்றுள தேலது
செவ்வ னேயடங் கித்துணை யாமலாற்
காசி கண்டவர்க் கும்பகை யாகுமே
கர்த்த னேகந்த மாதன மூர்த்தியே. உ.

பாவிற் றுண்பவர் போலநில் லாமனுன்
பாத மேபுக ழுந்தனி யேனுனை
மேவிக் கொள்ளும்விர்த் தாந்தமெ லாநுவல்
வேத நூல்பல வாய விளம்பவென்
னுவிக் குச்சரி யாவுள நன்முனி
யாண்டி யாபிள்ளை யைப்பிரிந் திங்கணே
காவுற் றுத்திரி யும்படி யாயினேன்
கர்த்த னேகந்த மாதன மூர்த்தியே. ௩.

வாட்ட டங்கண் மடந்தைய ரல்குலா
மண்ட பத்துறை மாமத வேண்முக
வாட்டங் கொண்டெனக் கஞ்சுவ தென்றுழன்
மனமி லாதகப் பார்வையி னிற்குமோர்
நாட்ட மாகி நிராலம்ப விண்ணிலே
நானி றந்துநின் றுய்வதென் றம்மையார்
கோட்டு ரோருக வள்ளிக்குங் குஞ்சரக்
கோதைக் குங்கிடைத் துள்ளநற் கொண்கனே. ௪.

காவி யங்க ணிளம்பிடி யார்களின்
காம வேட்கை யெலாமிங்க ணேபச்சை
நாவி யாகிபு னல்லருண் மங்கையை
நாடி யின்புறற் கென்றருள் வாயெனக்
கூவி யேத்த விதித்த சுரேசனே
கோளர் கையி லெனைப்பிடித் தேகொடுத்
தாவி சாம்பி யவத்தைகொள் வானெனை
யாக்குங் காரண நானறி யேனரோ. ௫.

அந்த கார விலாச வுடம்புடை
யந்த கன்வந் தலைத்துயிர் கொண்டபின்

பந்த னுப்பட் கிடத்தி வயாவுடைப்
  பந்து கூடி யழாவொரு வாழ்வுறச் ,
சிந்தை யானதை நின்பதப் போதிலே
  சேர வைத்தனை யேதுதி செய்திடுஞ்
சொந்தக் காரனு மாயபின் பென்றனைச்
  சோதிக் கின்றதென் னேகுக தெய்வமே. ௬.

இம்மை யிற்சுகந் தந்ததின் மேலுமே
  லிடத்தில் வைக்கும் விருப்பொரு ளாயவுன்
செம்மை சேர்திருத் தாள்களைச் சந்ததஞ்
  சிந்தித் துக்கரங் கூப்பென் கரங்களாற்
றம்மை யேபெரி தாப்புகழ் வீணரில்
  சார்ந்து கும்பிடச் செய்தவென் புன்மையை
விம்மு நானே நினைத்து நகைக்கிறேன்
  வேதன் விண்டு தொழுங்கும ரேசனே. ௭.

என்னுற் பன்னமுவ் வாறிரண் டாண்டெனு
  விங்கு ளோருகித் தோது கிறாதி
னுன்னைச் சூழ்ந்தவெ லாமேழின் மேலிலே
  யுற்ற வேழினு முட்கவ லின்றிநின்
றன்னை நாடிய வாண்டொரு நான்கரோ
  சங்க டங்கொண்ட வாண்டொரு மூன்றரோ
வின்னு மென்விளை வாமோ வறிந்திலே
  னெந்தை யேசெந்தில் வாழ்கும ரேசனே. ௮.

கலியுகம் ௪௯௮௬. ல்
காரண௵ [illegible].

பன்றி யொன்றக னேமியைத் தோண்டவும்
  பறவை யொன்றகல் வானிற் பறக்கவு
நின்ற முக்க ணுடைப்பெரு மானுடை
  நித்தி யாநந்த மைந்தவிங் குன்றனை

யன்றி வேறோர் துணையெனக் கில்லையே
ஐயனே நம்பினேனை நீ கைவிடா
வென்ற சொல்லும்பொய் யாகுங் கொலோவிடா
வீரம் வைத்தின்ப மேகொளச் செய்தியே. ௯.

வெண்ட லைக்கைய ராடறக் காட்டழல்
விவர்ண மாயையைச் சுட்டடக் குந்தரந்
தொண்ட னேன்கண் டகங்களி கூர்ந்துனைத்
தொழுமெ னதுரு வைத்தெரிந் தங்ஙனே
கண்டிடுந்தெளி வாலுன் னருட்பிர
காசத் தோடுங் கலந்துய்ய வேண்டுமோ
லண்ட வாண வணுமலைப் பேருடை
யானை யாளறு மாமுகத் தெய்வமே. ௧௦.

---

## பகலெல்லாம்.

---

### நேரிசைவெண்பா.

பகலெல்லா முள்ளிநெடும் பள்ளிகொளுஞ் செவ்வி
யகலமறந் தாலின்னு மந்தோ—புகல்வேறே
யேதுநினை விட்டானு னெப்படியா ளாயிடுவேன்
வேதமுரு கா நீ விளம்பு. ௧.

பாடுவே னின்னைப் படிப்பேனுன் மார்க்கமுறை
சூடுவே னின்னடியென் *றொங்கன்முடி—நாடிச்

* தொங்கன்முடி இச்சீர், நேர்நேர் நிரையென அலகிட்டுத் தேமாங்கனியெனக் கோடலொழிந்து—க - மு இரண்டிற்கும் இடையிலுள்ள னகரவொற்றை நீக்கி நேர் நிரை நேரென அலகிட்டுக் கூவிளங்காயெனக் கோடல்வேண்டும். ஏனெனின், வெண்

சருவதா காலமுஞ் சண்முககா வென்பே
னிருதயா நந்தமளி யே. ௨.

கொன்றுதின் றேன்சிலநாட் கொல்லாதுண் டேன்சிலநா
ளின்றுவிட் டேனினிமே லில்லையே—மன்றிலுறை
யாட்டுக்கா லோன்முருக னருக ஞானவழி
காட்டித்தா மூமலெனைக் கா. ௩.

சும்மா கிடந்தவெனைத் தூண்டிவிட் டுன்னுன்னுஞ்
செம்மாரி னைய்திரிதுற் சிலம்போ—விம்மகியின்
மம்மரார் வத்துழல வைத்தகதெற் காவமரர்
பெம்மானை யெம்மானை பேசு. ௪.

---

பாவிற் கனிச்சீர் வரலாமென்னும் ஒத்தில்லாமையால். இவ்வா றிடைநிற்கும் ஒற்றொழித்து வெண்சீராகக் கொளவேண்டுமெனு நியாயத்திற்காக அடியார்க்கெளியனெனத் தொடங்குமொரு வெண்பாவில் தனிச்சீர் "படியின்மிசை" எனநிற்க ஸ்ரீமந் நடராஜப் பெருமா னருளினதையு முணர்வதோடு "சொல்லாரும் வல்லின மெல்லின மோடிடை தோன்றுமொற்று—நில்லாது நேர்நிரை நேராய் முடியு நிரம்பியநூற்—கல்லாத மாந்தர்க டேமாங்கனி யென்பர் கற்றுணர்ந்த—நல்லார்கள் யாவருங் கூவிளங் காயென நாட்டுவரே." என்ற விதியையுமுணர்க. யாப்பருங்கலக் காரிகைக் கட்டளைக்கலித்துறைகளி னடிகளி னீற்றில் "ஞானத்துமே" "நிகரில்வெள்ளை" எனக் கனிச்சீர்போலும் பூச்சீர்போலுங் காணப்படுபவைகளையும், வேறுநூல்களில் இவ்வாறு காணப்படுபவைகளையும் இவ்விதியாற் காய்ச்சீரெனவே யெழுத்தளவுபொருந்தக் கோடன் மரபு. இந்நூலுள் இவ்வொரு செய்யுட்கண்மாத்திரம் "தொங்கன்முடி" என நூலாசிரியர் வருவித்தகருத்து வெண்பாவிலும் இப்படி யொருவிதி ஏகதேச மங்கீகரிக்கப்படுமென்பதைப் பிறர்க்கு விளக்கும்பொருட்டேயாம். மேல்விதி கட்டளைக்கலித்துறைகட்குப் பெரும்பாலு மங்கீகாரமாம்.

முருகனருள் கொண்டுள்ளார் மூர்க்கரயர் துன்பிற்
கொருபோது மஞ்சியுற வாகா—ரெரிமீது
குப்பையினந் தாலழிவு கொண்டிடுமல் லானெஞ்சே
நட்பாவ துண்டோ நவில். ரு.

சொன்னாற் பிறப்பொழியுஞ் சூராய கூற்றகனு
மெந்நாளும் பேரின்ப மெய்துநெஞ்சே—முன்னாட்
பொருசூரன் வல்லுடம்பு போழ்ந்தவயி லேந்து
முருகவே யென்னு மொழி. சு.

பொல்லாத நெஞ்சே புரந்தருளும் வேலவற்கு
நல்லாறு நின்னுண்மை நாடாது—வல்லாண்மை
பண்ணியுல கோரவாம் பாழ்த்தநெறி செல்வாயேன்
மண்ணுவாய் சொன்னேன் மதி. எ.

வாரா விடும்பைபல வந்தே குவிந்தாலு
மோரா றுதுண்டனரு ளுண்டன்றோ—சீராவாய்
துஞ்சாதே யஞ்சாதே தொய்யாதே நையாதே
யஞ்சாதே நெஞ்சே யறி. அ.

வீட்டின்மேன் மாட்டின்மேல் வேற்கண் மடந்தையர்மே
லீட்டின்மே லேசிந்தை நாட்டுகிற—பூட்டைநெஞ்சே
யிவ்வளவு நன்குனக்கிங் கீந்தகும ரன்சரணை
யெவ்வளவு மெண்ணாத தென். கூ.

எண்ணாத வெண்ணமெலா மெண்ணியுழல் பேய்மனமே
விண்ணோர் பேணுமயில் வேலவனை—புண்ணாடிப்
பார்க்கவிரு ளாயுளசு பாவமல மாய்த்தொன்றாச்
சேர்க்கவரு வானதனைச் செய். க0.

இக்கா சினியெங்கு மேதும் பணப்பறவை
யெக்காலுந் துக்கமே யீயுமென்று—பொக்கநெஞ்சே

கானமயில் வீரனடி கண்டுபெறும் பேறுபெற
நீநினையா தேநினைந்து நில். ௧௧

நல்லார் நிசநெறிக்கு நாட்டுப் பொருட்டொல்லை
யில்லா திருப்ப தேயியையு—பொல்லாப்
பொருள்வந்தூ டாடுமேற் போக்கமற்ற தெய்வ
வருள்வந்தூ டாடலரி தாம். ௧௨.

என்றைக்கு மில்லாநோய் வென்னவினை யாலேயோ
வின்றைக்கு நாமெய்த விங்குற்ற—தொன்றுக்கு
மஞ்சாதே நந்தே வருட்குமர வேள்காவ
னெஞ்சே யிருக்கு நிதம். ௧௩.

ஆணும்பெண் ணுங்கூடி யாடறி னின்னமுதங்
காணுமதை யுட்கொள்ளிற் கற்பமன்றோ—மாணுடையோர்
கொள்வாருய்த் தோர்ந்தே கொளார்க்குநல னிவ்வுலகி
னுள்ளோது நெஞ்சே யுணர். ௧௪.

வரிசைவழா வோரேழு வண்ணவர ணஞ்சூ
ழுரியநிலை யென்பவைகட் கப்பா—லிருமைப்
பகலிரவில் லாவோர் பரவெளிக்கண் ணேசேய்
திகழுமா னெஞ்சே தெரி. ௧௫.

முன்செய்து பின்னஞ்சு மூட்டமன மேநீதா
னென்சொல்லை நன்குமதி யிஞ்ஞாலத்—துன்பினிடைப்
போகாதெம் மான்றாள் பொருந்தவென் றுணர்வு
சாகாம னின்றங்கே சா. ௧௬.

சிரங்குனிப் பான்விண்டு தெண்டனிடு வான்மால்
கரங்குவிப் பான்றலையிற் கஞ்சன்—குரங்கித்
துதிபடித் தான்வேலோய் சூர்தபவென் பார்க்குக்
கதியளிப் பான்பதங் கண்டு. ௧௭.

மண்சுமந்த கோன்முருகா மண்சுமந்த மான்மருகா
மண்புரந்த மால்குரவா மாயஞ்செய்—மண்பிளந்த
வேலிறைவா நூலிறைவா வீடருளென் பார்களவன்
காலடைவார் மாலடையார் கள். ௧௮.

சங்கரிசேர் பொன்மேனிச் சங்கரியின் மாமருமான்
சங்கரியி னோர்மருமான் சங்கரியைச்—சங்கரிக்குஞ்
சாமிக்கு மோர்குரவன் சாமிக்கோர் சூழிறைவ
னாமெச்சி நாடயிலி னான். ௧௯.

கோத்தயிர்வெண் ணெய்த்திருடன் கோலமரு காநறிய
பூத்திருடன் றன்மதலாய் பொங்குகுறக்—கோத்திரத்தோர்
பெண்டிருடிச் சென்ற பெருந்திருடா வென்போத
முண்டுதிரு டத்தெரியா யோ. ௨௰.

காலில்லா தான்மதலாய் கையில்லா தானிளையோய்
தோலில்லா மால்குருவே சூர்கீண்ட—வேலுள்ளோய்
கண்ணில்லாள் காதலனே காதில்லா ரீசரவென்
னுண்ணில்லா தென்கொ லுரை. ௨௧.

அன்னைக் களைவலியப் பற்குத் தலைவலியோர்
கொன்னறு மாதுலற்குக் கூனற்கை—மன்னெஞ்சக்
குத்துடைய வண்ணனுக்குக் கோட்டுவாய் பேச்சில்லா
முத்திதந் தாள்சண் முகன். ௨௨.

கீழுதடு மேனுதடுங் கிட்டித் துவரன்ன
கீழுதடு மேலெயிறுங் கிட்டியந்தக்—கீழுதடு
மேனுதடு மேசேர்ந்து மேற்குத்தொன் றேற்றுவருந்
தோலறவொள் வேலற் றுதி. ௨௩.

பசுவே றரன்சுதனைப் பக்குவந்தா னுள்ள
பசுவைவதைத் துண்ணும் பரனைப்—பசுவெல்லாங்

காப்பவனைக் கந்தரலங் காரஞ்சொன் னோனிறையை
நீப்பின்றி நெஞ்சே நினை. உ௪.

## கங்கையின்சேய்.

### கட்டளைக்கலித்துறை.

கங்கையின் சேயெனை யாளுடை யானெழில் காண்கழலுக்
கங்கையி னன்மலர் தூவும் பலனங் கமலமல்குங்
கங்கையி லேயுருப் பட்டிடா யுத்தியைக் காட்டுநற்சு
கங்கை வயப்படச் செய்யுநெஞ் சேநனி கண்டுகொள்ளே.

சக்கர மான்முன் சமரம் புரிந்த தடவிருத
சக்கர னுலகை வுற்றவெற் பேறுந் தழல்கொளுதற்
சக்கர னுருரு விற்பாதி யென்றுள்ள சற்பிரகா
சக்கர மாதிள மைந்தனென் றுன்பு தணிப்பவனே. உ.

கலவை திமிர்திண் குயவள்ளி நேயக் கணவநற்ச
கலவை பவமு முடையவ னேநின் கழல்களைப்பு
கலவை மடமையி னுலுற்ற பாவக் கணங்களைய
கலவை நிமிர்நின் னருளிற் கலாவிக் களித்திடவே. ௩.

இருகோ மளத்தனப் பூவிலை மாதில்லிற் சென்றனையின்
றிருபோ வெனத்தள்ளி னன்வந்து காமவே னென்பவனு
னிருசீயென் றேசி யிருவாவென் றோதியிங் கேகிவந்தே
னிருபாத வன்பின் வலியா லுடம்பிடி யேந்திறைவ. ௪.

எண்ணுய புன்மை யிலராகி வாழவென் றெண்ணுநர்மே
லெண்ணு வதீத ரெனச்செயார் பாவமொன் றீரமற்ற
வெண்ணு ருளுற்று மிகைக்கும் பிரதி யிழைப்பதின்றி
யெண்ணுத வெண்ணத்தி லேயிருப் பாரயி லேந்திறைவ.

எல்லா வுயிர்க்கு மறிவா யியங்கு மிறையறிவை
யெல்லா வுயிர்க்கு மிதமாகு சாந்தம தெய்திப்புணர்ந்
தெல்லா மதின்சன் னிதியெனு முண்மையி லேறியன்றே
யெல்லா வறிஞரும் வீடுபுக் காரயி லேந்திறையே. ௬.

பாவ முஞற்று திருப்பது தான்சிவ பாக்கியத்தின்
பாவ மதற்குண் டுடுப்பன கேடு பணுமென் றுயிர்ப்
பாவகஞ் செய்து னருந்துந ரீரப் பவுள்சிழந்து
பாவ மிலையென்ற பாவமுங் கைக்கொள்வர் பாவகியே.௭.

புலானுகர் நாக்கி னுருசியை மாற்றப் புகலற்றவர்
புலானிமிர் யாக்கை தனைப்பிணி மாவெண்ணிப் போதருமைம்
புலாதி யெலாம்வென் றகம்புற மொத்தவொர் பூரணத்திற்
புலாதி யிலாநிலை நிற்பர்கொ லோசிவ புங்கவனே. ௮.

புலைமறுத் தோருங் கொலைமறுத் தோரும்புரைபுரைக்கும்
புலைமறுத் தீசன் குருதாசர் மாட்டன்பு பூத்தபின்மெய்ப்
புலைமறுத் துன்னரு ஞேக்கினிற் பொன்றுது பொன்றிநிற்போர்
புலைமறுத் தோங்கு முனைக்காண்ப ரேசிவ புங்கவனே. ௯.

வேத நெறிக்குப் புறம்புளோ ருணுண்டு மெய்யறிவாம்
வேத மடைய விலைகொலென் பாரந்த வேதமுயர்
வேத மிலையிழுக் கென்றுண ராது விமலர்தந்த
வேத வழிநின் றுளசந்த மாமுனி மெய்யிறையே. ௧0.

## மண்ணிற்சிறுவீடு.

### கலிவிருத்தம்.

மண்ணிற் சிறுவி டதுசெய் மழவோ
ரெண்ணிற் சிறிதே பெரிதா மிவணீர்

பண்ணித் திரிகா ரியமின் படர்வே
லண்ணற் கடிமைப் படுமா றுடரே. ௧.

வருநா ளுயிர்போ யிடுநாண் மடவா
ரிருவாள் விழிநீர் சொரியே தநடை
திரிவீர் தழைசால் சிகியே றிவரும்
பெரியோன் விபவம் பெறவும் மினரோ. ௨.

உறவே கொடுநீ ருறவென் றிவணொவ்
வுறவெய் தியுளீ ருறவொன் றுளதங்
துறவே யுறவோ டுறுவீ ரெனினவ்
ஓறவென் றுணர்வீ ருறவே யுளரே. ௩.

உயர்வீர் தினமெய் யுடையை பணிமே
ஓயர்வீர் தினமெய் யுளசேய் பணிமே
ஓயர்வீர் தினமெய் யுறவோர் பணிமே
ஓயர்வீர் தினமெய் யுடையீ ரொளியே. ௪.

கல்லா மனதைக் கனியப் பணிமா
லல்லோ னெனையாண் மயிலூ ரிறைதா
ளெல்லோ ருமிறைஞ் சியெலா நலனு
மல்லோ பெறவென் னகவா தரமே. ௫.

அன்பர்க் கருள்வா ரிதியா யழியா
வின்பத் திரளா யிணையில் பொருளா
மென்கீர்த் தனெனு வுளமேச யடியார்ப்
பின்பற் றிடுவோ ரணவார் பிணியே. ௬.

எவருந் தெரிவீ ரெமனுள் வருமுன்
சிவகந் தமனுச் செபியா தவர்பால்
புவனந் தொறுமே பொருநோ வெனுமா
கவனம் பெரிதுங் கவியுந் தினமே. ௭.

வாய்மை சவொணு மதிவாழ் வதிலே
நோய்வா தனைகோ ணுளைய றவதின்
மாய்வா முனரே மகியீர் பெறுமின்
செய்போல் வருமோர் சிவனு லதையே. அ.

நினைவொன் றுவதே நிகழ்சே யடியார்
வினையென் பதைநீ ருணரீர் வினையீர்
தனவின் பமதே சதமென் றதிலே
மனமுந் துநரவ் வழிநா டரிதே. கூ.

அறிவின் பெருமா ணறிவீ ருளர்பா
லறியா மையினீ ரறிவீ ரிலர்பா
லறிவாய் நிறைவா னினைமின் களரு
வறிவா ரருணைப் புதனு தியையே. க0.

---

## புலியாரே.



அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஆதித்தவாரம்.

ஒளியா யிருளா யிருக்குமாதி
யென்னுந் திரோதை யும்முள்ளே
விளையு மடமை போக்கிநல்ல
விவேக முதவிப் பிறவிதன்னைக்
களையும் படியின் பருளாகக்
கருது கிறவும் முட்பதியு
மளவை தானே யாதித்த
வார மாகும் புலியாரே. ௧.

## சோமவாரம்.

நீரு நிழலு மொன்றாக
நிகழ்தல் போலுந் தலையிருக்குஞ்
சூர னொளிபோ லுஞ்சுடர்செய்
தூய வறிவுப் பரம்பொருளைச்
சேரும் பசு இசை பவுள்சென்றோர்
சித்த மத்து ளழிஇருளும்
வாரங் கொளுநா ளே*சோம
வாரந் தேரும் புலியூரே. உ.

## மங்கலவாரம்.

கங்குல் பகல்க ளுள்ளடங்கக்
கணிக்கு நிலைகட் கப்பாலா
யெங்கு நிறைவா யுள்ளபொரு
ளெங்க ளறிவுக் கறிவாயுட்
டங்கி நாளு முளததனைச்
சாரி னிடரின் றெனவுணர்நாண்
மங்க லவார மாமுணர்வின்
மதிக்க வுள்ள புலியூரே. ௩.

## புந்திவாரம்.

சனிக்கு முயிரைப் புரந்தாளுந்
தலைவ னுய பசுபதியை
யனைத்து ளிருத்தி யறிந்தொன்று
மருவத் தனைமுன் கண்டன்றி
வனத்தின் மலையி லுறைந்தாலு
மொல்லா தெனவே வளர்புந்தி

---

* சோமம்=ஆதாயம், நன்மை.

சனிக்கு மொருநா ளேபுந்தி
வாரந் தகைசால் புவியாரே. ௪.

குருவாரம்.

சிறிது பெரிதென் றுளபேதச்
செயலுஞ் சாதி குலமரபும்
வறிது மறதி நினைப்புமத
வழக்கு மிழுக்கு மிலாதென்று
மறிவிற் கறிவா யவிரொன்றை
யறிவ தற்கா வருண்மொழிபொன்
றுறுதி யிறைவந் தருளொருநா
ளுபர்கு ருவாரம் புவியாரே. ௫.

சுக்கிலவாரம்.

நரையுந் திரையு மிளைப்பு
நலமும் பொலமு மில்லாமன்
மருவு மின்பப் பெருவாழ்வின்
மன்னு வதற்கின் கெடுத்தவுடல்
பிரியு முன்னங் குகனருளாற்
பிறழ்சி வனறிந் தருளுடற்குக்
கருவா நாள்சுக் கிலவாரங்
கண்டீர் களிசால் புவியாரே. ௬.

மந்தவாரம்.

தொங்கித் தசையு நிணமுமல்கச்
சோற்றுன் வளருந் துளையாக்கை
யிந்தி ரியம்பொன் மாதர்மக்க
ளெனவே யோங்கி மலிபாச
பந்த முழுது நீக்கெம்மான்
பதுக்கு மழுத வாரியுண்டு

மந்தங் கொண்டு மலர்ந்திடுநான்
மந்த வாரம் புலியாரே. எ.

கொலை.

விரியுந் தரணி வதிமாக்கள்
விலங்கு பறவை யூர்வனநீர்
திரியும் பிராணி களையிம்பர்த்
தீழ்ப்பா யெண்ணிக் கொலைசெய்பா
தரிய பேறு பெறுவதற்கா
வந்தர்க் கரண விருத்திகளைப்
பிரியும் படியே கொலைசெய்யப்
பெற்றி கொள்ளும் புலியாரே. அ.

பொய்.

நெய்யு மமுது முண்டுமின்னார்
நேயங் கோடற் கென்றிங்னே
மெய்மை மெய்யா விட்டிழுக்கா
மிறையார் பொய்தான் சொலலொழிந்து
மெய்மை யறியா தவர்க்குமெய்யா
விளங்கு முலகை யிலையென்னும்
பொய்யைச் சொல்லி யுய்யலன்பு
பூண்டு வாரும் புலியாரே. கூ.

களவு.

உளமு முடலும் வருந்திடக்கா
முற்றுத் தேடும் பிறர்பொருளைக்
களவு செய்தல் கறையெனவோ
காணற் கரிய பரவெளியி
லளவு சங்கை யின்றியற்கை
யமல மாக வுளபொருளை

யுளவு கொண்டு களவுசெய்வா
னூற்று வாரும் புலியாரே. க0.

கள்.

ஏற வளர்ந்த தாலந்தென்
னீந்தின் மாந்த ரிடுவினையா
லூறுங் கள்ளைக் குடியாதுள்
ளொன்றி யுணர்ந்து சத்தியமா
யீறு முதலு நாப்பணுமின்
றெங்கு நிறைவா யுளதெனநூல்
கூறு மின்பக் கள்ளதனைக்
குடிக்க வாரும் புலியாரே. கக.

குருநிந்தை.

அருளுந் தெருளுந் தராநின்ற
வையன் முருக னருண்மலிந்த
குருவை நிந்தை பணுதிழிவு
கூறுங் கொலைகட் சூதுவஞ்ச
மருளார் பொச்சாப் பழுக்காறு
மற்றுங் களுட விளைவுக்கே
குருவா யுளரை நிந்தித்துக்
கொள்ள வாரும் புலியாரே. கஉ.

கொள்ளை.

கள்ளில் வேத நெறிதுறந்து
காமஞ் சிற்ற மீயாமை
யெள்ளு மிடம்ப மதந்துவேஷ
மிழிவா மோக மென்பவற்றைக்
கொள்ளை கொள்ள வேண்டாநீர்
குறையா நிறைவா யருமையமா

யுள்ள பொருளைக் கொள்ளைகொளற்
கோடி வாரும் புலியாரே. கங.

## சுத்தவீரம்.

வாழு நாக வமரர்பிரான்
வகுத்த வழியி னில்லாநீர்
சாழல் போல்வன் சேற்றநேரிற்
றம்மை மாய்க்க வுடனிருக்கும்
பாழி மனதை யடக்காது
பயிலும் வீரம் வீரமன்று
சூழு மதனை யடக்கிநிற்றல்
சுத்த வீரம் புலியாரே. கச.

## சம்பிரதாயம்.

நினையு நினைவிற் கெட்டாம
னிற்கு முருகோ னெனும்பொருளைத்
தினமு நினையோர் சாதனையாற்
றேகம் விடுமவ் வேளையினு
மனைவி மகார்மண் மாசையாசை
மருவா மௌனங் பூட்டுகின்ற
மனநி ரோதஞ் சம்ப்ரதாய
மற்றொன் றில்லை புலியாரே. கரு.

## உத்தியோகம்.

உடையு நடையுங் குடையுங்கொண்
டில்லா சப்பேய் நனியாட்டத்
தடையில் லாநும் முத்தியோகந்
தடுக்க மாட்டா தெமபடனாக்
கடையு முதலு நாப்பண்ணுங்
காணாப் பொருளெங் கண்மணியை

யடையப் பார்க்கு முத்திபோக
வாற்ற றடுக்கும் புவியாரே. கசு.

## காயகற்பம்.

விவேக மின்றி நெடுநாளிவ்
விபுலை தன்னி லிருப்பதினா
லவமே யன்றிச் சுகமில்லை
யாத றெட்டா யுளுக்காக
வுவகை யுற்றுக் காயகற்ப
முண்டிங் குழன்று கெடாமலலை
கவலை மனத்தைக் குளிரவைத்தல்
காய கற்பம் புவியாரே. கஎ.

## சித்தி.

மாய வித்தை யாஞ்சித்து
வகைக ளானே தனையறிந்து
ஞேய முத்தி யடையொணுது
நிகழ்நற் குசல ரதைவிரும்பார்
தூய ஞான முடையவரைத்
*தொடர்ந்து நிற்குஞ் சித்தியெலாங்
காயம் விடுமுன் சிவஞானங்
கருது மதனாற் புவியாரே. கஅ.

## நல்லநாள்.

வாதின் மூத்து வழக்கிடற்கே
மதங்கொண் டடங்கா மதமுடையோ

* தொடர்ந்துநிற்குமென்றதற்கு ஏவலுக் கெதிர்பார்த்து நிற்கு மெனப் பொருளறிக. சித்தியெலாமென்றதனால் அணிமாதி யஷ்ட சித்தியுமென்றும்.

ரேது முடிவு கண்டாரிங்
கீசன் றன்னை யிறைஞ்சினிய,
போத முடையா ரெல்லாரும்
புனித மூர்த்தி யாமென்று
நாதன் பரிவைத் தெளிநாளே
நல்ல நாணற் புவியாரே. ககூ.

பண்டிகைநாள்.

எஞ்சா வருணைப் பதியிருந்த
வெந்தை யருண கிரிக்கன்று
லஞ்சே லஞ்சே லெனுமபய
மளித்த வேலிற் கிறைவனடிக்
கஞ்சந் தன்னை நினையாநாள்
கசட்டு நாளந் நாளதனைப்
பஞ்ச மாக்கிக் கண்டநாள்பண்
டிகைநாள் பரிவுப் புவியாரே. உ0.

---

## சொன்னயம்.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

சொன்னய மலிந்த மறைநெறி துறந்து
தன்மதி யாற்பிழைத் ததற்கு
நன்னடு வுடைய விறைவனால் விதித்த
ஞாயமே விதியென முளைத்தாங்
கன்னவ ருடனு முள்ளமும் வருந்த
வாற்றிடு மென்றுண ராதா
னென்னகச் செயலா விறையவன் செயலென்
றிழைத்தபொல் லாங்கினை மறுப்பான். க.

மதிவழி யாலே விதிவரு மென்னும்
வகையறி யாமட மாந்தர்
விதிவழி யாலே மதிவரு மெனவே
விளம்புபு மதிநெறி யிகந்து
சதிவழி கருதித் தன்னிலை பிறழ்ந்து
தயங்குவர் நன்னெறி பேணி
நதிவிழு கடல்போ லருளடைந் துயர்வார்
நாதனி னருட்டுணை கொண்டோர். உ.

கன்மமென் றறைவோர் காரண மின்றிக்
கடவுளா னன்மைதீ மைகளைப்
புன்மைகொண் டுழலா னாக்களின் மாட்டுப்
பொருந்தவே செய்தன னென்னிற்
றன்மைக் குடைய வனிட மதன்மஞ்
சாருமன் றேவத னாலே
கன்மமே சன்ம மெனவிசைத் திடுமார்க்
கங்கரி சற்றமார்க் கமரோ. ௩.

அற்றலைக் கரும வுயிர்கள்சத் திபா
தத்தினை யடைந்துவீ டடைவான்
முற்றிலா மாயை மாயையின் கலைக்கண்
முளைத்திடு பிரகிரு தியெனு
மற்றமின் முதற்கா ரணத்தின்மெய் யருளா
யவிர்துணைக் காரணங் கொண்டு
நற்றலை யுருவுண் டாக்கிடுந் தொழிலை
நடத்துவ னிமித்தகா ரணனே. ச.

மூவகைக் கார ணமுமிலா தேது
முளைப்பதே யிலையதெவ் விதமேற்

பூவுழைக் களிமண் முதலினைத் துணையாம்
புரையறு தண்டசக் கரத்தான்
மாவுடை நிமித்த மாங்குய வன்றான்
மட்கலம் வினைதல்போ லெனநல்
லாவிக ளுணர்ந்தா ரறிவிலார் மருண்டா
ராகலி லணைவிதி வினையே. ரு

விதியது பெரிதோ மதியது பெரிதோ
வெனவினு விடுவரவ் விதிதா
னெதின்வழி யெக்கால் வருமென வறியா
ரெப்படித் தப்புவா ரெனலு
மதின்வர வறிந்தோ ரதிற்சிக்கி வருந்த
வமைவரோ வெனலுமோர் வாரேன்
மதிவலி யளவும் விதிவலி யளவும்
வகுத்துணர் வாரிவண் மாதோ. சா

தன்னையே யறியிற் புதியவா காமி
யங்கெடுந் தலைவனை யறியின்
முன்னைய சஞ்சி தங்கெடு மொன்று
முறைமையிற் பிரார்த்துவங் கெடுமென்
றென்னையாள் பெருமான் விதித்துள பனுவ
லிசைத்தலி னரியஞா னத்தின்
முன்னடல் விதிதான் வலுப்பதின் றிலதை
முறைப்படி வயம்பணி யாளும். எ

தந்தையா மதிதான் விதியெனு மகனைத்
தந்துதன் சமிரட்ச ணைக்கு
ளந்தமா வளர்த்து விருத்தனு கியபின்
பவனதி காரத்திற் குள்ளா

யுந்தர மோய்ந்து நின்றிடு ஞானி
யுயர்வலி குறைவதே யின்றி
மைந்தனும் விதியைச் சட்டைபண் ணுமல்
வாழ்வனெக் காலமு மன்னே. அ.

தீவினை தெவுள விழைத்தவை யனைத்துஞ்
சேர்ந்துமால் வரையினை நிகர்த்து
மேவலர் போதப்போர் தரினும்வே லவன்றாள்
விரும்பிநல் வினைவழி நிற்போர்
யாவுளும் பெரியோர் நலன்மிக வுடையோர்
யாவரும் புகழ்தக வுடையோர்
நாவினுக் கரியோ ரெக்குல ரெனினு
நான்மறை யிறுதியின் படியே. கூ.

எப்பொரு ளினுமிக் குயர்வுடை மதியை
யெவர்பரி பூரண மாக
வொப்பொடு முளரோ வவர்பிரா மணரென்
ேறாதிடு நான்மறை முடிவை
யிப்படி மிசைமுந் நூலுடைப் பார்ப்பா
ரென்பவர் மட்டுமோ வடைவா
ரப்பனல் லருண கிரியிறை யருளா
லனைவரு மினிதடை வாரே. க0.

---

## கந்தர் நான்மணிமாலை.

நேரிசைவெண்பா.

சொல்வேறுஞ் சாத்திரங்க டோலாரு மோருடற்கு
நல்லாவி யொன்றென்னு ஞாயம்போ—லெல்லா

வுலகுக்கு மோரிறையா யுள்ளமுரு காநின்
சலமற்ற வாழ்வே சதம். ௧.

### கட்டளைக்கலித்துறை.

சதமான வாழ்விங் கிறப்பும் பிறப்புந் தவிர்ந்ததென்றே
விதமான நூல்கள் சொலச்சிலர் தாமிங் கிறந்தபின்னர்ப்
பதமான சொற்க மடைதலை யந்தப் பரமுத்தியென்
றுதவாத கூற்றினை யோதுவ ரேமயி லூர்பவனே. ௨.

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஊர்மிதிர்ந் துயர்தக் கோர்தா முறுதரு மத்தா னெய்துஞ்
சீர்நிமி ரூர்த்த லோக செல்வம தநித்த மென்று
நார்நிமிர் ஞான யோகா னல்லருள் வடிவா யின்பு
கூர்நினை யினித வாவிக் குலவுவர் குமர வேளே. ௩.

### நேரிசையாசிரியப்பா.

வேளுரு வெரித்த விமலன் புதல்வா
தாளுரு ளவாவித் தமியனேன் பழிச்சுந்
திருமுரு காமெய் சிறந்தநின் னடிபா
ரருமறை யறைதரு மிருவினை புள்ளே
யெழினல் வினைபொன் னின்விலங் கென்வு
மிழிதீ வினையிரும் பின்விலங் கெனவுங்
கணித்தவை யிகந்துன் னருட்கட லாடிப்
புணர்ப்பான் மனிலைய பூர்த்தி நேடி
யிடைவிடா வேலையி லேகண்
படைகொளா வாறு படைகொள்வ ரன்றே. ௪.

### நேரிசைவெண்பா.

அன்றலர்ந்த பூக்கொண் டருச்சிக்கு நாகரிகல்
வென்றமுரு காபாழ்த்த வேட்கைமனங்—கொன்றவர்பா

லெல்லாநின் கூத்தாக வேயிருக்கு மாற்றார்செய்
பொல்லாங்கு மில்லாமற் போம். ௫

கட்டளைக்கலித்துறை.

போமோ வருமோ வெனுமைய நீங்காத புந்தியர்க்கு
மாமோ சுகங்கதிர் வேலவ தஞ்செய லற்றவர்பாற்
பூமே னலமும் பொலமு மிழைத்திந்தப் பூதலத்தோர்
மாமேவு மன்னே ரிருவினை யாவையும் வவ்வுவரே. ௬

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வவ்விய பிடிதான் மற்கடப் பிடிபோல்
வலிகொள வசைவற நிற்குஞ்
செவ்வுறு சிவயோ கத்திலே பழகித்
திளைத்திடா வாய்ப்படிப் புடையோ
ரெவ்வித மறிவா ரவர்நா மதுவென்
றிசைப்பது மெனவறி வின
நொவ்விலா வதுதா னவரெனி னசைச்சூர்
நுகர்வர்கொ லெனைக்கொளுங் குகனே. ௭

நிலமண்டிலவாசிரியப்பா.

குகனே யென்றன் கோனே யுன்றன்
சுகமொரு பத்தைத் துகளற வடைந்த
சீவன் முத்தர் பூவிற் புரிசெயல்
யர்வு நின்செய லாக்கண் டுவப்பார்
பூதமைந் தானும் பொல்லாங் கடைகிலார்
வாதனை தணந்த மனதோ டுலாவுவார்
காலமோர் மூன்றுங் கண்டடங்கி நிற்பார்
ஞாலமீ தொன்றை நயனத்தா னறிந்த
மனமதைத் தன்னுண் மறையாது காண்டல்போ

னைகஞா னக்கணு லறிந்ததைச் சாக்கிர
திசையினுங் கண்டே சிவாநந்த மாக
வசையா நீர்மையி லமர்வார் சிறந்தே. ௮.

## நேரிசைவெண்பா.

சிறந்தகந் தாநின்னைத் தெய்வமறை யோமென்
றறைந்ததையு மாதிபுரா ணங்க—ணிறைந்தபர
மென்பதுமோ ரார்வே லிறையோன் மநுடனெனு
மன்பிலிபொய் யேடுபடிப் பார். ௯.

## கட்டளைக்கலித்துறை.

பாருயிர் கட்கும் பரலோக மேயநற் பண்ணவர்க்கு
மாரருண் மோக்க மளிக்கும்வே லோய்நீ யருளிலிபோ
லாரண மந்திரம் யோக மருந்துக ளாற்கடவு
ணீரடைந் தாயென்னு மேடுந் தொடுவரோ நின்னன்பரே.

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அன்பர்க ளருளிற் பாடு மருந்தமி ழிலக்க ணத்தைத்
தென்பொதி கைக்கோற் கன்று தெரித்தெழின் மதுரைச்சங்கத்
தின்புல வோர்க டேவா யிருந்துள நினது நாவிற்
புன்கவி பிறக்குமென்னார் பொருளறிந் துளர்வேலோயோ.

## நேரிசையாசிரியப்பா.

வேலோய் வேலோய் வீடருள் வேலோய்
வாலார் கலைமா மகளும் புகழ்சேஎய்
பிரம னறியாப் பிரணவப் பொருளைப்
பரமற் குரைத்த பரமா வென்பார்
துயரடு சிவனே யுயிருறை குகனே
செயிரறு வேத முயர்புரா ணங்கள்
பந்தமின் ஞானசம் பந்தர்வா கீசர்

சுந்தரர் வாதவூர்த் துனாதிரு வாக்குக
ளெல்லாம் பொய்யென் றெழுதி யுள்ள
கல்லா மடவோர் காமுற வுள்ள
வாபா சத்தமிழ் யாப்புக ளமைத்த
மாபா விக்கென் கதிவந் ததுவோ
வத்தமிழ் கருதி யலையுன்
மத்தர்க்கு மென்கதி வருமறி யேனே. கஉ.

நேரிசைவெண்பா.

ஏன றனிலிருந்த வேந்திழைகொண் காவுனரு
ளானிரும்போர் மேன்முத்தி யாங்காலம்—வானோர்
சிவலிங்கஞ் சோதி சிதாகாச மென்று
நவிலொன்றிற் சேர்வார் நயந்து. கங.

கட்டளைக்கலித்துறை.

நயமேய பட்டிணத் தார்போல ஞான விலிங்கவுருச்
சுயமா வமைவதுஞ் சுந்தரர் சேரலன் றாமுடன்
கயிலாயஞ் சேர்ந்தது போனனி சேர்வதுங் காசிலருட்
செயலாளர் சேர்முத்தி யென்னலா மோஞ்சிவ தேசிகனே.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

தேசிகனுர் சொற்றமறை யறைகின்ற வாறுபுலாற் றேகம் விட்டுப்
பேசரிய முத்திபெற லுண்டெனற்குப் பெருமிழலைக் குறும்பர்நீறு
பூசிமென் பேறுதி மெய்ப்பொரு டதீசிமுனி போற்பல் லோருங்
காசினியிற் கரியென்று கழறுவார் சன்மார்க்கர் கதிர்வே லோனே.

நிலமண்டிலவாசிரியப்பா.

வேலுடைச் செம்மாஅல் வித்தகக் கடாஅ
விறைதே டுவதோ டிறையுந் தேடுயர்

மதியுடை யாருள் வதிதருந் திருவே
யென்னக வடிசே ளிரும்பர வெளியை
ரு. மரீஇய தற்கு வாதலூர் முனியு
மோதமிக் குளசுக முனிவரு முளரே
யாசறு சோதி யடைந்த தற்கா
லமணர் சிங்க மாதியெண் ணிலரும்
பத்திர கிரியொடு பலரு முளரே
க0. சிவலிங்க வைக்கியஞ் சேர்ந்த கரிக்குப்
புரைதெறு மப்பர் போற்பல ருளரே
தாவறு பெற்றான் சாம்பா னென்பா
னுருநீ றுகி யுற்ற திறம்போற்
பலவா கிளக்கும் பனுவலும் பலவே. கசா.

நேரிசைவெண்பா.

பலக்குமர னேசொற்ற பந்தமிலா மோக்க
நிலைக்கதோ பாகநிற்கு நர்க்குப்—பலிக்கும்
பதமுத்தி தன்னையுமா முத்தியெனப் பன்ன
லிதமுற்ற பூர்வபக்க மே. கஎ.

கட்டளைக்கலித்துறை.

பக்க முளார்க்கருள் பண்ணுங் குமார பரமவருஞ்
சொக்க வருட்கதி மெய்யொடு மாமெனச் சொல்லுவதுன்
பக்கசித் தாந்த மலாதொரு மார்க்கம் பகர்வதுண்டோ
தக்கவிம் மார்க்கநண் ணுதவர் யாவருந் தாழ்வுளரே.கஅ.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

தாழ்வறி வறுதியுயிர் தன்னையு மதற்குளவிர்
தற்பரனை யுங்கெழுதகைக்
கேழ்கிளர்மெய்ஞ் ஞானமதி னுலினி தறிந்தணவு
கேவலமி லின்புதவிர

ஆழ்கிளரும் வேறுகதி யாவுநிலை யின்றென
வுரைப்பதை மறுக்கவிங்ஙனே
சூழ்பவர்கள் சொன்னிலை கொளுங்கொலெனை யாண்முறைமை
சொல்லுமயி லிற்கரையனே. கக.

## நேரிசையாசிரியப்பா.

அரையிற் புலிப்புரி யார்த்தே றுகைப்பார்
குருவே யவர்தங் குருந்தே நினது
நெறியுணர்ந் தோர்புற நெறியோர் கருது
மறிவுடை யுயிர்முன் னிருந்திவ் வாக்கையுள்
வந்ததே லந்த வகைதான் றெரியா
திந்த நிலைமீ திருப்பதென் னென்று
கடாவிடி னஃதிக் காலத் திழைத்தவை
சுடாத சுழுத்தியிற் றோன்று வாபோற்
றன்னக மிருந்துந் தன்னை
யுன்னற் கரிதா வுளதென் றுரைப்பரே. உ0.

## நேரிசைவெண்பா.

உரைக்குமவ ராழ்சுழுத்தி யுற்றபோழ் தங்கட்
குரக்குநெஞ் சென்றே குயிலு—முரக்கருவி
யில்லாமை யாற்சாக் கிரத்துநினைப் பின்றென்றுஞ்
சொல்லுவார் வேலோய் துணிந்து. உக.

## கட்டளைக்கலித்துறை.

துணியற்ற வந்தச் சுழுத்தியென் றோதுந் துயிலொழிந்தா
லணியுற்ற வெல்லா முணர்ந்திடல் போலேசிலெல்லின்முன்னம்
பணியிட்ட வெல்லாம் விளங்குமென் றொப்புவிப் பாரவைக்கட்
டிணியுற்ற சன்ம மிலையென்பர் வாதென் செயுங்குகனே.

### எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

குகனெனு மிருதய குகைபுகு மமருயிர்
  குயிற்றிய தொழின்மறந் துழல்கான்
மிருகவ னமொடது நினைவழி யறிகிற
  விதமென வொருநினை வதிலே
பகவிழி மலர்பொழு துளபழை நிலைமைகள்
  பரிவொடு மறியுமென் றுணர்வார்
சுகமுய ருனதரு ளுடையவ ரெனுளுறை
  சுகிர்த குமரகுரு பரனே. ௨௩.

### நேரிசையாசிரியப்பா.

பரமுத்தி சேராப் பசுக்களிந் நிலமே
லில்லின்றி வாழ்வதற் கியலா தெய்ப்பச்
சடமின்றி யுய்யுந் தகையுள தன்றுயிர்
தூல மிழக்கினுஞ் சூக்கும யாதனா
சரீரமுட் டேவ தண்டமள விருக்கும்
புண்ணிய நுகர்நற் புரத்தோ டிருக்கு
மிருவினைப் போகமு மிறந்தான் மீட்டுஞ்
சஞ்சித வினையிற் றுயுதராஞ் சேரு
மென்றுன தாகம மியம்பும்
வென்றிவேல் பரித்த வியன்பெரு மாளே. ௨௪.

### இன்னிசைவெண்பா.

பெருமானே நீபப் பிணையானே யென்னைக்
கருமேவா வாகாப்போய் கம்பிரள யத்தி
லழியவுள்ள சூக்க மடங்குவதற் குள்ளே
யழிதூல வெண்கணிப்போ ரார். ௨௫.

## கட்டளைக்கலித்துறை.

ஆரிய னுனவுன் போதக ஞானத்தி னுலுரிய
காரண தேகங் கரைவதற் குள்ளுட் கரணமுள்ள
சார வவயவ மெத்தனை தாம்வந்து சாருமென் று
பூரண மாப்புகல் வோரெவர் வேலுடைப் புண்ணியனே.

## கலிவிருத்தம்.

புண்ணி யஞ்செய்த புண்ணிய மூர்த்திக
ளெண்ண மோயநின் னின்படைந் தார்வசம்
பண்ண வென்று சுவாசபந் தம்புரிந்
தெண்ணி லாரிறந் தாரெஃது வள்ளலே. உஎ.

## இணைக்குறளாசிரியப்பா.

வள்ளியத் துள்ளே மறைந்தபொற் பொடிபோ
லுள்ள வுண்மையைத்
தெரிவா னினைப்பைச் சிக்கெனப்
பரிவொடு மடக்குபு பழுதறு
ரு. நின்மல சுழுத்திமீ நின்று
துன்மை காணுத் துரியத்தே
யருள்காட் டிடவே யறிவா
ரருள ரென்றனை யாளயி லரசே. உஅ.

## பஃறொடைவெண்பா.

சேவே றரன்பரைக்குச் செப்பியநிட் டாறுபுதிப்
பாவறு பத்தைந்தைப் பார்த்தவருங் கந்தரலங்
காரபெ.மு பத்தொன்றைக் கண்டவருஞ் சைவநூற்
சார*யோ கக்கழற்றி தன்னின்மூன் றெட்டிரண்டு
செய்புளினி தோர்ந்தாருந் திட்டெடுக்க மூச்சடக்கித்
தொய்வார்கொல் வேலிறைவா சொல். உகூ.

---

* இஃது ஒழிவிலொடுக்கமெனு நூலிலோர்பாகம்.

## கட்டளைக்கலித்துறை.

சொல்வளந் துன்ன முதனூ லெனச்சிவன் சொன்னவருட்
செல்வச் சிவஞான போதமுஞ் சார்புந் திடவழியுங்
கல்வித் திடங்கொண்டு கண்டவர் மூச்சைக் கடமுடவென்
ருெல்க விழுக்கத் துணிவர்கொ லோவள்ளிக் குறவனே.

## வஞ்சிவிருத்தம்.

உற்ற நெஞ்சை யொடுக்கினு
லெற்று மூச்சு மியங்குமோ
பற்றி லார்க்குப் பலிக்குமால்
வெற்றி ஞாங்கர் விருத்தனே. ௩௧.

## நேரிசையாசிரியப்பா.

விருத்த வுணர்விலார் விடய வுணர்வாற்
கருத்தனைக் காணக் கருதுத லாழிய
வார்க்கட லைச்சிவை வால்கொண் டாழம்
பார்க்கத் துணிந்த பண்பைச் சிவனு
௫. மென்றறி வார்நல் லிகலார்
குன்றெறிந் தோயுன் குடியடி யாரே. ௩௨.

## நேரிசைச்சிந்தியல்வெண்பா.

யாரானு மிற்றென்று நாவா லரற்றவொண்ணுச்
சீராரும் வேலோய் சிவயோகந்—தேரார்
மனதையழி வென்பார் மருண்டு. ௩௩.

## கட்டளைக்கலித்துறை.

மருளிலார் தூல வுருவிழி போல மறைந்துளவு
ளொருவிழி யாகு மனதென்று மந்த வுருவிழியாங்
கருவி யளாவிக் கருது முயிர்பிறர் காட்டவொன்றைத்
தெரிய வுளதென்றுந் தேர்வார் சடக்கரச் சின்மயனே.

## எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மயர்வில்லா நுண்ணியர்தாந் தீமை யாளர்
மனமென்னுங் கருவிதெளி வின்றித் தோன்றிச்
சுயபோத மெனுமறிவம் மனத்தே நன்றாச்
சொலியாம லறிவில்லாப் பேதை யானார்
நயமான வினையுடையோ ரதைநன் கேற்று
ஞாலமீ தறிவுடையோ ரானா ரென்றிங்
கயராம லறிவாரென் னறிவா யுள்ள
வரும்பொருளை வகண்டவருட் குமர வேளே. ௬௫.

## நிலமண்டிலவாசிரியப்பா.

வேளாண்மை வள்ளால் விறலயிற் பெருமா
னாளான வடியா ரல்லார்ந்த தண்ணிய
மாயா நிட்டையா வழுத்திடு பாச
மோயா நிட்டையு முயிரி னிட்டையு
மின்றிப் பதியி னிட்டை யினிதடைந்
தென்றும் பிரிவற் றிருப்ப திராச
போகமென் றுணர்ந்தா ரொருமொழிப் படியே
யேகமா யகண்டமா யியங்கம் மொழிக்கய
லெம்மொழியு மிலையே யெப்பொருளு மிலையே
யிம்மையி லதன்றனை யியம்புந ரெவரே. ௬௬.

## நேரிசைவெண்பா.

எவருமாயு மோர்மொழிக்கு ளேயென் றுணர்ந்தோர்
துவிதநவி லாதிருந்து துய்ப்பா —ரவிவேகர்
சூக்கமறி வேமென்று சொல்லிநனி யுண்டுறங்கிச்
சாக்காடா வார்குமரே சா. ௬௭.

### கட்டளைக்கலித்துறை.

சாப்போன் மருண்டிவ் வுலகப்பித் தேறித் தயங்குநரை
மாப்பாகு ஞான நெறியையிச் சித்தல் வளுவளுத்த
நீர்ப்பாயுங் கூழுக்கு மீசைக்கு மிச்சிக்கு நேர்மையன்றோ
பரப்பாடு மென்றன் பரிவுக் குவப்புறு பாவகியே. ௯௮.

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பாவக ஞான முள்ளோர் பலதிற விடய மெல்லாந்
தீவளர் நெருப்பா றென்றுந் திளைக்குமெய்யறிவையாங்குப்
பூவளர் மயிர்ப்பா லந்தா னென்றுமுட் பொருந்தியுந்தார்
தாவுள ரிஃவதேர் வாரோ சண்முகா நந்த வாழ்வே.௯௯.

### நேரிசையாசிரியப்பா.

வாழ்வுக் குரியோர் மாமறை யந்தமுந்
தாழ்வற்ற வாகம சைவசிந் தாந்தமு
மகண்ட வர்க்கிய மாமொரு மொழிவயின்
விகண்டித மின்றி மெய்யத்து விதமா
நிற்கு மதன்பொரு ணிராமய மாய
தற்பர வின்பத் தனிப்பழம் பொருளை
யனுபவித் திடுசுத் தான்மா நித்தம்
பனிதீ ரதுவும் பரமும் பிரிவின்
றுடலுயிர் போல வுளவென் றறிந்து
சடமல நூறிச் சமானமி லின்பச்
சீர்த்தி வீடெனத் தெய்வ மறைநுவல்
பூர்த்தி யடைவதுன் பூரண வருளா
லென்றுநா னுணர்பாக் கென்னகத் திருந்த
வென்றிவே லரசே மிளிர்பரம் பொருளே
யருட்கஜ நாயகி யருட்குற மாதரு

கிருப்ப மணித்தவி சிருக்குமெம் பெருமவென்று மிளைஞனை யென்று முதுவனையென்று முள்ளோ யின்புகழ் முனிக்குநீசொன் நிட்டை நிலையை
உ0. யேசறு வாய்மலர்ந் தெற்குஞ் சொல்லே. ச0.

---

## நெஞ்சுப்பத்து.

### கலிவிருத்தம்.

பூமண மிறைச்சிமது பொங்கலொடு போதை
நேமமுட னேயிழிதெய் வங்களெதிர் நீட்டிச்
சேமமுற லுண்டெனினல் லும்பர்பணி தேவை
நீமுனி நயம்பெறவெ ணையமெனை நெஞ்சே. க.

என்னடிய வர்க்குலகி லேஞானுய ரென்று
சொன்னகும ரேசனது சொன்னிச மறந்திங்
குன்னிடு கலக்கமிக வுற்றலைவ தென்னை
யன்னவ னடிக்கடிமை யாகவமர் நெஞ்சே. உ.

தாரகன் மரீக்கமலை சாயவசு ரேசன்
பாரவுடல் பிறவொரு பாழியயி லேவும்
வீரனடி யெண்ணவினை வெல்வதரி தோசம்
பூரண நினைப்பொடது போற்றுதியெ னெஞ்சே. ந.

வாக்குமன மெய்வழி வளர்ந்தபவ மெல்லாம்
போக்கவுள நீயுறை புதைக்கிறுதி வந்து
நீக்குமுன மேதருவை நேயமுட னேடு
நோக்கநிறை வேறுமதி நுட்பமிது நெஞ்சே. ச.

புண்ணிய மிலாவறியர் புந்திசிகர் கூந்தற்
பெண்ணசை யெனுங்கழுது பின்றொடரு மேற்செய்
தண்ணளி யெனும்பெரிய தண்டமது கொண்டு
மண்ணின்மடி யும்படி வதைத்தினிதுய் நெஞ்சே. ரு.

சந்ததமு மாடரி தழங்கிட நடிக்குஞ்
செந்திநகர் மேவிய திருக்குமர வேடாள்
புந்தியி னினைந்துதெளி போதவறி ஞர்க்கா
லெந்திரமு மந்திரமு மேனுணர்வு நெஞ்சே. சு.

ஆதியிடை யந்தர மிலாதவயி லீசன்
பாதவிணை கொண்டருள் படைத்தநிபு ணர்க்கு
மாதமொ டிராசிதிதி வாரமெழு நாள்கோ
ளேதுமிலை யென்றறிவி லேறுணர்வு நெஞ்சே. எ.

சோதியிறை வற்கினிய தொல்பிரண வச்சால்
போதிய குமேசனடி யுற்றவுறழ் வர்க்குச்
சாதிகுல நாமநசை சஞ்சலம் விகற்ப
மேதுமிலை யென்றறிவி லேறுணர்வு நெஞ்சே. அ.

திக்கொடு திகந்தமு நிறைந்தசிவ சேயோ
னக்கனொ டுணைத்தபொரு ளுடுமெழி வாளர்
துக்கசுக மென்றறை சுழிப்பவன முள்ளே
சிக்கியுழ லாரறிதி சிந்தனைகொ ணெஞ்சே. கூ.

அஞ்சொனயம் விஞ்சிய வருட்புகழ்க ளந்நா
ணெஞ்சுருக வோதினவ னெஞ்சுழி யிருந்தோன்
றஞ்சமென நிற்குநர் தயங்குவர்கொ லென்றுஞ்
சஞ்சலமி லந்தநிலை தன்னையடை நெஞ்சே. க0.

---

## உலகவாழ்வை.

### வஞ்சிவிருத்தம்.

உலக வாழ்வை யுறுதியென்
றலையு மூட ரகமெலாங்
கலக மேசெய் கருவியார்
வலைவி டாது வளையுமே. க.

சாமி நாத சண்முகா
காம னேபு கன்மமே
வாம லேசெய் வங்கெனாய்
நேம நேடு நெஞ்சமே. உ.

பூசி வாவி பூதிநீ
ருசி லாத மேனிமேன்
மாசில் பூதி மல்குவாய்
நேச மான நெஞ்சமே. ௩.

காறு கெட்ட கந்தனை
லூற றுக்க வுள்ளநீ
வேறெ ழுத்தை வெஃகுறே
லாறெ ழுத்தை யன்றியே. ௪.

சாம மோது மாசதா
வீமன் மைந்தன் மேனியா
மோமு மெம்பி ரானினே
ரேம மந்த்ர மேயரோ. ரு.

இறைமு னிட்டு ணுதலூண்
கறையை யொக்கு மேகலா

முறவ றுத்த லூனிடேல்
வெறிதில் சுத்தன் வேலனே. சு.

நிலவு மேனி நிருமலப்
புலவ னெந்தை பொருவில்கான்
மலனை நாளும் வழிபடின்
விலகு மெந்த வினையுமே. எ.

வடிவு மைந்த னடிமலர்
வடிவு கண்டு மகிழ்பவர்
வடிவு கொண்ட மடவரல்
வடிவை வண்டு புகல்வரே. அ.

ஆதி யந்த மற்றசேய்
சீதம் விஞ்சு சேவடிப்
போது கண்ட போதையர்க்
கேத னந்தை யிச்சையே. கூ.

இச்சை நேய ரெத்துணைப்
பச்சை மாழை பார்க்கினுந்
துச்ச வாசை சோர்வரோ
வுச்சு வாச வுள்ளமே. க0.

வரையி லும்பை வண்டறை
சுரம டர்ந்த துறையிலும்
விரத நோற்க வேண்டுமோ
சரண டைந்த தாசரே. கக.

நிட்டை கூடி நிறுவினுஞ்
சட்டி நாதர் தயவிலா
ரொட்டி வாழு முரனுறுர்
விட்டி டாது விடுதியே. கஉ.

முத்த னான முருகனைப்
பத்தி யோடு பணிகுநர்
செத்தி லாத தெளிவிலே
நித்தம் வாழ்வர் நிலவியே. கங.

அருணை நாத னறிவினன்
மருவு தேவ மணியருண்
முருக வேளை முழுவதுங்
கருதும் யோகு கமழுமே. கச.

## ஞாயவாதிகள்விளக்குவர்.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வியனில மனலுயிர் புனலெனு நான்கினும்
விளைந்ததிவ் வுலகென முடிபு
பயிலிழி பாமரர் பரசிவ மில்லையவை
பழமையிற் பழமையென் றறையிற்
குயவனில் லாமலுங் குடம்வரு மோபெருங்
கோபுரம் வனைந்தவ னில்லையோ
நயவுணர் விருந்திட னறிதிறொன் றறிவுடை
ஞாயவா திகள்விளக் குவரே. க.

உணர்வறு பூதமு மவைகளின் விருத்தியு
முணர்வுடை யுயிர்களைச் செயுமோ
வுணர்வுடை யுயிர்களு முணர்வறு பொருளிருந்
துதித்திடு மியற்கையை யுறுமோ
வுணர்வறு பொருளறி வாமெனி னிறந்தவு
ருடலறி வின்றழி வானே

னணுகறி விருந்திடு னறிதிறன் றறிவுடை
　　ஞாயவா திகள்விளக் குவரே. உ.

வடிவமி லளப்பறு பேரறி வாமொரு
　　வாலின வெங்கணு மல்கி
வடிவுரு வுடையிய மானணுக கறிவசை
　　வாகவு மிருக்குமோர் சிவனே
கடவுளென் றருமறை யறைதரு மேயது
　　கறையறு முறையென வுள்கி
நடலையி லந்நெறி நின்றிட னலனென
　　ஞாயவா திகள்விளக் குவரே. ௩.

சித்திர வுலகினைச் செய்யிறை யாய்நனி
　　செய்வதைப் பிரேரணித் திடமா
சத்தியுஞ் சிவனுமொ ருருவினி லிலகிய
　　சத்திய மறியுநுண் ணியர்பா
னித்திய மாயவி ரமலசின் மயத்திரு
　　நிசத்திரு வாமது தானே
நத்தமும் பகலுமி லாநடு நிலையென
　　ஞாயவா திகள்விளக் குவரே. ௪.

அரிவரி கெழுமிளை யோரதின் மேன்முறை
　　யறியவு முளரது புரையச்
சரியையுங் கிரியையும் யோகமு ஞானமுஞ்
　　சாதகர்க் காகுமந் நெறியே
புரிபவர் மார்க்கநன் மார்க்கமெ னத்துணி
　　பொருள்கணித் தாட்படு பவரே
நரகடை யாரெனப் பறைதுறைப் பாமென
　　ஞாயவா திகள்விளக் குவரே. ௫.

கல்லினும் வலிதெரி கனலினும் பெரிதறி
கடுமனக் கயவர்கள் வாயின்
சொல்லினுங் கொடிதழி தருமுசு மனதிது
துணிவொடு துணையுறுங் காலம்
புல்லறி வொழித்தற ஹுணர்த்தியின் விடுமுயர்
பொறையினில் வரையையும் வெல்லு
நல்லரு ணிலைக்குமொ ருரியநட் பாமென
ஞாயவா திகள்விளக் குவரே. கூ.

பல்லுயிர்க் குயிரெனு மிறைக்குயி ரிருதய
பங்கய மிருப்பிட மென்றே
சொல்லிறை யாகம நெறிபிடித் துய்த்திடு
தூவடி யார்கடம் முயிரை
வல்லுயிர் பிறவுயிர் புல்லுயி ரெனவவை
வருந்தவோர் கொடுந்தொழில் புரியார்
நல்லறி வுளர்செவிக் கிதுவமு தாமென
ஞாயவா திகள்விளக் குவரே. எ.

உயிரினுக் குயிரறி யறிவினுக் கறிவென
வுளபெரும் பழம்பொரு ளருளே
யயனரி யரனிரு வாயிருந் துளபடி
யாக்கியு மோம்பியு மழிக்குஞ்
செயல்களுக் கிடைவடி வுடையுயிர் களைவதஞ்
செயுமரு ளிலிகளை நோக்கா
நயமுறு கருணையி லார்தவ மவமென
ஞாயவா திகள்விளக் குவரே. அ.

கண்ணுடல் செவிநுகர் வாயொடு நயனமுங்
கால்புகு மூக்குநப் போலப்

பண்ணிய வுயிரழித் துண்ணுமி னெனுமொழி
படித்திடு மனுடருக் குலகி
லெண்ணறு மசரப தார்த்தமிக் கிருக்கமெய்
யிறையுயிர் வதைத்துண்ண வறையா
னண்ணுந ரேயத னலிது மேலென
ஞாயவா திகள்விளக் குவமீர. ௯

அன்பிறை யினியவுட் சமயமொண் பகலுக்கு
மளியில் பரசமய நிசிக்கு
மன்புடை யிறையென வமைந்தவை களுக்குயர்
வாயசித் தாந்தவிண் மணியா
யின்படைந் தவருண கிரிகுரு வெனச்சொலு
மேதமின் முருகைய னாகி
நன்குடை யீசனுக் குரைத்தது துணிபென
ஞாயவா திகள்விளக் குவமீர. ௧௦.

---

# போற்றிவிண்ணப்பம்.

———:o:———

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஐயனே யரசே போற்றி யருமறைப் பொருளே போற்றி
துய்யனே துணையே போற்றி தூமணித் திரளே போற்றி
மெய்யருள் விளைவே போற்றி வெற்றிவே லேந்து பூவற்
கையனே போற்றி யெங்கள் கடவுளே போற்றி போற்றி. ௧.

போற்றுவிண் ணவர்கோன் போற்றி புரிதவத் தொண்டர்க் கின்ப
மாற்றுநல் லழகன் போற்றி யாமெம் பரியோன் போற்றி
நீற்றிணைப் புனைந்த மேனி நிலவருட் குன்றம் போற்றி
சீற்றமெம் மேற்கொ ளாவோர் சிவசுப்ர மணியம் போற்றி. ௨.

மணியணி மால்வி ரிஞ்சன் மற்றுள கணங்கள் யாவும்
பணியநின் றவனே போற்றி பரமனே போற்றி யன்ப
ரணியடி யலரே போற்றி யாக்கிநன் களித்து மாய்க்குங்
குணமுடை யத்தா போற்றி குமரவேள் போற்றி போற்றி. ௩.

போற்றிவந் தாளு முன்றன் பொன்னடிக் கமலம் போற்றி
தேற்றுவா ருன்னை யல்லாற் றிக்குவே றில்லை போற்றி
மாற்றரும் பிறவிக் காட்டை மடிக்கமெய்ஞ் ஞானத் தீயை
யேற்றுமெஃ குடையாய் போற்றி யெங்குறை தவிர்ப்பாய் போற்றி.

பாய்நதிக் கிடையோன் வாம பாகமே கொண்டா டன்னைத்
தாயென வுவந்தாய் போற்றி தனிப்பரஞ் சுடரே போற்றி
வீயிலாப் புத்தேண் மாதை வேட்டுமற் றொருத்திக் கன்று
நாயக ஞாய் போற்றி நான்மறை முதல்வா போற்றி. ௫.

முதலுமாய் நாப்ப ணுகி முடிவுமாய் நின்றாய் போற்றி
சததள பாதா போற்றி சகத்திர நாமா போற்றி
மதிபுனை பரம ஞர்க்கு மதலையாய்க் குருவாய்த் தேவர்
பதியென வுளவேள் போற்றி பரஞ்சுடர்க் கண்ணு போற்றி. ௬.

கண்ணுமாய்க் கருத்து மாகிக் காணொழி லெந்தை போற்றி
விண்ணுமாய் மண்ணு மாகி விளங்கருட் டேவே போற்றி
பண்ணவர்க் கருளத் தண்ட பாணியா நின்றாய் போற்றி
தண்ணருட் கடலே போற்றி சதுர்முகற் கிறைவா போற்றி. எ.

இறைவனே போற்றி யாதி யெந்தையே போற்றி வேலுக்
கிறைவனே போற்றி நீப விணரணி சிவனே போற்றி
மறைபுக லரிய வெங்கண் மாதவ மணியே போற்றி
குறைவறு நிறைவே போற்றி குளிர்சிவக் கொழுந்தே போற்றி. அ.

கொழுமையிற் குளிர்மை போற்றி குக்குடக் கொடியாய் போற்றி
குழுமிய சிவக ணங்கள் கும்பிடுங் கழலாய் போற்றி
தொழுபவர்க் கருள்வோய் போற்றி சுந்தரா போற்றி யென்னை
முழுதுமாள் பவனே போற்றி மோனநா யகனே போற்றி. கூ.

நாயக மானோர்க் கெல்லா நாயக மானாய் போற்றி
தாயென வருவாய் போற்றி சண்முகத் தரசே போற்றி
தீயரிப் பெயரோற் கன்று தெய்வமுங் குருவு மான
நீயெனைக் கலந்தாள் போற்றி நித்தனே போற்றி போற்றி. க0.

---

## சரணவிண்ணப்பம்.

:o:

### (அந்தாதி.)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அத்தனே சரண மெங்க ளாதியே சரணந் தூய
சித்தனே சரணஞ் சைவ தெய்வமே சரண ஞான
முத்தனே சரண மோன முனிவனே சரணம் வேத
வித்தகா சரண மென்னை வெளிப்படக் காட்டு வாயே. க.

காட்டிய வுலகி யாவுங் காக்குநின் னருளி னென்னைக்
கூட்டியாட் கொளுமெங் கோனே குமரனே சரண நீபஞ்
சூட்டகன் மார்பா வுள்ளத் துய்யனே சரண மோக்க
வீட்டையாள் வானே யந்த வீடெனக் காக்கி டாயே. உ.

ஆக்கைபொய் யுறவா மென்று னடைக்கலம் புகுந்த வென்னைக்
காக்கவிந் நாளி ழுத்த கருத்தனே சரண நீறு
பூக்குமா தார தேவ புனிதனே சரணம் வேத
வாக்குடை யடிகே ளாள வருவது தருணந் தானே. ௩.

தருணமு மறிந்தெ னது தன்மையு முணர்ந்து நல்ல
வருணல மளிக்கு மெங்க ளையனே சரணம் வேத
வுருவனே சரண மாதி யொருவனே சரண நாளு
முருகனே சரண மோன முனிவனே சரண மன்னே. ௪.

சரணநின் சரண நானே சரவண பவனே சன்ம
மரணமு மளவு மில்லா மழவனே சரண மாதிப்
பிரணவ மருளு மூலப் பிரமனே சரண மாறு
மருவிய பொருளை யென்னை மனமுவந் தாண்டு கொள்ளே.

கொள்ளவென் றகத்தியற்குங் குயிற்றரும் புகழாற் சிந்தி
யுள்ளவந் தவற்கு மோது மையனே சரண மெங்கள்
வள்ளலே சரண மூல மறையவ சரண மென்னைத்
தள்ளிடா தாண்டு கோடி தாவுடைப் பிழைபொ றுத்தே.

பிழைபொறுத் தாளற் காய பெற்றியே சரண நட்பை
மழையெனப் பொழிவி லாச வானமே சரண மென்க
ணுழைமதிச் செறிவா யோங்கு நுட்பமே சரணங் கோலத்
தழையுடைச் சிகியி லூருஞ் சண்முகா சரண நானே. எ.

நானென தென்று மோய நல்லருள் காட்டு மின்ப
வானநா யகனே யுன்றன் மலரடி சரணஞ் சாம்பி
யீனமா நெறிநான் சென்றா லெதிர்நின் றுதடுத்தாட் கோடற்
கானசெய் சரண மாசி லங்கணா சரணங் காணே. அ.

காணுமென் றந்தாய் வேத கதிநெறிக் கந்தா வேமப்
பூணுமுற் பலமும் பூணும் புயத்தனே சரணம் பூவார்
வாணுதல் வள்ளி யெந்தாய் மணமுதால் சரண மென்னைப்
பேணவுட் படர்ந்திவ் வாறு பிதற்றிநா னிற்கின் றேனே.

நிற்குமெ னுருவைக் காட்டி ஞேயமோ டருளிற் கூட்டிச்
சிற்பர மளித்த தேவ தேவனே சரண நாளும்

பொற்பதம் விழைவார்ப் போற்றும் புண்ணியா சரண மெம்மா
னற்புத வருளைப் பேரா னந்தனே சரண மன்றே. க0.

## அமிர்தமதி.

(அந்தாதி.)

வேறு அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அமிர்தமதிக் குடிலத்தா னென்குமுனி
 வோர்க்குரைத்த வடைவே போன்
நிமிருமதி யறுமுனிவர்க் குரைத்ததுகை
 காட்டாக நிலைத்த ஞாயந்
தமியனறிந் தன்னணமே நில்லாது
 பிதற்றிநிதந் தணியா மோகத்
தமமதனிற் கிடந்துழலு நெஞ்சுளனுந்
 தகவிழந்து பாழ்பட் டேனே. க.

பாழான வுடலெடுத்தேன் பயனறியேன்
 பண்பில்லாப் பாவி யானேன்
ஏழாத வுணமறந்தே னெனையறியேன்
 செய்தவெலாஞ் சமித்துக் கொண்டு
சூழ்தப் பிரபஞ்ச வாசனையை
 மாய்த்துனடித் தொழும்பர் நாளும்
வாழேக விட்டினுக்கே வரவழைத்தி
 யயில்பிடித்த வடிவி னானே. உ.

வடிவில்லாப் பெருவெளியா மன்னியநீ
 கருணையினால் வடிவ மாகி

மிடியில்லா வடியார்கட் கநுதினமு
மருளிறையா விளங்கி யாதி
முடிவில்லா விறையோன்மு னிறையாகி
நான்மறையின் முதன்மெய் யோதுங்
கடியில்லா நினதடியை யிறைஞ்செனது
கரிசொழித்துக் காத்தி டாயே. ௩.

காத்தாளு முன்னையல்லான் மற்றொருவர்
காப்பார்கொல் ககனத் தோர்சூர்
தீர்த்தாண்ட பெரியோய்கா வெனத்தினமு
மனத்துள்கிச் சேவை செய்யுங்
கோத்திரமு ளாரெவர்க்குங் குடிக்கடவு
ளானவருட் கோல ஞால
மாத்திரந்தா னேவறியும் வானுலகு
மறியுமருள் வாழி மன்னே. ௪.

வாழியநீ வாழியவேவார் தெய்வமகண்
முருடர்மகண் மஞ்ஞை வாழி
கோழியெனுங் கொடிவாழி கொற்றமுடை
யயில்வாழி குடிலை வாழி
யூழிதொறு முன்னடியார் வாழியரும்
பொன்னடிவாழ் வுறவே வந்த
வேழையே னுயுமாறிங் கெவ்வணமோ
வவ்வணம்வந் தியம்பி டாயே. ௫.

இயம்பருமுன் சேவடியை யல்லாது
மற்றெதையு மிறையென் றெண்ணே
னயம்படுமா றற்றொழுங்கு பறிகிலேன்
றிருவடியை நாடி நாடிப்

பயம்பெருகத் தீழ்ப்படையு முழுமகனென்
றம்பலமே பலிக்கக் காண்பேன்
றயங்கேலென் றணைத்தருளத்
திருவுளத்தி னினையாத தன்மை யாதோ. ௬.

யாதுமுனை யன்றியுண்டோ நானுனக்குப்
புறம்போவென் றிட்ட மாகிச்
சூதுடையோர் தொழில்போல யானறியா
தெனுளிருந்து சுழற்றி யாட்டுஞ்
சாதமதை யெனக்குநனி யறிவிக்க
வுளகருணை தான்வா ராமற்
றோதகந்தான் விளைத்ததெது சொல்லியரு
ளகண்டவருட் சுகிர்த வாழ்வே. ௭.

சுகிர்தமற்ற விறப்பினையும் பிறப்பினையுந்
துணிபொடுநா னினைக்கும் போதா
லகிவாயி லகப்பட்ட வணிநுணல்
போலுள்ளே யழுங்கு கின்றேன்
டகிழ்வுகெழு நீயணைத்துக் கொள்ளாயே
லவ்வழுங்கன் மாறு மோவென்
விகிர்தமெலாஞ் சித்தாள விளங்குமருட்
சிவஞான விமல விண்ணே. ௮.

விண்ணவராய்த் தானவரா யிராக்கதராய்ப்
பல்கணமாய் வெறியார் பேயாய்
மண்ணிலுறை மாநடராய் வல்விலங்கா
யண்டசமாய் மணியார் பாம்பாய்த்
திண்ணியகல் லாமலையாய்ப் புன்மரமாய்ப்
புழுவளியாய்ச் செடியாய் மற்று

மெண்ணரிய பிறப்பெல்லாம் பிறந்ததற்குங்
    கணக்குண்டோ வேழை யேனே. ௯.

ஏழையிங் கேயினிப்பிறக்க ஞாயமில்லை
    காணவையு மினிமை யில்லாப்
பிழையெனத் தோன்றினினை யடைதனிச
    மெடனுங் குறிப்புப் பிறங்க லானு
முழுறுதி போழ்ந்தாளு முருத்திரனு
    முனையடுத்த தானு மோவா
வாழவருட் கடலருணை யான்வாழ்வி
    லென்னையும்வை யமிர்த விண்ணே. ௧௦.

---

## சிறுமைநீக்குயர்செல்வம்.

---

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பீத மோர்தரு மிக்க ளித்துயர்
    பெற்றி யேதுமி லாதுதன்
றாதை யைக்கொலை பண்ணி யீன்றவ
    டன்னை யும்புணர் பாவிமா
பாத கந்தப நோக்கி யாளிறை
    பால னைசுவாமியென்
றோது கண்டெதிர் வந்த தேபெங்கள்
    சிறுமை நீக்குயர் செல்வமே. ௧.

கருட னன்ன முனிந்த மஞ்ஞையை
    யாயி ரங்கண னீடெழி
லுருவ மாமொரு மஞ்ஞை யைத்தொடர்
    நோற்ற மாதவ வுத்தியை

மருவ வேல்வகி ருருவி லேலெழு
 மஞ்ஞை யைப்பரி யாக்கொளுந்
திருவ னென்முனம் வந்த தேயெங்கள்
 சிறுமை நீக்குயர் செல்வமே. உ.

சந்த தக்களி வாரி யாயொரு
 தண்ண ருட்பிர வாகமா
யெந்தை யாயரு ணந்தி தேவ
 ரிருக்குங் காவலி னக்கமா
யந்த மாதியின் மைந்த னயவி
 ரடிகள் சேவடி சேரவோர்
சிந்தை நல்கிட வந்த தேயெங்கள்
 சிறுமை நீக்குயர் செலவமே. ௩.

வில்லை யாமொளி யாயி ணைந்து
 விளங்கு மின்களொ ராறுபேர்
நல்ல கைக்கு றுபிள்ளை யாயவர்
 நட்பி னூட்டமு துண்டெலாம்
வல்ல நாயக னாகி யுள்ளவன்
 வலிய வந்தினி யென்சொலிற்
செல்ல லுன்கட னென்ற தேயெங்கள்
 சிறுமை நீக்குயர் செல்வமே. ௪.

ஆறு நங்கையர் சூட்டு மாவல
 ராற மாமெழின் மொய்ம்பினோ
னீறில் கந்த கிரிப்பொன் மாமணி
 யாச னத்துறை யெம்பிரா
னீறு கொண்டபொன் மேனி யன்றின
 நின்ம லன்றனி யேற்கருட்

சேறு பேணுணர் வீந்த தேயெங்கள்
சிறுமை நீக்குயர் செல்வமே. ரு.

வானின் மாதொரு பாங்க ருந்திரு
மானின் மாதொரு பாங்கருங்
கான ரூமலர் சூடி வைகம
காவ னப்பொடு நடுவமர்
ஞான நாயக ஞன சண்முக
ஞயி னேனேயு மாள்வதாத்
தேனின் மென்மொழி தந்த தேயெங்கள்
சிறுமை நீக்குயர் செல்வமே. சா.

ஆலி னீழலி ஞலு பேர்தொழ
வாசி றென்முக மாயிருந்
தோல மாமறை யுண்மை யீதென
வோதி யாண்டவர் சேயெனும்
கோல வேலவன் ஞால வாதனே
கொண்டு நான்றொலே யாவணஞ்
சீல மாங்குண மீந்த தேயெங்கள்
சிறுமை நீக்குயர் செல்வமே. எ.

என்றும் வாலிய மாறி டாவடி.
வேசி றந்துள வெம்பிரான்
குன்றின் மேலடி யார்கள் கண்டருள்
கூர வோரருள் கூர்ந்துகை
யொன்றி லேதடி கொண்டு நின்றுள
வுண்மை கண்டிட வீணெறிச்
சென்றி டாவகை செய்த தேயெங்கள்
சிறுமை நீக்குயர் செல்வமே. அ.

கோடெ ழும்பு வராக வன்சிறு
குருளை கட்கொரு தாயென
வோடி யன்போ டணைத்து மாமுலை
யூட்டி மந்திரி மார்களாக்
கூட லம்பதி யீந்த கோன்றரு
குமர னெம்பெரு மான்றனைத்
தேடி நிற்க விழைத்த தேயெங்கள்
சிறுமை நீக்குயர் செல்வமே. ௬.

ஓது செந்தமி ழானி ரம்பநூ
பூதி சொன்னவ னேடுநேன்
மோத மாமொழி பேசி யேதமு
முடங்கு கொன்றருள் சேயவன்
வேதன் விண்டு வலாரி செம்பதி
வேட்பு றுதவன் வாழ்வவாஞ்
சேத னந்தழை வுற்ற தேயெங்கள்
சிறுமை நீக்குயர் செல்வமே. ௧0.

---

## துறவுநோக்கம்.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஐயனே யரசே யறைமறைப் பொருளே
யாதியாம் பரமனுள் ளுணர்ந்து
செய்யதா மரைக்கண் மாலவ தாரச்
செழுங்கிடி யுடையவல் லுடம்பு
கையவே சவட்டி யெயிற்றினைப் பறித்தந்
நறும்பர மனணியக் கொடுத்த

தெய்வமே யுன்காற் றுணைதனை நம்பித்
திரியவெ னுவலித் தேனே. க.

பல்புவி படைக்கப் படைப்பவை யளிக்கப்
பார்முத லனைத்தையுந் துடைக்க
மல்குமுத் திறத்தார் தொழின்முத லரசா
வயங்கொரு நீயென தகத்து
வல்லிரு ளிரித்து நல்லொளி கொடுக்க
வந்ததே மாதவ மெனுமென்
செல்வமே யுன்காற் றுணைதனை நம்பித்
திரியவெ னுவலித் தேனே. உ.

போகிமால் விரிஞ்ச னேனைவிண் ணவரும்
புகழ்சர ணம்புய வடிகே
ளேகநா யகனு யிருந்துள வொருநீ
யெளியனை வலியவந் திழுத்த
யோகமே யோகமிஃ தேதென வுரைப்பே
னுள்ளநா ளளவெனைக் கொண்டாள்
சீகெழு வுன்காற் றுணைதனை நம்பித்
திரியவெ னுவலித் தேனே. ங.

சாவது பிறப்ப தெனும்புவி யாக்கஞ்
சள்ளையென் றுன்னடி நாடி
யாவது புரியுந் தொழும்பர்க ளகத்தே
யநுதினந் திருநட நடிக்கும்
பாவக மெளியே னறிந்திட வெனுளே
பதிந்துய ரருநெறி சேர்த்த
தேவனே யுன்காற் றுணைதனை நம்பித்
திரியவெ னுவலித் தேனே. ச.

ஆலமார் மிடற்ற னாலவாய் தனிலே
யாடலோ ரறுபது நான்குஞ்
சாலவே யிழைத்தான் றிருவடித் தாசர்
தம்பொருட் டாகவக் கோல
மூலனாய் விபுவா யகண்டசின் மயமாய்
முழுமுதற் றெய்வமா யுளவோர்
சீலமே யுன்காற் றுணைதனை நம்பித்
திரியவே னாவலித் தேனே. ௫.

கவ்வைசேர் புளுகர் கடும்புகை யாளர்
கரவடர் காமவி டாயர்
நொவ்வுசேர் தூர்த்தர் பொறாமைய ரூத்தை
நுகர்பவர் வெறிகளை யுண்போ
ருவ்விலா ருன்றுண் மறந்துள ருறவை
யொழித்தெழு பவப்படர் நீக்குந்
தெவ்வனே யுன்காற் றுணைதனை நம்பித்
திரியவே னாவலித் தேனே. ௬.

கூந்தனீள் கோல மடந்தைபொன் பூமி
குரம்பையென் றுளநசைக் கடலை
நீந்திடா ததிலே வீழ்ந்துசா மாந்தர்
நிறைந்தவிப் பூமியை யிகந்து
சாந்தமே யோங்கு தொழும்பருக் கருட்சீர்
தழைத்திட வருள்சுரந் துதவுஞ்
சேந்தனே யுன்காற் றுணைதனை நம்பித்
திரியவே னாவலித் தேனே. ௭.

ஆசையோர் மூன்று மவிய வறாவோ
ராசைவந் தேயெனை விழுங்க

வாசைகொண் டுளநீ ரினிதறி வாய்நீ
யாக்குவ தென்றென வறியா
தூசல்கொள் கலக்கஞ் சாம்வகை யடியா
ருளத்துழி நீக்கமின் றொளிருந்
தேசுளோ யுன்காற் றுணைதனை நம்பித்
திரியவெ னுவலித் தேனே. ௮.

சந்ததி யாரி விமானமண் வீடு
தனுவென நவில்புறப் பற்றும்
பந்தமே மருவு மனுஇதத் துவனாட்
பாமகப் பற்று மறுத
தொந்தமை யிருளு மிலாத திவோதய
சுகத்தினை யெனக்கினி தருளுஞ்
சிந்தையோ யுன்காற் றுணைதனை நம்பித்
திரியவெ னுவலித் தேனே. ௯.

அரியசெந் தமிழை விரிசடைப் பொதிகை
யாரியற் கருளிவெள் ளேனந்
தெரிவரு மலைப்பேர் முனிநவி றமிழ்ப்பாச்
செவிமடுத் துளமகிழ்ந் தவற்குத்
தரிசன மான சரவண பவனை
தாசனைத் தடுத்தாட் கொள்ளுந்
திருமலி யுன்காற் றுணைதனை நம்பித்
திரியவெ னுவலித் தேனே. ௧௦.

## பிழைபொறுக்கமுறையிடு.

மூத்தரின் முதல்வா முதுமொழித் தலைவா
முட்டிலா வனப்பது பொதுளுஞ்

சித்திர வடிவே திகழுருங் குழகா
செங்கையி னன்கயி லுடையாய்
மத்தமு மெழிலா ரறுகும்வில் லுவமு
மதலையு மணிபவர் மழவா
பித்தனேன் குறைதீர்த் தருள்சிவ னேயென்
பிழைபொறுத் தாள்வதுன் கடனே. ௧.

இணையில் பொருளே கிளரொளிப் பிழம்பே
கிருபைசேர் கற்பகக் காவே
மாணவர் சிரமேற் கரங்களைக் குவித்து
வணங்கிட வருசிவக் கொழுந்தே
யாணவங் குடிகொண் டருடனை மறந்திங்
கநுதின மனுசிதஞ் செறியப்
பேணிய கொடியே னின்சரண் புகுந்தேன்
பிழைபொறுத் தாள்வதுன் கடனே. ௨.

பத்தருக் கேமம் பொழியருட் குயிலே
பரமமெய்ஞ் ஞானிக ளுளத்தே
நித்தலும் ருசிக்குஞ் சருக்கரைக் குவடே
நேயமா லயன்முத லோர்தாஞ்
சித்தசன் னதமே கொளப்பொறி யிமைத்த
செம்மலே யென்குல வாழ்வே
பெத்தனே னுன்சே யானதா லினியென்
பிழைபொறுத் தாள்வதுன் கடனே ௩.

கன்னலே யிழுதே கற்கண்டே தேனே
கனிந்தமுக் கனிரச மேயின்
மன்னிய விளைவே யமுதமே யொழியா
மதுரமே சீனிச்சக் கரையே

.யென்னுளத் தியங்கு மிறையெனுங் குருவே
யெந்தையே திருத்துணை கிடைத்த
பின்னுமிற் கேற்காப் பிசிதனை நவின்றேன்
பிழைபொறுத் தாள்வதுன் கடனே. ச.

பங்கய னரன்மால் பண்ணவ ரிமவான்
பந்தனை யேனைமூர்த் திகளுங்
கங்குலும் பகலும் விழைதலைவம் பூத
கருமமு முனையன்றி யுண்டோ
வெங்களுக் கயலோர் புரிபுகர் பொறுப்ப
தெங்களு ளுண்டது பொருவப்
பிங்கல வயிலாய் பரிக்கைபண் ணுதென்
பிழைபொறுத் தாள்வதுன் கடனே. ரு.

மாலயற் கரிய வரையெனத் திமிர்ந்த
மதிக்கிடைத் தாணுவுக் காதி
நாலின்முன் மூல நொடித்தகத் தியற்கு
நுவன்றநற் பரமபுங் கவனே
வேலினுக் கிறையே குறத்திதன் றுரையே
*விணிகவிண் ணவர்கள்பண் ணவனே
பீலியி லவருஞ் சிவபெரு மானே
பிழைபொறுத் தாள்வதுன் கடனே. சா.

விசிடு துளக்க வெகிழியந் தாளா
விண்குடி யேற்றிய வீரா
தாசர்வெம் பவத்துட் டிளைத்திடா வண்ணந்
தடைபுரிந் தாளரு ளாளா
வாசைகொள் பாழ்த்த நினைப்பினுள் ளயர்வே
னதிகமு மேழையே முனிந்து

* விணிகம்=ஒளி.

பேசிய நீதா னெனைக்கைவி டாதென்
பிழைபொறுத் தாள்வதுன் கடனே. ௭

அடியவர்க் கெளியா னென்றுனை முதுநா
லனைத்துநன் கெடுத்தெடுத் ததிர்த்த
படியெனை யொருதொண் டாயெண்ணி யிதுநாள்
பணித்ததி னில்லெனச் சொனதாற்
கொடியவ னெனினுந் தவக்கமில் லாமற்
கூடுவ னுன்னருட் பவுள்ளைசப்
பிடிதவ றுதோர் நிலைகொள்ள வேயென்
பிழைபொறுத் தாள்வதுன் கடனே. ௮

துள்ளுமா மயின்மீ தேறுவின் னவனே
தொழுமடி யார்கள்பி ரானே
கள்ளையார் கழுநீர்த் தொடையிறை நாயேன்
கருத்தைவிட் டகலாக் கருத்தே
பிள்ளைசெய் யடக்கோ தனைத்தையும் பொறுமைப்
பிதாச்சமித் தணைப்பது கடுப்பப்
பிள்ளையென் றுனக்கே யடைக்கல மாமென்
பிழைபொறுத் தாள்வதுன் கடனே. ௯

நேசமுற் றோர்பா னிறையுநல் லறிவே
நினைவினி லெழுந்தொளிர் சுடரே
மாசினல் லருணு சலத்தவ னிறையே
மலரடி பணிகும ரகுரு
தாசனைக் காப்போ னெனனுந் தேவே
சரவண பவசிவ குகனே
பேசிய பேச்சா ஞனிங னிழைத்த
பிழைபொறுத் தாள்வதுன் கடனே. ௧௦

# உள்ளக்களி.



வேறு எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

விளங்காய், கருவிளங்காய், கருவிளங்காய், கருவிளங்காய்,
கருவிளங்காய், கருவிளங்காய், கருவிளங்கனி.

கடல்சுலவு நிலயமிசை மகளிரகல் குழியிலொரு
கடவைவழி வழுவவென வருமனிதனைக்
கடவுள்சுத ரெனுமிழிவு புரையவொரு குறைவிழிவு
கழறவழி யெவளவுமில் கடவுண்மகனாய்
மிடன்மகிமை யொளிவடிவ மிளிரவெளி வருமுருகை
விகிர்தமற வெனதுமன நினைநிலைமையா
னடலைகெட வவலநசை யுழலைகெட விதலைகெட
நவிலரிய பரமசுக மதையடைவனே. ௧.

திரிநகர மெரியவெதிர் பகவவுண னியமனொளிர்
தினகரனை விறுமதன னயனவன்மகன்
கரியசுரன் வலியசிறு விதியிளவ லிவர்களுபர்
கறுவமற முறுகிவிற லணி*கலிசமார்
முருகிதழி கிளுவைவிள வணிபரம சிவனுடைய
முருகனென வருமறைகண் முரசமறையு
மொருவனென திதயமல ருளனினியொர் விளரியிலை
யுறுவதவ னரியவிணை யடியினிழலே. ௨.

வருகைசெல வெனவறையு மிருதிறமு மிறுதியுற
வளர்மவுன வொருமொழியை யருளுமிறையோன்
பரிபுரமு மிறைமணியு மளமளென வொலிதரவொர்
பசியசிகி மிசையுலவு பவுள்சுடையகோன்

* கலிசம்=வன்னி.

கருமுகையு நெளிபணமு மிலையுமலை மகளுடைய
கரமுருக னறுதினமென் மனதிலுளதான்
மருவலர்கள் பகைமையிலை யுறவலுறு பிணிகளிலை
வறுமையிலை யுறுகணிலை மடமையிலையே. ௩.

பைந்துளவ மவுலியும மனுமிடைய வருநறிய
பனிமலர்கள் கொடுபுசனை புரியவளர் தேக
வுய்ந்திடவுள் கிருடிகளை லுபநிடத மவுனமுள
ருயர்மகிமை யுடையவர்க ளினைவிலுளகோ
னைந்துமுக னுருவினிட மிளிரமலை முருகனென
மருளிறையென் மனமதனி லுளனினியோர
நைந்தொழிவு மறமுழுது முதியமல வலியழிவு
நடுவுடைய நமனுருமும் வருவதிலையே. ௪.

முண்டிதமில் சிறுசிகையு மிடையிலணி கவுஷணமு
முழுமதிய மெனமிளிரு முகமுமொருகைத்
தண்டுமுர முறுபுரியு மிளமையுடை யுருவுமெழி
றரவிலக விருடிசுர ரடிகளெவருங்
கண்டுநல னடையவென வமிர்தமழை பொழிபெரிய
கருவிகவி பழநிமலை யுறைபெரியவன்
றெண்டனென வுளவெனது மனதிலுள னிரவுபக
றுணையுமவ னணைவுமவ னினைவுமவனே. ௫.

பன்றிமலை தணிகைமலை பருணமலை யரவமலை
பவனமலை யடிகண்மலை துடவைமலைவா
ஞென்றுமலை மயிலமலை மலயமலை கயிலைமலை
யுறைவிமல குமரகுரு புவனமுழுது
நின்றநிலை யறியவெளி னுனதுருவை யறிதியென
நிகமமெனு முதுமறைகண் முறையிடுதலா

லென்றுமவ னருள்வலிகொடேனதுருவையறிதல்பெரி
திலையெனுமொருயர் துணிவி லடிமையுளனே. ௬.

பொருவுமிலி திரிபுமிலி மருளுமிலி தெருளுமிலி
புகழுமிலி வசையுமிலி நசையுமிலியோ
ருருவுமிலி யருவுமிலி யுருவருவு மிலிநுவலு
முறையுமிலி கறையுமிலி வெறுமையுமிலி
குருவுமிலி குடியுமிலி குலமுமிலி பெயருமிலி
குணமுமிலி சினமுமிலி துணையுமிலியென்
றருமறைக ளவில்பெரிய பொருள்குமர குருவெனவு
மறியுமென திறையுணர்வு நிறைவையுறுமே. ௭.

கருதரிய வொருநிலையி லிரவுபக லிலைவலிய
கனுடனொடு சுகிர்தமிலை யிசிரமிலைநீள்
பெருமையொடு குறுமையிலை யகநடுவு புறமுமிலை
பிரிவுமிலை விழைவுமிலை மறதிநினைவா
மிருவகையும் வருதலிலை யெனமறைகள் புகலுமதை
யெனமருவு பரமகுரு வெனுமுருகவேள்
கிருபைகொடு சமநிலையை யணவியெனை யணவியுள
கிருதியற வுகளமற வடைவனினியே. ௮.

உயிரினுயி ரெனமருவு குமரகுரு பரனெனுடை
யுளமதனி லுளனினியவ் வரியவிறைவற்
கயர்வி*லளி திருவுதக †மமைதிமல யசமலர்க
‡ளனுவநில நறை§யறிவு சுடருணருயிர்

* அளி=அன்பு. திருவுதகம்=திருமஞ்சனநீர்.
† அமைதி=சாந்தம். மலயசம்=சந்தனம்.
‡ அனுவநிலம்=பிராணவாயு. நறை=நறும்புகை.
§ அறிவு=ஞானம். சுடர்=தீபம்.

நயமுடைய *வவியெனவு †மமையமற வுறுதினமு
நனக்குழந்தமொ டயருமுறை தனிலெனது பாழ்
மயலொழிய வியல்பொழிய வுதயமொடு விளிவொழிய
மலரகித மழுதகல்ல தனையுறுவனே. கூ.

பிந்துதிற நவிலவுள வுலகினடை தரவரிய
வொளவரத வுயிர்களுயி ரெனவுமுயிலி
மந்திரை செனவுநிறை யமலனருண் மயவனக
வளிசனவி சமநுவிக ரகிதவசித
விந்தைதமிக வுளவருண கிரிதமிழ்ழி னிரதநாகர்
பிகையிற்செவி யினவொனுமெ னிறையருளினென்
விந்துமட மொழிவடைவ வெனையடைவ னருளடைவன்
பிரமல பரமகதி யினையடைவனே. க0.

---

## திருவுயர்ந்தவாறெழுத்தான்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருவுயர்ந்த வாறெழுத்தான் மேலும் வேறோர்
தெய்வமுள தெனுமார்க்கி களையு நாளும்
பொருவிகந்த குருபரத்தை நீத்து மாந்தர்ப்
புகழுதமப் புலவரையு முறைமை மாறிப்
பரவுமடக் குருக்களையும் பசுபா சங்கள்
பகர்ந்துதெய்வ மிலையென்பார் களையு நான்று
னிருமையிலு மதித்திடே னவரை வேட்போ
ரெவரெனினுங் கரங்கூப்பி யிறைஞ்ச வேனே. க.

---

* அவி = நைவேத்தியம். † அமையமற = இன்னகாலமென்றில்லாமல்.

தந்நலத்துக் கெனவணையுந் தந்தை தாயுந்
தம்பெருமை குயில்படிற்றுக் குருக்கண் மாரும்
பொன்வரவுக் கெனவடுத்த வுறவு மீண்டுப்
பொருத்தமுள்ள புரிவுடைய ரல்லர் நீங்கா
வன்பில்விரிந் தருள்பவனைச் சுவர்க்க ரேத்து
மனைத்தினுக்கு மாதிதந்தை தாயாய் நின்றோ
ரின்சொலரு ளறுமுகனைப் பரசு வாரை
யிறைசனகன் றாயுறவென் றிறைஞ்சு வேனே. உ.

மாறாத விளமையனைக் குறமான் முன்னே
வளர்வேங்கை யானவனை வடிவே லானை
வீறேறு சிவகணங்கள் சூழப் போந்து
விதர்ப்புவிளைத் தடல்வாகை சூடி னானை
நீறேறு மேனிமிளிர் நுதற்க ணானை
நீபநறு மிருகமதங் கமழ்மெய் யானை
யேறேறு மிறைகுருவை யேத்து வார்க
ளெவரெனினுங் கரங்கூப்பி யிறைஞ்சு வேனே. ௩.

ஐயனெனும் பரமசிவ னுவகை பூத்தன்
றளித்தபடை யரசாகு நெடுவே றாங்கு
கையரசைக் கருள்கிழும் பெரியோன் றன்னைக்
கயிலைநடை யுடையானைக் கருணை யானை
நைவுறுதல் கண்டெனது கண்ணீர் மாற்று
நயனமொரு முந்நான்கு முடைய தேவை
யெய்தரிய வீடளிக்குங் குகனை வேட்போ
ரெவரெனினுங் கரங்கூப்பி யிறைஞ்சு வேனே. ச.

சாமிமலை தனில்வதிந்த பன்னி ரண்டு
சகத்திரவே தியர்களையுஞ் செந்தூர் மேய

நேமவிரண் டாயிரமெய் யன்றாயு மாளோர்
நித்தியனைக் கபிலர்முதல் யோகத் தார்க்குச்
சேமமுடைத் திரிமூர்த்தி களையுந் தன்பாற்
றெரியநனி காட்டியவோர் சேயைப் புற்கான்
மாமுனிவன் பணிகுகனைப் பணிவோ ரெல்லா
மகியின்மிசை யான்வணங்கு மாண்பு ளாரே. ௫.

சதுர்முகர்சக் கிரபாணி யநந்தர் நந்தி
தத்தரெழின் மாலியெனு மாறு பேர்க்கு
முதமுடைய பிரமேந்த்ர னெனுஞா னிக்கு
மூதுலகா ணித்தியநா தனுக்கு மேசி
லிதமுடைய சொன்னகுத்த னெனுநாய் கற்கு
மேதமிலா வேளாள வசுமந் தற்குங்
கதியருளிச் செய்தகுகற் றொழுவா ரெல்லாங்
காசினியி னுன்வணங்குங் கடவு ளாரே. ௬.

பழநிமலைப் பாழிசெய்த சேரர் கோற்கும்
பழுதறுசித் திரசேன் வரைய னுக்குங்
கிழமையுடைக் கோசிகனும் பூசு ரற்குங்
கிருபைகெழு குகனென்னும் வேடர் கோற்கு
மெழின்மல்கு சுகப்பிரம முனிக்கு மேனு
ளிணையில்கதி யளித்தபரப் பிரம சேயின்
கழல்களையுட் கருதிடுவா ரெவரா னுனுங்
காசினியி லவரெனக்குக் கடவு ளாரே. ௭.

வாசுகியி னுடல்வருத்தந் தீர்த்த தேவை
மாபாவ மைந்துஞ்செய் யொருவற் குற்ற
மாசுதபுத் தநுக்கிரகஞ் செய்செவ் வேளை
மாதொருத்திக் கவள்கணவ னறுத்த கையை

மோசமின்றி வளரவருள் புரிந்த சேயை
முரட்டுளிறு கொன்றொருபுத் திரனைக் காத்த
தேசயிலன் றனைவிழைவா ரெவரா னாலுந்
திருமலிந்த வவரெனக்குக் கடவு ளாரே. அ.

பொற்கனக சுந்தரிபென் பாளுக் குற்ற
புரவிமுக மாற்றியெழின் முகந்தந் தானைக்
கற்பனவெல் லாங்கற் றும் பொய்யென் றோதிக்
கர்க்கபமாப் பிறந்திறந்த பார்ப்பா னுக்கு
நற்கமலத் தயனுலகங் கொடுத்த கோனை
நலனின்றிப் பாவத்தின் மூத்தி றந்த
வற்பமிலேச் சற்குமடி யளித்தோ னைப்பே
ணடியவர்க ளாரெனினு மவர்மிக் காரே. கூ.

செந்தமிழைச் செவிமடுத்து மகிழுந் தேவைத்
திறலிடும்ப னுயிர்முருக்கி யெழுப்புந் தேவைப்
புந்திநிறை வுடையருண கிரிசூழ் தேவைப்
புகரிகந்த காவருடங் கடக மாதம்
வந்தவொரு புகரிரவிற் பழநிக் கோவில்
வரவிஞ்ஞான் றருளவில்லை யருள்வே மந்நாள்
பந்தமற வருதியெனப் பணித்துப் போந்த
பண்ணவனைப் படர்பவரெம் பரமர் தாமே. க0.

---

## அடியவர்க்கடிமைநாம்.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மறைமலி காழி யோனு வுக்கரையர் சேம
மதிகொண்ட நாவ லூரர்

பொறைமலி சண்டி பூச னமிநந்தி முருகர்
புகழுடைத் தண்டியடிக
ணிறைமகி நீல நக்கர் சோமாசி கலயர்
நேயவப் பூதியடிக
ளறிவொடு நேடி நின்ற வருளார் குமேகச
னடியவர்க் கடிமைநாமே. ௧.

புகழ்த்துணை மானி செங்கட் சோழருயர் வாய
பொற்றையிடங் கழியர்கம்பர்
புகழ்க்கழற் சிங்கர் தூய நேசர்மெய்ப் பொருளர்
புகழ்ச்சோழன் *மலையனெண்மை
திகழ்சிறப் புலிகு றும்பர் கணநாதர் திவ்ய
திருமூலர் விறன்மிண்டனா
ரகமதி னேடி நின்ற வருளார் குமேகச
னடியவர்க் கடிமைநாமே. ௨.

நரசிங்க முனையர் மூர்த்தி யெனாதி கலியர்
நலனின்ற நெடுமாறனார்
வரம்விஞ்சு சடையர் கூற்ற ரமர்நீதி யன்பின்
மதர்சேரா யடிகள்கோனார்
பரம்விஞ்சு சத்தி மூர்க்க ராளுடை யுருத்ர
பசுபதிப் பெயரார்பரிவா
லரனென்று நேடி நின்ற வருளார் குமேகச
னடியவர்க் கடிமைநாமே. ௩.

இயற்பகை நாளைப் போவார் வாயில்லார் மாற
ரிசைஞானி கண்ணப்பனார்
தயைப்புகழ் திருக்கு றிப்பர் கலிக்காமர் காரி
தாயரருள் கொள்கோட்புலி

* மலையன்=சேரமானயனார்.

கயற்கணைம் பேயர் நாகை யதிபத்தர் மானக்
கஞ்சாற ரெறிபத்தனு
ரயிர்ப்பற நேடிநின்ற வருளார் குகேச
னடியவர்க் கடிமைநாமே. ௪.

செருத்துணை சிறுத்தொண் டண்ணல் கிழநீக்கு நல்ல
திருநீல கண்டருளே
பெருத்திட விளங்கு தண்டி யெல்ல பாணர்
பிழையறு குலச்சிறைநெடுந்
தருக்குறு கணம்பு லார்மா முனையடுவா ரேசில்
சாக்கிய ருயர்ந்தவன்பா
லரிப்பற நேடிநின்ற வருளார் குகேச
னடியவர்க் கடிமைநாமே. ௫.

பரமனைப் பாடு வாரெந் நாளும் புகழ்ந்து
பணிபவர் மனத்தையவனின்
மருவவைப் பவர்க ளாரூ ருதயஞ்செய் யன்பர்
வழுதற்ற புலவரறவோர்
முருகுடை மேனி தீண்டு பவர்சாரு மடிகண்
முழுநீறு பூசுமுனிவ
ரரனொடு நேடி நின்ற வருளார் குகேச
னடியவர்க் கடிமைநாமே. ௬.

சேந்தனர் கண்ட ராதித் தரஞ்சேதி ராயர்
திருவாலி யமுதரமுத
மாந்துபுரு டோத்த மப்பே ராளர்கரு வூரர்
வாய்மைமேவ னுடையரார்வந்
தீந்தகா டவர்கள் கோனற் றிருவாத வூரர்
திருமாளி கைத்தேவரொன்

ருந்தனையு நேடி நின்ற வருளார் குகேச
　　னடியவர்க் கடிமைநாமே. ௭.

பிடித்திடு தண்டு குந்தஞ் சரிகைமுச் சூலம்
　　பிரபாவ மோடியங்க
மடக்கொடி வள்ளி பங்கன் மணநீ றணிந்து
　　மயிலேறு மெங்கள்பரம
னடித்திடி னகத்தி னுள்ளே நடுவான சண்ட
　　ணடமாட வருவதேதென்
றடிக்கடி நேடி நின்ற வருளார் குகேச
　　னடியவர்க் கடிமைநாமே. ௮.

முனைதருஞ் சூர னோடன் றமர்செய்து கொண்ட
　　முருகவே ளெங்கள்பரமன்
பணியுறு கடம்பு நீல முடிமீ தணிந்து
　　பலகாலு நெஞ்சினடுவே
கனைகழல் சிலம்ப நாடக ஞ்செய்யின் வந்து
　　கவிபாத கங்களிலையென்
றனுதின நேடி நின்ற வருளார் குகேச
　　னடியவர்க் கடிமைநாமே. ௯.

கொடுநிழ லவிய வந்த குறையோவ வின்பு
　　குறையாத பேறுமுறவே
வடிவுறு கவிகள் சொன்ன வருணகிரி யென்று
　　மறவாது கொண்டசரணங்
குடிகொளவு ளஞ்சி யஞ்சி யிவைபாடு கின்ற
　　குமரகுரு தாசனுரு
மடியடைய நேடி நிற்கு மருளார் குகேச
　　னடியவர்க் கடிமைநாமே. ௧0.

# ஆரணத்திறுதி.

## ஆசிரியத்தாழிசை.

ஆரணத் திறுதிதா னகிலமுஞ் சிவனுங்
காரணப் பரமதும் பொய்யெனச் சாற்றிநிங்
காரணம் போதமங் கலின்மறைந் திடுதலால். க.

அகிலமே மாபாசமென் றுமதிச் சிவனை
பசையுயிர்த் தத்துவம் பரமுருக் கேவரா
முகளமா வெண்ணிடி னெடுக்கமெய் தாதரோ. உ.

நிசசிவந் தானென நினைக்கினும் விகற்பமா
மசிபதத் தைக்கிய மிரண்டுமின் றொன்றுமின்
றசிதநற் றேனுணீ யொப்பநின் றுணர்தியால். ௩.

நினைவிருந் தாலுறு துயர்நிரு விகற்பமா
னினைவிருந் தாலுறு துயர்நிறை வுடைச்சுக
நினைவிருந் தான்மலப் ராணனு நிகழுமே. ௪.

நினைவிலா நிலையிலே நிசவிழி விளங்கிடு
நினைவிலா நிலையிலே யுயிர்பரம் விளங்கிடு
நினைவிலா நிலையிலே நினைவிலா நினைவரோ. ௫.

நினைவிறந் தாலநு னிருவிகற் பஞ்சக
நினைவிறந் தாலநு னிருவிகற் பம்பசு
நினைவிறந் தாலநு னிருவிகற் பம்பரம். ௬.

இம்முடி புணர்ந்திடா திடும்வழக் கிழிவழக்
கிம்மகி சுழுத்தியி லிருந்துமுண் மறைதல்போ
லம்மதி நிலைக்கனு மெனத்தெளி யகத்துளே. ௭.

ஆதலா லகிலமோ டுயிர்பரம் பொய்யெனு
வோதலும் பதிபசு பாசமங் குண்டெனப்
போதசித் தாந்தநூல் புகறலு மிணங்குமே. ௮.

அழுக்ககன் றோர்சிவ மடைந்திடா வுயிர்களை
விழுப்பொரு ளெனச்சொலல் விகற்பினும் விகற்பென
வழுத்திட வயிர்ப்பிலை மதித்துநில் லுள்ளமே. ௯.

கனலிகண் ணிழல்கொளல் கடுப்பமுக் கட்டையு
நினைவையும் விழுங்கியே நிருவிகற் பப்பலன்
றனையிடற் கருணையன் சாமிதா ணம்பிடே. ௧0.

---

## சிவலோகசுந்தரமாலை.

தரவுகொச்சகக்கலிப்பா. பண் - பழந்தக்கராகம்.

பரிதிமதி சேயரிபொன் பளிங்குசனி பாம்புகளும்
விரிதலைநாள் வேளைகளு மிகையடுநின் னடியவர்கட்
குரியநலம் புரியுமன்றி யொருபோழ்தும் படர்புரியா
தெரியலருந் தொண்டிழைப்பார் சிவலோக சுந்தரனே. ௧.

பத்தருக்கும் யோகிகட்கும் பரமசிவ ஞானிகட்கு
மித்தையிலா மெய்யருளாம் வெறுக்கையளித் தாளிறைநீ
பித்தனென்னை யாளாமே பீடையில்வைப் பாயோவென்
சித்தவிளை வைக்கவருஞ் சிவலோக சுந்தரனே. ௨

எத்தனையோ தெய்வவகை யெத்தனையோ செய்கரும
மெத்தனையோ தொடர்மார்க்க மிப்புவியி லேயுளநீ
யத்தனையும் வேண்டாமே யருணெறிகா முறவிழைத்த
சித்திரத்தை நான்மறவேன் சிவலோக சுந்தரனே. ௩

கல்லிரும்பு களில்வலிய கடுவாபிர மாமனதை
நல்லருளே நாடவென நசுக்கிவிட்ட கருணையினு
லெல்லிரவு மிருவிழியு நீரரும்ப வுளமேயேயன்
செல்லுமள வுனைமறவேன் சிவலோக சுந்தரனே. ௪.

நியமன வாக்குடம்பிற் செய்தமறத் தான்மலமுண்
ணுயினுங்கே டாயவெனை நண்ணிவந்த பெருங்கருணைத்
தாயமதை நான்மறக்கத் தகுங்கொல்லோ தாசர்பவந்
தீயவரு ளெரிமூட்டுஞ் சிவலோக சுந்தரனே. ௫.

பெண்டுபிள்ளை யாசையெனும் பேய்பிடித்திங் காட்டாது
ஆண்டுசெய வென்றெனுளே தோன்றியகோ ராத்திரமுந்
தொண்டரறை யுன்பெருமை சொல்லவைத்த வுனைமறவேன்
றிண்டறுகண் ணுளாநற் சிவலோக சுந்தரனே. ௬.

மின்னனைய விந்நேகமி வேட்கையெனும் பொய்வாழ்வை
யுன்னியுனை யுன்றுதிங் கூழிழந்த நான்வாழ்வா
னுன்னியிது நாளிழுக்க வுற்றதய வினைமறவேன்
றென்னிலங்கு தேசுடையாய் சிவலோக சுந்தரனே. ௭.

சக்குவிய நாசிசெவி தாலுவெனும் பாவிகளுக்
கெக்கா லு முறியாய வென்னைவிடு வித்தாண்ட
பக்கமதை நான்விலகப் பார்ப்பேனே கண்பாராய்
சிக்கமறு செல்வமலி சிவலோக சுந்தரனே. ௮.

எண்ணரிய வேசுடைநா யேனையொரு பொருட்படுத்தா
நண்ணிவரு மன்புருவெஞ் ஞான்றுநிலை யாகவுள்ள
புண்ணியனே யுனைமறக்கப் புந்தியினி யொருப்படுமோ
திண்ணிய கணங்கடொழுஞ் சிவலோக சுந்தரனே. ௯.

பொருவிறந்த வறிஞருநாப் போதகமெத் துணையுமின்றி
மருளிருந்த விருதயமே மலியநின்ற நான்வாழ்வான்

பெருகுமன்பை யுன்மீது பெருக்கிவைத்த வுனைமறவேன்
திருவிருந்த வெழினிலவுஞ் சிவலோக சுந்தரனே. க0.

விண்டுவிதி சதக்கிருது விபுதரிருந் தவமுளருங்
கண்டுகளிக் கறகரிய கதழ்வுகெழு நீயெனையுந்
தொண்டுகொளற் கென்னதவஞ் செய்தேனோ தொன்மையினிற்
றெண்டனிடு வார்பரவுஞ் சிவலோக சுந்தரனே. கக.

நாளவனீ நாளனைத்து நமனுடைய நாளெலாவே
நீளுளத்தி னினையாது நிலையழிந்து மதிமருண்டு
மாளுமனக் குருடரதர்க் கெனையயலா வைத்துளபுத்
தேளெனுமுன் னடிமறவேன் சிவலோக சுந்தரனே. க௨.

மன்னுலகி லொருபோது மறந்துவிடி னப்போது
பின்னரெய்தா தென்றோர்ந்த பின்னுமடி யேனுன்னை
யென்னவிதம் பொச்சாந்திங் கிருக்கமனந் துணிவனந்தோ
தென்னவிரு மெம்மானே சிவலோக சுந்தரனே. க௩.

இருக்குநிலை நிற்குநிலை யிருகுவளை துஞ்சுநிலை
மிருத்திகைமே னடக்குநிலை விழிசெவிவாய் வினைகொணிலை
நிரப்பினை வுண்ணுநிலை நினைநினையச் செய்துளவுன்
திருக்கருணைக் கென்மாறு சிவலோக சுந்தரனே. க௪.

மெய்வாழ்வு வேண்டாமல் வினைகுழுமு மிப்புடவிப்
பொய்வாழ்வுக் காசைசெயும் போக்கினுழை யாதொருநீ
கைம்மாயஞ் செய்ததற்குங் கைம்மாறிங் கொன்றுளதோ
தெய்வமெலா நனிதுதிக்குஞ் சிவலோக சுந்தரனே. க௫.

எட்டெழுத்தை யியன்மொழியாச் சேர்க்கவறி யாவெளியேன்
பாட்டினுனைப் பழிச்சவொரு பாக்கியமும் பெற்றதன்றி
வீட்டைநினைந் தினிதுய்ய வியனுணர்வு முற்றேனுன்
சேட்டவரு ளுரிமையினாற் சிவலோக சுந்தரனே. க௬.

பதகரின நாடாது பலகதைகள் பேசாது
சததமுனைப் புகழவந்த தன்மையினிக் கைவிடுமோ
மதலைதவ ழாழிசுலா மகிபடைத்த கம்மியனே
சிதலைதவிர்த் தெனையாளுஞ் சிவலோக சுந்தரனே. ௧௭.

குத்திரமு மழுக்காறுங் குழுமுமிந்தக் கலிநாளிற்
பித்தனெனை யாளவந்த பெம்மானே யெம்மானே
நித்தனுநா னுனைமறவே னீநானென் றேயுளவோர்
சித்திரத்தைக் காட்டியருள் சிவலோக சுந்தரனே. ௧௮.

கற்றதையுங் கேட்டதையுங் காடுகொண்டு போகாதன்
புற்றுநினைச் சந்ததமு முன்னவந்த வாக்கநலம்
பெற்றதுபோ லடியுறைவும் பெறச்சிறிது பார்த்தருடி
செற்றமிலாச் சிவக்கொழுந்தே சிவலோக சுந்தரனே. ௧௯.

பத்திநெறி படர்ந்தேருர் பயம்பயமென் றேமடிவார்
சித்தியுளோர் தெளிவேறிச் செயஞ்செயமென் றேசேர்வார்
கத்தியனு தினங்களைந்து கருதுமெனைக் கண்பாராய்
சித்தமிசை குடிகொண்ட சிவலோக சுந்தரனே. ௨0.

அறியறிவுக் கறிவாகி யதற்குமுதற் பொருளாகி
யறியறிவுக் கெட்டாவோ ரரங்கமமர் சோதியுனைக்
குறுகுசமா தியிலெனைநீ கொண்டணைப்ப துன்பரமே
சிறியேனைத் தேடிவந்த சிவலோக சுந்தரனே. ௨௧.

மாறாத யாற்றுவெள்ளம் போலெனது மனதைநறும்
பேறுறு நினதடியிற் பெருக்கிவிளை பேரின்பம்
வீறுற நுகராதிங் குய்வேனே மெய்யறிவின்
சேறுறு மனதரவாஞ் சிவலோக சுந்தரனே. ௨௨.

நன்னயஞ்சால் பழநிநக நாடிநின்ற வெனைத்தகைந்து
சொன்னவணை மேவிளிக்கத் தொழும்புடையேன் காண்வருநா

ளின்னதென வறியேனே யெளியேனின் களைகண்ணே
தென்னடியார் திருமுதலே சிவலோக சுந்தரனே. ௨௩.

நாறுமிந்தப் புலையாக்கை நலியாதிங் கொருவேளைச்
சோறருந்து தொல்லையுமே தொலைந்துதிரு வருளானே
யூறடங்கி யுய்யமுடை யுடன்மென்மை யாவதெந்நா
ளீடேறுநனைப் புரந்தருளுஞ் சிவலோக சுந்தரனே. ௨௪.

காணுமறி வாயவெற்குக் காட்டுமறி வாயுளநீ
காணவெனக் காட்டாயேற் காண்டகைமை யுண்டாமோ
பேணுமரு ணல்கியெனைப் பிரிவினிலை வைத்தருடி
ணமிலாப் பெருந்தகையே சிவலோக சுந்தனே. ௨௫.

உயிருடம்பை நியதிசெய்தவ் வுயிரினுயி ராயிருக்கும்
வியன்பொருளா முன்னையிவன் மேவியென்று நிராமயமாச்
சுயம்பிரம சேதனமாச் சுகர்போலப் பூரணமாச்
செயிரின்றி நிலவவருள் சிவலோக சுந்தரனே. ௨௬.

தந்தைசுத னேயென்ற தருணமவ னேனேனென்
றந்தமொடு செடிமரங்க ளதிர்த்தனவா லமலமுத்தி
பெந்தமிலா நிறைவதனைப் பெற்றவரு மெண்ணிலரே
சிந்தைமகிழ்ந் தருள்வதெந்நாள் சிவலோக சுந்தரனே.

காரணந்தா னிருப்பவிளை காரியக்கோள் கெடுத்தந்தக்
காரணத்தை நானறிந்து கணனமிடற் கொண்ணுச்சம்
பூரணத்தை யெய்தவருள் புரிவதினி யென்றோநற்
சீரணைந்து முள்ளவனே சிவலோக சுந்தரனே. ௨௮.

சைவமெனுஞ் சொற்சிவசம் பந்தமெனப் பொருடரற்கோ
ளையமிலை யாகலினுன் னடியேனஃ தின்றுலகிற்
சைவனெனச் சாற்றவொரு சற்றுமொவ்வா தெங்களையா
டெய்வமுதால் சைவஞ்செய் சிவலோக சுந்தரனே. ௨௯.

சுமதியுடை யருணகிரி தோத்திரித்த மாட்சிமையே
குமரகுரு தாசனுக்குக் கோதிலரு ணீட்டிறையே
சமரசசு பாவநிலை தனிலமருங் குகதேவே
திமிதநிலை தந்தருளாய் சிவலோக சுந்தரனே. ௩௦.

---

## பணமென்றால்.

### கலிநிலைத்துறை.

பணமென் றற்பிண முந்துவன் டெழுமெனப் பாரிற்
குணமு ளார்தரு மொழியுமொன் றுண்டது குறிக்கி
னுணர்வி லாவதி னுன்பெருந் திருவரு ளுணர்வு
மணமி லாரெலா மயங்குவ ரென்குரு மணியே. க.

பொன்னி றைப்பிர யோசன மொருபொழு தேனு
மிந்நி லத்திலெய் தாக்*கடி களுமதி லிருக்குந்
தன்மை யுள்ளன வேலதி றைப்பலன் சாரு
முன்ன மாநுடர் விடுவர்கொல் பொன்னசை யுரியோய். உ.

பொருள வாவினர்க் கிருவகைப் பந்தமும் போமோ
வருளு மேவிடு மோபொரு ளாசையி னாலே
கருது பாவமுஞ் செய்கிற பாவமுங் கணிக்க
வொருவ ராலிவ ணாகுமோ மாமயி லுகைப்போய். ௩.

இரவி னித்திரை யின்மையும் பகலெலா மிளைப்புந்
தரவி ருப்பது மீனனை முடனைச் சார்ந்து
பரவிப் பஃறொழில் பார்த்திடப் பழிதொழி லெல்லாம்
புரியச் செய்வதும் பொருணசை யேபரம் பொருளே. ௪.

---

* கடிகள்=பேய்கள்,

அறிவி லாப்பொருள் வாழ்வினை விரும்பிடு மகந்தா
னறிவி னாரருள் வாழ்க்கையென் றாதிருந் திடுமோ
வறிபு லால்விழிக் கருடெரி யாவறி தாலே
யவிறி லோங்*கயிர்ப் பேயதை நீத்ததென் னரசே. ௫.

நல்வி வேகிகள் பெருமவிங் கதிகமு நாட்டார்
கல்வி கேள்விக ளுயர்தெய்வம் வழிபடு கருமம்
பல்வி வாதம் விடாப்பிர சங்கமென் பவைக,
டொல்வி னோத புவிப்பயன் கருதியே தொடர்வார். ௬.

தொடரு மன்னவ ருட்சிலர் தொன்னிலம் புகழப்
படரு வார்சிலர் மறுமையிற் பலிக்கவென் றயர்வா
ரிடரி லாச்சில ரன்பினா லீட்டுவ ரிவர்க்கே
கடவு ளன்றிபா ராட்டுத லெனக்குமோர் கடனே. ௭.

உலக வாழ்வினை நீத்தருந் துறவற முறுவோர்
சிலவ ரேயவ ருட்சிலர் தேகநோவ் வாதி
பலவு பாதிகள் சகிக்கவொல் லாப்பரி சான்முன்
னிலைமை நாடிவந் திடுவ ரெனாதரு ணிதியே. ௮.

துறவி லேசிலர் துன்புகள் சகித்திருந் தானா
மறைவி னின்றெழு வாசனை யான்மன மடங்காக்
குறைவு கொண்டுழி தருவரிக் குறைவினா ளைதயு
முறவெ னெஞ்சுள தோநவி லயிற்படை யுடையோய். ௯.

ஆளு நின்னடி யன்றிமண் ணாசைபொன் னாசை
நீளு மென்குழன் மங்கைய ராசையி னீங்காக்
கோளு ளோர்களு ஞானிக ளோபுகழ் குயின்றோ
னாளு நாடிய தெய்வமே யெனைவளை நபமே. ௧௦.

---

* அயிர்ப்பு=சந்தேகம்.

## முதுமறைகள்.

### எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

முதுமறைகள் புகழ்மணியை முதியர்மொழி யொளிர்மணியை
மூடரறி யாமணியை மோன மணியை
மதர்வுகெழு மாவறிவுக் குருமணியைத் திருமணியை
மதிநடன மன்றமிருந் தவிரு மணியை
நிதமணியைக் குமரகுரு தாசனகத் தசைமணியை
நினைப்பவர்க்கு வீடெளிதென் றிமிரு மணியை.
யிதமணியைப் பரசிவசுப் பிரமணிய மதைநினையு
மிதயரடி மலர்களென் னவிர முறவே. க.

---

## அபிமானமறுத்தல்.

### நேரிசையாசிரியப்பா.

நிலமிசை யாகம நெறியி லேனுங்
கலைமலி நான்மறைக் கடையி லேனு
மிறைநூ லாயவவ் விரண்டினு மேனுஞ்
சிறிது படனஞ் செய்தங் கடவை
திடப்படா துலக மாயையிற் சிக்குபு
விடப்படா தலைவோர் விரதமுள் ளோரைக்
கண்ணுறு காலை யில்லத் திருந்திடிற்
கண்ணக லில்லையேன் கருதின ரென்பர்
துறவிருந் திடினேன் றுறந்தன ரென்ப
ரிறையா லயம்புக் கிருந்து வழிபடி
னிவர்க்கே னைய வழிபா டென்ப
ரவணமாற் றுவிடி னற்றிலென் னென்பர்

சடைமுண்ட மிலையேற் றவமின் றென்பர்
சடைமுண்ட முளவேற் சால்புக்கோ வென்ப
ரோரிடத் திருப்பி னழிப்பற் றென்பர்
பாரிடத் துலாவிற் பசுவலை யென்ப
ருண்டுடுத் திடினமை யொத்தவ ரென்ப
ருண்டுடுங் காவிடி னுறுற்றிலென் னென்பர்
பேசி விளக்கிடிற் பிதற்றலை னென்பர்
பேசா திருந்திடிற் பிறர்க்கென் னென்பர்
விழித்து நோக்கிடின் வெள்முக மென்பர்
விழியா திருந்திடின் விழிக்கிலென் னென்ப
ரற்புத மிலதேல் லருளின் றென்ப
ரற்புத முளதேல் லணிவித்தை யென்ப
ராதலின் மனனே யவனியர் பலவா
றோதிடி வுக்குநீ யுள்ளலை யோது
முறலொழிந் தெப்பா லுரைத்தசன் மார்க்க
முறையி னுனக்கெது பிடித்தமு முயல்வு
முள்ளதோ வவ்வா றுற்றெறங் கடவுளா
யுள்ள குகேசனை யுலப்பி லுண்மையை
யகண்ட பூரண வருட்பெருஞ் சோதியை
யகண்ட பூரண வானந்த வாரியைச்
சொல்லற நிற்குந் தூய வெளியைச்
சொல்லின் மதுரஞ் சொரியருட் கனியை
நினைக்கி னினைந்து நிகழ்ந்து பற்றுப
நினையா தெனீங் கிடுமோ ரியற்கையைத்
திருவரு ளாகிரி சிந்தித்த தேவை
யுருவரு வின்றி யொளியிரு ளின்றிச்
சுத்தசித் தாகச் சூழ்ந்து
சத்திய முத்தி தானடை வாயே. க.

---

## மறைமுடிவு.



அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மறைமுடிவுத் தெளிவாக வாகமத்தின்
முடிபாக வளர்சித் தாந்த
முறணுக வெவ்வகைய சைவருள
ரேனுமவர் முன்னுந் தெய்வங்
கறைகாது சிவனுத லாலவனைக்
கணநாத ராக வுள்ளி
யுறவாடு பவர்க்கெலா நானுமுற
வாதல்கட னெருசே யோனே. க.

அந்தணனு முனையொருகா லவமதித்தான்
விபரீத வறிவா லிப்பூ
வந்தருவுற் றிருப்பாயே லிங்குளர்நீ
பேயேவன் மாய வித்தைத்
தந்திரியோ வெனவினவிப் பலசரசஞ்
செய்துதலை தனிலுங் குட்டச்
சந்தேக மிலையிதனைக் கருத்தடைத்தே தா
மறைவிருக்குஞ் சாமி யானுய். உ.

மூச்சுமன மற்றிருப்பார் வேட்புறு
பராபரமா முதல்வா நீதான்
மாச்சரிய முடையென்றே டிருந்துமதி
தூரமென மறைந்து நிற்ற
லாச்சரியத் தாச்சரிய மேயதனை
யானறிய வருளல் வேண்டும்

பூச்சனிப்பி லாவருண கிரியிறைவ
நான்புகழும் புனித வேளே. ௬.

---

## ஏமவிலேகர்.

### கலிவிருத்தம்.

ஏம விலேகனை யேவல்கொள் வேலோய்
ம்தமலர் நின்னடி சிந்தைசெய் வேற்கு
மாமருண் முற்றிலு மாறிடா தென்னென்
றேமுறு முன்னை விஞுவிலென் சொல்வாய். ௧.

வைய முதிக்துண் மருண்டிதன் முன்னி
செய்த வினைத்தொடர் தீர்ந்திடு காறு
மையிருள் போழருண் மார்க்க முறுதென்
றைய பதிற்புகல் வாய்கொலோ வன்றே. ௨.

கலமணி வேந்தர்செய் கட்டளை தன்னை
நிலமிசை மாற்று நியாயம தேய்ப்ப
வுலகெலா மாளுன துத்தர மாற்ற
மிலைகொலோ நின்னரு ணீதியி லெந்தாய். ௩.

அப்படி மாற்றமு முண்டது கோடற்
கிப்பொழு தன்பவு னெஞ்சிலை யென்று
செப்பிடி னீயுனை நம்பிய சேய்நா
னெப்படி யுய்குவ லென்செய்வ லெந்தாய். ௪.

ஏர்த்தமி ழாலுனை யேபுகழ் வோரைப்
பார்த்தரு டேவ பரஞ்சுட ரோதிப்
பேர்த்திரு வாள னடைந்தவொர் பேற்றிற்
சேர்த்தரு ளாயெனை யுஞ்சிவ சேயே. ௫.

## பராபரம்.

கட்டளைக்கலித்துறை.

காலமே யாவையுந் தந்திடுங் காக்குங் களையுமந்தக்
காலமோ காளையங் கந்தவேள் கையகப் பட்டதென்று
லாலமுண் டோனுமைக் கோதுண்மை மாற்றமுண் டாகலினுன்
பாலனு மென்னையு மூழ்கட்டு மோவெம் பராபரமே. ௬.

# ஸ்ரீ கதிர்காமவேலர்வண்ணம்.

(மடக்கு).*

இராகம் - புன்னாகவராளி.

தானன தந்தனனு தன தான தந்தனனு தன
தான தானன தானனு தன தான தானன தானனு தன
——தானனு தனதன தானனு.

சிருய ரந்தரவேண் மிக நாணு சுந்தரவேண் மலர்
சீத மாமலர் மாலையா னிரு நாலெ னுநவின் மாலையா னுயர்

தேவர்வ ணங்கடியா னழி யாநெ டுங்கடியா னொரு
தீதி லாமுக மாறுளா னுக மாய மாநசை மாறுளா னணி

சேரிரு செஞ்சரணு னடி யார்க டஞ்சரணு னிறை
தேம ருநெடு வாடையா னுரை யேறு மாடக வாடையா னுயர்
——பார்வையா னடியவர் பார்வையான், (ஞ)

* இதனை யமகமென்றுஞ் சொல்லலாம்.

சிமரு வும்பெருமான் மரு மானெ னும்பெருமான் விரி
தேவ மேகமெ னீகைமேய நனி நாண வேயரு ளீகைமேய புரி
கோமிகு மொண்குடையா னிழ லீயு மொண்குடையா னிமிர்
கோழி யேறிய தோகையா னிறை வீசி யாடிடு தோகையா னடல்
சேர்பல்பெ ரும்படையா னொரு போதும் வெம்படையா னதி
திர வேலுடை யானரு வுயிர் யாவு மாளுடை யானரு மறை
——யாணையா னெறியுடை யாணையான், (௨)

ஏருய ருஞ்சிகையான் ரவி போலு மஞ்சிகையான் விற
லேறு தானவ நாசனே யடி யார்கள் பாசவி நாசனே சுக
ஞானநி ரந்தரனே பெரி யார்து ரந்தரனே சிவ
நாத னூர்குரு நாதனே நிரு வாண னூகும நாதனே யரு
ளீதிசு தந்திரமே வுற வீடரு தந்திரமே யயி
லீச னேயெனு மாசிலா தவர் ராச னாகிய மாசிலா னிஜ
——வாகையா னடுகள வாகையான், (௨௫)

ஏனுறு தண்டலையே வரி யார்க தண்டலையே யொலி
யேறு மாதிரு வோடையே மண நாறு தேன்மிக வோடையே மலி
கோடிபெ ரும்புனலே பல கோடி யம்புனலே யுள
கோல மார்கதிர் காமமா ளருள் வேலன் வேதுசெய் காமமா மய
லியல ரம்பனையே யொரு காய்க ணம்பனையே முடி [தமொ
வேயி லாமுது தாதையே யெனும் வாயி னூமொரு தாதையே
——டாடுகோன் வனமிறெ டாடுகோன், (௬)

சாருயர் செங்கழன்மே லிசை யேசெய் செங்கழன்மே லெழு
தாக மாகிய வாசையே கொடு பாச மாகிய வாசையே ஜக
மாமென வென்சுதனை வெளி யேறி யஞ்சுதனை ரிலை
யாடு மாபட நாகமே யிருகோடு நீண்மத நாகமே வலி
சாலுளி யம்புலியே கட மாகொ டும்புலியே வதி
தாப மேகின னேயெனு வியெனுது போயின னேயெனு லிங
——னுவதே தழுதழு தோய்வதே, (இஞ)

தாவில்ப ரங்கிரியே வளர் சாமி யங்கிரியே நினை
சார்பி னலவ னேசிலா மக னயி னனிவ னேசிலா சலை
போல்வன லம்புரிவான் மனு வாழ்நெ டும்புரிவா னுறு [விது
போக மேவமெ யேனையோ ரென வேயெ னுவெணி னேனையா
தானுனு கண்டினுமே நல பான்மது கண்டினுமே னவில்
சாது மாமொழி யானையே கவி னீடு மாமத யானையே விட
——லாவதோ ர்தமெண லாவதோ, (ஐ)

ஊருறை தங்கையரே யணி சார்ச தங்கையரே சொலு
வீரொர் காடமர் பூவைகாள் குயில் காளு லாவிடு பூவைகாள் சிறை
நீடிய கிஞ்சுகமே விளை யாடு செஞ்சுகமே யெவ
ணீள வேகமொ டேகினுன் மக னேது வீரது போகினு னவ
னேடுவி ளம்புவனே வறி தேத ளம்புவனே வுனை
யீரெ னுதுளம் வாடிடா தலை பேய்க ளோடுற வாடிடா கினி
——யேவயா வறவிசை யேவயா, (ஞனு)

ஊறவி லங்கினமே மன மேக லங்கினமே லெதி
ஞலுய் வேளநி யாயமே யிது கூறு மேலொர்நி யாயமே பசி
வாடிவ ருந்தினனே கனி காய ருந்தினனே வெயில் [னெனு
வாடை யாலயர் வேகொள்வா னினி யாவ தேதுயர் வேகொள்வா
மோர்சுர குஞ்சரியா னுரி யோர்சொன் மஞ்சரியா னநு
பூதி மாமுனி யாதிபா ரடி யார்வி டாதகி யாதியா னறை
——யீகவே வலவனடி யீகவே. (௧)

---

## திருமாலைமாற்றுத்திரிபங்கி.

### ஒப்புமைபற்றிவந்த கலித்தாழிசை.

தான தானன தானன தானனா தான தானன தானன தானனா.

௧. மேலமூககுகாசலபாலசீ வேலசாமிதனேவறுவாலசீ
சீலவாறுவனேதுமிசாலவே சீலபாலசகாகுகமூலமே. ௧.

### அடியெதுகைத்தொடைவஞ்சிவிருத்தம்.

௨. மேல மூக குகாசல
வேல சாமி தனேவறு
சீல வாறு வனேதுமி
சீல பால சகாகுக.

### அடியெதுகையோடுஉவெதுகையும், அந்தாதித் தொடையும்பெற்ற கலிவிருத்தம்.

௩. மேல மூக குகாசல பாலசீ
சீல வாறு வனேதுமி சாலவே

வேல சாமி துன்னோவறு வாலசீ
சீல பால சகாகுக மூலமே.

திருமாலைமாற்றுப்பொருள்.—மேல்அம் ஊக - சிறந்த அழகும் பூகமுமுடைய, குக - குகனென்னுந் திருநாமத்தோனே, அசல - சலனமற்றவனே, பால - (யாவையும்) காப்பவனே, சிவேல - காந்தியுள்ள வேலிற்கிறைவனே, சாமி - (பரம) குருவே, துன்னோவறு - துன்மையான நோயற்ற, வால - பரிசுத்தனே, சீசில - சம்பத்துள்ள வறிவாளனே, ஆறுவன்னோ - (எனக்குள்ள பசி - தாகம் - சோகம் - மோகம் - சரா - மரணமெனும்) ஆறுவலிய துன்பத்தையும், சால - போதுமானமட்டும், துமி - அறுத்தருள், சீல-தருமநாயகனே,பால- என்றும் மாறா விளமைப்பருவ முடையோனே, சகா - என்னோடுள்ளவனே, குகமூலமே - (இதயகமலக்) குகையின் மூலப்பொருளே. என்றவாறு. ஏ - அசை.

---

## எரிவனைக்குகன் தசபங்கி.

:o:

பன்னிருசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

நனநன நானன நானன நானன
நானன நானுநந்
நனநன நானு நனனு நனநன
நனநன நத்தனனு.

க. உலகமே லாம்வனே யோமுரு காவயி
லோகைய னேகாவின்
னுலகர வாமா கரனே கறுவலி
லுருவளர் கட்டழகா
நலமலி கேதன நாமுதல் வாதிரு
நாகைய னேகூவின்

னறவணி பூண்மா குரவா குறுகலி
னரகிமிர் கோக்கரியே
யிலகும காமயி லீசுர னேகன
வீகைய னேமாவிண்
ணிறைமகள் கான்மா தரையா மறுவறு
மெரிவளை மற்குகனே
மலமிலர் காணிச மாசுர னேயடல்
வாகைய னேதேவோண்
மதியொலி யானு டிருவே சிறுமையில்
வரமருள் சிற்பரனே. ௧.

அடியெதுகைத்தொடைவஞ்சிவிருத்தம்.

௨. உலகமெ லாம்வளை யோமுருகா
நலமலி கேதன நாமுதல்வா
இலகும காமயி லீசுரனே
மலமிலர் காணிச மாசுரனே.

௩. கறுவலி லுருவளர் கட்டழகா
குறுகலி னரகிமிர் கொக்கரியே
மறுவறு மெரிவளை மற்குகனே
சிறுமையில் வரமருள் சிற்பரனே.

இரண்டடியெதுகை படியியைபுத்தொடை
வஞ்சிவிருத்தம்.

௪. ஓமுரு காவயி லோகையனே
நாமுதல் வாதிரு நாகையனே
ஈசுர னேகன வீகையனே
மாசுர னேயடல் வாகையனே.

## கட்டளைக்கலித்துறை.

ரு. உலகமெ லாம்வனை யோமுரு காவயி லோகையனே
நலமலி கேதன நாமுதல் வாதிரு நாகையனே
யிலகும காமயி லீசுர னேகன வீகையனே
மலமிலர் காணிச மாசுர னேயடல் வாகையனே.

## தரவு கொச்சகக்கலிப்பா.

சு. ஒகையனே காவின் னுலகரவா மாகரனே
நாகையனே கூவின் னறவணிபூண் மாகுரவா
வீகையனே மாவின் ணிறைமகள்கான் மாதனையா
வாகையனே தேவொண் மதியொலியா னுடிருவே.

## கலிவிருத்தம்.

எ. காவின் னுலக ரவாமா கரனே
கூவின் னறவணி பூண்மா குரவா
மாவின் ணிறைமகள் கான்மா தனையா
தேவொண் மதியொலி யானு டிருவே.

## ஒருவிகற்ப நேரிசைவெண்பா.

அ. ஒகையனே காவின் னுலகரவா மாகரனே
நாகையனே கூவின் னறவணிபூண்—மாகுரவா
வீகையனே மாவின் ணிறைமகள்கான் மாதனையா
வாகையனே தேவொண் மதி.

## எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கூ. காவின் னுலக ரவாமா கரனே
கறுவலி லுருவளர் கட்டழகா
கூவின் னறவணி பூண்மா குரவா
குறுகலி னரநிமிர் கொக்கரியே

மாவின் ணிறைமகள் கான்மா தனையா
மறுவறு மெரிவளை மற்குகனே
தேமொன் மதிமொலி யாறு டிருபேர்
சிறுமையில் வரமருள் சிற்பரனே.

வருக்கவேதுறை வஞ்சித்துறை.

௧௦. உருவளர் கட்டழகா
நரநிமிர் கொக்கரியே
எரிவளை மற்குகனே
வரமருள் சிற்பரனே.

---

ஆ திருப்பாடல் - ௮௧௯.

---

வெண்டளையான்வந்த

## பரஞ்சுடர்க்கண்ணி.

—:o:—

### வணக்கம்.

ஆரணமு மாகமமு மங்கிங் கெனைதுபரி
பூரணமாச் சொல்லும் பொருளே பரஞ்சுடரே. ௧.

அறிஞருரை யின்பொருளே யவ்வறிஞர் நாடுஞ்
சிறுமையற்ற சுத்த சிவமே பரஞ்சுடரே. ௨.

வித்தைமுனி யாஞ்சேது மாதவனென் வேதியனென்
சித்தமுணர்ந் தெற்களித்த தேனே பரஞ்சுடரே. ௩.

எப்பா ருளாரு மிறைஞ்சும் பலமதங்கட்
கப்பா லிருக்கு மறிவே பரஞ்சுடரே. ௪.

என்று மருவாக வென்று முருவாக
வென்றுங் குருவா விருக்கும் பரஞ்சுடரே. ௫.

இருவினைக் கட்டொழிந்த வேகாந்த மோன
குருபர மாயசிவக் குன்றே பரஞ்சுடரே. ௬.

பிருந்த மலப்பிணியைப் பேதித்துப் போக்கு
மருந்தீ மருத்து மலையே பரஞ்சுடரே. ௭.

பேரறிவு தோன்றப் பிடித்தபிடி யிற்கிடக்கு
மோரறிஞர் கட்கருளின் பூட்டும் பரஞ்சுடரே. ௮.

அயன்மா லதீத ரறவோர்க்கு ஞான
மயமாய்முன் னிற்கு மணியே பரஞ்சுடரே. ௯.

மாதவர்க ளாறபெயர் கட்கும் வனப்பொதிகை
நாதனுக்குந் தீக்கைசெய்த நட்பே பரஞ்சுடரே. ௧௦.

மூவுலகு மெச்சு முசுகுந்த னக்கிர
தேவனுய்ய நல்லருள்செய் தேவே பரஞ்சுடரே. ௧௧.

ஈனவிட யங்கடவை யெய்தாம னீத்தபார
தீன ரெடுத்தருந்து தேனே பரஞ்சுடரே. ௧௨.

சிறிதும் பெரிதுமிலாத் தேசநடை நாடு
மறிஞ ருளத்தின் பமுதே பரஞ்சுடரே. ௧௩.

மாவடியை நாடி வழிபட்டு நிற்பவருட்
கோவிறனில் வாழுங் குருவே பரஞ்சுடரே. ௧௪.

ஆலடியை நாடி யநுதினமு நிற்குமருட்
கோலவடி யார்கள் குருவே பரஞ்சுடரே. ௧௫.

வாகையடி நாடி மலந்துமித்த முத்தருடைத்
தேகநமு வாதருந்துந் தீயே பரஞ்சுடரே. ௧௬.

தென்னையடி நாடித் தியக்கோய்ந் திருப்பவர்க
டந்நினைவி னிற்குந் தருக்கே பரஞ்சுடரே. ௧௭.

உடையடியை நாடி யுணர்வற்றோர் நெஞ்சத்
திடையுறையு மாநந்த வின்பே பரஞ்சுடரே. ௧௮.

மாட்டடியை நாடி மறவா திருப்போருள்
விட்டி விருக்கும் விளக்கே பரஞ்சுடரே. ௧௯.

ஆட்டடியை நாடி யனுக்துறங்கி நிற்குநரைக்
காட்டிக் கொடுக்கவுள்ள கண்ணே பரஞ்சுடரே. ௨௦.

பரியடியை நாடிப் பகைப்போவ நிற்போர்
கரிசறுக்க வுள்ள கருத்தே பரஞ்சுடரே. ௨௧.

சேவலடி நாடித் தியங்கா திருப்பவருட்
பூவினுறை கின்றவரும் புள்ளே பரஞ்சுடரே. ௨௨.

அடியா மருளை யடைந்தவடி யாருட்
குடியா யிருக்குங் குகனே பரஞ்சுடரே. ௨௩.

என்று யுகரத் திருந்தகா லந்தொடங்கி
யொன்றாக நிற்கு முயிரே பரஞ்சுடரே. ௨௪.

பாவிற்று வாழ்பவர்போற் பாடாது பாடுநர்தந்
நாவிற் குடியிருக்கு நட்பே பரஞ்சுடரே. ௨௫.

தொண்டனேன் சூழ்வதுபோற் றாவின் பெனக்குமெனை
யண்டினவர் கட்கு மருளும் பரஞ்சுடரே. ௨௬.

வெள்ளக் கடன்மீன்போல் வெய்திருந்துஞ் சேராம
லுள்ளொளியா நாளு மொளிரும் பரஞ்சுடரே. ௨௭.

துன்பத் திடையழுத்துந் துன்பச் செயலனைத்துந்
துன்பமென நீக்கத் துணைநீ பரஞ்சுடரே. ௨௮.

பொய்யாகும் வாழ்க்கைதனைப் போக்கி யுனையடைவா
னையா வுனைப்பணிய லானேன் பரஞ்சுடரே. ௨௯.

## பொய்ப்போகநிந்தை.

மட்பூமி மிக்குடையோர் மண்ணிலுற்ற தீவினையை
மட்பூமி கொண்டோ மறுப்பார் பரஞ்சுடரே. ௩0.

தங்கம்பொன் மிக்குடையோர் தாஞ்செய்த தீவினையைத்
தங்கம்பொன் கொண்டோ தடுப்பார் பரஞ்சுடரே. ௩௧.

மாடகூ டங்களுளோர் மண்ணகன்று போங்காற்பின்
மாடகூ டங்கள் வருமோ பரஞ்சுடரே. ௩௨.

தண்டிகைபல் லக்குடையோர் தாம்படும் பாசறையைத்
தண்டிகைபல் லக்குவந்தோ தாங்கும் பரஞ்சுடரே. ௩௩.

சேனைதள முள்ளோரைத் தேடி நமன்பிடித்தாற்
சேனைதளம் யுத்தஞ் செயுமோ பரஞ்சுடரே. ௩௪.

பெண்டுபிள்ளை சுற்றமிகப் பெற்றோர் படுந்துயரிற்
பெண்டுபிள்ளை சுற்றநின்றோ பேணும் பரஞ்சுடரே, ௩௫.

வாய்வலிமை யுள்ளோர் மறலிவிடுங் கட்டளையை
வாய்வலிமை கொண்டோ மறுப்பார் பரஞ்சுடரே. ௩௬.

மந்திரஞ்சாச் சித்திபெற்ற மக்களயர் தீவினையை
மந்திரஞ்சாக் கொண்டோ மறுப்பார் பரஞ்சுடரே. ௩௭.

செத்த வுயிரெழுப்பத் தேர்ந்த மருத்துவருஞ்
சித்தத் தியக்கறுத்துய் வாரோ பரஞ்சுடரே. ௩௮.

கரும்பொன்னைச் செம்பொனெனக் காட்டிடவல் லோரு
மருஞ்சிறை நீங்கியிங்குய் வாரோ பரஞ்சுடரே. ௩௯.

## அருள்வலிகூறல்.

உன்னுமனம் வாக்குடம்பா னுற்ற பவமலையை
யுன்னருட்சம் மட்டி யுடைக்கும் பரஞ்சுடரே. ௪௰.

பாராளு மன்னவர்க்கும் பங்கயவங் காற்கருணை
வாரா துணர்வும் வருமோ பரஞ்சுடரே. ௪௧.

வீராதி வீரரென விஞ்சுபவர்க் குங்கருணை
வாரா துணர்வும் வருமோ பரஞ்சுடரே. ௪௨.

கார்நேர் கவிஞருக்குங் கட்டார் திருக்கருணை
வாரா துணர்வும் வருமோ பரஞ்சுடரே. ௪௩.

சீராருஞ் செல்வத் திருவடிக்கா ருண்யமெற்கும்
வாரா துணர்வும் வருமோ பரஞ்சுடரே. ௪௪.

## பிரார்த்தனை.

பகட்டிப் பகட்டிநிதம் பார்த்திடுமோய் யார
மகற்றி யிருக்க வருளாய் பரஞ்சுடரே. ௪௫.

துக்க மெனுந்திடரைத் தூற்றிச் சமனுக்கு
மக்களையே மாப்பை யளியாய் பரஞ்சுடரே. ௪௬.

பெண்சாதி பிள்ளையெனும் பித்தேறிச் சாகாமற்
கண்சாடை செய்தே கடத்தாய் பரஞ்சுடரே. ௪௭.

பெண்ணேணக்க மென்னும் பிசாசம் பிடித்தலைத்துப்
புண்ணாக்கா வண்ணம் புரப்பாய் பரஞ்சுடரே. ௪௮.

ஆகாக் கவலையெல்லா மாகாம லேசாவ
வாகுங் கவலை யருளாய் பரஞ்சுடரே. ௪௯.

முக்கால முந்தெரிந்து மோன மதுவருந்தற்
கெக்கால முந்துணையா யெய்தாய் பரஞ்சுடரே. ௫௰.

அபமிருத்துக் காலமிருத் தாமிரண்டுங் காணாச்
சுபவிருத்தர் கூட்டருளைத் தூண்டாய் பராஞ்சுடரே. ௫௧.

பிறப்புளதேற குண்டலிபாற் பேணவளி யின்றேற
சிறப்பிலருட் சத்தியிட மீயாய் பராஞ்சுடரே. ௫௨.

மாயா மனத்துடிப்பு மாயும் படிக்கெனொரு
தாயான வன்மையினித் தாராய் பராஞ்சுடரே. ௫௩.

இந்திரியப் பேய்களெனைத்தொந் தரிக்காமற்
சந்ததமு நன்னிட்டந் தாராய் பராஞ்சுடரே. ௫௪.

என்னேறி யுள்ளே யிருக்குங் கவலையெல்லா
மண்ணாக வுள்ளே மடக்காய் பராஞ்சுடரே. ௫௫.

அறன்கடை வேட்கை யவித்துநடு நோக்கி
உறங்கியுறங் காதிருக்க வுன்னாய் பராஞ்சுடரே. ௫௬.

கவலைச் செழும்பெருங் காட்டைக் கனற்ற
மவுனச்செந் தீயை வளர்த்தாய் பராஞ்சுடரே. ௫௭.

சோபான மோர்நான்கிற் றேகமற்ற வீறுறு
மாபோக சன்மார்க்க வாழ்வீ பராஞ்சுடரே. ௫௮.

எவ்வுலகு மீன்ற வெழிலம்மை நன்னடன
மெவ்விதமுங் காண்பா னிணைப்பாய் பராஞ்சுடரே. ௫௯.

உத்தமர்க ளென்று முனைக்குரங்கி நிற்குநறுஞ்
சித்ரமணி மன்றுட் செலுத்தாய் பராஞ்சுடரே. ௬0.

தீயிலிழி செம்புருக்கிச் செம்பொன்னாத் தானெடுக்கத்
தாயென்னு மோர்குருவைத் தாராய் பராஞ்சுடரே. ௬௧.

ஊக்கச் சுழிக்காற் றுழலனுவை யேயகண்ட
மாக்குமொரு வித்தை யருளாய் பராஞ்சுடரே. ௬௨.

பத்தவிடர் சான்ற பசுவைப் பரமாக்கு
மத்துவித வித்தை யருளாய் பரஞ்சுடரே. ௬௩.

ஆதாரப் பண்பணர்த்தி யப்பான்மூப் பாழ்கடத்தி
மீதானத் துள்ளிருத்தி மேவாய் பரஞ்சுடரே. ௬௪.

## புலம்பல்.

படித்த படுக்கையிலே பால்வாய்ப் படற்கோ
வெடுத்தேனித் தேக மியம்பாய் பரஞ்சுடரே. ௬௫.

வலிப்பிளைப்பு விக்கலெழ மால்விழிகள் சோரத்
தலைப்புரட்டல் கொள்ளத் தகுமோ பரஞ்சுடரே. ௬௬.

தலைப்புரட்டல் கொண்டே தழுபோற்கை கால்போய்க்
குலைப்புரட்டல் கொள்ளல் குணமோ பரஞ்சுடரே. ௬௭.

கொண்டபன்னி பாலரழுங் கூடிமுற வோர்களழுக்
குண்டலிமே னோக்கல் குணமோ பரஞ்சுடரே. ௬௮.

நோக்கி யெழுந்துநெஞ்சி னைவுறுத்தி மேலிழுக்க
வேக்கங்கொண் டேக விதமோ பரஞ்சுடரே. ௬௯.

இகயந் தனைவிட் டெழுந்துகளந் தாண்ட
வதிக மிழுத்தலமை வாமோ பரஞ்சுடரே. ௭௰.

இழுத்தடைத் திந்திரிய மெல்லா மயர்ந்தே
கழுத்துணங்கி வீழ்தல் கதியோ பரஞ்சுடரே. ௭௧.

அழுகழுதா னைத்தேடி யம்புவியோர் கூடி
யழுநெலிக்கோ நானுமினி யாவேன் பரஞ்சுடரே. ௭௨.

கெடுங்குவ்வோ ராக்கை கிடத்திக் கிடத்திச்
சுடுங்கா டெனக்குத் தொலைகாண் பரஞ்சுடரே. ௭௩.

விண்ணுளர் போக்கும் விகற்பமும் பாற்றியகங்
கோணும னிற்பதெந்நாள் கூறாய் பரஞ்சுடரே. எச.

என்னோ டிருந்துமெனக் கேபகைஞ ராவாரை
யென்னோ டிணக்கிவைப்ப தெந்நாள் பரஞ்சுடரே. எரு.

புன்மனதுக் கும்மெனக்கும் போராட்ட மாயிருக்குஞ்
சென்மவழக் கென்றுநன்காத் தீரும் பரஞ்சுடரே. எசு.

சோதி துலங்காமற் சூழ்ந்த மலத்தினுக்கோர்
பேதி வருவதெந்நாள் பேசாய் பரஞ்சுடரே. எஎ.

உள்ளவுண்மை காட்டா தொளித்த விருட்டினுக்கோர்
கொள்ளை வருவதெந்நாள் கூறாய் பரஞ்சுடரே. எஅ.

மோசம் விளைத்தெனையே மூடு மிருட்டினுக்கோர்
நாசம் வருவதெந்நா ணட்பே பரஞ்சுடரே. எகூ.

அலையுமெனைத் தான்காட்டா வாணவக்கங் குற்கோர்
தொலைவு வருவதெந்நாள் சொல்லாய் பரஞ்சுடரே. அ0.

நாடு மெனைமறைத்து நானென் மலத்தினுக்கோர்
கேடுவந்த தாகவென்று கேட்பேன் பரஞ்சுடரே. அக.

கள்ள மெனும்பொருளைக் காணும லேதிருடுங்
கள்ளவரு ளெய்துவதெக் காலம் பரஞ்சுடரே. அஉ.

தேசிகனு முன்றன் றிருவருளி லேதிளைத்துத்
தாசரதர் நிற்பதெந்நாள் சாற்றாய் பரஞ்சுடரே. அங.

நித்திரையை நித்தநெட்டி நித்திரையை நித்தமொட்டி
யெத்திசையுங் கூடிநிற்ப தெந்நாள் பரஞ்சுடரே. அச.

எப்பொருளி னுஞ்சார்ந் திருக்குமெதார்த்தமதை
யெப்பொழுது காண்பே னியம்பாய் பரஞ்சுடரே. அரு.

காணக் கிடையாக் கனியைப் புசிக்கவருள்
பேணிக் கொடுப்பதெந்நாள் பேசாய் பரஞ்சுடரே. அசு.

காயில்லாத் தேங்கனியைக் கள்ளில்லாக் கள்ளதனை
யீயில்லாத் தேனையுண்ப தெந்நாள் பரஞ்சுடரே. அஎ.

ஆசைவலை யிற்கிடந்தே யல்லலுறு வாரசடர்
தாசன் கிடக்கத் தகுமோ பரஞ்சுடரே. அஅ.

மெய்யான வாசைவந்து மேவி வலித்தலினாற்
பொய்யான வாசையிலே போகேன் பரஞ்சுடரே. அகூ.

பெற்றமுலை விட்டுநகர் பெற்றிவந்த பின்னினைக்க
வற்றியவ திற்பால் வருமோ பரஞ்சுடரே. கூ0.

நிலம்பொன் பவுள்செதற்கு நின்னை நினைத்தே
புலம்பும் பவுள்செனக்குப் போதும் பரஞ்சுடரே. கூக.

என்ன சுகங்கருதி யென்னதொழி லாற்றிடுவே
னுன்னைத் தொழுவதினி யொன்றே பரஞ்சுடரே. கூஉ.

மெய்யருட்டேட் டுக்காக விட்டேன் பொருட்டேட்டு
மெய்யருளெய் தாதேலென் செய்வேன் பரஞ்சுடரே. கூங.

அருளும் பொருளுமற்று லாண்டிப் பிணம்போ
லுருள்வதன்றி யுய்யுநெறி யுண்டோ பரஞ்சுடரே. கூச.

எக்காலும் பெட்டகத்தி லுள்ளபொரு ளென்றிருந்தா
லெக்காலு மாக்கை யிராதே பரஞ்சுடரே. கூரு.

கற்றமுட்டா ளென்றேயிக் காசினியோ ரேசாமன்
முற்றுமுற்று னென்றே முடிப்பாய் பரஞ்சுடரே. கூசு.

இகழ்ந்திகழ்ந் தென்னைமுட்டா ளென்றாலு முன்னைப்
புகழ்ந்தமுட்டா ளென்பதுவும் பொய்யோ பரஞ்சுடரே.

பிள்ளைகுற்றஞ் செய்தாற் பிதாபொறுத்துக் கொள்வதல்லாற்
றள்ளி விடுவதுண்டோ சாற்றாய் பரஞ்சுடரே. ௯௮.

வெல்லப்பானைக்குளத்தம் விட்டோர் விரல்சுவைப்பா
ரல்லவோ வத்துணையு மின்றோ பரஞ்சுடரே. ௯௯.

ஈசா வுனைப்பணிந்து மேக மடச்சருக்க
மாசையுட னுண்ணுபிண மானேன் பரஞ்சுடரே. ௧௦௦.

வயங்குசிவ நாடா மடிக்கிருமி தொள்ளற்
கயர்ந்துகிடக் குங்குணப மானேன் பரஞ்சுடரே. ௧௦௧.

மடக்கி மடக்கிவரு மாதர் மயற்பே
யடித்துமிசை யுங்குணப மானேன் பரஞ்சுடரே. ௧௦௨.

துங்கமற்ற வுண்டியுண்டு சூழ்படிற்றுப் பேழ்க்காக
மங்கலாய்த் துண்ணுபிண மானேன் பரஞ்சுடரே. ௧௦௩.

வஞ்சனைபொச் சாப்பெனுங்கோ மாயு விலாப்புடைக்க
வஞ்சா தருந்துபிண மானேன் பரஞ்சுடரே. ௧௦௪.

திண்டிமிண்டர் செய்கையிலே செல்லுமிந்தி யப்பருந்திங்
கண்டிவிழுந் துண்ணுபிண மானேன் பரஞ்சுடரே. ௧௦௫.

ஓலைற வாங்கவலை யென்னுநா யூன்கொழுக்க
வாவலற வுண்ணுபிண மானேன் பரஞ்சுடரே. ௧௦௬.

வாடாம லேவளர்ந்த மல்குபிணி யாயவெள்ளா
டோடுங் காடாக வுற்றேன் பரஞ்சுடரே. ௧௦௭.

ஏய்க்குமன மாமாயை யென்னுமுழு மாங்காய்கள்
காய்க்குமர மானேனென் கண்ணே பரஞ்சுடரே. ௧௦௮.

தேனைப் பழித்தவின்பந் தேடா மடமையெனும்
பூனைக்கு முன்னெலியாப் போனேன் பரஞ்சுடரே. ௧௦௯.

காயுமுல *கிச்சையெனக் கண்டுமுல கிச்சையெனு
மெய்யலெழும் புற்று யிருந்தேன் பரஞ்சுடரே. ௧௧௦.

யோகனமில் வாலாமை மூதேவி யேயிடற்கு
வாகனம தாக வளர்ந்தேன் பரஞ்சுடரே. ௧௧௧.

காலைநடு மாலை கதிக்கும் பிணிகளெனு
மாலைநனி யாட்டிடுமெய்யுள் ளானேன் பரஞ்சுடரே. ௧௧௨.

உண்டியிடும் பண்டிதனை யுற்ற புலையுடம்பாம்
வண்டிக்கு மாடாக வாய்த்தேன் பரஞ்சுடரே. ௧௧௩.

கெட்டுத் தொழின்மூலந் தேடும் பொருளிடற்குப்
பெட்டகம தானேனே பிரானே பரஞ்சுடரே. ௧௧௪.

மிடியுஞ் செடியுநல்கும் வெய்யபவ மென்னுங்
கொடியடர் கொம்பானேன் கோனே பரஞ்சுடரே. ௧௧௫.

கருங்குவளைக் கண்ணார்தங் காமக் கலக்கப்
பருந்தெடுத்த குஞ்சாய்ப் பதைத்தேன் பரஞ்சுடரே. ௧௧௬.

பட்சமற்ற பாழ்த்தநெஞ்சம் பண்ணுமுரா ணுலாசப்
பட்சியின்முன் சிட்டாய்ப் பதைத்தேன் பரஞ்சுடரே. ௧௧௭.

உருக்க விரக்கமிலா துள்ளமுடைக் கள்வ
ரிருக்கும் பொதும்பானே னெந்தாய் பரஞ்சுடரே. ௧௧௮.

ஆசு மனச்சுழிக்கா லாலே சுழலுகின்ற
தூசாகி னேனே சுவாமீ பரஞ்சுடரே. ௧௧௯.

ஓடியுழல் சிந்தையினா லோயாம லேகறங்கி
யாடுங் கறங்கெனவிங் கானேன் பரஞ்சுடரே. ௧௨௦.

---

* இச்சை=பொய்.

நாட்ட மனங்குவிய நானறியேன் பூட்டைதனி
லாட்டிடுங் கொட்டையென வானேன் பரஞ்சுடரே. ௧௨௧.

ஏறுசல மோடழுக்கா றென்னுமுள் ளூற்றுநித
மூறுமசும் பானே னுயிரே பரஞ்சுடரே. ௧௨௨.

சூழு முரட்டாட்டத் தோவக் கொடுவிலங்கு
வாழுமடர் காடானேன் மன்னே பரஞ்சுடரே. ௧௨௩.

ஈனமுற்ற வுன்மத்த மென்னு மதம்பொழியு
மானைகட்டு கின்றதறி யானேன் பரஞ்சுடரே. ௧௨௪.

திடனெடு சந்ததமுஞ் சீறுஞ் சினப்பாம்
படையுஞ் சிறுகூடை யானேன் பரஞ்சுடரே. ௧௨௫.

ஆன்ற தவப்பயிர்கொல் லாங்காரத் தீப்பூடு
தோன்றுநில மானேன் சுவாமீ பரஞ்சுடரே. ௧௨௬.

எஞ்சா மமகார மென்னும் பெரும்புலிக்குப்
பஞ்சரம தாகப் படிந்தேன் பரஞ்சுடரே. ௧௨௭.

இருள்பகலென் றேக விருக்குந் திறத்தா
ணிருதலைக் கொள்ளியெறும் பானேன் பரஞ்சுடரே. ௧௨௮.

அரிய திருவருளா மன்னைதன்னைக் காணு
தெரியினுறை யொத்தே னெளியேன் பரஞ்சுடரே. ௧௨௯.

கணக்கிலருள் வாரிதியைக் காணாது வெய்யோன்
மணற்கிருமி யொத்தேனென் வாழ்வே பரஞ்சுடரே. ௧௩0.

தேம்பித்தேம் பிச்சிறந்த சீரருளைக் காணாது
பாம்பின்வாய்த் தேரையொத்தேன் பாராய் பரஞ்சுடரே.

போக்குவர வைக்கெடுக்கும் பொன்னருளைக் காணாது
தேக்கிலையி னீர்போற் றிகைத்தேன் பரஞ்சுடரே. ௧௩௨.

நிலையான பேரருளா நின்மலத்தைக் காணு
தல்லவாய்த் துரும்பைப்பப வானேனென் பரஞ்சுடரே. ௧௩௩.

சோகத்தை நீக்குமருட் டுமுகிலைக் காணுது
நாகக்கை மாலையொத்தே னட்டேப பரஞ்சுடரே. ௧௩௪.

தருக்கருளைக் காணுது சாத்திரக்கோ ளோரா
துரைப்பார்தம் வாயுரையை யொத்தேன் பரஞ்சுடரே.

அட்டகுணத் துன்பே ரருணலத்தைக் காணுதிங்
கொட்டுதலை விட்டசெய்யுளொத்தேன் பரஞ்சுடரே.௧௩௬.

கவ்வருளைக் காணுது காண்டல் சுருதியுத்தி
யொவ்வாத புத்தகத்தை யொத்தேன் பரஞ்சுடரே.௧௩௭.

திக்கனைத்தும் போற்றுந் திருவருளைக் காணும
லக்கினிபற் றுங்கூள மானேனே பரஞ்சுடரே. ௧௩௮.

உண்மையரு ளின்றுயர்நூ லோதினவர் தீமைவிடா
தொண்மையறம் விட்டதர மொத்தேன் பரஞ்சுடரே.

சிகரமுந் நீர்நடுவிற் செல்லுமம்பிப் பாய்மரத்தின்
காகத்தை யொத்தேனென் கண்ணே பரஞ்சுடரே. ௧௪0.

பொக்குவிட யத்திலவாப் பூக்கும் புலேஞரிடஞ்
சிக்கிய மான்போற் றிகைத்தேன் பரஞ்சுடரே. ௧௪௧.

முட்டமுட்டத் தீவினையின் மொய்த்தகளை யார்வலையிற்
பட்டசிறு மீன்போற் பதைத்தேன் பரஞ்சுடரே. ௧௪௨.

கலிக்குதவு கின்றகருங் காளியம்மை கோவிற்
பலிக்கடாப் போலும் பதைத்தேன் பரஞ்சுடரே. ௧௪௩.

அரிக்கள் ளினைக்குடித்தே யாடுமடப் பேய்வாய்ப்
பொரிக்கறியை யொத்தேனென் பொன்னே பரஞ்சுடரே.

கட்டுக் கடங்காத கானப் புலவேடர்
தொட்டசெருப் பாகித் துவண்டேன் பரஞ்சுடரே. ௧௪௫.

நித்த விறப்புவெந்நோ நீங்காப் பிணியாளர்
சித்தத்தை யொத்தேனென் றேவே பரஞ்சுடரே, ௧௪௬.

கோவணத்தைத் தான்றரித்துங் கொள்கைகெட்ட வஞ்சகர்கைத்
தாவடத்தை யொத்தேன்மெய்ச் சத்தே பரஞ்சுடரே.

புல்லருந்தி வாழாட்டைப் புல்லறைந்து தின்பதுபோ
லல்லகண்ட மென்னையுண்ண லாமோ பரஞ்சுடரே. ௧௪௮.

கொள்ளி மனமறுகிற் கூடுதுன்பக் குப்பைகளை
யள்ளியெறி யத்துணைநீ யாவாய் பரஞ்சுடரே. ௧௪௯.

காக்கைவிழி யாளனைப்போற் கண்ணகன்று நில்லாமல்
யோக்கியனென் றுநிலைமைக் குன்றாய் பரஞ்சுடரே. ௧௫௰.

நீக்கினு நீங்காத நீர்ப்பாசி யாய்வெளிற்றைப்
போக்குநிச மார்க்கம் புகலாய் பரஞ்சுடரே. ௧௫௧.

அளிக்கும் பொருளையளி யாதுகரு டண்ணை
டளிக்கும் விதநா னறியேன் பரஞ்சுடரே. ௧௫௨.

## பரமோகம்.

பத்தாறு தேசும் பரவ விளங்கிடுய்வீ
பத்துமுகங் காணவிருப் பங்காண் பரஞ்சுடரே. ௧௫௩.

உண்டையங் கிண்கிணிக ளோலிடும் பொன்னடியைக்
கண்டுகொள்ள வாசைகொண்டேன் கண்ணே பரஞ்சுடரே.

செக்கச் சிவந்திலங்கு தீப்போலு மேனியின்மேன்
மிக்கவு மெற்கோர் விருப்பம் பரஞ்சுடரே. ௧௫௫.

தேவடியார் மொய்காணிற் சீரியகண் ணாலழைக்கும்
பாவனைக்கு நானாசைப் பட்டேன் பரஞ்சுடரே. ௧௫௬.

துன்பத்தை வேண்டாத் தொழும்பரொடு பேசுநின்சொல்
லின்பத்துக் காசைகொண்டே னெண்ணே பரஞ்சுடரே.

பணத்தைப் பணமென்று பாராம னல்குன்
குணத்துக்கு நானாசை கொண்டேன் பரஞ்சுடரே. ௧௫௮.

மையலுற்ற யாவரையு மைதுனஞ்செய் யன்பினுக்கு
மையலுற்று நான்புலம்பு மாறேற பரஞ்சுடரே. ௧௫௯.

வேல்பிடிக்குங் கண்ணார் விரும்பி நிதம்பிடிக்குங்
கால்பிடிக்க வென்னாசை கண்டாய் பரஞ்சுடரே. ௧௬௦.

மால்பிடித்த பூவணைமேன் மைதுனஞ்செய் தேகாயப்
பால்குடிக்க நானாசைப் பட்டேன் பரஞ்சுடரே. ௧௬௧.

நடிக்குகன் றானோடே நடுவணையிற் சேர்ந்து
படுத்துறங்க நானாசைப் பட்டேன் பரஞ்சுடரே. ௧௬௨.

நாட்டி லெனைச்சேர்ந்த நட்டார்க் கெலாநினையே
கூட்டிக்கொடுக்கவிச்சை கொண்டேன் பரஞ்சுடரே. ௧௬௩.

ஆசைக் குரோசமில்லை யன்பருக்குத் துன்பமில்லை
தாசிகட்கு வேலையென்ன சாற்றாய் பரஞ்சுடரே. ௧௬௪.

உண்டி யொறுத்தே னுடைநடைக டாஞ்சிறுத்தேன்
மண்டியவுன் மையலெனு மாலாற் பரஞ்சுடரே. ௧௬௫.

பஞ்சுப் படுக்கையற்றேன் பச்சைமணம் பூசலற்றேன்
வஞ்சியுப்பு மற்றேனுன் மாலாற் பரஞ்சுடரே. ௧௬௬.

மங்கைவா வென்னுமன் மாதேவா வென்றாலு
மங்குமொரு பேரின்ப மாமே பரஞ்சுடரே. ௧௬௭.

அகந்தான் குளிர்ந்தவன்பா லானந்தத் தேனை
சுகந்தாவென் றானுமின்பந் தோன்றும் பரஞ்சுடரே. ௧௬௮

துக்கமில்லா வுன்னைச் சொகுசாகக் கூடியுய்யப்
பக்குவமீ தன்றோகண் பாராய் பரஞ்சுடரே. ௧௬௯

நானுடலாய் நீயுயிராய் நன்றாப் பொருந்துவதற்
கானவொரு பக்குவமீ தன்றோ பரஞ்சுடரே. ௧௭௦

பக்குவத்தி லென்னைநீ பக்குவமாக் கூடிடற்கு
விக்கினமொன் றுண்டோ விளம்பாய் பரஞ்சுடரே. ௧௭௧

கரணாமன்பி னாரெவர்க்குங் காமவிடாய் தீர்த்திடுநா
ளாணவமில் லாதயர்வுற் றோயா பரஞ்சுடரே. ௧௭௨

உள்வீங்கு மின்ப வுறவையளித் தாற்பிடித்துக்
கொள்வேனென் றோவொளித்துக் கொண்டாய் பரஞ்சுடரே.

தினமு முனைவிரும்புந் தேவடியார் பானு
மனம்பொனீ சென்றும் வரலாம் பரஞ்சுடரே. ௧௭௪

சின்னஞ் சிறுவயதிற் சேரழிந்து நின்றேனென்
றென்னைக் கழிப்பாயோ வேசில் பரஞ்சுடரே. ௧௭௫

இட்டமய லாளரெவர்க்குநீ மாப்பிளையென்
றிட்டரறை சொற்கயலோ வேழை பரஞ்சுடரே. ௧௭௬

உன்னை விரும்பியபின் போசையுடன் யாரையுந்தா
னென்னினைவி லெண்ணியிருப் பேனோ பரஞ்சுடரே. ௧௭௭

மெத்தக் கொடுத்தணைய வேண்டுமெனா நோக்கமுற்றோ
வித்துணைநா ளாடா திருந்தாய் பரஞ்சுடரே. ௧௭௮

மெத்தக் கொடுக்கவர வேண்டா மிழுக்கி லின்பப்
புத்திரனைத் தந்தருளிற் போதும் பரஞ்சுடரே. ௧௭௯

கூடா திருப்பாயேற் கொண்டகொள்கை யாலெவருந்
தேடார்க ளென்னவினிச் செய்வேன் பரஞ்சுடரே. ௧௮0.

ஏழையா மென்முகத்தை யேறிட்டு நோக்காயே
லேழைகொண்ட காதலெவ்வா றேகும் பரஞ்சுடரே. ௧௮௧.

ஏரா ருணாடி யேகெட்டே னென்னுமொழி
வாராது கொள்வதற்கு வாராய் பரஞ்சுடரே. ௧௮௨.

தீராக் கலக்கமறச் செப்புமனு விற்கிழிவு
வாராது கொள்வதற்கு வாராய் பரஞ்சுடரே. ௧௮௩.

தாராள மாகவுன்மேற் சாற்றுங் கவிக்கிழிவு
வாராது கொள்வதற்கு வாராய் பரஞ்சுடரே. ௧௮௪.

போராட்டம் பண்ணிப் புலம்பு மெனக்கிழிவு
வாராது கொள்வதற்கு வாராய் பரஞ்சுடரே. ௧௮௫.

நாராரு முன்னைமுன்னி நாடியவன் புக்கிழிவு
வாராது கொள்வதற்கு வாராய் பரஞ்சுடரே. ௧௮௬.

சீராரு முன்னைமுன்னிச் சிந்தைசெய்த தற்கிழிவு
வாராது கொள்வதற்கு வாராய் பரஞ்சுடரே. ௧௮௭.

தேராத சிந்தையினர் சேருங் கதியெனக்கும்
வாராது கொள்வதற்கு வாராய் பரஞ்சுடரே. ௧௮௮.

சேராது துண்டுபட்டுச் செல்வார் பலனெனக்கும்
வாராது கொள்வதற்கு வாராய் பரஞ்சுடரே. ௧௮௯.

அன்றருணை நாதற் களித்த பெருநலமே
யின்றெனக்கு மீந்தா ளிறையே பரஞ்சுடரே. ௧௯0.

## பொன்மயிற்கண்ணி.

---:0:---

சொல்லரிய சின்மயமாச் சொல்லவுள்ள பூரணமாம்
வல்லவனை நான்கூடி வாழ்மைவனே பொன்மயிலே. க.

வேத முதலா விளங்கு மருளிறையென்
காத றனிக்கவரக் காண்பேனே பொன்மயிலே. உ.

உருவருவ மென்னு முளகமு மில்லா
வொருவனையே கூடியினி யுய்வேனே பொன்மயிலே. ௩.

பேறுர் பிறப்புநசை பெற்றுர் பிறந்தாருந்
தாரமுமில் லாதவனைச் சார்வேனே பொன்மயிலே. ௪.

மட்டுப் படாதவருள் வள்ளலென வேயிருந்துந்
தட்டுப் படாதவனைச் சார்வேனே பொன்மயிலே. ரு.

ஈரமிக வைத்துலக மெங்கு முயிர்க்குயிராய்த்
தாரகமாய் நிற்போனைச் சார்வேனே பொன்மயிலே. சு.

ஏசற்ற சின்மயத்தை யெய்தக் குமரகுரு
தாசர்க் கருள்பவனைச் சார்வேனே பொன்மயிலே. எ.

அயிலைப் பிடித்தானை யம்பரமாள் கோனைக்
கயிலைப் பதியானைக் காண்பேனே பொன்மயிலே. அ.

என்னை யபியாம லென்னைத் திருடியின்பு
தன்னைக் கொடுப்பவனைச் சார்வேனே பொன்மயிலே. கூ.

நாபியுடை யெவ்வுயிர்க்கு நாயகனு யாதியில்லா
நாபியுள்ள வெம்மிறையை நண்ணுவனே பொன்மயிலே.

உள்ளத்தி லுள்ளுநரை யோர்க்கணைத்திங் காளுமிறை
தள்ளா தெனைக்கொளுமோ சாற்றுய்நீ பொன்மயிலே. கக.

நேசமுளோ ரெவ்வருக்கு நித்ய சுகங்கொடுக்குந்
தேசுடையா னிங்கெனக்குஞ் சிக்குவனோ பொன்மயிலே.

தேடக் கிடையாத செல்வமுடை யானையினிக்
கூடிநனி வாழ்வேனோ கூறாய்நீ பொன்மயிலே. ௧௩.

தேடுவார்க் கின்பந் தெவிட்டப் பகுப்பவனைக்
கூடுவதெக் காலங் குயில்வாய்நீ பொன்மயிலே. ௧௪.

எந்தலைவ னுமிறைவ னெல்லார்க்குந் தாமிறைவன்
வந்தருள்வ தெந்நாள் வழுத்தாய்நீ பொன்மயிலே. ௧௫.

சித்திரத்தி னும்பொறிக்க வொண்ணாத் திருவழகைச்
சித்தத்தி னாலணைந்தாற் றீருமோ பொன்மயிலே. ௧௬.

கண்டுகளித் தெம்மிறையைக் காதலற வேகூடிக்
கொண்டிருந்தா லன்றோ கொடுக்குமின்பம்பொன்மயிலே.

நீடுஞ் சிரகிரிமே னிற்குமணி மண்டபத்தின்
மேடைதனி லெம்மிறையை மேவுவனோ பொன்மயிலே.

வருவானோ வாரானோ வென்னுமோ ஐயங்
கருகவொரு நிச்சயந்தான் காட்டாயோ பொன்மயிலே.

தேம்பெருகு சந்தமத்தர் தேடியிட மார்க்கமின்றிச்
சாம்பலிட்டு மைபறந்த சாமியெங்கே பொன்மயிலே. ௨0.

என்னை மறவா திருக்கியெனக் கைம்மருந்து
தன்னையிட்ட சாமிசதி செய்வானோ பொன்மயிலே. ௨௧.

நாட்ட மிருக்கவென்று நாடிவந்து மாயத்தாள்
போட்டதுணை யென்னைவிட்டுப் போனதென்னை பொன்மயிலே.

பூமணத்தை நாடாமற் போட்டபொடிக் காரனின்னந்
தாமதந்தான் செய்தாற் சகிப்பேனோ பொன்மயிலே. ௨௩.

கட்டிக்கொள் வேனெனவே கைப்பரிச மிட்டதுரை
யெட்டிப்பா ராதிருப்ப தென்னேயோ பொன்மயிலே.

மந்திரங்கார் மையில் வசப்படா னைப்பிடிக்கத்
தந்திரமதொன்றெனக்குச் சாற்றாய்நீ பொன்மயிலே. ௨௫.

கட்டழக னெங்கோன் கமலச் சரணை
யெட்டிப் பிடிக்கவகை யில்லையோ பொன்மயிலே. ௨௬.

தன்னந் தனிப்பெரிய சாமி வசப்படுமா
றென்ன மருந்திடலா மீண்டுரையாய் பொன்மயிலே. ௨௭.

தேவாதி தேவன் சிவஞான தேசிகனை
வாவென் றழைத்துவர மாட்டாயோ பொன்மயிலே. ௨௮.

இரவுபக லாகவிங்கே யெண்ணியுழல் பாங்கைத்
துரைமக னாரிடம்போய்ச் சொல்லாயோ பொன்மயிலே.

அத்த னருமறையோ னண்டநிறை யெல்லாமாள்
வித்தகனுக் கென்னை விளம்பாயோ பொன்மயிலே. ௩0.

திக்கனைத்தும் போற்றவுள்ள சித்தாந்த முத்தையற்குப்
பக்குவப்பட் டேனெனநீ பன்னாயோ பொன்மயிலே. ௩௧.

வேலைப் பிடித்தசெங்கை வேந்தை யழைக்கவுன்றன்
காலைப் பிடித்தேனென் காதலாற் பொன்மயிலே. ௩௨.

அம்பரம தானவெங்க ளண்ண றிருவடியைக்
கும்பிட்டே னென்றுசொல்லிக் கூட்டிவா பொன்மயிலே.

விட்டுக்குட் டங்கி வெளிப்படா மன்னவனைக்
கூட்டிக் கொடுக்கவென்று கூட்டிவா பொன்மயிலே. ௩௪.

பொன்னாசை பெண்ணாசை பூவாசை நாடேனி
யென்னாசை நாதற் கியம்பிடாய் பொன்மயிலே. ௩௫.

சாவுபிறப் பென்னுந் தடங்கடலில் வீழ்ந்தேனைக்
காவலனுக் கோதாய் கரையேற்றப் பொன்மயிலே. ௩௬.

சித்த மிகவழுங்கிச் சீர்மை குலைந்திடுமுன்
முத்திகொடு வென்றே மொழியவற்குப் பொன்மயிலே.

ஆராய வொண்ணு வகண்டசிவ னுக்கெனது
பூராய மெல்லாநீ போதிப்பாய் பொன்மயிலே. ௩௮.

ஒப்பில் பரவெளியி லுள்ள பரசிவத்தைத்
துப்புரவின் றிங்கழைக்கத் தூதுபோ பொன்மயிலே. ௩௯.

இன்பக் கடல்படிந்த வெந்தை யருணகிரி
யன்புக் கிசைந்தவனை யாளவுரை பொன்மயிலே. ௪௰.

---

## குருபரக்கண்ணி.

பூவேறு கோனும் புரோகிதனும் புங்கவரு
நாவார வாழ்த்து நலமே குருபரனே. ௧.

அண்டபகி ரண்ட மடங்கவொரு பூரணமாக்
கண்டபொரு ளீயேயென் கண்ணே குருபரனே. ௨.

என்றுமென துள்ளே யியங்கும் விழுப்பொருளா
நின்றருளு ஞான நிலையே குருபரனே. ௩.

எல்லாரு நல்லகதி யெய்தவென்று மாமறைகள்
சொல்வதுபோ லுமிங்கே சொன்னேன் குருபரனே. ௪.

கேட்பார் செவிகொடுத்துக் கேளாம லும்போவா
ராட்படுவார் காண்ப தரிதே குருபரனே. ௫.

மோசந் திருட்டு மொழிமாறிப் பேசுதற்கிங்
காசைப் படுவோ ரதிகங் குருபரனே. ௬.

தேசிக நிந்தனையூன் சேரு முயிர்க்கொலைக்கிங்
காசைப் படுவோ ரதிகங் குருபரனே. ௭.

நீசர் நுகர்லக்ரி நெய்யொழுகு மூன்புசிப்புக்
காசைப் படுவோ ரதிகங் குருபரனே. ௮.

பேசு மசத்தியங்கள் பேதகங்கள் குத்திரங்கட்
காசைப் படுவோ ரதிகங் குருபரனே. ௯.

மோசப்பொய்ப் பத்திரங்கண் மோசப்பொய்ச் சத்தியங்கட்
காசைப் படுவோ ரதிகங் குருபரனே. ௧0.

ஏசற்ற புத்தேள்சொத் தீட்டும் பிறர்பொருள்கட்
க்காசைப் படுவோ ரதிகங் குருபரனே. ௧௧.

வேசை விபசார மெய்யன் பரையிகழ்தற்
காசைப் படுவோ ரதிகங் குருபரனே. ௧௨.

காசுபணந் தேடிக் கணிகையரைப் புல்குவதற்
காசைப் படுவோ ரதிகங் குருபரனே. ௧௩.

மாசைரச வாதசித்தி மைவசியங் கைம்மருந்துக்
காசைப் படுவோ ரதிகங் குருபரனே. ௧௪.

தாசரையுந் தம்படிற்றுச் சார்நடத்தி யேவலிங்கே
யாசைப் படுவோ ரதிகங் குருபரனே. ௧௫.

கூசத்து மங்கைமயல் கூறுங் கதைகளுக்கே
யாசைப் படுவோ ரதிகங் குருபரனே. ௧௬.

மாசற்ற வுன்னைவிட்டு மண்ணைகளை யேவணங்கற்
காசைப் படுவோ ரதிகங் குருபரனே. ௧௭.

தீபந் தனையேற்றிச் செங்கைகுவிப் பார்களருட்
டீப மிருக்குநிலை தேரார் குருபரனே. ௧௮.

சந்திரனைச் சூரியனைத் தாழ்வார்க ளந்தரங்கச்
சந்திரனைச் சூரியனைச் சாரார் குருபரனே. ௧௯.

என்றுநனி நாடினுன்னை யிட்டியுள்ள தேட்டமெலாங்
குன்றிவிடு மென்பவரு முண்மே குருபரனே. ௨0.

முத்திநிலைக் கேசிவனை முன்னிநிற்க வேண்டுமிக
வுத்திக்கின் றென்பவரு முண்டே குருபரனே. ௨௧.

உத்தியெனும் பூவாழ்க்கை யுன்னுநரைச் சத்தியரி
பத்திசெயப் பன்னுநரு முண்டே குருபரனே. ௨௨.

ஐந்தொழிலு முன்னிடமென் றுய்ந்தறியா மண்ணையெலா
மிந்தவித மெண்ணி யிடையுங் குருபரனே. ௨௩.

இத்தகைய மாந்த ரிருக்குங் குழுவிடைநா
னெத்தனைபோ தித்தானு மென்னை குருபரனே. ௨௪.

எங்கு மிருக்குமென்பா ரின்னவித மென்றறியா
ரங்கிங் கெனவே யலைவார் குருபரனே. ௨௫.

நோக்கதனை மூக்குநுனி நெற்றிநுதல் வைப்பார்க
ணோக்கினதங் கென்னெனவு நோக்கார் குருபரனே. ௨௬.

நோக்கறிவு சிற்றறிவாக் காண்டலினு ணோக்குமதைக்
காக்குமறி வுண்டெனவுங் கண்ணுர் குருபரனே. ௨௭.

சின்னட் டொழுதுவினைச் சேர்வாற் றுயருறகா
னுன்னைவிட்டு நிற்பவரு முண்டே குருபரனே. ௨௮.

செல்வமிருந் தால்வணங்கிச் செல்வமொழிந் தால்விடுவோ
ரொல்குமிடை வேசியரை யொப்பார் குருபரனே. ௨௯.

இன்புதுன்பி ரண்டினுமுன் னேசிலடிக் கன்புடையா
ரன்புகிளர் பத்தினிபோ லாவார் குருபரனே. ௩0.

இம்மைதனி னல்லோரா யுள்ளா ரிடுக்கணுறி
னும்மைவினை யென்பா ருயர்ந்தோர் குருபரனே. ௩௧.

காரார் பிரவர்கம் போலிருக்குங் கன்மமுனைப்
பூராவாக் கூடினல்லாற் போமோ குருபரனே. ௩௨.

கண்ணிலார் வெய்யோனைக் காணா ரவர்போலக்
கண்ணுணர்வி லார்காணார் கண்ணே குருபரனே. ௩௩.

எட்டுருவி னுங்கலந்தவ் வெட்டினுக்கு மேலானோய்
கிட்டுவார்க் கன்றோ கிடைப்பாய் குருபரனே. ௩௪.

அழுதபிள்ளை யேபா லருந்துமது போலத்
தொழுதபிள்ளைக் கன்றோ சுகமாங் குருபரனே. ௩௫.

தேடக் கிடையாத தெள்ளமுதைச் சேரவென்று
நாடித் திரிந்தானண் ணேதா குருபரனே. ௩௬.

தன்னைப் பொதிந்திருக்குஞ் சட்டகமு மித்தையெனி
னன்னியப்பண் டங்கணிலை யாமோ குருபரனே. ௩௭.

பாசபந்த மாகவில் பாலகனை யினுமில்லத்
தாசைதன்னை யாளினரு ளாமோ குருபரனே, ௩௮.

தூண்டிவினைக் காசைகொண்டு தூஞ்சுமச்சம் போன்மடமை
பூண்டுலக விச்சையிலே போவேன் குருபரனே. ௩௯.

தந்த வழிவிருக்கத் தந்தைநீ தானிருக்க
வெந்தவா வீண்போவே னீசா குருபரனே. ௪0.

படித்தபடி நில்லாப் பதடிகள்போ லானு
நடித்துத் திரிவேனோ நாதா குருபரனே. ௪௧.

கத்திநிலை விட்டே கதைகளினிப் பேசாமற்
சித்தந் தனையடக்கச் செய்யாய் குருபரனே. ௪௨.

இப்பிறவி வீணாகி யின்னுமொன்று வந்தானு
மப்பிறவி யுன்னையலட் டாதே குருபரனே. ௪௩.

சென்மமெய்து மென்றாலிச் சென்மந் துறவுபுகிற்
சென்மமெய்தா தென்பதையுந் தேர்ந்தேன் குருபரனே.

நீநா னெனும்பேத ஞாயமதை நீவிரிப்பா
யானாலென் ஞாய மறுமே குருபரனே. ௪௫.

என்வழக்கு நின்வழக்காக் கண்டே னெனக்கருளாத்
தன்மைதனக் கோர்ஞாயஞ் சாற்றாய் குருபரனே. ௪௬.

கண்டிறுமாப் புற்றிருக்கக் காட்டலரு ளென்னுமொழி
கண்டேனென் மட்டிலதைக் காணேன் குருபரனே. ௪௭.

என்னடியார்க் கெஞ்ஞான்று மின்னலழி வேதெனநீ
சொன்னசொல் வீணாமோ சொல்லாய் குருபரனே. ௪௮.

சிந்தித்த வெல்லாஞ் சிவஞான தேசிகமாப்
பந்தித்து வைக்கவருள் பண்ணாய் குருபரனே. ௪௯.

அண்ண லருணகிரி யன்புக் கிரங்கியவோர்
தண்ணளிதந் தாளெனையுந் தாய்போற் குருபரனே. ௫0.

---

## சதாசிவக்கண்ணி.

சீராருஞ் செல்வஞ் சிறந்தசச்சி தானந்தத்
தாரான வாழ்வே தனியே சதாசிவமே. க.

இல்லையென்று சொல்பவர்க்கு முண்டென் றிசைப்பவர்க்கு
நல்லமை யாயிருக்கு நட்பே சதாசிவமே. உ.

பாவிகளைப் புண்ணியரைப் பட்சமுட னோம்பியவர்க்
காவலனந் தானு மரசே சதாசிவமே. ௩.

ஞாலத் தருக்கா னமனுலகெய் தாதிருக்கக்
காலைப் பிடிப்பார் கருத்தே சதாசிவமே. ௪.

பாடவுள்ள மூர்த்தம் பலமறைசொன் னாலுமெற்குத்
தேடிவந்த சேயே சிரேட்டஞ் சதாசிவமே. ௫.

ஏசில் சிவவுருவ மெத்தைக்கண் டாலுமுற்ற
வீசனெனத் தாழ்த லெழிலே சதாசிவமே. ௬.

அஞ்ஞான மென்னுமழுக் கான்மாவை மூடினதான்
மெய்ஞ்ஞான மின்றலைதன் மெய்யே சதாசிவமே. ௭.

சேற்றைமழை போக்குமன்றிச் சேறகற்று தவ்வாறுன்
றற்றலன்றிப் போகா தசுத்தஞ் சதாசிவமே. ௮.

கண்ணான் முகம்பார்க்கக் கண்ணாடி வேண்டுமெப்போல்
விண்ணேறற் குன்றனருள் வேண்டுஞ் சதாசிவமே. ௯.

நல்லறிவிற் பானுவிம்ப நன்றாக் தெரிவதுபோ
னல்லுயிரி னீவிளங்கு ஞாயஞ் சதாசிவமே. ௧௦.

ஆசைமலை போலவிங்கே யானாலும் போங்காலங்
காசும் வராதேயென் கண்ணே சதாசிவமே. ௧௧.

பொன்னீட்டி னானைவிட்டுப் போனாலும் போமவரைப்
பொன்னைவிட்டுப் போனாலும் போவார் சதாசிவமே. ௧௨.

காயகற்ப வாழ்வுமொரு காலமழி வாமெனிற்கீ
ழாயபுலை யாக்கைநிலை யாமோ சதாசிவமே. ௧௩.

திண்மையுற்ற சித்தியெல்லாந் தீம்பாமென் றல்லமனா
ருண்மைவித்தை காட்டினது முண்டே சதாசிவமே. ௧௪.

தூயபடி கம்போன்ற வான்மாவைத் துப்புடையோர்
காயமுள்ள போதேதான் காண்பார் சதாசிவமே. ௧௫.

நாஞ்சாமி யென்னும னல்லருளி னானிற்கு
யோஞ்சோகம் பாவனையோ ருய்வார் சதாசிவமே. ௧௬.

பொய்ம்மார்க்க மத்தனையும் பொய்யெனவே தள்ளிநிற்கு
மெய்ம்மார்க்க மொன்றேதான் வேண்டுஞ் சதாசிவமே.

பொய்வீடு கட்டியதிற் பொய்வாழ்க்கை யுற்றேனான்
மெய்வீட்டு வாழ்க்கையினி வேண்டுஞ் சதாசிவமே. ௧௮.

கவ்வுநாய் வெள்ளெலும்பைக் கவ்விக் கடிப்பதுபோ
லிவ்வுலக விச்சையிது வேணா சதாசிவமே. ௧௯.

இவ்வுலக விச்சையென்ப தில்லைநில்லை யாமுனடி
யெவ்விதத்துஞ் சேரவொணா திச்சை சதாசிவமே. ௨௦.

கண்டனவெல் லாமறையக் காண்பதொன் றுமேநிறையக்
கண்டு களிப்பதெந்தக் காலஞ் சதாசிவமே. ௨௧.

பாட்டிற் பயில்வதுபோற் பட்டாங் கபயாஸ்தங்
காட்டி யழைப்பதெந்தக் காலஞ் சதாசிவமே. ௨௨.

கூப்பிட் டழைத்திதன்மேற் கொள்பிறவி யில்லையெனக்
காப்பிட்டு வைப்பதெந்தக் காலஞ் சதாசிவமே. ௨௩.

அறிவை யறிவதுதா னர்த்தமென்று சொன்ன
குறியிற் கிடப்பதெந்நாள் கூறாய் சதாசிவமே. ௨௪.

நினைப்பு மறப்புமற்று நிற்குஞ் சமாதிக்
கெனைப்புணர்த்த லெந்நா ளியம்பாய் சதாசிவமே. ௨௫.

முப்பத்தா றிற்குமுதன் மூலமா யுள்ளவனை
யெப்போ தடைந்துசுக மேற்பேன் சதாசிவமே. ௨௬.

சற்குருவுக் குச்சீடன் சற்புத்ர னாவதுபோ
லற்பனுமுன் னற்புதல்வ னானேன் சதாசிவமே. ௨௭.

தந்தைநீ செய்நானென் றுள்ள தகைமையினு
லெந்தவித மும்பற் றிருக்குஞ் சதாசிவமே. உஅ.

பாலகனை யிங்கே படிப்பிப்போர் பற்றுவது
போல வெனைவலித்துப் போவாய் சதாசிவமே. உகூ.

காட்டுமுனை முன்னுட்டைக் காட்டுவது போனமன்முன்
காட்டிக் கொடுப்பாயோ கந்தா சதாசிவமே. ௩0.

நீலக் கடுவிழியார் நேயமறந் தன்னருளாம்
பாலைக் குடிக்கவெனைப் பாராய் சதாசிவமே. ௩௧.

பேசும்பேச் செல்லாமுன் பேச்சா விருக்குமெனிற்
பாசமறு மன்றேகண் பாராய் சதாசிவமே. ௩௨.

சோற்றைப் புசித்துச்சுகம்பெறவென் றேம்புசெய்த்தோ
ரூற்றுச் சடமயக்கை யோட்டாய் சதாசிவமே. ௩௩.

நிட்டைதனி லுண்மயக்கங் கொண்டிடார் நீளுடம்பு
விட்டாலு மம்மயக்க மேவார் சதாசிவமே. ௩௪.

தோன்று முயிர்க்குடம்பு தோன்றியமுன் னுட்டொடங்கி
யீன்றவளெண் சொல்வோ ரெவரே சதாசிவமே. ௩௫.

இன்னுந்தா யுண்டென் றிசைக்காம லிப்பிறப்போ
டன்னையருட் சத்தியென வாக்காய் சதாசிவமே. ௩௬.

இப்பார் நகையினர்கட் கிட்டபதந் தேசமின்றி
யெப்போது மெங்குநினை யென்னுய் சதாசிவமே. ௩௭.

நீச்சுநிலை யற்றவரு ணையப் பரவையினுன்
மூச்சடங்கி யேகிடக்க முன்னுய் சதாசிவமே. ௩அ.

உள்ளுக்குள் ளேதா னொளித்துக்கொண் டேயிருக்குங்
கள்ளப் பொருளையெற்குக் காட்டாய் சதாசிவமே. ௩கூ.

மாயையென்ப தொன்று மனமோக மாமதனை
மாய வுபாயமிழை மாசில் சதாசிவமே. ௪0.

நெஞ்சநல்ல தேலைந்து நல்லனவே நெஞ்சமொன்று
நஞ்சாகி னவ்வைந்து நஞ்சே சதாசிவமே. ௪௧.

ஐந்து மழிந்திடினு மைந்து மடங்கிடினுஞ்
சிந்தைநிற்க நிற்றலன்றோ திட்டஞ் சதாசிவமே. ௪௨.

சாதனத்தி லேறமயந் தன்னைமறந் தேதுயிலி
னேதமுடைக் கேவலம்வந் தேயுஞ் சதாசிவமே. ௪௩.

சாதனத்தி லேறமயந் தாழ்ந்த விடயநினைப்
பேதுமுறு மேற்சகல மெய்துஞ் சதாசிவமே. ௪௪.

நானினைத்தா னீவாராய் நானினையே னெல்வருவா
யீனமற்ற வுன்னிலைமை யென்னே சதாசிவமே. ௪௫.

வேழனெடுத் தாலரிசி வெந்துகுழைந் தாலுதவா
தாமெனவு நன்று வழிந்தேன் சதாசிவமே. ௪௬.

நினக்குநா னுள்ளாயு நிற்கயன்மை யாயு
மெனக்குநீ யாயுநிற்ற லென்னே சதாசிவமே. ௪௭.

ஞானருளி லேயடங்க நல்லருளுன் கண்ணடங்க
நீநினைவு கூர்வதெந்த நேரஞ் சதாசிவமே. ௪௮.

எண்ணமறி வாய்முடிக்கு மெண்ணமறி யேன்றயவு
பண்ணியிட னிற்கே பரங்காண் சதாசிவமே. ௪௯.

எம்மா னருணகிரி யீசா வுனைமருவுஞ்
செம்மாப் பெனுள்விரியச் செய்யாய் சதாசிவமே. ௫0.

## தேர்ந்தேனேயென்கண்ணி.

---

### சத்திநிபாதவிளக்கம்.

பொன்னாடு மண்ணாடும் போற்றுங் குமரேசன்
றன்னாணை யெல்லாந் தயாளமென்று தேர்ந்தேனே. ௧.

அனாதிமல பந்தவுயி ரம்மலத்தை யாய்ந்து
மனோலயமுற் றுய்யவிவண் வந்ததென்றுந் தேர்ந்தேனே.

எம்பெருமான் சேவடிக்கன் பில்லாத சீவனெல்லாந்
தம்பெருமை குன்றித் தவிக்குமென்றுந் தேர்ந்தேனே. ௩.

மாயையின் பொய்ப்போக வாஞ்சைதனை மெய்யென்று
மாயுமுயிர் வந்துவந்து மாளுமென்றுந் தேர்ந்தேனே. ௪.

பொய்ப்போகங் கைத்தவர்க்குப் பூரணத்தைக் காட்டவெம்மான்
மெய்ப்போத கஞ்செய்யு மெய்ப்பரிவுந் தேர்ந்தேனே. ௫.

செய்தவினைக் கீடாகச் சேர்ந்த பிறப்பினின்றுந்
தெய்வமுயர் சென்மமதிற் சேர்க்குமென்றுந் தேர்ந்தேனே.

மாயையின்கர்ப் பத்துண் மலவிருளி லேகிடந்து
தோயுயிரைச் சுத்திசெய்வான் விட்டதையுந் தேர்ந்தேனே.

விட்டவுயி ராம்பசுவின் மெய்ம்மூல தேகமொளி
யொட்டுமிடை மாயையெனு முண்மையையுந் தேர்ந்தேனே.

காரணவம் மூலவுடற் கட்டுயிர்க்குச் சூக்கமெனுஞ்
சாரவுடம் பீதலருட் டாதையென்றுந் தேர்ந்தேனே. ௯.

சூக்கவுயிர் தூலமெய்துங் காலமள வாகாயத்
தேக்கமுற்றுத் தான்கிடக்கு மென்பதையுந் தேர்ந்தேனே.

சூக்குமத்திற் பக்குவந்தான் கண்டாற் றொடர்புபற்றி
யாக்கலசை யாததா வரத்திலென்றுந் தேர்ந்தேனே. ௧௧.

தாவரத்திற் பக்குவந்தா னுற்றாற் சரிக்குமுயி
ராவணவுள் ளோருருவ மண்ணுமென்றுந் தேர்ந்தேனே. ௧௨.

ஊருயிரிற் பக்குவந்தா னுற்றா லுதகமதிற்
சேருயிருட் *பல்லுருவஞ் சேருமென்றுந் தேர்ந்தேனே. ௧௩.

நீருயிரிற் பக்குவந்தா னுற்றா னிகழ்விசும்பிற்
சாரங்கொள் புள்ளாச் சமையுமென்றுந் தேர்ந்தேனே. ௧௪.

புள்ளுருவிற் பக்குவந்தா னுற்றாற் புவியிலுய்யு
மள்ளல் விலங்குருவம் வாங்குமென்றுந் தேர்ந்தேனே. ௧௫.

விலங்குருவிற் பக்குவந்தா னுற்றால் விவேக
மிலங்குபல மக்களுடம் பேற்குமென்றுந் தேர்ந்தேனே. ௧௬.

அம்மக்க ளிற்சிலர்தா மாசி றமையிழைத்துச்
செம்மைச் சுவர்க்கமடை வாரெனவுந் தேர்ந்தேனே. ௧௭.

மானுடத்திற் பக்குவந்தா னுற்றவுயிர் மாண்புடைய
ஞானப் பரதகண்டஞ் சாருமென்றுந் தேர்ந்தேனே. ௧௮.

பரதத்திற் பக்குவமாம் பண்படைநல் லாவி
பிரமமுத னான்குட் பிறக்குமென்றுந் தேர்ந்தேனே. ௧௯.

நால்வருண மேவிநிற்கு ஞான்று புறமதமா
மால்கிளக்கு மார்க்க மருவுமென்றுந் தேர்ந்தேனே. ௨௰.

புறமதத்திற் பக்குவமுற் றாலதுதான் போதச்
செறிவி லநித்தமுத்தி சேருமென்றுந் தேர்ந்தேனே. ௨௧.

---

* பல்லுருவென்றதனால், இங்கே ஒவ்வொரு பிறப்பிலும் பல முறையெனப் பொருள் விரித்துக்கொள்ளவேண்டும். அவ்வாறனைத்திற்குங் கொள்க.

அந்த வநித்தமுத்தி யாகியபின் பாதியுடைச்
சொந்தவக மார்க்கமதிற் றேன்றுமென்றுந் தேர்ந்தேனே. ௨௨.

அகச்சமய மாறி லுள்ள சாதனமம் மூர்த்தி
பகமந்த்ர நிட்டைப் பதவளவுந் தேர்ந்தேனே. ௨௩.

அக்கதிக்கட் பக்குவந்தா னுற்றவுயி ராகமத்தின்
மிக்கசித் தாந்தநெறி மேவுமென்றுந் தேர்ந்தேனே. ௨௪.

சித்தாந்த சோபான நான்கிற் செழுஞ்சரிதைக்
கொத்தா லுலோக முறுமெனவுந் தேர்ந்தேனே. ௨௫.

கிரியைதனில் யோகினின்றுற் கேள்பூக்க வாழு
மிரிபில் சமீபமுரு வெய்துமென்றுந் தேர்ந்தேனே. ௨௬.

முக்கதியு மெக்காலு மொய்வினையின் போகமிவை
தொக்கென் றருவருத்தல் சுத்தமென்றுந் தேர்ந்தேனே. ௨௭.

சுத்தவிந்தப் பக்குவத்தைத் தூயதல மென்றுமுயிர்ச்
சித்தின் விளக்கமென்றுஞ் சேயருளிற் றேர்ந்தேனே. ௨௮.

இத்தலமெல் லாத்தவர்க்கு மேசிலனு வர்க்கவைந்து
கர்த்தருக்கு மெட்டாக் கதழ்வெனவுந் தேர்ந்தேனே. ௨௯.

அருளென்னுஞ் சிற்சத்தி யங்ஙனமுட் டங்க
வுருவில் விதேகமுத்திக் குன்னுமென்றுந் தேர்ந்தேனே. ௩0.

இத்தரத்தி லக்கியத்தை யெய்தறணி பென்னுமிச்சை
யுத்துங்க மாக வுதிக்குமென்றுந் தேர்ந்தேனே. ௩௧.

அப்பரமே யாசா னிலிங்கமடி யாரெனப்பேண்
டெப்புச் சமரசமுந் தோன்றுமென்றுந் தேர்ந்தேனே. ௩௨.

பிறப்பிறப்புக் கேதுவென்னும் பெந்தவுத்தி யோகந்
துறக்க விராகமக்காற் றோன்றுமென்றுந் தேர்ந்தேனே. ௩௩.

ஆணசமு சாரமென்று கேட்டாலு மஞ்சியுள்ள
மானசமு மூச்சு மடங்குமென்றந் தேர்ந்தேனே. ௩௪.

பாச மகன்றமுத்தர் பக்கலைவிட் டேகாத
வாசமு நற்பணியு மல்குமென்றுந் தேர்ந்தேனே. ௩௫.

நற்பணியின் முத்தரயர் நற்பூசை போலவுயி
ருற்சாக மாயிழைக்க வுன்னுமென்றுந் தேர்ந்தேனே. ௩௬.

அன்னணமற் பாற்பூசை யாற்றிச் சிவபணியு
நன்னருறச் செய்யுமென்று நன்றாகத் தேர்ந்தேனே. ௩௭.

அன்பாற் சிவசரிதங் கேட்கு மனோரதமு
நன்கார் சிவத்தைநெஞ்சி ஞாட்டுமென்றந் தேர்ந்தேனே. ௩௮.

மோக்கப் பிரசாத போகமோ கிக்குமங்ஙு
ஞாக்கியுற்ற போக மருந்துமென்றுந் தேர்ந்தேனே. ௩௯.

முத்தருற வாதி மொழிந்தவெட்டும் வாக்கோடு
சித்தமுடம் பென்பனவுஞ் சுத்தியென்றுந் தேர்ந்தேனே. ௪0.

இச்சுத்தி சிவனுற்றா லெம்பெருமான் பித்தேறி
யிச்சகத்துப் பற்றையிகந் தேகுமென்றுந் தேர்ந்தேனே. ௪௧.

எந்தை பராபரத்தை யெண்ணியய ரிக்கருமம்
பந்தந் தராவெனநூல் பன்னுமென்றுந் தேர்ந்தேனே. ௪௨.

இப்பருவ மேவிளக்கும் பத்திசத்தி யுட்பதிந்தா
லொப்பில் விவேக முதிக்குமென்றுந் தேர்ந்தேனே. ௪௩.

பத்தியெனு மஞ்சனத்தை யிட்டாற் பரமகுரு
சுத்திசெய வென்றெதிரே தோன்றுமென்றுந் தேர்ந்தேனே. ௪௪.

## ஞானாசாரியரருள் விளக்கம்.

இந்தவுயிர் பக்குவமுற் றாலணுவிற் கெம்பெருமான்
வந்துமலம் போக்கி வழுத்துமென்றுந் தேர்ந்தேனே. ௪௫.

மாநுடத்தை மாற்றவென மாநுடமா வந்துநின்று
நானென்னல் சித்தறிவு நல்குமென்றுந் தேர்ந்தேனே. ௪௬.

தாங்கித்தா னாக்கியென்றுந் தன்னடிக்கீழ் வைத்தனிலை
யாங்கதியென் றாகமநூ லார்க்குமென்றுந் தேர்ந்தேனே. ௪௭.

இந்தவுயர் தீட்சைகுரு மேனியிலு மோர்ச்சிடன்
சிந்தையிலு நின்றருளே செய்யுமென்றுந் தேர்ந்தேனே. ௪௮.

கள்ளமில்விஞ் ஞானகலர் கட்கிறைவ னாரருடா
னுள்ளுளே நின்றுமறைப் போட்டுமென்றுந் தேர்ந்தேனே. ௪௯.

தண்ணருளுட் கன்மமலஞ் சார்ந்த பிரளயர்க்குக்
கண்ணுதலா நின்றுகதி காட்டுமென்றுந் தேர்ந்தேனே. ௫0.

தெவ்விலருண் மும்மலத்துச் சித்தாஞ் சகலரெதி
ரவ்வவுரு வாய்நின் றருளுமென்றுந் தேர்ந்தேனே. ௫௧.

குருவென்னுஞ் சொற்கருத்தங் குற்சிதமா மோக
மருவாம னீக்குகின்ற மன்னனென்றுந் தேர்ந்தேனே. ௫௨.

## தீட்சை விளக்கம்.

காரண மாயையெனுங் கர்ப்பங் கடத்தியெழிற்
பேருடலி லேற்றுவது பீசமென்றுந் தேர்ந்தேனே. ௫௩.

சன்மமுளை யாயிருக்குங் கன்மஞ் சவட்டியந்தச்
சென்மமுடி வாள்வதுநிர்ப் பீசமென்றுந் தேர்ந்தேனே. ௫௪.

தெருளாரு நிர்ப்பீச தீட்சைசெய்த போதே
யொருமூன்று நீக்கியிட லுண்டெனவுந் தேர்ந்தேனே. ௫௫.

முக்கரும முந்தீர்ந்த வக்கணமே முத்தியுறல்
சிக்ககன்ற சத்யநிரு வாணமென்றுந் தேர்ந்தேனே. ௫௬.

பேசிந் நிருவாணம் பெற்றானென் பாற்கொருகாற்
றேசோ மொபதியார் செய்ததையுந் தேர்ந்தேனே. ௫௭.

சீரியநீர்ப் பீசத்துந் திண்மைப் பிரார்த்துவமன்
றோரிரண்டு நீக்குதலு முண்டெனவுந் தேர்ந்தேனே. ௫௮.

இத்தீட்சை பெற்றோர்க் கெடுத்த வுடலொழிகா
லத்துபிரா ரத்த நசிக்குமென்றுந் தேர்ந்தேனே. ௫௯.

இந்தநிரு வாணமென்ப தின்பேர் சிரமிதனாற்
பந்தமற்ற பேர்தாம் பலவரென்றுந் தேர்ந்தேனே. ௬௦.

சேமநல்கு மீதசத்ய தீட்சையென்று மித்தையுற்றோ
ராமிலத்தைப் போலிருப்பா ரன்பரென்றுந் தேர்ந்தேனே. ௬௧.

தீட்சையெனுஞ் சொற்கருத்தந் தெய்வமொன்றைப் போக்கியொ
மாட்சியரு ளாலே வழங்கலென்றுந் தேர்ந்தேனே. [ன்றை

நெல்விற் றவிடுமியுண் ணிற்குமுளை போலிருக்கும்
பொல்லா மலமூன்றும் போக்கலென்றுந் தேர்ந்தேனே. ௬௩.

எக்காலு நீங்காத வெங்கட்வு டன்னிலையை
யெக்கழுத்த வன்பினனி யீதலென்றுந் தேர்ந்தேனே. ௬௪.

மேலுணர்த்த பக்குவங்கண் மேவார்க்கு மேன்மார்க்கஞ்
சீலமுட னீயாது தெய்வமென்றுந் தேர்ந்தேனே. ௬௫.

மீன்சினையைப் பார்ப்பதுபோன் மின்விழியாற் பேதித்த
லூனயன தீட்சையென்று சங்கையறத் தேர்ந்தேனே. ௬௬.

ஆமையண்ட நோக்குதல்போ லாஞ்சோகம் பாவனையிற்
றேமருவல் பாவனையென் றீட்சையென்றுந் தேர்ந்தேனே. ௬௭.

கோழியண்டங் கோடலொப்பக் கொள்கரங்க ளாலணைத்தல்
பாழிப் பரிசமென்ப பாங்கரென்றுந் தேர்ந்தேனே. ௬௮.

நெஞ்சினடு வேநுழைந்து நிற்குமுயி ரைக்கிளப்பிச்
செஞ்சிவத்தி லேநிறுத்தல் யோகமென்றுந் தேர்ந்தேனே. ௬௯.

மந்திரத்தி ஞயகமா மந்திரங்கள் சொல்லிவைத்தல்
செந்திருக்கொள் வாக்கெனுமோர் தீட்சையென்றுந் தேர்ந்தேனே.
புத்தகத்தி னேராப் பொருள்விளக்கிக் காட்டுவது
சித்துறைக்குஞ் சாத்திரமென் றீட்சையென்றுந் தேர்ந்தேனே. எக.
*கட்டைட்சை யாதி கழ்றியுள்ள வோராறுஞ்
சிட்டரடை மெய்ஞ்ஞான தீட்சையென்றுந் தேர்ந்தேனே. எஉ.

## ஓரெழுத்து விளக்கம்.

சின்மயமாத் தீக்கையெல்லாந் தேசிகன்சொல் லோர்மொழியிற்
றன்மயமாக் காட்டுமென்றுஞ் சங்கையறத் தேர்ந்தேனே. எங.

ஓர்மொழியே மோனநிலை யோர்மொழியே நிற்குநிலை
யோர்மொழியே யோரெழுத்து மென்றுண்மை தேர்ந்தேனே. எச.

ஓரெழுத்தே யோதாம லோதவுள்ள தென்றுமந்த
வோரெழுத்தை யோலையெழுத் தில்லையென்றுந் தேர்ந்தேனே.

ஓரெழுத்தே பற்றியவா ளுருவ்வவந்து முற்றுமென
வாரணந்தா ளேதுவண்ண மாக்குமென்றுந் தேர்ந்தேனே. எசு.

ஓரெழுத்தே சித்தாந்த மோரெழுத்தே வேதாந்த
மோரெழுத்தே நாதாந்த வுண்மையென்றுந் தேர்ந்தேனே. எஎ.

ஓரெழுத்தே போதாந்த மோரெழுத்தே யோகாந்த
மோரெழுத்தே யோவாக் கலாந்தமென்றுந் தேர்ந்தேனே. எஅ.

ஓரெழுத்தே யொன்றிரண்டென் றோதாச் சமரசமு
மோரெழுத்தே யெங்குமுள்ள வுண்மையென்றுந் தேர்ந்தேனே. எகூ.

ஓரெழுத்தே யைந்தெழுத்து மோரெழுத்தே யோமெனலுஞ்
சீரியசின் முத்திரையு மென்றுநனி தேர்ந்தேனே. அ0.

---

* கட்டைட்சை=நயனதீட்சை.

அவ்வெழுத்திற் கைந்துகுறி யாமவற்றுண் மூன்றசத்து
செவ்வையுள்ள மற்றிரண்டு நித்தமென்றுந் தேர்ந்தேனே. ௮௧.

அவ்வெழுத்தை ஞானகுரு வாலுணர்ந்து ஞானமுற்றோர்
தெவ்விலின்ப மாமதுரத் தேனெனவுந் தேர்ந்தேனே. ௮௨.

## வைதிகத்திருநீற்றுவண்மை விளக்கம்.

வீட்டகத்திற் சாணி மெழுகிநலஞ் செய்தலொக்குஞ்
சேட்டமறை நீறு திமிர்தலென்று தேர்ந்தேனே. ௮௩.

நீறிடா நெட்டுடம்பு சுத்தமில்லை நீத்தவுயி
*ரூறகத்தி லேயுறைவோ ரொக்குமென்றுந் தேர்ந்தேனே. ௮௪.

ஆபாத சூட மணியுயி†ரா டாவிடினு
மாபாத சூடநல மாகுமென்றுந் தேர்ந்தேனே. ௮௫.

மேலாந் தவத்தழகை வெண்ணீ றளிக்குமென
நூலாளர் வாக்கு நுவலுமென்றுந் தேர்ந்தேனே. ௮௬.

சாத்துவிக மெய்ஞ்ஞானந் தான்வளர்ப்பா னக்கினியிற்
பூத்ததிரு நீற்றைநனி பூசலென்றுந் தேர்ந்தேனே. ௮௭.

உற்றபிணி தீர்ப்பா னுரியோர்க் கருமருந்து
மற்றமற்ற வெண்ணீறே யாகுமென்றுந் தேர்ந்தேனே. ௮௮.

அம்பரத்தி னசைவிஞ்ச வம்புவியி னசைதுஞ்ச
வெம்பெருமா னிட்டபொடி யீதெனவுந் தேர்ந்தேனே. ௮௯.

எத்தனைதாங் கற்றாலு மெத்தனைதாம் பெற்றாலு
மித்திரு நீற்றைவிடா ரின்பரென்றுந் தேர்ந்தேனே. ௯0.

---

* ஊறகத்தில்=இடையூறுள்ளவிடத்தில்.

† ஆடாவிடினும்=நீரில் முழுகாவிடினும்.

## குகப்பிரமாநந்த விளக்கம்.

வெறுவெளியிற் கையேந்தி வேண்டுவதிற் றேவை
யறியவொண்ணா துண்ணுழைந்தா லாகுமென்றுந் தேர்ந்தேனே. ௯௧.

உண்ணுழைந்து கார்நீத் தொளிருயிரைக் கண்டபின்பு
தண்ணருளைக் காண்டல் சரதமென்றுந் தேர்ந்தேனே. ௯௨.

தனக்குணர்ச்சி யாகநிற்குஞ் சத்தியைக்கண் டாங்கே
தொனிப்பின்றி யாழ்தல் சுகமெனவுந் தேர்ந்தேனே. ௯௩.

அவ்வருளிற் றோயா தழுந்தியரு ளுதனண்ணல்
செவ்வியசம் பன்னசுகா தீதமென்றுந் தேர்ந்தேனே. ௯௪.

சொன்னசுகா தீதநிலைத் தோய்விற் பசுஞான
முன்னாது சாமங் கொருவனென்றுந் தேர்ந்தேனே. ௯௫.

ஒருவனெனு மெம்மா னொளியோன்கண் ணேக்கைத்
தெரியா தடக்குதல்போற் செய்யுமென்றுந் தேர்ந்தேனே. ௯௬.

சிவபோ தத்தையந்தத் திட்டமிறை யோன்கணர்நா
லாவியுந் தேவனென வாகுமென்றுந் தேர்ந்தேனே. ௯௭.

நித்த விரண்டுமொன்று நிற்கு மனுதிநிலை
யத்துவிதங் காண்டலிது வாகுமென்றுந் தேர்ந்தேனே. ௯௮.

புந்திநெறி யாமிதனைப் போரூர்ச் சிதம்பரப்பே
ரெந்தையை யாண்டமுரு கீயுமென்றுந் தேர்ந்தேனே. ௯௯.

ஆநந்த வாழ்வை யருணகிரி நாதனுடை
யீனமறுத் தாண்டகுக னீயுமென்றுந் தேர்ந்தேனே. ௧௦௦.

## பரம்பொருட்கண்ணி.

———:O:———

படைப்பாய் புரப்பாய்பின் பாழாக்கி யாள்வாய்
கடைப்பட்ட நாயேற்கென் கண்ணே பரம்பொருளே. க.

நீடநந்தச் சோதிவெளி நின்றுசுக துக்கமென்னு
நாடகங்கள் செய்திடனு நட்பே பரம்பொருளே. உ.

சிவனிடத்திற் சீவச் செயலொப் படைத்தோ
ரவனித் தொழில்விரும்பு வாரோ பரம்பொருளே. ௩.

உடல்பொரு ளாவியெல்லா முன்னிடமீந் துள்ளோர்க்
குடல்பொரு ளாவிஞண்டா வுண்டோ பரம்பொருளே. ச.

சும்மா விராமலெனைச் சும்மா விருக்கவைத்த
வம்மா னுனக்கயனு னுகேன் பரம்பொருளே. ரு.

சொல்லேற ரும்புகழ்கள் சொன்னபெரி யோனடைந்த
வெல்லா நலமுமெனக் கீந்தாள் பரம்பொருளே. சு.

———

## பூரணக்கண்ணி.

———

ஆரணஞ்சொல் கின்றபடி யஞ்சகத்தி லான்மாவிற்
பூரணம தாகப் பொலிந்துளவெம் பூரணமே. க.

எண்மைகணித் திங்நா ளெனக்கறிவை யூட்டவந்த
சண்முகமே யாதிசிவ சற்குருவே பூரணமே. உ.

சுட்டுணர்வுஞ் சூனியமுஞ் சொல்லவொண்ணுச் சோதியென்று
கட்டுரைக்கு நான்மறையுங் காணுத பூரணமே. ௩.

ஆணியின் றெங்கணுமென் ஞதிநீ நிற்றலினுற்
சூனியமென் றெவ்விடத்தைச் சொல்லலாம் பூரணமே. ௪.

மறப்பு நினைப்புமிலெம் மானுன் சுபாவச்
சிறப்பினை யாருரைப்பார் செவ்வனே பூரணமே. ரு.

வேதாக மங்களிகழ் வோரும் விவேகநிட்டை
யோதாத வேட்டோரு மொன்ருரே பூரணமே. சு.

அன்பான மூர்த்தியைப்போ லான்மாவு மாதல்வீ
டென்போ ரநுபவந்தா னில்லாரே பூரணமே. எ.

சங்கப் பயிரவியைச் சாம்பவியைக் கேசரியை
யங்கமென வுள்ளகைகாட் டற்புதமே பூரணமே. அ.

கைகாட்டு மார்க்கநின்ற காண்போர் நிருவிகற்ப
மெய்வாழ்க்கை மேவுவது மெய்யேயெம் பூரணமே. கூ.

ஈரெண் சகத்திரச்சந் தப்பா வியம்பியமெய்
யாரியனை யாண்டவின்ப வன்பேசம் பூரணமே. ௧0.

---

## ஆநந்தக்களிப்பு.

ஆநந்த மேகுஹப் பிரம்மம்—சச்சி
தாநந்த ஞான சதாநந்த பிரம்மம்.

க. எந்தை யவனருள் கொண்டே—யுனக்
கெடுத்துச்சொல் வேன்செவி கொடுத்துக்கேண் டுயா
சிந்தைகெட் டுத்துயி லுங்கால்—செலல்
செப்பி னெழுபதோ டைந்தங் குலங்காண். (ஆந)

௨. மாதர்சை யோகத்தி னுற்பத்—தெட்டு
மருவிய முக்காலு மாம்விரைந் தோடும்
போதிரு பத்தைந் தரையாஞ்—சென்று
போம்போது தான்பதி னெட்டாகு மையா. (ஆந)

௩. உண்ணும் பொழுது மொலிக்க—மொழி
யுரைக்கும் பொழுதும் பதின்மூன் றரையா
நண்ணிய சாதார ணத்தி—லிரு
நான்குட னொன்று நலிவது மையா. (ஆநந்த)

௪. ஒன்பதி லேவிட யந்தா—னில்லா
தொடுங்கிடி னெட்டேகா லாமே மூலைக்கே
யின்பச் சமாதிதான் கூடி—நன்று
யிருக்கலா மற்றப் படிக்கில்லை யையா. (ஆநந்த)

௫. ஏழரை தன்னிலே முக்கால்—குன்று
மேனற் கடாக்ஷவாக் குண்டாகு மாறி
லாறெழாடு முக்காலந் தோன்று—மதி
லோர்முக்கால் குன்றின்மெய்ஞ் ஞானக்கண் காணும்.

௬. நாலரை தன்னிலா காய—கம
னந்தனக் குண்டா மதின்முக்கால் குன்றிற்
கோலப் பதினன் குலகும்—நிமை
கொட்டு மளவிலே சுற்றி வரலாம். (ஆநந்த)

௭. மூன்றிலே யட்டமா சித்தி—கூடு
முக்கா லடங்கிடி *னவநிதி செய்ய
வான்றவல் லாண்மையுண் டாமொன்—றரைக்
கான்மாவைக் காணலா மன்புள்ள மையா. (ஆநந்)

---

* நவநிதி=கச்சபநிதி, கற்பநிதி, சங்கநிதி, நந்தநிதி, நீலநிதி, பத்மநிதி, மகாநிதி, மகாபத்மநிதி, முகுந்தநிதி.

அ. முக்காலி லீசுர வம்ச—மாகி
முன்பினுந் தன்னிழல் காணுமணிகமு
முக்காலு மற்ற விடத்தே—பர
முத்தி யெனும்பெரு வாழ்வாகு ஞேபா. (ஆநந்த)

௯. இந்தஸ் திதியிற் புசிப்பும்—நீரு
மிதமான காற்று மனுவசி யஞ்சே
ரெந்த வியாதியுஞ் சாவு—மில்லை
யெழிலான தேஜ—நல் வாசமு முண்டாம். (ஆநந்)

௧0. இந்த விதம்பர மேசன்—சொற்று
னென்றுநீ தேரிதின் மூச்சைப் பிடித்துப்
பந்திப்ப தில்லை மனத்தை—யுள்ளே
பந்திக்கத் தானே யடங்குமம் மூச்சு. (ஆநந்த)

௧௧. மாற்றஞ்செய் வனமனக் கல்லைப்—பத்தி
மார்க்கக் குகைதனில் வைத்தே யுருக்கி
யூற்று குகன்பாதந் தன்னி—லந்த
வுத்தம மான மனேலய மெய்தும். (ஆநந்த)

௧௨. வீட்டுக் குடையவ னீயே—யந்த
வீட்டிற் சுகிக்கவிவ் வீட்டைநம் பாதே
யூட்டு மறுசுவை போக்கிச்—சிவ
னூட்டு முருசியை யுட்கொண்டு தேக்கு. (ஆநந்த)

௧௩. தோன்றிடு தூக்கமுந் தள்ளிக்—கெட்ட
சோம்பலுந் தள்ளிச் சுகமெல்லாந் தள்ளி
யூன்றிய யோகத்தி னில்லெங்—கேநின்
றுண்டாகு மாநந்த மெல்லாநீ கொள்ளே. (ஆந)

௧௪. கொண்ட தவத்திலே நின்றுன்—னெரி
கொண்ட பசிக்கெதிர் வாய்த்ததை யுண்டவ்

வண்ட வெளியிலே சென்று—கண்ட
வற்புத மெல்லா மடக்கஞ்செய் துய்யே. (ஆநந்த)

௧௰. சீர்மலி யாநந்த வீட்டின்—பத்தைச்
சேர்ந்த வண்ணமலைப் பேரெந்தை யீசன்
கூர்வடி வேலுடை யைய—வென்னுட்
குடிகொண்ட வொருவன்றனடியென்றும் வாழி ()

---

ஆ. திருப்பாடல் - ௧௨௮௦.

---

# திருவருமலைக்கோமகன்

## பஞ்சவிம்சதியதிக சதபங்கி.

:o:

க. * கலைச்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

க. தனதன தானன தானன தானன
தானன தானன தானன தானதந்
தனதன தான தனன தனன தனன
தனதன தனதன தானதன.

(க.)

திருமலி † தாரணி சீர்முரு காவடர்
சேனைய னேயொளிர் சேயவ னேமாவொண்
டெருளர தீதா வரதா திருவே பரிவே
திடமுடை மயில்வரு சேவகனே

---

* கலை அறுபத்துநான்காதலின் கலைச்சீரென்பது : அறுபத்து நான்கு சீருடையதாமாறு காண்க. † தார் - கிண்கிணிமாலை.

திகழ்மறை பாடிடு தேமுத லேபதி
 தீரமு ளோயறு தேசுரு வாவேதன்
செயல்புரி தேவா விமலா செனியா தவனே
 சிறுமையில் பிரதம சேகரனே
சிதலையின் மாசுரர் சேதன னேசுக
 தீபக மேயறு சீலமு ளோய்காலஞ்
செடிதபு காலா சிவனே செழுமா மணியே
 சிவகண பதியிளை யோய்திணியா
சிலைவலர் சியம தீவிர வேண்*மணி
 சேரணி யோ†யுயர் தேகமு ளோய்போர்வெஞ்
சிலைவகிர் சேடா பொருநா திரிசூ லதரா
 சிகிவளை பொலிமுனி தேசிகனே

தருமமெ யாரணர் சார்முனி யேகிளர்
 தானைய னேநல தாயனை யாய்தூவின்
சருவரர் தாழ்தாய் துணையே சருவே சுரனே
 தடநில வயவறு தாரகனே
சகவுயிர் நாடக சாமிச தாசிவ
 தாரணி வோய்தொழு தாசர ணநீதந்
தயவுளர் தாதா நிபுண தனிவா னவனே
 தறுகணர் கருதலர் சார்பிலனே

---

* மணிசேரணி = திருக்கண்மணிமாலை.

† உயர்தேகம் = மஹாவிசுவரூபவடிவு.

சதமுனே வாசவர் சாதப தீபொரு
தாபமி லோய்விரி சாலமு ளோய்வாலஞ்
சடுவரி வாழ்வே சதுரா *தழன்மா மகனே
சவணர்கண் முதியர்கள் சார்புளனே
சலமறு தூயவ சாவிலி யேமிகு
சாரிய னேகுண சாகர மேசார்தின்
டலைமையர் மீளெ சனதா சருவா பரனு
தகைகெழு புலிமுனி தாழ்பெரியோய்
செருமலி யாரயில் சேர்கர னேநிறை
தேனைய னேகமழ் தேயமு ளோய்பாவின்
றெரிய†ல தீசா பரமா திருமான் மருகா
‡திடருக செயிரறு சீடர்கணு
சிகலறு பாடகர் சேமமு தாலுயர்
தேரமர் வோய்பல தேசம னுகாதுஞ்
செயமுனி சேயே கழலோய் தினைமா வுணியே
சிறுகறு மருமறை தேடினறையே
சிதடுறு பாசகர் தீதடு கோபர
சீபதி யேபுகழ் சீலர னுலாலுஞ்
செடிநகை யாளீ திதியோய் செழியோ னிறைவா
சிவைசுத நதிசுத தேமமுதே

---

* தழல்=கார்த்திகை. † அநீசன்=தனக்கோரீசனில்லாத் தலைவன்.
‡ திடம்=உண்மை.

சிலதர்க ஞயக சிவனி யேதுதி
தேரது லாவறு சேகர னேசீர்வண்
டிலகவு லாசா திமிசோய் திருநீ றணிவோய்
திகில்வெலும் வலியருள் சீறடிதா

குருமலி நாரருள் கூர்மதி யோபொரு
கோணைய னேபல கோயிலு ளோய்கூவுங்
குருகில கோர்மா துகிலோய் குருசூழ் குமரா
குடமுனி வியனிலை கூறரசே
குகைதொறு மாடிடு கோமுரு கேயிடர்
கூரமி லோய்சுடர் கோசிக னேபோதங்
குயினிச போதா குழையோய் குனிசா னகனே
குறமகள் சுரமகள் கூடருளோய்
குதலையென் மாசுகொல் கோதிலி யேநிமிர்
கோபதி யேயெணில் கோலமு ளோய்சிலங்
கொடுகொடு சீர்வா குதியே குழகா புலவா
குவிபகை மதியினர் கோளரியே
குலமிலி மாயமில் கோவண னேயிழி
கோரமி லோயொரு கோகருள் கோனார்வங்
குலைமருள் *கோலா வனகா குரவார் புயனே
குகையுரு மலைவளர் கோமகனே. (க)

* கோலா=தண்டாயுதபாணியே. கோல்=தண்டம்.

## ௨. வஞ்சிவிருத்தம்.

### ௨. தனதன தானன தானதன.

(௨)

திருமலி தாரணி சீர்முருகா
தருமமெ யாரணர் சார்முனியே
செருமலி யாரயில் சேர்கரனே
குருமலி நாரருள் கூர்மதியோய்.

(௩)

திகழ்மறை பாடிடு தேமுதலே
சகவுயிர் நாடக சாமிசதா
சிகலறு பாடகர் சேமமுதால்
குகைதொறு மாடிடு கோமுருகே.

(௪)

சிதலையின் மாசுரர் சேதனனே
சதமுனை வாசவர் சாதபதீ
சிதடுறு பாசகர் தீதடுகோ
குதலையென் மாசுகொல் கோதிலியே.

(௫)

சிலைவலர் சீயம தீவிரவேள்
சலமறு தூயவ சாவிலியே
சிலதர்க ணுயக சீவனியே
குலமிலி மாயமில் கோவணனே.

### ௩. தனதன தனதன தானதன.

(௬)

திடமுடை மயில்வரு சேவகனே
தடமில வயவறு தாரகனே

திடகுக செயிரறு சீடர்கணு
குடமுனி வியனிலை கூறரசே.

(எ)

சிறுமையில் பிரதம சேகரனே
தறுகணர் கருதலர் சார்பிலனே
சிறுகறு மருமறை தேடிறையே
குறமகள் சுரமகள் கூடருளோய்.

(அ)

சிவகண பதியிளை யோய்திணியா
சவணர்கண் முதியர்கள் சார்புளனே
சிவைசுத நதிசுத தேமமுதே
குவிபகை மதியினர் கோளரியே.

(௯)

சிகிவரை யொலிமுனி தேசிகனே
தகைகெழு புலிமுனி தாழ்பெரியோய்
திகில்வெலும் வலியருள் சீறடிதா
குகையுரு மலைவளர் கோமகனே.

௪. தானன தானன தானதனு.

(௧0)

சேனைய னேயொளிர் சேயவனே
தானைய னேநல தாயனையாய்
தேனைய னேகமழ் தேயமுளோய்
கோனைய னேபல கோயிலுளோய்.

(௧௧)

தீரமு ளோயறு தேசுருவா
தாரணி வோய்தொழு தாசரனு

தேரமர் வோய்பல தேசமரு
கூரமி லோய்சுடர் கோசிகனே.

(௧௨)

தீபக மேயறு சீலமுளோய்
தாபமி லோய்விரி சாலமுளோய்
சீபதி யேபுகழ் சீலரனல்
கோபதி யேயெணில் கோலமுளோய்.

(௧௩)

சேரணி யோயுயர் தேகமுளோய்
சாரிய னேகுண சாகரமே
தேரது லாவறு சேகரனே
கோரமி லோயொரு கோகருள்கோன்.

(௧௪)

சீர்முரு காவடர் சேனையனே
சார்முனி யேகிளர் தானையனே
சேர்கர னேநிறை தேனையனே
கூர்மதி யோயொரு கோனையனே.

(௧௫)

தேமுத லேயதி தீரமுளோய்
சாமிச தாசிவ தாரணிவோய்
சேமமு தானுயர் தேரமர்வோய்
கோமுரு கோயிடர் கூரமிலோய்.

(௧௬)

சேதன னேசுக தீபகமே
சாதப தீயொரு தாபமிலோய்
தீதடு கோபர சீபதியே
கோதிலி யேநிமிர் கோபதியே.

(௧௭)

தீவிர வேண்மணி சேரணியோய்
சாவிலி யேமிகு சாரியனே
சீவனி யேதுதி தேரதுலா
கோவண னேயிழி கோரமிலோய்.

ரு. தனனா தனனா தானதனா.

(௧௮)

திருவே பரிவே சேவகனே
சருவே சுரனே தாரகனே
திருமான் மருகா சீடர்களா
குருசூழ் குமரா கூறரசே.

௬. தனதன தானா தனனா.

(௧௯)

தெருளர தீதா வரதா
சருவரர் தாழ்தாய் துணையே
தெரியல தீசா பரமா
குருகில கோர்மா துகிலோய்.

(௨0)

செயல்புரி தேவா விமலா
தயவுளர் தாதா நிபுணா
செயமுனி சேயே கழலோய்
குயினிச போதா குழையோய்.

(௨௧)

செடிதபு காலா சிவனே
சடிவரி வாழ்வே சதுரா
செடிநகை யாளீ திதியோய்
கொடுகொடு சீர்வா குதியே.

(௨௨)

சிலைவகிர் சேடா பொருநா
தலைமையர் மீளீ சனதா
திலகவு லாசா திமிசோய்
குலைமருள் கோலா வனகா.

௩. வஞ்சித்துறை.

எ. தானதன தானதன.

(௨௩)

சேனையனே சேயவனே
தானையனே தாயனையாய்
தேனையனே தேயமுளோய்
கோனையனே கோயிலுளோய்.

(௨௪)

தீரமுளோய் தேசுருவா
தாரணிவோய் தாசரண
தேரமர்வோய் தேசமண
கூரமிலோய் கோசிகனே.

(௨௫)

தீபகமே சீலமுளோய்
தாபமிலோய் சாலமுளோய்
சீபதியே சீலரணல்
கோபதியே கோலமுளோய்.

(௨௬)

சேரணியோய் தேகமுளோய்
சாரியனே சாகரமே
தேரதுலா சேகரனே
கோரமிலோய் கோகருள்கோன்.

அ. தானதனை தனை.

(உஎ)

சீர்முருகாசே னையனே
சார்முனியேதா னையனே
சேர்கரனேதே னையனே
கூர்மதியோய்கோ னையனே.

(உஅ)

தேமுதலேதீ ரமுளோய்
சாமிசதாதா ரணிவோய்
சேமமுதால்தே ரமர்வோய்
கோமுருகேகூ ரமிலோய்.

(உக)

சேதனனேதீ பகமே
சாதபதீதா பமிலோய்
தீதடுகோசீ பதியே
கோதிலியேகோ பதியே.

(௩0)

தீவிரவேள்சே ரணியோய்
சாவிலியேசா ரியனே
சீவனியேதே ரதுலா
கோவணனேகோ ரமிலோய்.

க. தானன தானதனை.

(௩க)

தாரணி சீர்முருகா
ஆரணர் சார்முனியே
ஆரயில் சேர்கரனே
நாரருள் கூர்மதியோய்.

(௩உ)

பாடிடு தேமுதலே
நாடக சாமிசதா

பாடகர் சேமமுதால்
ஆடிடு கோமுருகே.

௧0. தானதன தனன.

(௩௩)

மாசுரர்சே தனனே
வாசவர்சா தபதீ
பாசகர்தீ தடுகோ
மாசுகொல்கோ திலியே.

(௩௪)

சீயமதீ விரவேள்
தூயவசா விலியே
நாயகசீ வனியே
மாயமில்கோ வணனே.

௧௧. தனனதன தனன.

(௩௫)

மயில்வருசே வகனே
வயவறுதா ரகனே
செயிரறுசீ டர்கண
வியனிலகூ றரசே.

(௩௬)

பிரதமசே கரனே
கருதலர்சார் பிலனே
அருமறைதே டிறையே
சுரமகள்கூ டருளோய்.

௧௨. தனதன தானதன.

(௩௭)

பதியிளை யோய்திணியா
முதியர்கள் சார்புளனே

நதிசுத தேமமுதே
மதியினர் கோளரியே.

(௩அ)
ஒலிமுனி தேசிகனே
புலிமுனி தாழ்பெரியோய்
வலியருள் சீறடிதா
மலைவளர் கோமகனே.

கரு. தனதன தானா.

(௩௯)
தெருளர தீதா
சருவரர் தாழ்தாய்
தெரியல தீசா
குருகில கோர்மா.

(௪0)
செயல்புரி தேவா
தயவுளர் தாதா
செயமுனி சேயே
குயினிச போதா.

(௪௧)
செடிதபு காலா
சடுவரி வாழ்வே
செடிநகை யாளீ
கொடுகொடு சீர்வா.

(௪௨)
சிலைவகிர் சேடா
தலைமையர் மீளீ
திலகவு லாசா
குலைமருள் கோலா.

௧௪. தனனு தனனு.

(௪௩)

திருவே பரிவே
சருவே சுரனே
திருமான் மருகா
குருசூழ் குமரா.

(௪௪)

செனியா தவனே
தனிவா னவனே
தினைமா வுணியே
குனிசா னகனே.

(௪௫)

செழுமா மணியே
தழன்மா மகனே
செழியோ னிறைவா
குழகா புலவா.

(௪௬)

திரிசூ லதரா
சருவா பரனு
திருநீ றணிவோய்
குரவார் புயனே.

௫. வெண்டளையான்வந்த தரவுகொச்சகக்கலிப்பா.

௧௫. தானதனு தானந் தனதனு தானதனு.

(௪௭)

சேயவனே மாவொண் டெருளரதீ தாவரதா.
தாயனையாய் தூவின் சருவரர்தாழ் தாய்துணையே
தேயமுளோய் பாவின் றெரியலதீ சாபரமா
கோயிலுளோய் கூவுங் குருகிலகோர் மாதுகிலோய்.

(௪அ)

தேசுருவா வேதன் செயல்புரிதே வாவிமலா
தாசரனு நீதந் தயவுளர்தா தாநிபுணு
தேசமனு காதுஞ் செயமுனிசே யேகழலோய்
கோசிகனே போதங் குயினிசபோ தாகுழையோய்.

(௪௯)

சீலமுளோய் காலஞ் செடிதபுகா லாசிவனே
சாலமுளோய் வாலஞ் சடுவரிவாழ் வேசதுரா
சீலரனு லாலுஞ் செடிநகையா ளீதிதியோய்
கோலமுளோய் சீலங் கொடுகொடுசீர் வாகுதியே.

## ரு. கலிவிருத்தம்.

௧சு. தானந் தனதன தானு தனனு.

(ருo)

மாவொண் டெருளர தீதா வரதா
தூவின் சருவரர் தாழ்தாய் துணையே
பாவின் றெரியல தீசா பரமா
கூவுங் குருகில கோர்மா துகிலோய்.

(ருக)

வேதன் செயல்புரி தேவா விமலா
நீதந் தயவுளர் தாதா நிபுணு
காதுஞ் செயமுனி சேயே கழலோய்
போதங் குயினிச போதா குழையோய்.

(ருஉ)

காலஞ் செடிதபு காலா சிவனே
வாலஞ் சடுவரி வாழ்வே சதுரா
ஆலுஞ் செடிநகை யாளீ திதியோய்
சீலங் கொடுகொடு சீர்வா குதியே.

(௫௩)
போர்வெஞ் சிலைவகிர் சேடா பொருநா
சார்திண் டலைமையர் மீளீ சனதா
சீர்வண் டிலகவு லாசா திமிசோய்
ஆர்வங் குலைமருள் கோலா வனகா.

கஎ. தனதன தனதன தானதன தானதன.

(௫௪)
திடமுடை மயில்வரு சேவகனே தேமுதலே
தடநில வயவறு தாரகனே சாமிசதா
திடுகுக செயிரறு சீடர்கண சேமமுதால்
குடமுனி வியனிலை கூறரசே கோமுருகே.

(௫௫)
சிறுமையில் பிரதம சேகரனே சேதனனே
தறுகணர் கருதலர் சார்பிலனே சாதபதீ
சிறுகறு மருமற்றை தேடிறையே தீதடுகோ
குறமகள் சுரமகள் கூடருளோய் கோதிலியே.

கஅ. தனதன தனதன தானதனன தனன.

(௫௬)
சிவகண பதியிளை யோய்திணியாதீ விரவேள்
சவணர்கண் முதியர்கள் சார்புளனேசா விலியே
சிவைசுத நதிசுத தேமமுதேசீ வனியே
குவிபகை மதியினர் கோளரியேகோ வணனே.

(௫௭)
சிகிவரை யொலிமுனி தேசிகனேசார் முனியே
தகைகெழு புலிமுனி தாழ்பெரியோய்சேர் கரனே
திகில்வெலும் வலியருள் சீறடிதாகூர் மதியோய்
குகையுரு மலைவளர் கோமகனேசீர் முருகா.

௧௯. தானதன தானந் தனதன தான.

(௫அ)

சேயவனே மாவொண் டெருளர தீதா
தாயனையாய் தூவின் சருவரர் தாழ்தாய்
தேயமுளோய் பாவின் றெரியல தீசா
கோயிலுளோய் கூவுங் குருகில கோர்மா.

(௫௯)

தேசுருவா வேதன் செயல்புரி தேவா
தாசரண நீதந் தயவுளர் தாதா
தேசமண காதுஞ் செயமுனி சேயே
கோசிகனே போதங் குயினிச போதா.

(௬௦)

சீலமுளோய் காலஞ் செடிதபு காலா
சாலமுளோய் வாலஞ் சடுவரி வாழ்வே
சீலரண வாலுஞ் செடிநகை யாளீ
கோலமுளோய் சீலங் கொடுகொடு சீர்வா.

(௬௧)

தேகமுளோய் போர்வெஞ் சிலைவகிர் சேடா
சாகரமே சார்திண் டலைமையர் மீளீ
சேகரனே சீர்வண் டிலகவு லாசா
கோகருள்கோ ணர்வங் குலமருள் கோலா.

௨௦. தனன தனன தனன தனன.

(௬௨)

திருவே பரிவே செனியா தவனே
சருவே சுரனே தனிவா னவனே
திருமான் மருகா தினைமா வுணியே
குருசூழ் குமரா குனிசா னகனே.

(௬௩)

செழுமா மணியே திரிசூ லதரா
தழன்மா மகனே சருவா பரணு
செழியோ னிறைவா திருநீ றணிவோய்
குழகா புலவா குரவார் புயனே.

௬. கலிநிலைத்துறை.

உக. தனனு தனனு தனதன தனதன தானதனு.

(௬௪)

திருவே பரிவே திடமுடை மயில்வரு சேவகனே
சருவே சுரனே தடநில வயவறு தாரகனே
திருமான் மருகா திடகுக செயிரறு சீடர்சணு
குருசூழ் குமரா குடமுனி வியனிலை கூறரசே.

(௬௫)

செனியா தவனே சிறுமையில் பிரதம சேகரனே
தனிவா னவனே தறுகணர் கருதலர் சார்பிலனே
தினைமா வுணியே சிறுகறு மருமறை தேடிறையே
குனிசா னகனே குறமகள் சுரமகள் கூடருளோய்.

(௬௬)

செழுமா மணியே சிவகண பதியிளை யோய்திணியா
தழன்மா மகனே சவணர்கண் முதியர்கள் சார்புளனே
செழியோ னிறைவா சிவைசுத நதிசுத தேமமுதே
குழகா புலவா குவிபகை மதியினர் கோளரியே.

(௬௭)

திரிசூ லதரா சிகிவரை யொலிமுனி தேசிகனே
சருவா பரணு தகைகெழு புலிமுனி தாழ்பெரியோய்
திருநீ றணிவோய் திகில்வெலும் வலியருள் சிறடிதா
குரவார் புயனே குகையுரு மலைவளர் கோமகனே.

௨௨. தனதன தானா தனனா தனனா தனனா.

(௬அ)

தெருளர நீதா வரதா திருவே பரிவே
சருவரர் தாழ்தாய் துணையே சருவே சுரனே
தெரியல நீசா பரமா திருமான் மருகா
குருகில கோர்மா துகிலோய் குருசூழ் குமரா.

(௬௯)

செயல்புரி தேவா விமலா செனியா தவனே
தயவுளர் தாதா நிபுணா தனிவா னவனே
செயமுனி சேயே கழலோய் தினைமா வுணியே
குயினிச போதா குழையோய் குனிசா னகனே.

(எ௦)

செடிதபு காலா சிவனே செழுமா மணியே
சடுவரி வாழ்வே சதுரா தழன்மா மகனே
செடிநகை யாளீ திதியோய் செழியோ னிறைவா
கொடுகொடு சீர்வா குதியே குழகா புலவா.

(எக)

சிலைவகிர் சேடா பொருநா திரிகு லதரா
தலைமையர் மீளீ சனதா சருவா பரனா
திலகவு லாசா திமிசோய் திருநீ றணிவோய்
குலைமருள் கோலா வனகா குரவார் புயனே.

௨௩. தானன தானா தந்தன தனனா தானதனா.

(எ௨)

தேகமு ளோய்போர் வெஞ்சிலை வகிர்சே டாபொருநா
சாகர மேசார் திண்டலை மையர்மீ ளீசனதா
சேகர னேசீர் வண்டில கவுலா சாதிமிசோய்
கோகருள் கோனார் வங்குலை மருள்கோ லாவனகா,

உச. தனதன தானன தானன தானன தானதனா.

(எ௩)

திகழ்மறை பாடிடு தேமுத லேயதி தீரமுளோய்
சகவுயிர் நாடக சாமிச தாசிவ தாரணிவோய்
சிகலறு பாடகர் சேமமு தாலுயர் தேரமர்வோய்
குகைதொறு மாடிடு கோமுரு கேயிடர் கூரமிலோய்.

(எச)

சிலைவலர் சீயம தீவிர வேண்மணி சேரணியோய்
சலமறு தூயவ சாவிலி யேமிகு சாரியனே
சிடதர்க ணயக சீவனி யேதுதி தேரதுலா
குலமிலி மாயமில் கோவண னேயிழி கோரமிலோய்.

உரு. தானன தானன தானன தானன தானதனா.

(எரு)

சீர்முரு காவடர் சேனைய னேயொளிர் சேயவனே
சார்முனி யேகிளர் தானைய னேநல தாயனையாய்
சேர்கர னேநிறை தேனைய னேகமழ் தேயமுளோய்
கூர்மதி யோயொரு கோனைய னேபல கோயிலுளோய்.

(எசு)

சேதன னேசுக தீபக மேயறு சீலமுளோய்
சாதப தீயொரு தாபமி லோய்விரி சாலமுளோய்
தீதடு கோபர சீபதி யேபுகழ் சீலராறல்
கோதிலி யேமிர் கோபதி யேயெணில் கோலமுளோய்.

உசு. தான தனதன தான தனதன தானதனா.

(எஎ)

தீவி ரவேண்மணி சேர ணியோயுயர் தேகமுளோய்
சாவி லியேமிகு சாரிய னேகுண சாகரமே

சிவ னீயேதுதி தேர துலாவறு சேகரனே
கோவ ணனேயிழி கோர மிலோயொரு கோகருள்கோன்.

## எ. கட்டளைக்கலித்துறை.

உஎ. தனதன தானன தான தனதன தானதன.

(எஅ)

திருமலி தாரணி சீர்மு ருகாவடர் சேனையனே
தருமமெ யாரணர் சார்மு னியேகிளர் தானையனே
செருமலி யாரயில் சேர்க ரனேநிறை தேனையனே
குருமலி நாரருள் கூர்ம தியோயொரு கோனையனே.

(எகூ)

சிதலையின் மாசுரர் சேத னனேசுக தீபகமே
சதமுனை வாசவர் சாத பதியொரு தாபமிலாய்
சிதடுறு பாசகர் தீத டுகோபர சீபதியே
குதலையென் மாசுகொல் கோதி லியேநிமிர் கோபதியே.

உஅ. தான தனதன தானன தானன தானதன.

(அ௦)

தேமு தலேயதி தீரமு ளோயறு தேசுருவா
சாமி சதாசிவ தாரணி வோய்தொழு தாசரண
சேம முதாலுயர் தேரமர் வோய்பல தேசமண
கோமு ருகேயிடர் கூரமி லோய்சுடர் கோசிகனே.

## அ. நேரிசைவெண்பா.

உகூ. தானதன தானந் தனனதன தானதன
தானதன தானந் தனனதன—தானதன
தானதன தானந் தன.

(அக)

சேயவனே மாவொண் டெருளரதீ தாவரதா
தாயனையாய் தூவின் சருவரர்தாழ்—தாய்துணையே

தேயமுளோய் பாவின் றெரியலதி சாபரமா
கோயிலுளோய் கூவுங் குரு.

௯. இன்னிசைவெண்பா.

௩0. தானதன தானந் தனனதன தானதன
தானதன தானந் தன.

(அ௨)

தேசுருவா வேதன் செயல்புரிதே வாவிமலா
தாசரண நீதந் தயவுளர்தா தாநிபுண
தேசமண காதுஞ் செயமுனிசே யேகழலோய்
கோசிகனே போதங் குயில்.

(அ௩)

சீலமுளோய் காலஞ் செடிதபுகா லாசிவனே
சாலமுளோய் வாலஞ் சவெரிவாழ் வேசதரா
சீலரண லாலுஞ் செடிநகையா ளீதிதியோய்
கோலமுளோய் சீலங் கொடு.

(அச)

தேகமுளோய் போர்வெஞ் சிலைவகிர்சே டாபொருநா
சாகரமே சார்திண் டலைமையர்மீ ளீசனதா
சேகரனே சீர்வண் டிலகவுலா சாதிமிசோய்
கோகருள்கோ ணர்வங் குலை.

௧0. நிலைமண்டில வாசிரியப்பா.

௩௧. தனன தனன தனன தனன.

(அ௫)

திருவே பரிவே செனியா தவனே
செழுமா மணியே திரிசூ லதரா
சருவே சுரனே தனிவா னவனே
தழன்மா மகனே சருவா பரண

திருமான் மருகா தினைமா வுணியே
செழியோ னிறைவா திருநீ றணிவோய்
குருசூழ் குமரா குனிசா னகனே
குழகா புலவா குரவார் புயனே.

## கக. அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

௬௨. தனதன தானன தானதன தானன தானன தானதன.

(அ௬)

திருமலி தாரணி சேர்முருகா சேனைய னேயொளிர் சேயவனே
தருமமெ யாரணர் சார்முனியே தானைய னேநல தாயனையாய்
செருமலி யாரயில் சேர்கரனே தேனைய னேகமழ் தேயமுளோய்
குருமலி நாரருள் கூர்மதியோய் கோனைய னேபல கோயிலுளோய்.

(அஎ)

திகழ்மறை பாடிடு தேமுதலே தீரமு ளோயறு தேசுருவா
சகவுயிர் நாடக சாமிசதா தாரணி வோய்தொழு தாசரனு
சிகலறு பாடகர் சேமமுதால் தேரமர் வோய்பல தேசமனு
குகைதொறு மாடிடு கோமுருகே கூரமி லோய்சுடர் கோசிகனே.

(அஅ)

சிதலையின் மாசுரர் சேதனனே நீபக மேயறு சீலமுளோய்
சதமுனை வாசவர் சாதபதி தாபமி லோய்கிரி சாலமுளோய்
சிதடுறு பாசகர் தீதடுகோ சிபதி யேபுகழ் சீலரனுல் [முளோய்.
குதலையென் மாசுகொல் கோதிலியே கோபதி யேயெணில் கோல

(அகூ)

சிலைவலர் சீயம தீவிரவேள் சேரணி யோயுயர் தேசுமுளோய்
சலமறு தூயவ சாவிலியே சாரிய னேகுண சாகரமே
சிலதர்க ணுயக சீவனியே தேரது லாவறு சேசரனே [ன்.
குலமிலி மாயமில் கோவணனே கோரமி லோயொரு கோகருள்கோ

௩௩. தனதன தானா தனனா தனதன தனதன தானதனா.

(௩௦)

தெருளர தீதா வரதா திடமுடை மயில்வரு சேவகனே
சருவரர் தாழ்தாய் துணையே தடநில வயவறு தாரகனே
தெரியல தீசா பரமா திடருக செயிரறு சீடர்கணா
குருகில கோர்மா துகிலோய் குடமுனி வியனிலை கூறரசே.

(௩௧)

செயல்புரி தேவா விமலா சிறுமையில் பிரதம சேகரனே
தயவுளர் தாதா நிபுணா தறுகணர் கருதலர் சார்பிலனே
செயமுனி சேயே கழலோய் சிறுகறு மருமறை தேடிறையே
குயினிச போதா குழையோய் குறமகள் சுரமகள் கூடருளோய்.

(௩௨)

செடிதபு காலா சிவனே சிவகண பதியிளை யோய்திணியா
சடுவரி வாழ்வே சதுரா சவணர்கண் முதியர்கள் சார்புளனே
செடிநகை யாளீ திதியோய் சிவைசுத நதிசுத தேமமுதே
கொடுகொடு சீர்வா குதியே குவிபகை மதியினர் கோளரியே.

(௩௩)

சிலைவகிர் சேடா பொருநா சிகிவளை யொலிமுனி தேசிகனே
தலைமையர் மீளீ சனதா தகைகெழு புலிமுனி தாழ்பெரியோய்
திலகவு லாசா திமிசோய் திகில்வெலும் வலியருள் சீறடிதா
குலமருள் கோலா வனகா குலகயுரு மலைவளர் கோமகனே.

௩௪. தனதன தானா தனனா தனதன தானா தனனா.

(௩௪)

தெருளர தீதா வரதா செயல்புரி தேவா விமலா
சருவரர் தாழ்தாய் துணையே தயவுளர் தாதா நிபுணா
தெரியல தீசா பரமா செயமுனி சேயே கழலோய்
குருகில கோர்மா துகிலோய் குயினிச போதா குழையோய்.

(௯௫)

செயல்புரி தேவா விமலா செடிதபு காலா சிவனே
தயவுளர் தாதா நிபுண சடவெரி வாழ்வே சதுரா
செயமுனி சேயே கழலோய் செடிநகை யாளீ திதியோய்
குயினிச போதா குழையோய் கொடுகொடு சீர்வா குதியே.

(௯௬)

செடிதபு காலா சிவனே சிலைவகிர் சேடா பொருநா
சடவெரி வாழ்வே சதுரா தலைமையர் மீளீ சணதா
செடிநகை யாளீ திதியோய் திலகவு லாசா திமிசோய்
கொடுகொடு சீர்வா குதியே குலைமருள் கோலா வனகா.

௩௫. தானன தானன தானதன தனதன தான தனன.

(௯௭)

சேனைய னேயொளிர் சேயவனே தெருளர தீதா வரதா
தானைய னேநல தாயனையாய் சருவரர் தாழ்தாய் துணையே
தேனைய னேகமழ் தேயமுளோய் தெரியல தீசா பரமா
கோனைய னேபல கோயிலுளோய் குருகில கோர்மா துகிலோய்.

(௯௮)

தீரமு ளோயறு தேசுருவா செயல்புரி தேவா விமலா
தாரணி வோய்தொழு தாசரண தயவுளர் தாதா நிபுண
தேரமர் வோய்பல தேசமன செயமுனி சேயே கழலோய்
கூடமி லோய்சுடர் கோசிகனே குயினிச போதா குழையோய்.

(௯௯)

தீபக மேயறு சீலமுளோய் செடிதபு காலா சிவனே
தாபமி லோய்விரி சாலமுளோய் சடவெரி வாழ்வே சதுரா
சீபதி யேபுகழ் சீலரணல் செடிநகை யாளீ திதியோய்
கோபதி யேயெணில் கோலமுளோய் கொடுகொடு சீர்வா குதியே.

(௧00)

சேரணி யோயுயர் தேகமுளோய் சிலைவகிர் சேடா பொருநா
சாரிய னேகுண சாகரமே தலைமையர் மீளி சனதா
தேரது லாவறு சேகரனே திலகவு லாசா திமிசோய்
கோரமி லோயொரு கோகருள்கோ குலைமருள் கோலா வனகா.

௩௬. தானந் தனதன தானந் தன்ன தனன தனன.

(௧0௧)

மாவொண் டெருளர தீதா வரதா திருவே பரிவே
தூவின் சருவரர் தாழ்தாய் துணையே சருவே சுரனே
பாவின் றெரியல தீசா பரமா திருமான் மருகா
கூடவுங் குருகில கோர்மா துகிலோய் குருசூழ் குமரா.

(௧0௨)

வேதன் செயல்புரி தேவா விமலா செனியா தவனே
நீதந் தயவுளர் தாதா நிபுண தனிவா னவனே
காதுஞ் செயமுனி சேயே கழலோய் தினைமா வுணியே
போதங் குயினிச போதா குழையோய் குன்சா னகனே.

(௧0௩)

காலஞ் செடிதபு காலா சிவனே செழுமா மணியே
வாலஞ் சடுவரி வாழ்வே சதுரா தழன்மா மகனே
ஆலுஞ் செடிநகை யாளீ திதியோய் செழியோ னிறைவா
சீலங் கொடுகொடு சீர்வா குதியே குழகா புலவா.

(௧0௪)

போர்வெஞ் சிலைவகிர் சேடா பொருநா திரிசூ லதரா
சார்திண் டலைமையர் மீளி சனதா சருவா பரண
சீர்வண் டிலகவு லாசா திமிசோய் திருநீ றணிவோய்
ஆர்வங் குலைமருள் கோலா வனகா குரவார் புயனே.

௬எ. தனதன தானன தானதன தனதன தானன தானதன.

(௧0௫)

திருமலி தாரணி சீர்முருகா திகழ்மறை பாடிடு தேமுதலே
தருமமெ யாரணர் சார்முனியே சகவுயிர் நாடக சாமிசதா
செருமலி யாரயில் சேர்கரனே சிகலறு பாடகர் சேமமுதால்
குருமலி நாரருள் கூர்மதியோய் குகைதொறு மாடிடு கோமுருகே.

(௧0௬)

திகழ்மறை பாடிடு தேமுதலே சிதலையின் மாசுரர் சேதனனே
சகவுயிர் நாடக சாமிசதா சதமுனை வாசவர் சாதபதி
சிகலறு பாடகர் சேமமுதால் சிதடுறு பாசகர் தீதடுகோ [யே.
குகைதொறு மாடிடு கோமுருகே குதலையென் மாசுகொல் கோதிலி

(௧0எ)

சிதலையின் மாசுரர் சேதனனே சிலைவலர் சீயம தீவிரவேள்
சதமுனை வாசவர் சாதபதீ சலமறு தூயவ சாவிலியே
சிதடுறு பாசகர் தீதடுகோ சிலதர்க ளுயக சீவனியே [னே.
குதலையென் மாசுகொல் கோதிலியே குலமிலி மாயமில் கோவண

## ௧உ. எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

௬அ. தனதன தானன தானன தானன
தானன தானன தானதன.

(௧0அ)

திருமலி தாரணி சீர்முரு காவடர்
சேனைய னேயொளிர் சேயவனே
தருமமெ யாரணர் சார்முனி யேகிளர்
தானைய னேநல தாயனையாய்
செருமலி யாரயில் சேர்கர னேநிறை
தேனைய னேகமழ் தேயமுளோய்
குருமலி நாரருள் கூர்மதி யோயொரு
கோனைய னேபல கோயிலுளோய்,

(௧0௯)

திகழ்மறை பாடிடு தேமுத லேயதி
    தீரமு ளோயறு தேசுருவா
சகவுயிர் நாடக சாமிச தாசிவ
    தாரணி வோய்தொழு தாசரணு
சிகலறு பாடகர் சேமமு தாலுயர்
    தேரமர் வோய்பல தேசமறு
குகைதொறு மாடிடு கோமுரு கேயிடர்
    கூரமி லோய்சுடர் கோசிகனே.

(௧௧0)

சிதலையின் மாசுரர் சேதன னேசக
    தீபக மேயறு சீலமுளோய்
சதமுனை வாசவர் சாதப தியொரு
    தாபமி லோய்விரி சாலமுளோய்
சிதடுறு பாசகர் தீதடு கோபர
    சீபதி யேபுகழ் சீலரணல்
குதலையென் மாசுகொல் கோதிலி யேநிமிர்
    கோபதி யேயெணில் கோலமுளோய்.

(௧௧௧)

சிலைவலர் சீயம தீவிர வேண்மணி
    சேரணி யோயுயர் தேகமுளோய்
சலமறு தூயவ சாவிலி யேமிகு
    சாரிய னேகுண சாகரமே
சிலதர்க ணயக சீவனி யேதுதி
    தேரது லாவறு சேகரனே
குலமிலி மாயமில் கோவண னேயிழி
    கோரமி லோயொரு கோகருள்கோன்.

௩௯. தான்ன தானன தானன தானுதந்
தனதன தானு தனனு.

(௧௧௨)

சேனைய னேயொளிர் சேயவ னேமாவொண்
டெருளர தீதா வரதா
தானைய னேநல தாயனே யாய்துாவின்
சருவரர் தாழ்தாய் துணையே
தேனைய னேகமழ் தேயமு ளோய்பாவின்
றெரியல தீசா பரமா
கோனைய னேபல கோயிலு ளோய்கூடவுங்
குருகில கோர்மா துகிலோய்.

(௧௧௩)

நீரமு ளோயறு தேசுரு வாவேதன்
செயல்புரி தேவா விமலா
தாரணி வோய்தொழு தாசர ருநீதந்
தயவுளர் தாதா நிபுண
தேரமர் வோய்பல தேசம ருகாதுஞ்
செயமுனி சேயே கழலோய்
கூரமி லோய்சுடர் கோசிக னேபோதங்
குயினிச போதா குழையோய்.

(௧௧௪)

தீபக மேயறு சீலமு ளோய்காலஞ்
செடிதபு காலா சிவனே
தாபமி லோய்விரி சாலமு ளோய்வாலஞ்
சவெரி வாழ்வே சதுரா
சீபதி யேபுகழ் சீலர ருலாலுஞ்
செடிநகை யாளீ திதியோய்

கோபதி யேயெணில் கோலமு ளோய்சிலங்
கொடுகொடு சீர்வா குதியே.

(௧௧௫)

சேரணி யோயுயர் தேகமு ளோய்போர்வெஞ்
சிலைவகிர் சேடா பொருநா
சாரிய னேகுண சாகர மேசார்திண்
டலைமையர் மீளீ சனதா
தேர்து லாவறு சேகர னேசீர்வண்
டிலகவு லாசா திமிசோய்
கோரமி லோயொரு கோகருள் கோனூர்வங்
குலைமருள் கோலா வனகா.

௬௦. தானன தானுதந் தனதன தானு தன்னு தனனு தன்னு.

(௧௧௬)

சேயவ னேமாவொண் டெருளர தீதா வரதா திருவே பரிவே
தாயனே யாய்தூவின் சருவரர் தாழ்தாய் துணையே சருவே சுரனே
தேயமு ளோய்பாவின் றெரியல தீசா பரமா திருமான் மருகா
கோயிலு ளோய்கூவுங் குருகில கோர்மா துகிலோய் குருசூழ் குமரா.

(௧௧௭)

தேசுரு வாவேதன் செயல்புரி தேவா விமலா செனியா தவனே
தாசர னுநீதந் தயவுளர் தாதா நிபுணு தனிவா னவனே
தேசம னுகாதுஞ் செயமுனி சேயே கழலோய் தினைமா வுணியே
கோசிக னேபோதங் குயினிச போதாகுழையோய்குனிசானகனே.

(௧௧௮)

சீலமு ளோய்காலஞ் செடிதபு காலா சிவனே செழுமா மணியே
சாலமு ளோய்வாலஞ் சடுவரி வாழ்வே சதுரா தழன்மா மகனே
சீலர னுலானுஞ் செடிநகை யாளீ திறியோய் செழியோ னிறைவா
கோலமு ளோய்சிலங் கொடுகொடு சீர்வா குதியே குழகா புலவா.

(௧௧௯)

தேகமு ளோய்போர்வெஞ் சிலைவகிர் சேடா பொருநா திரிசு லதரா
சாகர மேசார்திண் டலைமையர் மீளீ சனதா சருவா பரஞ
சேகர னேசீர்வண் டிலகவு லாசா திமிசோய் திருநீ றணிவோய்
கோகருள் கோனூர்வங் குலமருள் கோலா வனகா குரவார் புயனே.

## ௧௬. எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

௪௧. தனதன தான தனன தனன தனன
தனதன தனதன தானதன.

(௧௨௦)

தெருளர தீதா வரதா திருவே பரிவே
திடமுடை மயில்வரு சேவகனே
சருவரர் தாழ்தாய் துணையே சருவே சுரனே
தடநில வயவறு தாரகனே
தெரியல தீசா பரமா திருமான் மருகா
திடருக செயிரறு சீடர்கண
குருகில கோர்மா துகிலோய் குருசூழ் குமரா
குடமுனி வியனிலை கூறரசே.

(௧௨௧)

செயல்புரி தேவா விமலா செனியா தவனே
சிறுமையில் பிரதம சேகரனே
தயவுளர் தாதா நிபுண தனிவா னவனே
தறுகணர் கருதலர் சார்பிலனே
செயமுனி சேயே கழலோய் தினைமா வுணியே
சிறுகறு மருமறை தேடிறையே
குயினிச போதா குழையோய் குனிசா னகனே
குறமகள் சுரமகள் கூடருளோய்.

(௧௨௨)

செடிதபு காலா சிவனே செழுமா மணியே
சிவகண பதியிளை யோய்திணியா
சடுவரி வாழ்வே சதுரா தழன்மா மகனே
சவணர்கண் முதியர்கள் சார்புளனே
செடிநகை யாளீ திதியோய் செழியோ னிறைவா
சிவைசுத நதிசுத தேமமுதே
கொடுகொடு சீர்வா குதியே குழகா புலவா
குவிபகை மதியினர் கோளரியே.

(௧௨௩)

சிலைவகிர் சேடா பொருநா திரிசூ லதரா
சிகிவளை யொலிமுனி தேசிகனே
தலைமையர் மீளீ சனதா சருவா பரனு
தகைகெழு புலிமுனி தாழ்பெரியோய்
திலகவு லாசா திமிசோய் திருநீ றணிவோய்
திகில்வெலும் வலியருள் சீறடிதா
குலைமருள் கோலா வனகா குரவார் புயனே
குகையுரு மலைவளர் கோமகனே.

௧௪. ஒன்பதின்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

௪௨. தானன தானன தானன தானுதந்
தனனு தனனு தனதன தனதன தானதனு.

(௧௨௪)

சேனைய னேயொளிர் சேயவ னேமாவொண்
டிருவே பரிவே திடமுடை மயில்வரு சேவகனே
தானைய னேநல தாயனை யாய்தூவின்
சருவே சுரனே தடநில வயவறு தாரகனே
தேனைய னேகமழ் தேயமு ளோய்பாவின்
றிருமான் மருகா திட்குக செயிரறு சீடர்களு

கோனைய னேபல கோயிலு ளோய்கூடவுங்
குருசூழ் குமரா குடமுனி வியனிலை கூறரசே.
(௧உ௫)
சேரணி யோயுயர் தேகமு ளோய்போர்வெந்
திரிசூ லதரா சிகிவனை யொலிமுனி தேசிகனே
சாரிய னேகுண சாகர மேசார்திண்
சருவா பரனு தகைகெழு புலிமுனி தாழ்பெரியோய்
தேரது லாவறு சேகர னேசீர்வண்
டிருநீ றணிவோய் திகில்வெலும் வலியருள் சீறடிதா
கோரமி லோயொரு கோகருள் கோனுர்வங்
குரவார் புயனே குகையுரு மலைவளர் கோமகனே.

பஞ்சவிம்சதியதிகசதபங்கி பூர்த்தி.

---

ஆ திருப்பாடல் - ௧உஅ௧.

---

இப்பங்கியுட் காணப்படும் ௧உ௫ - செய்யுளன்றிச் சந்தச்சுவை மோனைத்தொடைகளிற் சிறிதிழிந்து பொருள் விகற்புற வருவனவும், கீழ்த்தொடங்கி மேனோக்கிச்சென்று முடிவனவுமாய வேறு செய்யுள்களுமுள. அவற்றை யலகிட விலையென வறிக. அலகிட்டவைகளுள்.—சில வஞ்சிவிருத்தம் உ - பங்கியும், தரவு கொச்சககக்கலிப்பா ௬ - பங்கியும், கலிவிருத்தம் ௪ - ௬ - பங்கியும், கலிநிலைத்துறை ௪ - ௬ - ௬ - பங்கியும், கட்டளைக்கலித்துறை ௪ - ௬ - பங்கியும், அறுசீராசிரியவிருத்தம் ௬ - ௫ - எ - பங்கியும், எழுசீராசிரியவிருத்தம் எ - ௧௦ - பங்கியும், எண்சீராசிரியவிருத்தம் அ-பங்கியும், ஒன்பதின்சீராசிரியவிருத்தம் ௧௧ - பங்கியுமாகத் தனித்தனி நிற்கு நிரலு முணர்க.

---

# சமாதான சங்கீதம்.



இராகம் - முகாரி. தாளம் - அடதாளம்.

பல்லவி.

சஞ்சல மேன்மனமே சிவனடித்
தஞ்ச மான பினுமே.

அனுபல்லவி.

என்செபலாலொன்று மில்லையென்றேநின்று
மேலதந்துயரில்லையே—யிந்தச்
சூதை யறிகில்லையே. (சஞ்சல)

சரணம்.

வானமிடிந்துதலையில்விழும்படி
வம்புவந்தாலுமென்னை—யந்தக்
கானமயின்முருகையன்றிருவருள்
கைவிட மாட்டாதே. (சஞ்சல)

பன்னிருசூரிய ரொன்றுயெரிக்குங்கற்
பாந்தம்வந்தாலுமென்னே—யந்தப்
பன்னிருகட்சிவன் றண்ணளிநம்மைப்
பராமரித்துக்கொள்ளுமே. (சஞ்சல)

செப்பவொணுப்பிழையெத்தனையோமுன்னர்ச்
செய்திருந்தாலுமென்னே—நம்மை
யெப்பொழுதும்புரந் தாள்குகப்பிரமத்
திகலருண் முன்னிறுமே. (சஞ்சல)

நாலேழுநாலுந்தெளிவாகவோதிமெய்ஞ்
ஞானஞ்சொன்னாலுமென்னை—யந்த
மூலப்பிரணவ சாமிதயாவின்றி
முன்னேறுவதில்லையே. (சஞ்சல)

காஷாயம்வற்கலை பூண்டுசன்னாசியாய்க்
காடுறைந்தாலுமென்னை—யந்தக்
காலுந்தலையுங்கடந்தநிலைதன்னைக்
கண்டபின்பன்றோ கிட்டும். (சஞ்சல)

பொன்னாசைபெண்ணாசைமண்ணாசைமூன்றையும்
போக்கடித்தாலுமென்னை—கேளுந்
றன்னைஞானமொன்றேதன்னைக்காட்டுந்
தலைவனிடங்கூட்டும். (சஞ்சல)

ஒன்பது பத்தாறுதத்துவமெல்லா
மொடுக்கியிருத்தலினுங்—குக
னன்பருள்கொண்டுசின் முத்திரைதன்னினில்
லாநந்தங் கைவல்யமே. (சஞ்சல)

முத்திதருங்குகப்பிரமத்தைவாழ்த்திய
முத்தனண்ணாமலையா—னிரு
பத்மவடிக்கன்பு பண்ணிடுதாசர்
பரகதியெய்துவரே. (சஞ்சல) க.

குமரகுருதாசசுவாமிகள் பாடல் முற்றிற்று.

---

துயரதுநபரன் றிருவடிவாழ்க.

திருச்சிற்றம்பலம்.

---

குஹமயம்.

# குமரகுருதாசசுவாமிகள்பாடற் பிரபந்தவகராதி.


| பிரபந்தப்பெயர். | பக்கம். | பிரபந்தப்பெயர். | பக்கம். |
|---|---|---|---|
| அடியவர்க்கடிமைநாம் | ௩00 | கந்தரிரட்டைமணி மாலை | ௨௧௨ |
| அபிமானமழுத்தல் | ௩௧௨ | கந்தரொருபா வொருபஃது | ௨௧௭ |
| அமரர்கோ | ௩ | கந்தர் திருவாரம் | ௨௩௧ |
| அமிர்தமதி | ௨௮௧ | கந்தர்நான்மணிமாலை | ௨௫௮ |
| அயிலரசு | ௨௧0 | கருணாகரவேலன் | ௨0௫ |
| அனையனடிநாடுமனமே | ௨0௧ | குகப்பிரமம் | ௯௯ |
| அவனியாசை | ௨௩௭ | குந்துகால் | ௧௧௧ |
| ஆநந்தக்களிப்பு | ௩௬௨ | குருபரக்கண்ணி | ௩௪௩ |
| ஆநந்தமுகில் | ௯௩ | சண்முகாநந்த சிவம் | ௭௪ |
| ஆரணத்திறுதி | ௩0௪ | சதாசிவக்கண்ணி | ௩௪௭ |
| இந்துமிலைந்தோன் | ௨௩0 | சமாதான சங்கீதம் | ௩௯௭ |
| உட்பகையொழிக்க மனு | ௧௩௬ | சரணவிண்ணப்பம் | ௨௭௯ |
| உலகவாழ்வை | ௨௭௨ | சரவணபவன் | ௧௨௧ |
| உள்ளக்களி | ௨௯௪ | சரவணபவாநந்தன் | ௮௬ |
| உள்ளூர்ச்சிவசுப்ரமணியர் சதகம் | ௧௪0 | சிகிவாகனன் | ௨0௯ |
| எரிவளைக்குகன் தசபங்கி | ௩௨0 | சிவவேளாகசுந்தரமாலை | ௩0௫ |
| எழிலார்சுரும்பு | ௨௨0 | சிறுமைநீக்குயர் செல்வம் | ௨௮௪ |
| ஏமவிலைகர் | ௩௧௫ | ஸ்ரீகதிர்காமவேலர் வண்ணம் | ௩௧௬ |
| கங்கையின்சேய் | ௨௪௫ | சொன்னயம் | ௨௫௫ |
| கதிரேசன் | ௧௧௫ | | |

| பிரபந்தப்பெயர். | பக்கம். | பிரபந்தப்பெயர். | பக்கம். |
|---|---|---|---|
| ஞாயவாதிகள்விளக்குவர் | ௨௭௪ | தேர்ந்தேனேயென் கண்ணி | ௩௫௨ |
| திருக்கயிலாசமலை | ௬௭ | நவரத்தின மீக்கூற்று | ௧௨௭ |
| திருக்குமரகோட்டம் | ௫௬ | நிட்களாநந்தகுகன் | ௮0 |
| திருக்குன்றுதோருடல் | ௩௧ | நெஞ்சுப்பத்து | ௨௭0 |
| திருமலை | ௬௪ | பகலெல்லாம் | ௨௪0 |
| திருச்செந்தில் | ௧௩ | பணமென்றால் | ௩௧0 |
| திருச்சோலைமலை | ௩௭ | பரஞ்சுடர்க்கண்ணி | ௩௨௩ |
| திருத்தணிகை | ௬0 | பரம்பொருட்கண்ணி | ௩௬௧ |
| திருநிறைந்தசிவம் | ௨௨௨ | பராபரம் | ௩௧௬ |
| திருப்பரங்கிரி | ௭ | பிழைபொறுக்க முறையீடு | ௨௯0 |
| திருப்பழநிமலை | ௧௯ | புலியாரே | ௨௪௮ |
| திருப்புலியூர் | ௪௯ | பூரணக்கண்ணி | ௩௬௧ |
| திருமாலைமாற்றுத் திரிபங்கி | ௩௧௯ | பூரணாநந்தகுகன் | ௧0௫ |
| திருவருணை | ௫௨ | பெரும்பேறு | ௧௩௯ |
| திருவிராமேச்சுரம் | ௪௩ | பொன்மயிற் கண்ணி | ௩௪0 |
| திருவுயர்ந்தவாறெழுத்தான் | ௨௯௭ | பொன்னவிர்மேனி | ௨0௪ |
| திருவுருமலைக்கோமகன்பஞ்சவிம்சதியதிகசதபங்கி | ௩௬௫ | போசவுலாச | ௨0௧ |
| திருவேரகம் | ௨௫ | போற்றிவிண்ணப்பம் | ௨௭௭ |
| துறவுநோக்கம் | ௨௮௭ | மண்ணிற்சிறுவீடு | ௨௪௬ |
| தெய்வவணக்கம் | ௧ | மறைமுடிவு | ௩௧௪ |
| | | மனது | ௨௧௮ |
| | | முதுமறைகள் | ௩௧௨ |

உ

குஹமயம்.

திருவிராமேச்சுரத்தைச்சேர்ந்த பாம்பன்

ஸ்ரீமத்-குமரகுருதாசசுவாமிகள்

அருளிச்செய்த

# திருவலங்கற்றிரட்டு.

## முதலாங்கண்டம்.

விநவுத்தரம். நேரிசைவெண்பா.

பின்னைபின்பே ராவநெற பீட்டின்சொல் லென்பழகி
யென்றுமொழி யென்கவரி யேந்திமிக்கார்—முன்னைத்தே
யுய்ப்பவனை பேவுரையா தோஞ்செய்பன் றூலெனுமா
செய்திருவ லங்கற் றிரட்டு,

இதனை,
இராமநாதபுரந்தாலூக்காபிரப்பன்வலசை
தி. உடையநாயகப்பிள்ளை
சென்னைப்பண்டிதமித்திரவச்சுக்கூடத்திற்
பதிப்பித்தனர்.

முதற்பதிப்பு - 500 பிரதி.



1901.

விலை அணா - 6.

குமாரகுருப்யோநமஃ

# பாடுமுறை.

———:0:———

ஸ்ரீசுப்பிரமணியக்கடவுள் சாக்ஷாது பரப்பிரமமென்பதை வேதாகம புராணேதிகாசங்கள் விளக்குமாயினும், அவற்றிலெழுஞ் சங்கையொழித்து இந்நூலாசிரிய ரருளிச்செய்த ஸ்ரீசுப்பிரமணிய மென்பதைக்குறித்த வியாசமும் குமரகுருதாசசுவாமிகள் பாடலும் இச்சுப்பிரமணியத்தின்மே லொருதெய்வஞ் சொல்ல வேண்டிய தில்லை, சச்சிதாநந்தப்பிரமம் இதுவேயெனச் சுருதி யுக்தி அநுபவ வாயிலாக இனிது விளக்குமன்றோ. அத்தகைய பரம்பொருளது திருவருணெறிநின்று பாடியருளிய இத்திருப்பாடல்களி லெதை யேனு மன்போடு அக்கடவுள் சன்னிதியிலேனும் மற்ற விடங்களி லேனும் பாடித்துதிப்பார்க்குப் பாவநாசம், ரோகநாசம், சத்துருநாசம், ஆயுள்விருத்தி, தைரியவிருத்தி, வீரியவிருத்தி, வித்தைவிருத்தி, புண்ணியவிருத்தி, புத்திரவிருத்தி யுண்டாம். அன்றிச் சர்வார்த்த சித்தியுமுத்தியும் வாய்க்குமென்றலும் வாய்மை.

விரதாதி விசேஷதினங்களிலும் தினந்தோறும் தேவாலயத் தின் முன்னர்ப்பாடுவதாயின், பாடுவோர் ஸ்ரீ அருணகிரிநாத சுவா மிகள் திருவாக்காகிய திருப்புகழ் பாடியபின்னர் இத்திருப்பாடலுள் க்ஷேத்திரத்திற்குரிய திருப்பதிகத்தை யினிதுபாடி யிறுதிக்கண் ணுள்ள திருக்கந்தர் திருப்பல்லாண்டுகூறி முடித்துக் கருப்பூர தீபா ராதனைசெய்து தரிசித்துப் பிரசாதமேற்று ஸ்ரீகந்தமூர்த்தியைக் கருத்திருத்தி யிருப்பிட மெய்தக்கடவர்.

தேவாலயமன்றிக் கிரகம் யாதொரு பொதவிடத்திற் சரவணசுவாமியைப் பூஜிக்கத் துணிநரும், மேற்பிரகாசப்படுத்திய வாறே முன்னர்த் திருப்புகழ்செப்பிப் பின்னர் இத்திருப்பாடலுட் போதுந்திருப்பதிகங்களில் ஒன்று அல்லது பலபாடி யிறுதியிற் பல்லாண்டோதித் துதித்துப் பூஜையைமுடித்துக்கொள்ளக் கடவர். திருப்புகழ் பாடமில்லாதார் இத்திருப்பாடல்களையே ஆரம்பமாசப் பாடித்துதித்து முடிவுபெறக்கடவர்.

பெரியபுராணத்தில் "அர்ச்சனை பாட்டேயாகும்" எனவும், திருவாதவூரர் புராணத்தில் "அன்பிலாத பண்பினரெனினுந் தன்னைப் பாடினர்க் கிரங்கும்" எனவும், திருஞானசம்பந்த சுவாமிகள் திருமுறையில் "பாடுவார்க்கருளுமெந்தை" எனவும், திருநாவுக்கரசு சுவாமிகள் திருமுறையில் "தமிழோடிசைபாடன் மறந்தறியேன்" எனவும், சுந்தரமூர்த்திசுவாமிகள் திருமுறையில் "பொய்ம்மையாளரைப்பாடாதே யெந்தைபுகலூர் பாடுமின் புலவீர்காள்" எனவும், மாணிக்கவாசகசுவாமிகள் திருவாசகத்தில் "என்புருகிப்பாடுகின்றிலை" எனவும், தாயுமானசுவாமிகள் பாடலில் "பாடுகின்ற பனுவலோர்க டேடுகின்ற செல்வமே" எனவும், அருணகிரிநாதசுவாமிகள் கந்தரலங்காரத்தில் "முத்தமிழால் வைதாரையு மங்கு வாழவைப்போன்" எனவும், குமரகுருதாசசுவாமிகள் பாடலில் "பாட்டிலுனைப் பழிச்சவொரு பாக்கியமும்பெற்றதன்றி" எனவும், ஷண்முக சகத்திர நாமத்திற் குமாரக்கடவுள் திருநாமம் "கீதக்ஞன்" "கத்யபத்யப்பிரியன்" எனவும் வருதலின்; அன்புடையார் யாவரும் பரமனைப் பாவாற்றுதிக்கவேண்டு மென்றல் தடையற்ற நிர்ணயமெனச் சற்சங்கத்தார் யாவரு மறிவரன்றே.

சுபம்.

உ

சிவமயம்.

குருப்பிரம்மணேநம:

திருச்சிற்றம்பலம்.

# திருவலங்கற்றிரட்டு.

## முதலாங்கண்டம்.

### காப்பு.

குறள்வெண்பா.

பொன்னாரந் துன்னும் புயத்தானை மாமுகவன்
பின்னோ னிதற்கருள்காப் பே. ௧.

கோளில் புகழ்க்கயிலைக் கோன்முருகை யேத்தவவன்
றாளுங் கடம்புந் துணை. ௨.

அஞ்ஞத்வம் வீடற் கலங்கற் றிரட்டாற்ற
மஞ்ஞையிவர் வோன்காக்க வந்து. ௩.

வள்ளல்சே யின்றாளை வாழ்த்தவருட் டெய்வானை
வள்ளியுங் காக்கவே வந்து. ௪.

அயில்வேலன் மேனானு மாற்றுந் துதிக்கோர்
மயில்சேவ லுங்காக்க வந்து. ௫.

சுகநிலையைச் சூழ்ந்து சொலற்குச் சுரேசன்
மகிழ்வொடுங் காக்கவே வந்து. ௬.

நற்றொ டொழுக்கூட னரிக் கிளமுருகா
யுற்றோ னருள்வா னுவந்து. ௭.

அருளா ரடிபோற்று மன்பர்க் கருள்சே
யருளே நமக்காதிக் கம். ௮.

ஒப்புவமை யில்லாமெய் யுற்றவடி வேலரசிங்
கெப்படியும் வந்தாளு மே. ௯.

குமரகுரு தானே கொடுக்குமென வங்கால்
குமரகுரு தாசன் குறிப்பு. ௧0.

## குமாரபரமேச்வரஸ்தௌத்தியம்.

பண் - கோல்லி.

அரஹர மந்திர வமல நிரந்தர
சரவண சம்ப்ரம சங்கர புத்திர
சுரபதி பூம சுகோதய போதக
பரிபுர சததள பாத நமஸ்தே. ௧.

ஆதி யனாதியு மான வரோதய
ஜோதி நிலாவு ஷடாநந சுபகர
வேதக சமரச விண்டலர் பண்டித
பாதக கண்டன பாத நமஸ்தே. ௨.

இந்துள லம்பக விங்கித மங்கல
சுந்தர ரூப துவாதச கரதல

சந்திர சேகர தடதா கிடதடப்
பந்திகொ ணிர்த்தன பாத நமஸ்தே. ௩.

ஈசுர நந்தன வீசுர புங்கவ
தேசுறு குண்டல சித்திர பந்தன
வாசறு சஸ்திர ஹஸ்த சரோருக
பாச விமோசன பாத நமஸ்தே. ௪.

உச்சித மஞ்ஞையி லூரதி மோகன
நிச்சய வுத்தர நித்ய மனோலய
சற்சனர் மித்திர சத்துரு கண்டன
பச்சையம் புஷ்கர பாத நமஸ்தே. ௫.

ஊர்த்துவ நாடகர்க் கோதிய தேசிக
வார்த்த தயித்திய ரடறெறு காதக
கூர்த்திகை வீரிய குக்குட கேதன
பார்க்க வருங்குக பாத நமஸ்தே. ௬.

எண்ணறு வைபவ விக்ர்ர விசேஷண
புண்ணிய வுத்தம பூரண பச்சிமக்
கண்ணில குஞ்சிவ கந்தகிர் பாசன
பண்ணவர் பூஜித பாத நமஸ்தே. ௭.

ஏரக நாயக வென்குரு நாயக
தாரக நாயக ஷண்முக நாயக
காரக நாயக கதிதரு நாயக
பாரக நாயக பாத நமஸ்தே. ௮.

ஐங்கர சோதர வம்பிகை காதல
மங்கள வல்லி மனோரத குஞ்சரி

பிங்கித காவல விகப்ர சாதக
பங்கயன் மால்பணி பாத நமஸ்தே. கூ.

ஒகர மஹாரத வொளிர்புஜ வமுதர்கள்
புகழுப விதவி பூதிகொண் முண்டக
ரகித விதான லலாட விலோசன
பகருஹ பாவக பாத நமஸ்தே. க0.

ஓமர ஹரசிவ வோஞ்சர வணபவ
ரீமர ஹரசிவ நிகழ்பரி புரபவ
ஸ்ரீமர ஹரசிவ திரள்பவ மொழிவளர்
பாமகள் புகழருட் பாத நமஸ்தே. கக.

கலியுகம் சகூகூச-ல் நந்தனவூ மார்கழி
மாதம் உசவ சுக்கிரவாரம்.

---

## திருவருளடிமைப்பிரார்த்தனை.

பண் - நட்டபாடை.

பொய்யாமுகத் தின்வாழ்விற் புகாதுன்னடி யாருய்
மெய்யாமுகத் தினுக்கேவர மிகுமாவலிங் குள்ளே
ஐயாரடிக் கமலந்தொழ லானேனரு ளின்றி
யுய்யேனினி யுய்யேன்மயி லூரும்பெரு மானே. க.

தன்மாத்தட வாராணசி தனிற்போமுயிர் களுக்கன்
றெண்மாமறை மூலஞ்சொலி யுருவார்கதி நல்குங்
கண்மூன்றுடை யாற்கன்புள கறையில்குரு வான
கண்மாமணி யேயுன்னடி காணுமனுய் யேனே. உ.

பாலாழியன் சிவபூஜனை பண்ணுந்திறற் காழி
சாலூரம தாய்நல்கிய சசிசேவணியன் பொருளென்
ருலோலித முளமாமறை யறையுஞ்சிவ னருண்மேன்
மாலாகியு ளேனின்னருள் வாராமலுய் யேனே. ௩.

மூன்றாகிய பிணியாற்பசி முனிவாலின்மைப் பிணியாற்
றேன்றாநின்ற வனூர்மேவிட வெறுழமாதவர்க் குளதோ
வின்றாளுட னின்றானென விலகுங்கிர்பைக் கடலே
தேன்றேடவிழ் தண்ணார்கூச் சிரமாலிகை யோனே. ௪.

சங்காழியு ளாற்கன்றொரு தலைவேதனை யுஞ்சீர்
மங்காமறை யோற்கின்னல்செய் வயின்வேதனை யுந்தான்
றங்காதனூர் புரிந்தூர்ந்ததை யங்காந்தமுஞ் சாற்று
றன்காலடி யார்க்காமய றுழையாதயி லோனே. ௫.

தவநிதிவி யாதன்சகோ தரர்சண்முனி களுமீன்
பவமாயியு னடியேகதி பதியேயெனு மந்நாள்
சிவமானதை யுறுமுன்னருள் சேரும்படி செய்தாய்
நவபேதமு ளான்முன்னிச நவிலும்பெரு மானே. ௬.

நுன்காலடி தாழ்ந்தேத்திவ னுகர்சூர்தடி யாயே
லெங்கேயினி யுய்வானுன திதமாயரு ளிதுவோ
கொங்கார்மலர் புனையுஞ்சுரர் கோமான்பணி கொண்ட
செங்காவிரி பாயும்பொழிற் சீகாழியன் மகனே. ௭.

ஏரார்பழ நிக்கேகவென் றெணுமென்றனை யிதுநாள்
வாராதிரு வாராவென வருள்வேமன்று வருவாய்
கூராய்விய சனமென்றன்று கூறிச்சென்ற வணமே
யாராரரு ளென்றேவரு மயில்வேன்முரு கோனே. ௮.

கண்ணாலிருந் துந்தன்முகங் காணத்தகு மோகேழ்க்
கண்ணாடியி னூலேயது காணத்தரு மதுபோற்

றண்ணாருமுன் னருளாலுயிர் தனைநானறி யாதே
பண்ணுநிற்ப தொன்றும்மிலை பரனேகுரு பரனே. கூ.

தன்னையறி வேனேற்கொளுன் றன்னையறி வேனின்
றென்னையறி யாதேயினிச் செயுமாறென நொடியாய்
மன்னேமயி லேறுங்குரு மணியே*கிரி புகழ்ந்த
வன்னேயெனை யாளுந்திரு வருளேதிரு வருளே. சo.

மாசிமீ உகூ புதவாரம்.

## நின்றநிலை விண்ணப்பம்.

பண் - பழம்பஞ்சுரம்.

நித்த முன்றனைப் பாவித் தோர்ந்தது
நிச்ச யம்மென் றுணர்த்தவே
சத்தி யத்தொடு மென்மு னேவந்தென்
றுச வாவெனு நாளெதாய்
†நத்து மோவன்று தானன் றேயென்ற
னுட்டங் கூடுத லாகுநாண்
முத்த னேமுரு கைய னேபர
மோன னேயறி வாயரோ. க.

மண்ணி னாசை மடங்கி நானந்த
விண்ணி னாசையை வெளவுநா
ளெண்ணு கின்ற படிக்கு நீவந்
திணக்கி யன்பொ டுரைக்குநா

* கிரி=அருணகிரியார்.

† நந்துமோவென்பது நத்துமோவென வலித்தல்விகாரமாயிற்று. நந்தல்=உண்டாதல்.

ளொண்ணு மேலருள் பண்ணு மேயென்
ஹுயி ரினி னுக்குயி ராய்மிளி
ரண்ண லார்விழி பன்னி ரண்டுடை
யண்ண லேயறி வாயரோ. உ.

மாத ராற்றத்தித் தத்தித் தாவு
மனக்கு ரங்கென் வசத்திலே
யேத நீத்துள் ளடங்கு நாளது
வீச னீவந் துரைக்குநாள்
பாத நம்பிய தாசன் பாலருள்
பண்ண வேண்டுமிந் நேரமே
வேத னேகரு ணால யாவடி
வேலே யாவறி வாயரோ. ங.

செய்யும் யோகந் தவறி னுயெனச்
செப்பி னுயிரண் டறுகுறி
மையு ளேனென்றை யேம றந்து
மருண்ட துண்டதை மீட்டுமென்
ஐய நீயருள் செய்த தாயிலே
யாவர் பாலிதை யோதுவேன்
பொய்யி லாவயில் வேல னுபரி
பூர ணுவறி வாயரோ. ச.

ஏகு மூச்சை யிழுத்து நானுள்
ளிருத்தி யேகட்ட வென்னினுந்
தேக மோதிட மில்லை யவ்வழி
தேர வும்மிலை யிவ்வுயிர்
போகு நாளென்ன செய்கு வேனின்
பொறுப்பி லேயெனை யொப்பித்தேன்

மாகர் போற்றிடு மாம ணைசிகி
வாக னுவறி வாயரோ. ரு.

ஈச னாகவுஞ் சீவ னாகவு
மெண்ணின் மாசக மாகவு
நாச மேது மிலாத தாய்நிற்கு
ஞாயத் தீர்வையி னுமொன்
றேசி லாதெனை யாக்கும் பண்பிங்
கெனக்கொன் றேதின் றுனக்குண்டே
பாச நாசகிர் பாதி தீமிளிர்
பாவ கியறி வாயரோ. சா.

என்று முன்றனைக் கண்டு கொண்டடி
யேத்தும் பாடு பெறுதவ
ரொன்றி னுந்திட முற்றி டார்களி
துள்ள தேபொது வாகவே
யன்று சொன்ன படிக்கு நீவந்
தழைக்கு நாளதி தூரமோ
குன்றி யேமனங் கன்று கின்றது
கொள்கு காவறி வாயரோ. எ.

வாக்கிற் பொய்யு மனத்தில் வஞ்சமு
மல்கு மென்றென் றொழிலெலாம்
போக்கி நின்பத மேத்தி யுய்வது
போது மென்றுனை நம்பினேன்
காக்க வன்பர மேப ரங்குளக்
கண்ணு ளோயிக விண்ணுளோ
யாக்க நீடு சடக்க ராசர
வாட்டை யாவறி வாயரோ. அ.

தந்தை தாயுஞ் சகோதரங்களுந்
தாரமுஞ்சுகு மாரரும்
பந்துவும்மித்ர சொந்த முப்பல்
பவுள்சு நின்பத மாகவே
சிந்தை செய்ததைத் தேடினேனன்றித்
தேடினைத்தமதொன் றில்லையே
கந்தனேயிரும் பாவலாவள்ளி
காவலாவழி வாயரோ. ௯.

ஊரும் பேருரு வுஞ்செல் லாகவென்
றாரும் பேருரு வுந்தரித்
தாருஞ் சொல்லற கருஞ்சொல் லொன்றை
யருள்செய் தங்கிச மாக்கொளுஞ்
சீருடைக்குரு மூர்த்தி யேயிவன்
செய்யும் விண்ணப்ப முய்யவே
சாருடைப்புகழ் பாடி னேன்கண்ட
சண்முகாவழி வாயரோ. ௧௦.

மாசிமீ ௨௯வ. புதவாரம்.

---

## அருண்மாட்சிமை.

பண் - நட்டராகம்.

ஆரோன் கங்கைபுனை யரனருடை வான்பொருளே
யூரும் பொன்மயிலில் வந்தொளிர்சிவ ரத்தினமே
தேருந் தொன்மறையின் பொருள்சேரருண் முத்தேநின்
காருண் யம்மிலையேற் கணப் போதினி யுய்யேனே. ௧.

விண்ணு டுய்பவர்கள் விரை வெண்மல ராற்புசிதம்
பண்ணு நின்றவுன்றன் றிருப் பாதம் வழிபடுவோர்
நண்ணார் சன்மவுவ ரயி ஞயக னேயுனருட்
கண்ணேக் கில்லையெனிற் கணப் போதினி யுய்யேனே. உ.

விண்ணோர் தம்பதியே மிளிர் விண்மணி யின்மணியே
யண்ணு வென்னுயிரே யறு மாமுக ரத்தினமே
பண்ணார் பொக்கிஷமே யெங்கள் பாக்கிய வைப்பேநின்
றண்ணீ ரம்மிலையேற் சணப் போதினி யுய்யேனே. ௩.

பூக்கும் வெண்பொடிதான் மிகப் பொலிசெம் மேனியனே
தூக்கங் குண்டலங்க டுணி துதைய வெண்டிசையுந்
தேக்கச் சாரிவருஞ் சிகித் தேருடை யண்ணுவுன்
னேக்கொன் றில்லையெனி னொடிப் போதினி யுய்யேனே.

மின்னார் வேற்படையாய் விரை வீசுநற் றண்கதம்பா
பொன்னேர்கொள்சிலம்பாபுரிமூன் றுடைப்பொன்மார்பா
மன்னார் தெய்வானை வள்ளி மாணிக்க மேயுனரு
ளின்னே யில்லையெனி னிமைப் போதினி யுய்யேனே. ரு.

நல்லார் போற்றுசிதஞ் செறி நாவி லெழும்பொருளே
பொல்லா நித்திலமே புரை போகா ரத்தினமே
கல்லா வெற்கருள வந்த கண்மணி யேயுனரு
ளில்லா தேயொழியி னிமைப் போதினி யுய்யேனே. சு.

ஐயங் கோள்கடியப் பன்னு மாரண வாரியனே
தெய்வங் கட்கரிய வொரு தெய்வமே சின்மயமே
பையார் கோப்பதியே பர பாவகி யேயருணீ
செய்யா யேலிங்கியான் றிளைப் போதினி யுய்யேனே. எ.

பொய்யா வாழ்வுடையாய் புர மூன்றெரித் தோர்புதல்வா
வையார் தென்பொதிகைப் பதி யமர்மு னிக்கினிய

மெய்யா பொன்பழநித் துறை வேலா வெற்கினருள்
செய்யா யேலிங்கியான் றினைப் போதினி யுய்யேனே. ௮.

இன்பார் சாகரமே யென தின்ப மனோரதமே
பொன்பூ மேனியனே பரி பூரண வானவனே
யென்பூ சைச்சிவனே வெயி லேறயிற் கையாவு
னன்பே யில்லையெனி னனுப் போதினி யுய்யேனே. ௯.

வாளா ரகஷியெழில் வளர் வள்ளி மனோகரமே
நீளா திக்கமெடினுஞ் சிவ நேசகிர் பாகரமே
கோளீ னங்குறுகாப் புகழ் கூறின வன்பரனே
யாளா தேபோனு லனுப் போதினி யுய்யேனே. ௧0.

மாசிமீ௨௯ மந்தவாரம்.

---

## அடைக்கலம்.

பண் - இந்தளம்.

அஞ்சு மாகி யாறு மாகி யாதி யந்த நாப்ப ணின்றி
விஞ்சி யேகி றைந்த தாகி வேலு டைக்கை யானென் றுகித்.
துஞ்ச ரேற்ற நீத்த தீத சுப்ர மணிய மான தேவே
தஞ்ச மேவுன் னடிப்பண் போதுந் தாச னின் னடைக்க லம்மே,

பெண்ணு மாகி யாணு மாகிப் பேத மோட பேத மும்மாய
மண்ணு மாகி விண்ணு மாகி மற்று மேற்ற செயல்க ளாகி
யெண்ணெ ணுச்சை தன்ய மும்மா மீச னேசு ரேச னேநற் [மே.
றண்ண மேவுன் னடிப்பண் போதுந் தாச னின் னடைக்க லம்

நந்தி யாட கேசு ரர்நீ லன்க ரன்செம் பானு கம்பன்
றந்தி பூணுங் காள கண்டன் சங்கு கர்ணன் றண்டி குண்டன்

கொந்து சூட னேக ருத்ரக் கூளி சூழச் சிகண்டி யூர்ந்தோய்
சந்த மேவுன் னடிப்பண் போதுந் தாச ரெனின் னடைக்க லம்மே.

துங்க வார ணங்கச் சையாச் சூடி யேமப் பொடிதி மிர்ந்தை
யங்க மாக யோக தண்ட மான தொன்று கரம்பி டித்துச்
செங்க மேய சிறிய சிக்கந் திகழ நின்ற பழநிச் சித்தா [மே.
சங்கை வீட்டென் னடிப்பண் போதுந் தாச ரெனின் னடைக்க லம்

செப்பொ ருதை பரம பத்தி செய்துள் ளீர மேற்ற வர்க்கு
மொப்பி லாத பிராண யோக முற்ற வர்க்கும் ராஜ யோக
முப்பொ ருள்கொண் டாடி னோர்க்கு மூல ஞான பழநிச் சித்தா
திப்பி லாவுன் னடிப்பண் போதுந் தாச ரெனின் னடைக்க லம்மே.

கும்ப யோனி வரக ளிங்குக் கொணர்தி யென்ற படிகொ ணர்ந்த
வம்ப ருவு மாவி டிம்பன் வாழ வேகல் லடிமை கொண்டோய்
நம்பி ராளென் றேத்த விந்நா ளுயி னேற்குங் கிருபை செய்தோய்
தம்பி ரானின் னடிப்பண் போதுந் தாச ரெனின் னடைக்க லம்மே.

ஆரல் போலுங் காவி வட்ட மரையில் வீக்கி யதற்கி யைந்த
சீரி லங்கு ருத்ர சின்னந் தேச மோடு மிலக வுள்ளோ
யார ணங்க ளாக வுள்ளோ யைந்தொ டேயொன் றதிக முள்ளோய்
தார காவுன் னடிப்பண் போதுந் தாச ரெனின் னடைக்க லம்மே.

அண்டர் கோற்குத் திருவளித்தோயாறுபேர்க்கன் றருளிகைத்தோய்
தொண்டர் தம்முட் பதிவி ருந்தோய் சுருதிச்சென்னிமீதிருந்தோய்
துண்ட மாறு மோரு ருக்கட் டுன்ன வங்க விண்டு றைந்தோய்
தண்ட மேவுன் னடிப்பண் போதுந் தாச ரெனின் னடைக்கலம்மே.

பிரம னைத்தா ளாலு தைத்தோய் பிரம சிட்டி தனையி ழைத்தோய்
பரம னுக்கொன் றோதி நின்றோய் பத்ம நாபன் பரவப் பெற்றோய்

சரம திற்பொன் வேலி யங்கக்கருதார் தம்மைச் செறுத்து கந்தோய்
சரண மேவுன் னடிப்பணி போதுந் தாச னுனின் னடைக்க லம்மே.

சிட்டி காவ லொடெ சிப்புந் திரோப வஞ்செவ் வருட்ட யாவு
மட்டி லாம லேக டாத்த வல்ல மையுள் ளோய்வி னேதச்
செட்டியாக வடிவு கொண்டோய் சீர்த்திசொனவற்கருள்புரிந்தோய்
தட்டி லாவுன் னடிப்பணி போதுந் தாச னுனின் னடைக்க லம்மே.

பங்குனிமீ ௰௨ குருவாரம்.

---

## துக்கரகிதபிரார்த்தனே.

—:o:—

### பண் - பழம்பஞ்சுரம்.

மூன்னா னயனு மூன்னா *லரியா மொழிசேர் மறைநாவா
வின்னு வனுகா விறைவா குரவா விறையோர் பணிபாதா
மன்னூர் மயிலில் வருமா யாலா மடியா வாழ்வாளா
வன்னே யயனே யெனுமென் கவலை யறநீ யருள்வாயே. ௧.

ஒழியா விசிதப் பொடியாய் பொடியா வுளையார் பொற்கழலாய்
பழிசேர் சிதடத் தனுவோர் பகைஞா பகல்சேர் வேற்கையா
பொழிலார் பழநிப் பதியாய் நிதியாய் புநிதா மாப்பொறையா
வழியா மொழியா வென்றன் கவலை யறநீ யருள்வாயே. ௨.

சொல்லுஞ் சுருதிப் பொருளே யருளே சுடர்சேர் மெய்ம்மெய்யா
செல்வங் கட்குயர் செல்வக் கயிலைச் சிவமே செவ்வேளே
நல்லந் திகழுங் கேதா ரமிசை நடன்ஞ் செய்யேறே
யல்லும் பகலும் படுமென் கவலை யறநீ யருள்வாயே. ௩.

---

* அரி=ஆயுதம்.

மாலும் விதியும் பரவுஞ் சரணா வளர்சங் கப்புலவா
வேலுங் குளிரு மிளிர்செங் கையா வினையா ரணிமார்பா
சேலும் வசியு நாணுங் கணிருள் சேயா தண்ணளியா
வாலுந் தலையா வென்றன் கவலை யறநீ யருள்வாயே. ௪

முத்தே மணியே முழுமா நிதியே முதிரா யௌவனமே
சத்தே ரசமே தனியின் னமுதே தவமே தவப்பேறே
வித்தே முளையே முளையுள் ளுயிரே விபுவாய் விரிஜோதீ
யத்தா வயில்வே லவனே கவலை யறநீ யருள்வாயே. ௫

தாதா நீபத் தொடரா குமரா சரணா யுததுவசா
போதார் முடியா புநிதா தனியா புயமுந் நாலீசா
வேதா வடிதாழ் விமலா சபலா மிறலார் வேளாளா
வாதா ரவையா வென்றன் கவலை யறநீ யருள்வாயே. ௬

புனலார் கங்கைக் கிடையோர் புதல்வா பொன்னூர் கண்ணாளா
வெனையா டண்டைச் சரணா புரணா விகல்சேர் சகநாதா
தினைசேர் குன்றக் குறமா னினியைச் சேரும் பவுள்சாளா
வனலார் மெய்யா வென்றன் கவலை யறநீ யருள்வாயே. ௭

முட்டா வாட்டா மொழியா நாத்தே முடியாச் சிவலோகா
சட்டா ரறிஞா கருதா மனசா கருணா கரவேலா
வெட்டா நிலையா விறையோர் தலைவா விருளொல் லில்லாதோ
யட்டா வடிவா வென்றன் கவலை யறநீ யருள்வாயே. ௮

எஞ்சா வடியார் தொடர்பா வடல்சே ரிறைவா ஷட்கிரீவா
துஞ்சா வெழிற்கே கயமூர் குழகா சுகிர்தா சுயஞ்சோதீ
பஞ்சா ரடிச்சேல் விழியா டனையா பரிபூ ரணபாதா
வஞ்சா விறலோ யென்றன் கவலை யறநீ யருள்வாயே. ௯

விண்ணு டுறைநா ரதனு சிரியா வியன்வா ருணியீசா
மண்ணோர் முசுமன் னனையாள் சிவனே மதியீ புண்ணியனே
பண்ணோர் புகழ்பா டினவன் பதியே பரனோர் குருநாதா
வண்ணு வடிபே ணியவென் கவலை யறநீ யருள்வாயே. க0.

பங்குனிமீ கஉஉ குருவாரம்.

---

## ஆறெழுத்துண்மை.

பண் - காந்தாரபஞ்சமம்.

அற்புத மாகிய வருமறை மொழிபோல்
வெற்புயர் புவனம்பல் விளங்கிடு மாறு
பற்பல தேவர்கள் படர்ந்தவின் னுறினுந்
தற்பர மாவது சரவண பவவே. க.

பத்தியு ஞானமும் பரவிடு மார்க்க
மெத்தனை யோவகை யிருக்கினு மிகத்தின்
முத்திதந் தனுதின முழுப்பல னல்கச்
சத்திய மாவது சரவண பவவே. உ.

பூசிக்கும் வானவர் புரவல னவி
வாசிக்கு மாவடி வழிபடி னென்றும்
பாசத்தை நசித்திவண் பரப்ரம வாழ்வைத்
தாசர்பங் காக்கிடுஞ் சரவண பவவே. ௩.

அருணல முள்ளவ னதிமுன் னுள்ளான்
பொருணல முள்ளவன் பூசித வடியார்க்
கிருணில மெய்தினு மிதமுட னேயத்
தருணத்திற் காப்பது சரவண பவவே. ச.

பொடிபொலி மேனியன் புரண வியோம
வடிவுடை யயிலுடை மனனடி கைகூப்
படியவர்க் கிடுக்கணில் வவனியிற் குறுகிற்
சடுதியிற் றடுப்பது சரவண பவவே. ரு.

மஞ்சிகைச் செவியோன் மயிற்பரி யூர்வோன்
றஞ்சமென் றவர்க்கரு டருசம ரூரான்
செஞ்சரண் வாழ்த்துநர் திருவடி சேர்வார்
சஞ்சலந் தவிர்ப்பது சரவண பவவே. சா.

பொங்கிடு புனலிலம் பூவில்வெங் கனலி
லெங்கணு முளவெளி யில்வளி பகலிற்
கங்குலி லடியவர் கருத்துறன் காகச்
சங்கடந் தீர்ப்பது சரவண பவவே. எ.

தென்றிசைக் கோன்விடு திரிவிதத் தூதர்
குன்றெனும் புயமலை குலுங்கமுக் குடுமி
வென்றிகொள் கடந்தடி வீசிவெம் பிடினுந்
தன்றுணை யாவது சரவண பவவே. அ.

தேவியுந் தேவனுந் திருவுரு வருவ
மேவி யனுதியாய் மிளிர்தல்சண் முகமென்
றுவலுற் றுணர்பவ ரழிவுறு வண்ணஞ்
சாவினைத் தடுப்பது சரவண பவவே, கூ.

இந்திரன் முனிவர்க ளேத்துபொற் சரணன்
செந்திரு நகரிடஞ் சேர்ந்ததில் வாழ
வந்திருப் புகழ்பா டினவருக் கபயந்
தந்ததைத் தருவது சரவண பவவே. க0.

பங்குனிமீ கஅஉ சுக்கிரவாரம்.

---

# ஆறெழுத்துண்மை.

பண் - கௌசிகம்.

எண்ணில் பல்வித மாக விருந்திடு
மண்ணொ டைந்து வகைப்படு பூதமும்
பண்ணி னைவைத்துப் பராபர மாய்நிற்ற
லண்ண லார்பெய ராறக்க ரங்களே. க

பூரு வந்தக் கிணம்புகழ் வாருணஞ்
சீரு யர்ந்த வுதக்கடி சேணுநற்
பூர ணச்செய விற்பொலி வுற்றுள்ள
வார ணன்பெய ராறக்க ரங்களே. உ.

துய்ய மூலமுங் குய்யமுந் தொப்புளு
மெய்ய னைகத முமமின் விசுத்தியு
மைய மான லலாடமு மாய்நிற்கு
மைய னார்பெய ராறக்க ரங்களே. ௩.

ஓது மாரண மாகம முன்னருங்
கோதி லாத புராண குலங்கணன்
னீதி யாமற நூனிக மங்களு
மாதி யின்பெய ராறக்க ரங்களே. ச.

ஊறி கந்தசைத் தோதி யமுங்கலை
நூறி நல்லக நோன்புறு வார்கட்காங்
கூற ருஞ்சத்த கோடிநன் மந்த்ரமு
மாறு ளோன்பெய ராறக்க ரங்களே. ரு.

ஒப்பின் மாவசி யஞ்செவ் வழைப்பொரு
துப்பு றுமோக னந்தம்ப னஞ்சொலத்

தப்பி லாதவுச் சாடன மாரண
மப்ப னூர்பெய ராறக்க ரங்களே. சா.

சுத்த மான சுகப்பொரு ளொன்றினைச்
சித்த மீதிருத் தித்தினந் தோறுநற்
பத்தி செய்தவும் பர்க்கரு டந்தவை
யத்த னூர்பெய ராறக்க ரங்களே. எ.

விண்ட லத்துறை விஞ்சையர் கந்தர்வர்
தெண்டு டைத்தெருட் சித்தர் முனீசுரர்
கொண்ட வின்பு பெறற்கருள் கூர்ந்தவை
யண்டர் கோன்பெய ராறக்க ரங்களே. அ.

செம்பொ றிக்கண் விழித்துச் சினந்தடற்
றும்பெ குத்தடி சூலம் பிடித்தெமன்
கெம்பு கிங்கரர் கன்மங் கெடுப்பவை
யம்ப ரன்பெய ராறக்க ரங்களே. கூ.

நீண்ட வாழ்வுடை நித்ய வகத்தியன்
பூண்ட மாவறு பூதி புகன்றவன்
காண்டல் கூர்பலர் கண்ணு யிருந்தவை
யாண்ட வன்பெய ராறக்க ரங்களே. க0.

பங்குனிமீ கஉஉ ஆதித்தவாரம்.

---

## திருப்பரங்கிரி.

---

### பாசநீக்கப் பிரார்த்தனை.

பண் - பஞ்சமம்.

எந்தையே யிறையே யிணையரு ளிலையே
லிங்கியா னுய்ந்திலே னந்தோ

சிந்தைசேர் வானே திகழ்விழுப் பொருளே
திருப்பரங் கிரியுறை சிவனே
பந்தமே போக்கிப் பதவரு ளாக்கிப்
பகலிர வணவிடா நிலையிற்
சந்ததஞ் சேர்க்கத் தயவுசெய் யாயோ
சரவணச் சுயம்பெரு மானே. க

ஏசறு வருளா மிதநல மிலையே
லிங்கியா னுய்ந்திலே னந்தோ
தேசுசே ரெழிலே திகழ்விழுப் பொருளே
திருப்பரங் கிரியுறை சிவனே
பாசமே போக்கிப் பதவரு ளாக்கிப்
பரபரி பூரண நிலையி
னேசமாய் நிலைக்கச் செயும்வகை புரியாய்
நிகழுயிற் சுயம்பெரு மானே. உ.

இன்றுநா னேயென் விலாவரு ளிலேயே
லிங்கியா னுய்ந்திலே னந்தோ
சென்றுமே தேயானை திகழ்விழுப் பொருளே
திருப்பரங் கிரியுறை சிவனே
யன்றுநீ சொனவா றடிமையை யழைத்துன்
னடித்தொழும் பாயுறும் வேலே
யொன்றையே விதிப்பா யயிற்படை பிடித்தே
யொளிர்சுபச் சுயம்பெரு மானே. ௩.

எங்கணு யகநீ யிடுமரு ளிலேயே
லிங்கியா னுய்ந்திலே னந்தோ
திங்களா நநனே திகழ்விழுப் பொருளே
திருப்பரங் கிரியுறை சிவனே

கங்குல்போ லுள்ளவா ணவமல மறவே
கருணைசெய் தேயெனை யாளா
யங்கணு புரணு வணியலர்ச் சரணு
வயிலுடைச் சுயம்புபெரு மாளே. ௪.

இசையியல் கூத்தென் றுளதமிழ் நாதா
விங்கியா னுய்ந்திலே னந்தோ
திசைபுக ழாதி திகழ்விழுப் பொருளே
திருப்பரங் கிரியுறை சிவனே
வசைதரு மாழும் மலமற நீதான்
வருவது கடினமெ னுமேதே
யுசிதமொ டுதடுத் தாள்வது கடன்கா
ணுயரயிற் சுயம்புபெரு மாளே. ரு.

இச்சையான் மறற்கே யடிமையென் றுனு
லிங்கியா னுய்ந்திலே னந்தோ
செச்சைசேர் பிணையாய் திகழ்விழுப் பொருளே
திருப்பரங் கிரியுறை சிவனே
பட்சமே யுரித்தாய்ப் பழமல மகற்றிப்
பகாரு மானந்த நிலையி
னிச்சயா திக்கமா நிறுத்தவா ராயோ
நெடுவயிற் சுயம்புபெரு மாளே. சா.

என்னையாள் வானே யேரரு ளிலையே
லிங்கியா னுய்ந்திலே னந்தோ
தென்னர்மா கூற்றே திகழ்விழுப் பொருளே
திருப்பரங் கிரியுறை சிவனே
யின்னலா னைமவகைப் பாசவல் லொழித்துன்
னிணையடி யென்முடி சூட்டி

நல்னலங் கொளற்குப் பன்னவா ராயோ
நறுமயிற் சுயம்பெரு மாளே. எ.

எம்பிரா னேயுன் னன்பனுக் காயே
லிங்கியா னுய்ந்திலே னந்தோ
செம்பொருட் கடலே திகழ்விழுப் பொருளே
திருப்பரங் கிரியுறை சிவனே
நம்பினே னுனையே நைந்தறு மாயை
நலிவுறத் தடுத்தா ளாயோ
வும்பர்கா வலனே யுமையவள் சுதனே
யுணர்வயிற் சுயம்பெரு மாளே. அ.

இஞ்சையா ணவப்பாம் பின்னமுங் கறிக்கி
னிங்கியா னுய்ந்திலே னந்தோ
செஞ்சடா நநனே திகழ்விழுப் பொருளே
திருப்பரங் கிரியுறை சிவனே
யஞ்சிடா யெனவே யாதரித் தணைத்துன்
னடித்தொழும் பாக்கவா ராயோ
மஞ்சுவாழ் கயப்பெண் மயன்மண வாளா
வடிவயிற் சுயம்பெரு மாளே. கூ.

இட்டமா மருடா னில்லையே யாயி
னிங்கியா னுய்ந்திலே னந்தோ
சிட்டர்பா லனனே திகழ்விழுப் பொருளே
திருப்பரங் கிரியுறை சிவனே
கட்டுமா ணவமாங் கயிற்றினை யறுத்தென்
கவலையின் றிறங்கடி யாயோ

மட்டிலா வகுப்பை யுரைத்தவ னிறைவா
மதியயிற் சுயம்பெரு மாளே. கO.

பங்குனிமீ கசுஉ சோமவாரம்.
ஆ. திருப்பாடல் - சOக.

---

## திருச்சீரலைவாய்.

### சடக்ஷர ஜெபம்.

பண் - பஞ்சமம்.

பனியருட் சேஷா பவளச்செவ் வாயா
பச்சைமா லயன்பணி பாதா
புனித குஞ்சளா புகழ்பவர் தோழா
பொன்றிடா வண்டர்தம் பரனே
யெனைமறக் காதிங் கருளிகைப் பவனே
யெழிற்செழுஞ் சீரலை வாயா
தனிநிலைச் சுகனே யுனைமறக் கினுநா
சாற்றிடுஞ் சரவண பவவே. க.

நண்ணுவா ருறவே யெண்ணுவா ரிறையே
நான்மறை முடிவிற்சொல் பொருளே
மண்ணும்வா னகமும் பண்ணுமாள் வினைஞா
மட்டிலா நடனவெம் பரனே
யுண்ணும்வா னமுதே கன்னலா ரமுதே
யுயர்நிலைச் சீரலை வாயா
தண்ணமார் சரணு வுனைமறக் கினுநா
சாற்றிடுஞ் சரவண பவவே. உ.

துடியிடைக் குறமா தணிமடச் சுரமா
    துடையரு மாமணத் தோழா
நடமயிற் பரியா பிரியகப் பிரியா
    நானடி தொழுநறும் பரனே
சுடர்மணித் தளையா வடலயிற் றலைவா
    துணிநிலைச் சிரலை வாயா
தடவருட் புரணா வுனைமறக் கினுநா
    சாற்றிடுஞ் சரவண பவவே. ௩.

அருளகக் கலியே யயமுதிப் பிலியே
    யமுத சுகோதயப் பிழம்பே
தெருண்மணித் திரளே குருமணிப் பொருளே
    தீவினை தீக்குமெம் பரனே
மருமலர்க் கரனே யடிகளுக் கரனே
    மணிநிலைச் சிரலை வாயா
தருணதற் பரனே யுனைமறக் கினுநா
    சாற்றிடுஞ் சரவண பவவே. ௪.

கிளர்சிவக் கொழுந்தே தவர்மனக் கரும்பே
    கெழுவருண் மாமணிக் குலமே
வளர்நலக் கிழியே யகவிளக் கொளியே
    மனமய நீர்க்குமெம் பரனே
களிமனத் துமையா ளருள்ரசக் கனியே
    கயநிலைச் சிரலை வாயா
தளைமணிச் சரணா வுனைமறக் கினுநா
    சாற்றிடுஞ் சரவண பவவே. ௫.

தமநிறங் காட்டா வியன்வெளிக் கூத்தா
    சங்கரா பண்டைமா தேவா

சுமனச மௌலீ திமிரமில் சோதீ
சுந்தரா தொண்டனேன் பரனே
யிமையவர் ஞாட்பா நிறைவுடை யாப்தா
வெழினிலைச் சீரலை வாயா
சமரச சுகுண வுனைமறக் கினுநா
சாற்றிடுஞ் சரவண பவவே. சு.

சுகுணபோக் கிஷமே விகதபெட் டகமே
சுதைபழுத் தொழுகுகற் பகமே
யிருளையுற் றுயர்வோர் பிரபலப் பொருளே
யெந்தையே தொண்டனேன் பரனே
விகலமற் றொளிர்மா தவபலச் சுடரே
வியனிலைச் சீரலை வாயா
சகலவற் புதனே யுனைமறக் கினுநா
சாற்றிடுஞ் சரவண பவவே. எ.

புலனெடுக் கிடுவோ ரகநடிப் பவனே
புந்தியார் பூத வனீகா
சிலைமதன் படிவம் பொடிபட விழித்தோர்
செல்வனே வல்லவெம் பரனே
யலைகடற் றிரைவீ சொலிமலி வளநா
டகழ்நிலைச் சீரலை வாயா
சலமலர்ச் சரண வுனைமறக் கினுநா
சாற்றிடுஞ் சரவண பவவே. அ.

துதிபணிப் படிப்போர் விதியினைக் கிழிப்போய்
சுபகரச் செருக்கினைத் தருவோய்
முதுமறைக் கவைக்குண் ணிதமொழித் திருப்போய்
மொடுமொழி கூறுமெம் பரனே

பிதமனைக் கமலா சனத்துறை குமரா
விளைநிலைச் சீரலை வாயா
சததளச் சரணு வுனைமறக் கினுநா
சாற்றிடுஞ் சரவண பவவே. கூ.

பவமழிப் பவனே சிவமளிப் பவனே
பரிவுடைத் துவிநவ நயனு
நவமொழிப் புகழ்ப்பாச் சொலினவர்க் கிறையே
நச்சினர்க் கினியவெம் பரனே
யுவமையிற் படியா வடிவுடைத் திருவே
யுறைநிலைச் சீரலை வாயா
தவவருட் சனகா வுனைமறக் கினுநா
சாற்றிடுஞ் சரவண பவவே. க0.

பங்குனிமீ களஉ மங்களவாரம்.

---

# திருவேரகம்.

## ஐக்கிய பிரார்த்தனை.

திருவிராகம்.

பண் - கௌசிகம்.

நஞ்சமுண்டகண்டனர் நயந்துதந்தசெல்வனே
பஞ்சபாதகந்தணந்த பண்பினோர்தொழுங்குகா
விஞ்சிசூழ்தடங்கண்மேய வேரகச்சுரேசனே
தஞ்சமென்றடுத்தவென் றனைப்புணர்ந்துகொள்வையே.

வாசவன்றிருக்குசத்து நீழலில்வழுத்திய
வீசதூஷணைக்கிணங்கி னோர்புரந்தகித்துளோ

ரேசுறுதளித்தசெல்வ வேரகச்சுரேசனே
தாசனென்றடுத்தவென் றனைப்புணர்ந்துகொள்வையே.

புண்டரீகலோசனன்பொன் பூத்தவேதனுலமார்
கண்டனென்னுமூவகைக் கருத்தருந்தொழும்படிக்
கெண்டகைக்குணங்கணீடு மேரகச்சுரேசனே
தண்டனிட்டடுத்தவென் றனைப்புணர்ந்துகொள்வையே.

அங்கணூர்சிகாவளத்தி லேறுகின்றவாண்டவா
மங்கைபாகனூர்க்குவேத வாக்குமூலஞ்சொன்னவா
வெங்குலந்தழைக்கவந்த வேரகச்சுரேசனே
சங்கையுற்றடுத்தவென் றனைப்புணர்ந்துகொள்வையே. ௪.

மாகரோடுநாகரும் வயங்குமண்டலத்தரும்
போகுமுன்னெமக்கடைக்க லம்புகிற்சமன்றிசைக்
கேகிடார்மெய்யென்றுரைத்த வேரகச்சுரேசனே
தாகமுற்றடுத்தவென் றனைப்புணர்ந்துகொள்வையே. ௫.

இந்தநாளுனைக்கருத் திருத்தியென்கணேயுள
பந்தம்யாவுமற்றிடாத பண்பினைப்பொருந்தினு
னெந்தநாளுநன்குறேனல் லேரகச்சுரேசனே
தந்தையென்றடுத்தவென் றனைப்புணர்ந்துகொள்வையே.

நாதவொண்சிலம்பலம்ப நாடகம்புரிந்திடும்
பாதபங்கயங்களைப் பணிந்துமிந்தநாளையோ
வேதுமின்றிமாய்வனோநல் லேரகச்சுரேசனே
தாதையென்றடுத்தவென் றனைப்புணர்ந்துகொள்வையே.

பூமியந்தரத்தினும் பொருந்துமேன்மைபூக்கவே
யாமியக்கைலாயநாதற் கோமுரைத்தவையநீ
ளேமுறுந்தவத்தரேத்து மேரகச்சுரேசனே
சாமியென்றடுத்தவென் றனைப்புணர்ந்துகொள்வையே. அ.

மங்கைநாடுய்ப்பஞ்சவன் மகட்குமாமுகங்கரந்
தங்கமானநன்முகங் கொடுத்தவா தியன்பிறை
லெங்குலங்கொளீசனைநல் லேரகச்சுரேசனை
சங்கம்வேட்டடுத்தவென் றனைப்புணர்ந்துகொள்வையே.

உம்பரும்புகழ்வஃதுப் புனைத்தவன்றொடுத்தசீர்
பட்டுமாலையைத்தினந்தி னம்புனைந்தபாவகி
யெம்பிரானெனக்குணிற்கு மேரகச்சுரேசனை
சம்புவென்றடுத்தவென் றனைப்புணர்ந்துகொள்வையே.

பங்குனிமீ கஅஉ புத்தவாரம்.

---

## பலகிரி. *

அடிமைப்பரிபாகவறிவிப்பு.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பண் - பஞ்சமம்.

கனைகழ னிலவிடு சததள வினையடி
கருதிடு தவமுடையோர்
மனவெளி தனினட மிடுமர ஹரசிவ
வடிவுடை யயிலரசே
பணிமலி யிதழவிழ் தொடைய லணிபெரும
பலகிரி யுறைமுருகா
வினிமைசெய் புரிவுட னெனையு மடிமைகொள
விதுநல தருணமரோ. க.

---

* பலகிரி=குன்றுதோறாடல்.

களிகிளர் முசுமுக னெனுநிரு பனரிய
கடவுளர் கதியினுமேற்
கொளவரு ளினனென வழிபடும் விபுதர்கள்
குலவுற வுளசிவனே
பளக வதரவுமை கரம்வள ரழகிய
பலகிரி யுறைமுருகா
விளைமலி புரிவுட னெனையு மடிமைகொள
விதுநல தருணமரோ. ௨.

அருமறை புகழ்நிறை குருபர மிதுவெனு
மமைவொடு தினமுணர்வாய்ச்
சரவண பவகுக வெனவழி படுபவர்
சனன மரணமறவே
பரிவுட னடிமைகொ ளகணித பசுபதி
பலகிரி யுறைமுருகா
விருசுறு புரிவுட னெனையு மடிமைகொள
விதுநல தருணமரோ. ௩.

துணிசெ யிரவிகுல வரச னொருவனுயர்
சுசியொடு தபசுசெயாத்
திணிமணி மதுரையி னரனது தொழினனி
செய்வென நசைஇயவா
பணிய குமரகுரு பிரணவ வுருவொளிர்
பலகிரி யுறைமுருகா
விணையறு புரிவுட னெனையு மடிமைகொள
விதுநல தருணமரோ. ௪.

இலகு கயனயன வுமையறு தினம்வள
ரிளைமலி மணி மதுரைப்

புலவர்க டலைவனை யறுமுக வருணெறி
புகவரு ளியபரனே
பலநவ மணிநிறை வளமுட னுயரிய
பலகிரி யுறைமுருகா
விலவச வளியுட னெனையு மடிமைகொள
விதுநல தருணமரோ. ரு.

நடமயின் மிசையொரு சுடர்மணி யெனவரு
நவசபை களின்முதல்வா
தடவிடின் னிசைமுனி பகிரத னடிமைகொள்
சமரச நிலையிறைவா
படமுடை மணியர வணிபவர் மனமகிழ்
பலகிரி யுறைமுருகா
விடரறு புரிவுட னெனையு மடிமைகொள
விதுநல தருணமரோ. சா.

சகல கலைகளையு முணர்வுறு வலிமலி
தவமிகு குறுமுனியைச்
சுகிர்த வடிமைமுறை கொளுமொரு குருபர
சுருதிகள் புகழ்சிவனே
பகநிறை சரவண பவமறை யவர்புகழ்
பலகிரி யுறைமுருகா
விகழ்வறு புரிவுட னெனையு மடிமைகொள
விதுநல தருணமரோ. எ.

புதுமல ரளக வனிதையரும் விழைவுகொள்
பொருவறு குறமயிலா
ளதிமது ரவதர ரசநுகர் தலைவவொள்
ளமுத விபுதர்பரனே

பதும நனைநிரைக ளவிழும் வளமொழுகு
பலகிரி யுறைமுருகா
விதமிகு புரிவுட னெனையு மடிமைகொள
விதுநல தருணமரோ. ௮.

வியனென வெயில்விரி விமலர் கயிலைமலை
மிசைநிறை கொலுவுடையோய்
மயறெறு கவுணியன் விடமமு தெனநுகர்
வலியுள னழகுடையான்
பயிறமி ழணிபுனை பசுபதி யுடன்மொழி
பலகிரி யுறைமுருகா
வியல்புறு புரிவுட னெனையு மடிமைகொள
விதுநல தருணமரோ. ௯.

முரணறு புகழ்சொன வருண கிரியைநிஜ
முடிபுடை யறிஞனெனத்
தரணிய ருவணையர் புகழ வருளினவொர்
தகர வெளியிறைவனே
பரவரு நெடுவள மலிய முகில்கள்கவி
பலகிரி யுறைமுருகா
விரிபறு புரிவுட னெனையு மடிமைகொள
விதுநல தருணமரோ. ௧௦.

பங்குனிமீ ௨௧௳ மந்தவாரம்.

# திருச்சோலைமலை.

---

## வியப்பு.

னகரவெதுகைக் கலிநிலைத்துறை.

பண் - இந்தளம்.

நின்னையே சிவமா யறுமுனி வருந்துதி நிகழ்த்திப்
பன்னொ நலமே படைத்துய்ய வருளிய பரனே
மன்னுமா சோலை மலைமனா வுன்பதம் வணங்கற்
கென்னமா தவஞ்செய் துள்ளதோ வெனதுநற் றலையே. க.

சென்னிநா லுடையா னறுதினம் பழிச்சிடு தெய்வ
மென்னவே துலங்கிப் பவளத்தின் றிரளென வியங்கு
நென்னடைச் சோலை மலைமனா நின்மொழி கேட்க
வென்னமா தவஞ்செய் துள்ளதோ வெனதுநற் செவியே.

வன்னிசேர் நுதற்கண் ணாறுடை யோய்கதிர் வடிவேன்
மின்னுபூங் கரனே வானவ ரேத்தருள் விதுரா
பன்னமார் சோலை மலைமனா நின்னிலை பார்க்க
வென்னமா தவஞ்செய் துள்ளதோ வெனதுநல் விழியே.

அன்னையா யயனா யறுதினம் வழிபடு மடியேன்
றன்னுளே யுணர்வாய்ச் சுடர்பொரு ளாயுள்ள சாமீ
முன்னைசேர் சோலை மலைமனா நின்சரண் முகக்க
வென்னமா தவஞ்செய் துள்ளதோ வெனதுநன் மூக்கே.

மின்னுவா னவர்மன் மயிலென வரவதன் மேலே
யுன்னிய றிமகா நிசிசர னுயிர்தொலைத் துள்ளோய்
மன்னுமா சோலை மலைமனா நின்னடி வாழ்த்தற்
கென்னமா தவஞ்செய் துள்ளதோ வெனதுநன் னாவே. ரு.

பின்னைகேள் வனயன் பிறங்கெழின் முனிவரர் பிறரு
முன்னியே கணித்தற் கமைவறு பெருந்தகை யுடையோய்
துன்னுமா சோலை மலைமறு நின்சரண் டொழமுன்
னென்னமா தவஞ்செய் துள்ளதோ வெனதுநற் கரமே. ௬.

தென்னிலா வொளிவிஞ் சறுமுகத் திளமையந் தேவாய்ச்
சொன்னநீ ளயிற்கை யிலகடி கேண்மனத் தூயோர்
மின்னிவாழ் சோலை மலைமறு நின்றல மிதிக்க
வென்னமா தவஞ்செய் துள்ளதோ வெனதுநற் காலே. ௭.

முன்னைநா ளரியவ தாரவல் லேனத்தின் முரணார்
சென்னிகே டுறவொண் மருப்பினைப்பறித்தவொர் திறலோ
யன்னமூர் சோலை மலைமறு நின்பொடி யணிய
வென்னமா தவஞ்செய் துள்ளதோ வெனதுநல் லுடம்பே.

அன்னவா கனனை யருஞ்சிறைப் படுத்திமெய் யறிவாற்
பன்னகா பரணற் கோமுதற் பொருடனைப் பகர்ந்தோய்
கன்னல்சூழ் சோலை மலைமறு நின்கழல் கருதற்
கென்னமா தவஞ்செய் துள்ளதோ வெனதுநன் மனமே.

பன்னொணுப் புகழ்தான் படித்தவன் றனைத்திருப் பரிவா
வின்னனீத் திருக்க வுரைத்தசின் மயனே யெழிறுன்
மின்னுமா சோலை மலைமறு நின்னருள் வேண்டற்
கென்னமா தவஞ்செய் துள்ளதோ வெனதுநன் னெஞ்சே.

பங்குனிமீ ௨௯ சோமவாரம்.

---

## திருப்பழநி.

அழையெனும் பிரார்த்தனை.

பண் - நட்டராகம்.

சிங்கா நன்குதவுந் திரு வாறெ ழுத்தாளா
கங்கா ளன்குருவே நினை யேக ருத்தில்வைத்தேன்
மங்கா வாழ்வுடையா யெனை வாவென் றேயழையாய்
தெங்கார் தென்பழநித் திருக் கோவி லுள்ளாயே. க.

எல்லா ருந்தொழுது நல மேற்க வென்றிலற
மில்லா மாதுறவா யில காறெ ழுத்திறைவா
வல்லார் வானவனே யெனை வாவென் றேயழையாய்
செல்வா தென்பழநித் திருக் கோவி லுள்ளாயே. உ.

நாயே னுய்யவென்று நவில் வேன்வ ருகவென்று
நேயா நீவரலா நிச மாநம் பென்றுசொன்ன
வாயா வெம்பரனே யெனை வாவென் றேயழையாய்
சீயார் தென்பழநித் திருக் கோவி லுள்ளாயே. ௩.

என்னு வின்றுதியை யினி தேற்றெ னக்காக
நன்னு வையசைத்து நல மேயு ரைத்தெனையாண்
மன்னார் சின்மயனே யெனை வாவென் றேயழையாய்
தென்னார் தென்பழநித் திருக் கோவி லுள்ளாயே. ௪.

சூடே னின்னடியை யன்றித் துதித்து நானெதையும்
பாடே னெம்மானே பர மார்த்த சன்யாசி
வாடா விண்மலரே யெனை வாவென் றேயழையாய்
சேடார் தென்பழநித் திருக் கோவி லுள்ளாயே. ௫.

தந்தார் சித்தர்களுந் தனி ஞான விற்பனரும்
வந்தே தாள்பணிய நிற்கும் வரத மாமுனியே
மந்தா ரத்திருவே யென்னை வாவென் றேயழையாய்
செந்தார்த் தென்பழநித் திருக் கோவி லுள்ளாயே. ௬.

மின்னார் கௌபீனந் தன்னை வீக்கி மஞ்சழகார்
சன்னா சக்குருப்போற் றனி யாக நிற்கு மருண்
மன்னே மாமுனியே யென்னை வாவென் றேயழையாய்
தென்னார் தென்பழநித் திருக் கோவி லுள்ளாயே. ௭.

நாநா சாதிகுல முரு நாமம் பாராம
லானார் சீவனெலா மரு ளுயிரென் றேமதிக்கும்
வானோர் தேசிகனே யென்னை வாவென் றேயழையாய்
தேனார் தென்பழநித் திருக் கோவி லுள்ளாயே. ௮.

சத்தா நீறணிந்து கையிற் றண்ட மொன்றுடைய
கத்தா வாயெவர்க்கும் பர கதிநல் கையபது
மத்தார் பூணழகா வென்னை வாவென் றேயழையாய்
சித்தா தென்பழநித் திருக் கோவி லுள்ளாயே. ௯.

மண்ணார் சீவனெலா மினு மாண்டெ டூரதவகை
பண்ணு நிற்குமருட் பர மேயன் ணைமலையா
னண்ணு லென்னுயிரே யென்னை வாவென் றேயழையாய்
தெண்ணூர் தென்பழநித் திருக் கோவி லுள்ளாயே. ௧௦.

பங்குனிமீ ௨௪௳ மங்களவாரம்.

# திருப்பழநி.



## அடிமை.

### தக்கராகம்.

பண் - கொல்லிக்கௌவாணம்.

இடையிறந்த நிலையையருள் சிறந்தகந்த வோங்க
　லென்னுமொரு சிலைச்சிமயங் களிற்றமிழ னெடுத்த
புடைமலிந்த சத்திகிரி சிவகிரியைத் தண்டிற்
　பூட்டியிருங் காவடியெ னச்சுமந்தி டும்பன்
மடைமலிந்த வாவினன்கு டிக்கண்வைத்த போது
　மகியிலுற வணைந்துசிவ கிரி யின்மிசை நின்ற
படைமலிந்த தலமெனுநம் பழநிப்பதி மேவும்
　பவுள்சுடைய சரவணத்தம் பரமயவெம் மானே. க.

மணியரவிற் கண்வளரு மாமணைக்கண் ணனு
　மலர்த்தவிசு மீதுமிளிர் வாணிதலை மகனு
மணிகயிலை யருநெறியி லரணிருந்துள் ளானு
　மருணன்பதி னொருருத்ர ரசுவனிதே வருமாத்
திணிமருவு சேடனுடன் றிகழிருநால் வசுவுந் [தேன்
　சிந்தைசெய்த பெருங்கருணைத் திருவடியைத் தொழு
பணியிதுவென் றுரைத்தருடி பழநிப்பதி மேவும்
　பவுள்சுடைய சரவணத்தம் பரமயவெம் மானே. உ.

அந்தகனுஞ் செஞ்சுடரு மிந்திரனீ சான
　னனிலனிரு திபுனலிறை யளகையிறை யோனுஞ்
சந்ததமுங் கைதொழுத தரமறிந்தே யுரிய
　சம்பத்துக ளளித்தவுன்றன் றுள்குரங்கு கின்றேன்

கந்தமுத லைந்தினிலே கடத்திநெறி கொடுத்துக்
கருவினுழை யாமலென்னைக் கலந்தடிமை கொள்ளாய்
பந்தரப்பொன் வண்டறையும் பழநிப்பதி மேவும்
பவுள்சுடைய சரவணத்தம் பரமயவெம் மானே. ௩.

திங்களுமெல் லாதவனுஞ் சீவன்மழைக் கோளுஞ்
சேய்சனியுந் தூதவனுஞ் சீறரவி ரண்டு
மங்கைதனி லளியலர்கொண் டருச்சனைமிக் காற்றி
யநந்தநுதி செய்தவுன்ற னடிதொழுது துதித்தேன்
மங்களமொ டேகருணை வாரிதியி லென்னை
மனமுவந்து குடையவிட்டு வழியடிமை கொள்ளாய்
பங்கயங்கண் மடலவிழும் பழநிப்பதி மேவும்
பவுள்சுடைய சரவணத்தம் பரமயவெம் மானே. ச.

சலமடந்தை நிலமடந்தை சாரதையுஞ் சசியுஞ்
சாயையொ டனன்மனைவி தண்ணளின மாதுந்
திலகநுத லூர்வசியுந் திருமலிந்த ரம்பை [தேன்
திலோத்தமையு மேத்துனது திருவடியைத் தொழு
சலமிகுந்தே யலைமலிந்த சனனக்கட னடுவே
தத்தளிக்கு மெனையுனது தண்ணருளோ டத்திற்
பலமிதரவேற்றிக்கொளாய் பழநிப்பதி மேவும்
பவுள்சுடைய சரவணத்தம் பரமயவெம் மானே. ரு.

அத்திரியுங் கௌசிகனு மகத்தியன்கா சிபனு
மரியதவ மார்க்கண்டனு மாங்கிரச முனியும்
புத்திமலி சமதக்கினி புலத்தியமா முனியும்
பொருவிகந்த வசிட்டனொடு பரத்துவாச முனியுஞ்
சத்தியமா வணங்கியவுன் றாள்குரங்கு கின்றேன்
றயவுடனல் லருளளித்துத் தாழடிமை கொள்ளாய்

பத்தர்கணஞ் சூழவுள்ள பழநிப்பதி மேவும்
பவுள்சுடைய சரவணத்தம் பரமயவெம் மானே. சு.

சனகன்சுகன் பிருகுமுனி சனற்குமார முனியுந்
ததிமுனியு நாரதனுஞ் சத்தகூனன் முனியும்
வினையொழிந்த பதஞ்சலியும் வியாக்கிரக்கான் முனியும்
வியாசனும்ப ராசரனும் விரதபற்ப முனியுந்
தினமுவந்து கண்டவுன்றன் றிருவடியை வலித்தேன்
றிருவுளத்திற் கேற்றதொண்டு செயவடிமை கொள்
பணிகிளர்ந்த கருவிகவி பழநிப்பதி மேவும் [ளாய்
பவுள்சுடைய சரவணத்தம் பரமயவெம் மானே. எ.

இயம்பரிய வருந்தவஞ்சா விரணியமா முனியு
மிறைமையுள்ள துருவாச னேரண்டஎம்பி ஞகி
வயங்குசச்சி தாநந்தனல் வான்மீகி ரோமன்
மாதவங்கொள் கலைக்கோட்டு மாமுனியு மதிக
நயம்பெறவென் றுவந்துவந்து நாளுந்தரி சித்த
நறுமணஞ்சா னுன்சரணை நானும்வழி பட்டேன்
பயன்படுமா றருள்புரிதி பழநிப்பதி மேவும்
பவுள்சுடைய சரவணத்தம் பரமயவெம் மானே. அ.

வாரிறுக்குங் கொங்கைவளர் மாதுமைகா லரியின்
மணியுதித்த நவசத்திகண் மக்கணவ வீரர்
சீரிருக்கு மோரிலக்கர் தேசுதிக ழமரர்
சிவகணமுங் கந்தருவர் சித்தருங்கின் னரரு
மேரிருக்கு நாகரொடு தானவர்மா றுடரு
மேத்துனது பூம்பதத்தை யெணுமெனைக்கண் பாராய்
பாரிருக்கும் வரைவளங்கொள் பழநிப்பதி மேவும்
பவுள்சுடைய சரவணத்தம் பரமயவெம் மானே. கூ.

அரியசித்தி யவிர்மதங்க ராசிறந்த வகுளி
யனுதிநாத ராதிநாத ரழகுமச்சேந் திரருங்
கரிசறுகோ ரக்கரொடு ககனநடை யுடைய
கடேந்திரர் சதோதகநாதர் கருத்துறுசத் தியரு
மருணகிரி யானுநினை தனந்தசித்தி படைத்த
வன்புகண்டு நின்பதத்தை யநுதினம்வந் தித்தேன்
பரிவுடனல் லருள்புரிதி பழநிப்பதி மேவும்
பவுள்சுடைய சரவணத்தம் பரமயவெம் மானே. ௧௦.

பங்குனிமீ உருவ புதவாரம்.

---

## திருவாவினன்குடி.*

அடிமை.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பண் - பழம்பஞ்சுரம்.

அண்டர் யாவரு மறியொ ணாப்பொரு
ளாதி யந்தரந் தெரியொ ணாப்பொருள்
பண்டை நூலெலாம் பகரொ ணாப்பொருள்
பார மார்த்திக ஞான வான்பொரு
ளெண்ட கைப்பொரு ளாகு நீகடி
யேந்து நின்றசன் னுசி போன்றதென்

---

* திருவாவினன்குடியென்பது பழநிமலை யடிவாரத்தலம். அதி லிருக்கும் ஸ்ரீ சுப்பிரமணியத்தை நோக்கிப் பாடியுள்ள இத்திருப்பதி கத்தில் என்னையண்டவனாகிய நீ மலைமீது தண்டபாணியாகத் தனி நிற்குங் காரணம் யாதென ஆக்கியோர் வினவிய பொருள் காணப் படுதலின், இங்ஙனம் அன்னார் அவ்விரண்டு மூர்த்திகளையு மிணைத் துத் துதித்தனரென வறிக.

றெண்ட னேனையிங் காண்டு கொள்வணந்
துாண்டு மாவினன் குடிச்சு ரேசனே. க.

நேரி லாவுய ராக்க வெள்வரை
நிலய முட்சிவ கணங்க ளேத்திடப்
பிரி லாக்கொலு விருந்து நின்பதம்
பெறவ ருந்திரு வடிய வர்க்கருள்
சூரி லாச்சைவ தெய்வ நீயொரு
துறவி போற்றனி நிற்ப தென்னதி
தூர மின்றெனை யாண்டு கொள்வணந்
துாண்டு மாவினன் குடிச்சு ரேசனே. உ.

பருதி பல்லொளி சுடர்கி ரீடமும்
பதும பாதவம் பரிபு ரங்களு
மிருது மல்கெழின் மடியு டுக்கையு
மிறையி லொண்செவி யணிக ளுந்தன
தருகி னல்லிரு தேவி யும்மிலா
தாண்டி வேடம தான தென்னதி
துரித மாவெனை யாண்டு கொள்வணந்
துாண்டு மாவினன் குடிச்சு ரேசனே. ௩.

அடல்கொள் பூதரும் வீர வாகுவொ
டமரும் வீரரு மோரி லக்கரும்
புடைசெ றிந்திடச் சரண மஞ்ஞையிற்
பொருவி லாதெழு தருப ராபரந்
தடவி சும்புயர் வரையி லேயொரு
தனிமை யாதனி நிற்ப தென்னுனைத்
தொடரு மென்றனை யாண்டு கொள்வணந்
துாண்டு மாவினன் குடிச்சு ரேசனே. ச.

உலகி லேயுனைப் பாடுந் தொண்டுள
ருய்ய வோதவ ருய்ய வோமனச்
சலமில் யோகிக ளுய்ய வோநிகழ்
சருவ சீவருந் தவத்தி னுய்யவோ
தலையிற் பின்சிகை யரையிற் கோவணந்
தண்ட மங்கையிற் கொண்டு நின்றனை
தொலைவி டாதெனை யாண்டு கொள்வணந்
தூண்டு மாவினன் குடிச்சு ரேசனே. ரு.

பொய்யு ளேனுயிர்க் கொலையு ளேன்பெரும்
புலையு ளேனெடுங் களவு ளேனித
மையி டுங்கணி மயலு ளேன்மட
மருளு ளேன்பட ரிருளு ளேனிங்
னுய்யு மாறருள் கூர்ந்து வந்தென்மு
னேது நின்னோர் தயாள மென்சொலத்
துய்ய னேயெனை யாண்டு கொள்வணந்
தூண்டு மாவினன் குடிச்சு ரேசனே. சு.

செப்பொ ணாதவைம் பாச சாகரச்
செதும்பு ளேகிடந் தழுங்கி நன்னெறி
யொப்பு றுவிழி நாய னேனிங்
னுய்வ னோதிரு வருளி லாதுமெய்
யப்ப னீயென மைந்த னானென
வாமோர் தொன்முறை காட்டி னாயிவண்
டுப்ப னாயெனை யாண்டு கொள்வணந்
தூண்டு மாவினன் குடிச்சு ரேசனே. எ.

கழுதை யிற்கடை யாய நானுனைக்
கருத நன்னெறி கழறி னுய்நொடிப்

பொழுது நின்மறந் திருப்ப னேவினிப்
புகழ்சொ லாமொழி படிப்ப னேவுனை
முழுது மென்னக மாக்கி டாதினு
முளைப்ப னேமணிற் பதத்தை யல்லது
தொழுவ னேவெனை யாண்டு கொள்வணந்
தூண்டு மாவினன் குடிச்சு ரேசனே. அ.

மாக நின்றுளை தீயி னின்றுளை
வளியி னின்றுளை மழையி னின்றுளை
போக நந்திரும் புவியி னின்றுளை
புகரின் மாமதி யிரவி நின்றுளை
யாக நின்றிடு முயிரி னின்றுளை
யடிய னேனய லாவ தெங்ஙனஞ்
சோகம் வென்றெனை யாண்டு கொள்வணந்
தூண்டு மாவினன் குடிச்சு ரேசனே. கூ.

குலமி லாதவன் றலமி லாதவன்
கோளி லாதவ னுளி லாதவன்
மலமி லாதவ னாகு நீநெடு
மலையி லேறிய மார்க்க மென்கொலோர்
சலமி லாப்புகழ் பாடி னேனகந்
தாண்ட வம்புரிந் தாண்ட தேவெனைச்
சுலப மாகவிங் காண்டு கொள்வணந்
தூண்டு மாவினன் குடிச்சு ரேசனே. க0.

பங்குனியீ ௩0உ சோமவாரம்.

# அடிமை.



எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பண் - புறநீர்மை.

கற்றவர் தொடுத்துக் கனிவுடன் சூட்டுங்
கவித்தொடை யேற்றெழின் மறைதான்
சொற்றிடு கதியை வழங்கருண் மாவின்
சோதியே சொலற்கருஞ் சுடரே
யிற்றையா னுன்காற் போதினை யேத்தற்
கெனதவஞ் செய்திருந் தேனே
அற்றையெற் கதிர்த்த வணமருள் வானே
யப்பனே யொப்பிலா தவனே. க.

கல்வியங் கடலைக் கடந்துமேன் மிளிருங்
கருத்துடை யௌவைமூ தாட்டி
சொல்வண முலகிற் பழுதறு பெரியோர்
தொண்டரென் றதிர்த்ததே சரத
மொல்கிடா வீரப் பெருந்தகை யுடையோ
யுனதடித் தொழும்புமெற் குறுமோ
வல்கலில் லாதெனை யாண்டுகொள் வானே
யப்பனே யொப்பிலா தவனே. உ.

பேயினுங் கடையேன் பிணத்தினுந் தீழ்ப்பேன்
பிறங்குநற் குணமெது மில்லே
னாயினுங் கடையே னலனுற வெனநீ
நறுநெறி குயிற்றிய வருளா
னேயநல் வரவுக் கொருகர மாறின்
நெடுநிலப் பரப்பிடை யுண்டோ

வாயத வயில்வேற் குருபர வெனையா
ளப்பனே யொப்பிலா தவனே. ௩.

உன்னெறி துறந்தே யுன்னடி மறந்தே
யுறுற்றிடு பெரும்படர்த் தீமை
தன்னையுந் துறந்தே தன்னையு மறந்தே
தன்னையு மறிந்துய்யு மாறு
லென்னைநீ கலந்தா ளெம்பெரு மானே
யிணையறு மாசிலா மணியே
யன்னையே யருள்சா லறுமுகச் சிவனே
யப்பனே யொப்பிலா தவனே. ௪.

சனகனுஞ் சனனி பிதாமகன் பெருமான்
றமயனுஞ் சிவனென நினைத்து
மனைவிநி ராசை மகர்வள ருயிர்கண்
மலரடித் தொழும்பர்க ளுறவோ
ரெனமதித் துயுநா ளெந்தநா ளாகு
மெனக்குநீ யருளிய வண்ண
மனகனே யருள்கூ ராறெழுத் திறையே
யப்பனே யொப்பிலா தவனே. ௫.

ஊரெலாஞ் சமைக்குஞ் சோறுய ருணவிவ்
வுலகமெ லாம்விரி பாய
லேருலா முடையொண் கோவண மாமறை
யியம்புவெண் பொடிநறுஞ் சாந்தஞ்
சீருலா முருத்தி ராக்கமெய் யணிகலன்
செபிப்பது சடக்கர மெனநீ
யார்வமொ டெனக்காக் கிடவென்று காண்பே
னப்பனே யொப்பிலா தவனே. ௬.

தாளிணைப் பழிச்சு மேழையே னின்றே
சாகினுஞ் சாகுக வினியெந்
நாளுமிங் கிருக்கினு மிருக்குக சுவர்க்கமோ
நர்கமோ சேரினுஞ் சேர்க
கோளுறு பிறப்பே யாயினு மாகுக
குறைவறு நின்சரண் மறவா
வாள்வினை யொன்றை யளித்தருள் யாண்டு
மப்பனே யொப்பிலா தவனே. எ.

தாவர நீர்வாழ் வனநகர் வனவிண்
சகுனம்வல் விலங்கெழின் மாந்தர்
தேவரென் றறையேழ் தோற்றமு ளெதனிற்
செனிக்கவுன் றைக்கினை செயினுஞ்
சேவடித் தொழும்பி லிருப்பதே குறைவில்
செல்வமென் றொருதுணி படைந்தே
னுவது புரியாய் சரவணத் தரசே
யப்பனே யொப்பிலா தவனே. அ.

கிரியையிற் சரியை தனில்வளர் யோகிற்
கெழுதகை யறிவினி லுணைவிட்
டரியபஃ றவங்க ளாற்றுதல் பயனின்
றுமென வோர்பிடிப் பானே
னுரிமையொ டுனைநா மழைத்திடு காறு
முணர்வொடிங் கிருவென வுரைத்த
வருமையென் பரனே யழைத்தருள் குகனே
யப்பனே யொப்பிலா தவனே. கூ.

மாயமா மளக்கர் வாழ்வினி லுழலு
மடனெனைத் தடுத்தருள் வணநீ

நேயமுற் றிடினிங் கெனகுறை யெனக்கா
நெறியிதன் மேலெது வருள்கூர்
வேயுறு தோளங் கயற்கணி மதலாய்
விரதர்கள் குருமணி பதினா
றாயிரம் புகழ்ப்பாப் படித்தவற் கருளிய
வப்பனே யொப்பிலா தவனே. கo.

விஜயஹு சித்திரைமீ கஉ புதவாரம்.

## திருக்குன்றக்குடி.

பண் - காந்தாரம்.

பூமுடி விண்ணவர் வாழ்வும் பூதல மன்னவர் வாழ்வுந்
தாமுடி நாகர்கள் வாழ்வுஞ் சுந்தர நின்னடி யார்க
டாமுறு வாழ்வினுக் கேயார் சற்றுநே ராகுமோ நாகர்
கோமுனிவோர்தொழுங்கோவேகுன்றக்குடியுறைதேவே.

ஆறு சமயங்க ளெங்கு மாநந்த மாவினை யாடி
யீறு முதனடு வேது மிலாதவி ருன்னடி. நேடி
நீறணிதொண்டர்கள்வாழ்வே நித்தியமென்றொருவாய்மை
கூறுமறைபுகழ்கோவே குன்றக்குடியுறைதேவே. உ.

நாசமில் லாவுயி ரெல்லா நற்கதி சேரவென் றேயோர்
மாசிலுருக்கொண்டங்கங்கு மன்னுதிருக்கோவில்கொண்டு
தேசிகனுயவிரன்பைச் சிந்தையில்வைத்துள்ளவென்றன்
கூச லறுத்தருள் கோவே குன்றக் குடியுறை தேவே. ௩.

ஆதி யனாதியு நீயா யண்டகோடியெங்குநீயாய்த்
தீதி லுயிர்க்குயிர் நீயாய்த் திகழொருபூரணந்தன்னை

மேதினிமீதுள்குவோரோ விஞ்சறி வாக்கமுள் ளோர்கள்
கோதில்வெயிலயிற்கோவே குன்றக்குடியுறைதேவே. ௪.

மாவலர்க்கொந்தளவள்ளி மையலிற்சிக்கியமாயக்
காவலவுன்னடியாரைக் கண்டவர்க்குந்துயர்தீருந்
தாவிலகங்குளிர்கொள்ளுஞ் சத்தியவேகவலம்விள்ளுங்
கூவியழுங்குமென்கோவே குன்றக்குடியுறைதேவே. ௫.

எட்டுருத்தெய்வமுநீயே யெட்டுக்கதீதமுமாயே
தட்டுப்படாதவதீத சாம்யுநீயெனவோர்வார்
முட்டுப்படாமல்வந்தென்று முற்றுச்செயுமருட்பொன்னைக்
கொட்டிக்கொடுக்கின்றகோவே குன்றக்குடியுறைதேவே.

பாட்டினுனைப்புகழ்ந்தேமன் பாட்டையொழித்துள்ளவன்பர்
நாட்டிலிருக்கினுங்காட்டை நண்ணியிருக்கினுமன்றே
கேட்டதெல்லாமளித்தென்றுங் கேடிலரும்பொருடன்னைக்
கூட்டிக்கொடுத்திடுங்கோவே குன்றக்குடியுறைதேவே.

ஈடிலிணைமலர்த்தாள்க ளெண்ணுவதுங்கழலன்பர்
தேடொருஞானமுநல்லோர் சேர்க்கையுமேநிலையாமென்
றோடிழிசிந்தைதபவாங்கி யுன்னுமகாசிவயோகிற்
கூடியளாவொருகோவே குன்றக்குடியுறைதேவே. அ.

சுக்கிலவாக்கையினுள்ளே சூழுமலவிருளுள்ளே
பக்குவமின்றியெந்நாளும் பந்தப்பட்டேயுள்ளவென்னைச்
சிக்கெனவேபற்றவந்து திருத்தியவுன்பதமீதி
குக்குடகேதனக்கோவே குன்றக்குடியுறைதேவே. ௯.

நற்றமிழ்பாடுநக்கீரன் ஞானவெளியநுபூதி
சொற்றவனைத்தருளோனே தோகைமயிற்பரியானே

யிற்றையெனக்கருள்வோனே யெங்கள்சிவபெருமானே
குற்றமிலாமறைக்கோவே குன்றக்குடியுறைதேவே. கo.

மன்மதஹூ ஆடிமீ ௩௨ புதவாரம்.

# திருத்தோத்திரம்.

பண் - பஞ்சமம்.

திருமலி முதுமறை நுவல்பொருளுந்
தினசைவ முறைமுறை யிடும்பொருளும்
பொருண்மலி மிருதிகள் புகல்பொருளும
புகரில் புராதன சரிதமறை
யருமுறை பலநவில் கிறபொருளு
மறிஞர்க ளறைதரு மொரும்பொருளுந்
தெருண்மலி குகவென மொழிபொருளுஞ்
*சிவசிவ சிவசிவ சிவசிவவே. க.

இறுதியி லியல்பரு ளதுபிரியா
வினையிலி யாமொரு பதியெனவுங்
குறுகிய வழிவடை யுயிர்களிடங்
குழியுற மருவிய பொருளெனவு
மறிவறு பொருளினை யுயிருருவா
யமைவுற வணைகிற விறையெனவுஞ்
சிறுகில் குகனெனவு நிலவுவது
சிவசிவ சிவசிவ சிவசிவவே. உ.

தடமிகு பிருதிவி யாதிசிவ
தத்துவம் வரைதிரி தசமாறும்

* சிவஎனுமாறும்அறுமுகச்சிவமெனவுணர்த்துங்குறிப்பெனவா

மடலவிழ் பதுமமெ னுவரனான்
மறைசொலு மேயதி லேபுவன
விடயமும் விடய வதீதமுமே
மேம்பட வதிதரு பெரியபொருள்
திடமலி குகனென நிலவுவது
சிவசிவ சிவசிவ சிவசிவவே. ௲.

மகளி னுதரமுறை குழவியென
மலமொரு மாயையின் மிருதுயரோ
டகமற வேகிடந் துளவெளிய
வணுக்களை வேதனை யறவிறக்கிப்
பகரரு மயனமு முயர்திதியும்
பண்ணிடு மிறையவ னீடழகு
திகழ்முரு கோனென நிலவுவது
சிவசிவ சிவசிவ சிவசிவவே. ௮

மலவிரு ளுறையுயிர் பதியுறவே
வனையுமொ ரைந்தொழில் களையுடைய
நலவிறை யெனவு மனேகமத
நவில்வரை யறையினில் லாவிபுவா
யிலகிடு மொருபொரு ளெனவுமெனை
யிதமுட னடிமைகொண் முருகெனவுஞ்
செலல்வர வறுநிலை நிலவுவது
சிவசிவ சிவசிவ சிவசிவவே. ௯.

பாதல மேழையு மேதள்ளிப்
பரவொரு நிலையிலே திருவடிக
ளோதவொ ணுநிலை தனின்முடிதா
னுடையவ னடியவ ருளனோவ

வேதனை தருபவர் பானமனுய்
    மேவி யிதம்புரி வோர்பாலிற்
சீதள முருகென நிலவுவது
    சிவசிவ சிவசிவ சிவசிவவே. ௬.

பரிவுடை யடியவர் திருவடிவாம்
    படிவ மதுகழிவு றுதபடி
யரியமெய் யருள்வலி யாலதனை
    யானுரு வாமொரு திருவுருவா
யுரிமை யொடுபணு சன் மார்க்கநெறி
    யோதிறை யருண்முரு கோனெனவே
திரிபற வறுதின நிலவுவது
    சிவசிவ சிவசிவ சிவசிவவே. ௭.

பொன்மய வானவ ருறு மனுரும்
    பூதல மாநுட ருறுமனுரு
னன்மையி னரகர்க ளுறுமனுரு
    நலியவு மளவறு பெரியவரு
ளின்மய மாகவு மருள்வடிவ
    மிதவொடு கொள்குரு பரமசிவ
சின்மய முருகென நிலவுவது
    சிவசிவ சிவசிவ சிவசிவவே. ௮.

உனையல தொருகதி யிலையெனவே
    யுனிவழி படுமடி யவர்கருமத்
துனிவலி கடியவு மனமருளாற்
    சொலும்வழு வையுநசை கிளர்நினைவா
லினியில் வினைகள்புரி வழுவையுமே
    யிரிய வருளிறைவன் முருகனெனுங்

தினகர னெனநனி நிலவுவது
சிவசிவ சிவசிவ சிவசிவவே. ௯.

கயல்விழி மறிமகள் கணவனெனக்
கருதியிவ் வகிலமு ளேதமிழிற்
பயில்புகழ் சோடச நூறுதசம்
பன்னிய வறிஞனை யாளடிமை
தயவொடு கொண்டது போலெனையுந்
தடையறக் கொண்டிடு குருமுதன்மைச்
செயலுடை முருகென நிலவுவது
சிவசிவ சிவசிவ சிவசிவவே. ௧0.

ஆடிமீ உகவ ஆதித்தவாரம்.

ஆ திருப்பாடல் - உ0க.

---

## திருவுருமலே.

பண் - பஞ்சமம்.

பூமக ளகமே குளிர்ந்தெழில் குலவும்
பொருப்புயர் புவனங்க டாமார்
மாமிகு பெரியண் டங்களெல் லாமுன்
மயிர்நுனி தோறுநின் றிலக
வோமய வடிவா யுளமறை முதல்வா
வுனதடித் தொழும்பினி லெனையாள்
சாமிநீ யருள்செய் திருவுரு மலைவாழ்
சண்முகப் பெரும்பரம் பொருளே. க.

நாகர்க ளலக்கண் டீர்த்துநல் லறுவர்
நலம்பெற வருளிய விறைவா

சூகர மதனை நசித்துல கனைத்துஞ்
சுகப்பட வருளிய வீரா
தாகமாய் வலிப்போர்க் கினியதண் மழையைத்
தருமருட் கதம்பமே யமுத
சாகர மேயா டிருவரு மலைவாழ்
சண்முகப் பெரும்பரம் பொருளே. உ.

எங்கணு மருள்சா னெறிசிறந் திடுமா
றிறைவனுஞ் சீடபா வந்தா
னங்கமாக் கொளுங்கா லவற்குமோர் குருவென்
றுயினை யகத்தியன் முதனற்
புங்கவர் பலர்க்கு மருளினை யிதுநாள்
புரையுடை நான்கடைத் தேறச்
சங்க்ரகித் துரைத்தாய் திருவரு மலைவாழ்
சண்முகப் பெரும்பரம் பொருளே. ௩.

பொய்யனே னெனினும் புலையனே னெனினும்
புரையுறு கொலைஞனே னெனினு
மையனே யுனக்கே யடைக்கல மானே
ஞதலி னெனைக்கழி யாம
லுய்யவே புரத்தல் கடமையுன் னடியே
னுளத்திடை யளவற வெழுமா
சையெலா மறுத்தா டிருவரு மலைவாழ்
சண்முகப் பெரும்பரம் பொருளே. ௪.

பெண்பதி யறுத்த கரத்தினை ளொர்த்தாய்
பேசிடுஞ் செயலொழிந் திருந்த
பண்புடைக் குமர குருபரன் யாப்புப்
படித்திட வருளினை மதுரைத்

திண்புதர் தலைவ னுறுமனு ரொழித்தாய்
சிறியனேன் மனுவிற்கு மிரங்கித்
தண்பத மளித்தா டிருவுரு மலைவாழ்
சண்முகப் பெரும்பரம் பொருளே. ௫.

விரிதிரைத் திருச்சா னவியமைழத் தவன்பேர்
வேந்தனின் பகைவலி கடிந்தா
யெரிமகத் தகனைப் பரியென வேகொண்
டெறும்முனி வரர்துனி யொழித்தாய்
பரிமுகத் தொருத்திக் கெழின்முக மீந்தாய்
பத்தனேன் மனுவிற்கு மிரங்கித்
தரிசனங் கொடுத்தா டிருவுரு மலைவாழ்
சண்முகப் பெரும்பரம் பொருளே. ௬.

மிகுபலத் தனுசோ ருயிர்குடித் திடுநே
மியினையன் றரிக்களித் தவனுஞ்
சிகுமுயிர்த் தொகைசேர் நிரயமன் னவனைச்
சிதைத்துயி ரளித்தமுக் கணனுந்
திகழ்மதி யிடர்தீர்த் தவனுநீ யேயிச்
சிறியனேன் மனுவினுக் கிரங்கித்
தகுதிரு வளித்தா டிருவுரு மலைவாழ்
சண்முகப் பெரும்பரம் பொருளே. எ.

நண்ணிய வோர்மயி லினுக்குமஞ் சிகிக்கு
நாளுநற் றிருவடி கொடுத்துக்
கண்ணில கொருகே கயஞ்சிகி தனைமுற்
கருதிய வணம்பரி கொடியாப்
பண்ணிய பரனே பரமபுங் கவனே
பத்தனேன் மனுவிற்கு மிரங்கித்

தண்ணளி யளிந்தா டிருவுரு மலைவாழ்
சண்முகப் பெரும்பரம் பொருளே. ௮.

செயிருறு வோர்க ளலக்கணைத் தீர்ப்போய்
சேவடித் தொழும்பரைக் காப்போய்
குயிலுமில் வேழை மனுவினுக் கிரங்கிக்
கொடுதினங் குளிர்ந்ததண் ணளியைக்
கயல்விழிக் காந்தி மதியுட னரனுங்
களிகெழு துர்க்கையு மேவுந்
தயவுடை நெல்லைத் திருவுரு மலைவாழ்
சண்முகப் பெரும்பரம் பொருளே. ௯.

வாலுளக் குறமா னினிமதர்ச் சுரமா
மடவரன் மாமணத் தலைவா
வேலுடைச் சயத்தோய் விரைத்தொடைப் புயத்தோய்
வியன்புகழ் நொடித்தவன் பரனே
தோலுயர் வறுசொல் லுடையெளி யேனின்
றுயர்வலி கடிந்துநற் சுகமே
சாலுமா றருளாய் திருவுரு மலைவாழ்
சண்முகப் பெரும்பரம் பொருளே. ௧0.

ஆடிமீ உ௩உ குருவாரம்.

---

# திருநெல்வேலிக்கோவில்.

பண் - நட்டராகம்.

சீருடை யாரியனே யெனைச் சேர வணைப்பவனே
யேருடை வானவர்க ணித மேத்தும் பராபரனே

போன்ற தெய்வமுண் டோவெனைப் புணர்கிலை யாயிற்
றோன்று மென்விழி நீரினைத் துடைக்குந ரெவரே. ௨.

தீதில் சத்தெனுந் தாதையுஞ் சித்தெனுந் தாயு
மாதி யந்தமி லாநந்தக் குழவியு மாமென்
றோதி யாமடி கேளெனை விரவிக்கொ ளாயேல்
வீதி தோறுமென் விழிப்புன றுடைக்குந ரெவரே. ௩.

பெற்று ளோர்பிறந் தோர்மனை மகர்தமர் பிறருஞ்
சற்று நம்முற வலவென வுன்னியுன் சரட்கன்
புற்று ளேனெனைப் புறம்பெனக் கழிக்கினின் புரிவிங்
கற்று நானிருந் தழும்புன றுடைக்குந ரெவரே. ௪.

அன்பர் தங்கருத் தேயுணர்ந் தருள்புரி யருளா
லென்புன் னெஞ்சுணர்ந் துரைத்தவள் ளயிற்கர விறையே
யின்பி னின்னமு மிடையறப் புணர்ந்துகொ ளாயேற்
றுன்பி னனழும் விழிப்புன றுடைக்குந ரெவரே. ௫.

நுதற்க ணுறுடை நூனமி லறுமுகங் கரந்தன்
றிதத்தை யேபுகன் மாறுட வுருவென வென்முன்
புதித்து மெய்ம்மொழி யுரைத்தனை முழுதுங்கொ ளாயேற்
பதத்தை யேநினைந் தழும்புன லெவர்துடைப் பவரே. ௬.

வேரி யங்கடம் பணிபுயத் தோய்வினை மேவும்
பூரி யோர்புகு மிருணில மின்னமும் புகுதா
தேரி யங்கடி யுறநினை யென்னைநீ கழிக்கின்
மாரி போன்முகம் வடிப்பது துடைக்குந ரெவரே. ௭.

பொய்யை யோர்பவர் பொருந்துமிப் பூதல வாழ்வை
மெய்யை யோர்பவர் சேர்வரோ மெய்ப்பொரு ளாமுன்
செய்ய பாதகம் பியவெனைச் சேர்த்துக்கொ ளாயே
லய்யு மாறெனக் கருள்பவ ருலகினி லெவரே. ௮.

கோல வாரணங் கூறொரு பரம்பொரு ணீயென்
றூலு மங்கழற் பரமனு மருளின னதும்போற்
சீல வுன்சரண் சிந்தைசெ யெனைக்கொளு கிலையேற்
றூல மீதெனக் குன்னடி தருபவ ரெவரே. ௯.

அரிய விண்ணவர் புன்கணை விட்டிநல் லருண
கிரியி ருந்தவற் கருளிய கிருபைவள் ளாலுன்
னுரிமை கொண்டுனைக் கடைக்கலம் புகுந்துள நாயேன்
பரிவு கண்டரு ளாவிடி னெவரருள் பவரே. ௧0.

ஆடியீ ௬௧௨ புதவாரம்.

---

## மெய்ப்பற்று.

கலிவிருத்தம்.

பண் - தக்கேசி.

சொல்லு யர்ந்தமறை சொன்முடி வாமோர்
சொல்லி யம்புதுறை யாவரு முருகா
வில்லி டப்புரிவை விடநினை வேன்கோள்
வெல்லு முன்புரிவை விடநினை யேனே. ௧.

சரண நம்பினவர் சததமு முய்ய
வருளு மன்புடைய வயிலவ யாண
ரிரத மூர்புரிவை விடநினை வேனுள்
விரவு முன்புரிவை விடநினை யேனே. ௨.

தேவ தேவனெனுஞ் சிற்சபை முருகா
வாவி போலுமுள வார்வலர் மகவோ

தேவ லார்புரிவை விடநினை வேனுன்
மேவு முன்புரிவை விடநினை யேனே. ங.

தஞ்ச மென்பவர்கள் சார்சர ணாவெ
னெஞ்சு ணின்றுணர்வை நீட்டொரு குகனே
யெஞ்சி யின்புரிவை யேவிட வலிப்பேன்
விஞ்சு முன்புரிவை விடநினை யேனே. ச.

அமல வந்தணர்கள் பழிச்சிடு மயில்வேற்
குமர சம்பிரம குருபர கேட்டி
தமர்க டம்புரிவை யேவிட நினைவேன்
விமல வுன்புரிவை விடநினை யேனே. ரு.

மாசில் குங்கும பயோதர வள்ளி
பேசு மின்சொலமு துண்செவிப் பெரியோய்
நாசி யின்புரிவை நான்விட நினைவே
னேச நின்புரிவை விடநினை யேனே. சா.

அரனார் பங்குடைய வங்கயல் விழியாண்
முருக வென்கவிகொண் முழுமுத லடிகே
ளிரத நாப்புரிவை யேவிட நினைவேன்
விரத புன்புரிவை விடநினை யேனே. எ.

சீத விந்துள வலங்கல்கொள் சேயோ
யோத ரும்பரிவ ருளத்தவி சுறைவோ
யேதில் கட்புரிவை யேவிட நினைவேன்
வேத வுன்புரிவை விடநினை யேனே. அ.

மாலு மந்தணனும் வழிபடு முதல்வா
கால மெல்லைவினை கடந்த வதீதா
தூல மெய்ப்புரிவு துறந்திட நினைவேன்
வேல வுன்புரிவை விடநினை யேனே. கூ.

துய்ய நின்றகவி னற்புகழ் சொன்னோ
னைய கேட்டிசெவி யகக்கர ணங்க
ளுய்யொ ணுமனனி யுறங்கிட நினைவேன்
மெய்ய னுன்புரிவை விடநினை யேனே. கo.

ஆவணிமீ கஉ சுக்கிரவாரம்.

---

# பொய்ம்மார்க்க நீக்கம்.

—:o:—

பண் - தக்கேசி.

திருமி னுமகள் பூமக ளேத்தச்
சிறந்த நீரர மகளிரம் பணிபல்
புரிய வடியவர் துதிசெய மாண்பு
பூத்த விண்கஜ நாயகி காந்தா
பொருவி லாவுனை யேநினை யாதார்
புடவி மீதநு தினமல முண்ணுங்
கிருமிக் குங்கடை யாகுவ ரவரைக்
கிஞ்சித் தும்மதி யேன்மதி யேனே. க.

பழுதி லாரண நூலளப் பின்றிப்
பரிந்து சொன்னில களினு மடங்கா
முழுவி யோமசம் பூரண முருகா
முனிவ ரந்தணர் குரங்குமெம் மானே
தொழுநல் லார்க்கரு ளுனையில யென்றே
சொல்லு வோர்கள்வண் ணன்பொதி சுமக்குங்
கழுதைக் குங்கடை யாகுவ ரவரைக்
கனவி னும்மதி யேன்மதி யேனே. உ.

பரந்த மாயையின் பாசமுட் கிடந்து
　　பதைத்து நொந்தரு ளுடிடு பசுக்க
டரங்கண் டருள்செய நீநனி கொள்ளுந்
　　தாவில் பதியுரு வைப்பழி பகரத்
திரங்கொள் வோரெனை யாண்முரு காநற்
　　றிருவி லாது சதாமுகஞ் சுரித்த
குரங்குக் குங்கடை யாகுவ ரவர்சொல்
　　கூற்றை நான்மதி யேன்மதி யேனே. ௩.

தாய்க்குந் தந்தைக்கு மேதந்தை தாயாய்த்
　　தனக்கொர் தந்தையுந் தாயு மிலாமன்
மாய்க்கு மிச்சையை வென்னுணி யோர்க்கு
　　வாய்க்குஞ் சிவக்கொழுந் தாய்ச்சுக மாங்காய்
காய்க்குங் கற்பக மாமுனைத் தீழ்ப்பாக்
　　கழறு வோர்க ளனுரத நக்கு
நாய்க்கு மேகடை யாகுவ ரவர்வீ
　　ருப்பை நான்மதி யேன்மதி யேனே. ௪.

பெருமை யிற்பெரும் பெருமைகொள் பொருளாப்
　　பிறங்கி யைந்தொழி லானுல கெங்கு
மருமை யாநடு வாணையைப் பிரேரித்
　　தறிஞ ருண்மனைப் பீடிகை யுறங்கு
முரிமை யொண்குக னேயுனைப் பரமென்
　　றுள்கி டாதவர் தாமதி வரண்ட
வெருமைக் குங்கடை யாகுவ ரவரை
　　யென்று நான்மதி யேன்மதி யேனே. ௫.

வீயு திப்பு விகாரமில் சுயம்பு
　　விமல மாயசஞ் சலவிப்பு வாய்நற்

றாய நான்மறை யின்சிரப் பொருளாய்த்
துவித சூனிய பூரண வெளியா
யாயு மனர்க்கிறை யாயுள்ள வடிவே
லைய வுணைப்பணி யாதவ ரீனப்
பேயி னுங்கடை யாகுவ ரன்னோர்
பெருமை நான்மதி யேன்மதி யேனே. ௬.

என்று நீக்கமின் றெங்கணு மிருந்து
மெவருங் காணவொ ணுப்பர சிவத்தி
னின்று தோன்றொரு சேயெனு நினது
நீட ருட்டிற மதைவிடுத் துயிரைக்
கொன்று தின்றுடல் வளர்த்திடு வோர்பல்
கோடி வித்தக ரென்னினு மலமுண்
பன்றிக் குங்கடை யாகுவ ரன்னோர்
பரிவை நான்மதி யேன்மதி யேனே. ௭.

பாரிற் பாடுறு பசுக்களி னிமித்தம்
பரம னைநின் பரிவது விளங்கச்
சூரி திருவுருக் கொண்டறி வுறுத்துஞ்
சுதந்த ரத்தையு முன்னடி யாரிப்
பாரிற் கொள்சிவ சின்னங்க டமையும்
பழிக்கு மடரமூக் கார்புழைத் தூம்பி
னீரிற் குங்கடை யாகுவ ரன்னோர்
நெறியை நான்மதி யேன்மதி யேனே. ௮.

குலத்தை நீத்துயர் குடியினை நீத்துக்
குணத்தை நீத்துயிர்க் கூற்றினை நீத்துப்
பலத்த தவமிழைப் போர்களு முனது
பரம நாமமுச் சரிப்பதுண் டதனை

வலத்தி டாதவர் திருக்குழ காகேண்
மதியி லாது புலானுகர் புலையன்
மலத்திற் குங்கடை யாகுவ ரன்னோர்
மதியை நான்மதி யேன்மதி யேனே. ௯.

விருப்புற் றுன்புகழ் பாடியு னருளை
மேவி யேதமி லமுதமுற் றோற்கன்
றிருப்புச் சொல்லிய வெம்பெரு மானே
யிணையில் பூரணத் திருமுரு காவன்
மருப்புப் பன்றியை மாய்த்தவல் லோயுன்
மார்க்க மேகரு தார்சித டன்காற்
செருப்புக் குங்கடை யாகுவ ரன்னோர்
செருக்கை நான்மதி யேன்மதி யேனே. ௧0.

ஆவணிமீ ௨௨ சோமவாரம்.

---

## அடியாரகம்.

### பரிபூரணமன்றுட்டு.

பண் - சாதாரி.

மாமணி முடிச்சுரர்கள் கோனெனும் வனப்புடைய
மாமயி லிருந்தசுரர்கோன்
பேமுற வெதிர்த்துகெடு வேல்கொடவ னீளுடல்
பிளந்திற வயர்ந்தவிறலோ
யாமய மிலாதுபர வோமயம தாகவடி
யாரக மிருக்குமுருகா
போமுன மணைத்திரிபி லாதநிலை யானபரி
பூரண மெனக்கருடியே. ௧.

பாதல மனைத்தையு நடத்துமாட கேசரரும்
பாரகர ணங்களெவையு
மாதிதி புரிந்திடுகூர் மாண்டருமண் ணுயபிர
மாண்டமதை நீண்டகாவல்கொண்
டாதரித் *திருப்பவரு மேத்துமுத லாகியடி
யாரக மிருக்குமுருகா
போதவொளி யைப்பெருக்கி யாசினிலை யானபரி
பூரண மெனக்கருடியே. உ.

துங்கமெய்ச் சதவுருத்ர ருங்ககனே சாதிகளுந்
துன் றுமண்ட லாதிபர்களும்
பங்கமற்ற வெளஷடு வஷடுநமா வுஞ்சுவாகா
பட்சுதா வெனப்பகருமே
மூங்கமுள்ள சத்தகோடி மந்திரரு மெச்சவடி
யாரக மிருக்குமுருகா
பொங்கிரு ளறுத்தருள் விளங்குநிலை யானபரி
பூரண மெனக்கருடியே. ங.

சுந்தரமல் கண்டநிறை யக்தனையு முச்சியிற்
சுமந்திடுமா தாரசத்தியு
மந்தவொரு சத்தியுட னர்ந்தசுத்த மாயையை
யனாத நடத்தனந்தரு
மந்தமுயர் சூக்குமரு மேனமேயாரு மெச்சவடி
யாரக மிருக்குமுருகா
புந்தியை யகண்டவெளி யாகநனி செய்துபரி
பூரண மெனக்கருடியே. ச.

---

* காலாக்கினி ருத்திரர்.

சீர்த்தியுள்ள பிரணவர்மே சேசரீசர் காலரஞ்சு
    தீர்த்தமெழில் கொண்டசுசிவர்
கீர்த்திகொள்சா தாக்கியர்நற் சூக்குமரொண் காரண
    ரெனக்கிளத்து கின்றமேவார்தச
மூர்த்திக ளுரைத மனந்தமுறை மெச்சவடி
    யாரக மிருக்குமுருகா
பூர்த்தியெனுஞ் சிற்பர வெளிக்குளே யடங்குபரி
    பூரண மெனக்கருடியே. ரு.

வித்தைதபெரு காடமேகச மூர்த்திக்கதிட் டானராம்
    வியாபகர்கூர் மாண்டமூர்த்தியி
னுத்திக்கதிட் டானராம் வியோமரூபர் குண்டலியென்
    றோதிடுமா தாரசத்திமே
லத்தனெனக் கூறனுத ரென்னுமூவர் மெச்சவடி
    யாரக மிருக்குமுருகா
பொத்தையுடல் விட்டிடுமுன் முற்றுநிலை யாகுபரி
    பூரண மெனக்கருடியே. சா.

ஏசறு வியாபகரும் வியோமரூப ரோடநந்த
    ரென்பவரு மன்பனுதரு
நேசமொடு நாற்புடையு மேத்தநடு வேயமர்ந்து
    நீடழ கனந்தனைநடாத்
தாசிலிறை யாயவி ரனுசிருத ராயுமடி
    யாரக மிருக்குமுருகா
பூசுரர்பு கழ்ந்திடுமொர் வாழ்வெனு மகண்டபரி
    பூரண மெனக்கருடியே. எ.

மிக்கநெறி யத்திரியின் கண்ணயன் சிருட்டிபெரு
    விண்டுநெஞ்சு வெங்கனன்முகனு

சொக்கவமு தக்கட லெனும்புலங்க ளில்விரிந்து
தோன்றின தெனச்சொன் மதியை
யெக்கலையுந் தோன்றவணி மேவான்குமர னாகியடி
யாரக மிருக்குமுருகா
பொக்கமில் சுவர்க்கர்புகழ் சிற்சுக வகண்டபரி
பூரண மெனக்கருடியே. ௮

மண்ணுலகும் விண்ணுலகு நண்ணிநண்ணி யுன்னவொரு
மன்னென விருந்துமொருவ
ரெண்ணிடவும் பன்னிடவு முள்ளகுறி யொன்றுமின்றி
யெவ்வுயிர்த் திரட்குமுயிரா
மண்ணலெனும் விண்ணென நிலாவியுள்ள சோதியடி
யாரக மிருக்குமுருகா
புண்ணியர் விரும்புசுக சின்மய வகண்டபரி
பூரண மெனக்கருடியே. ௯

நீச்சுநிலை யற்றசன னக்கடலை நின்றனரு
ளென்றபுணை கொண்டுகடந்து
பேச்சொடு பிணக்கில்சுக மேவியவெட் டாதமலைப்
பேரணிறை யானதுனையே
யாச்சரிய வாயிரம் பெயர்ப்பிரம மாகியடி
யாரக மிருக்குமுருகா
பூச்சிய மிலாதவொரு பூச்சிய வகண்டபரி
பூரண மெனக்கருடியே. ௧௦

ஆவணிமீ ௬௨ புதவாரம்.

---

## திருச்சிந்துபுரம்.*



### தலைவனதநுக்கிரகமாட்சி.

பண் - நட்டராகம்.

கார்முகி ருன்பொழியு மிந்தக் காசினி மீதெனெதிர்
நார்முனி யென்னவந்தே யொரு நாட்டத்தில் வைத்ததுபோ
லார்மதி யுந்தருவோ ருனை யன்றி யெவருளரே
சீர்பெற வாட்படுவார்க் கருள் சிந்து புரத்தானே. ௧.

பொய்கொலை குத்திரங்கள் செய்து பூரித்த புன்மையினே
னுய்வண மாதவர்போல் வந்தவ் வுண்மைசொன் ஞயினமு
மையவிங் கெற்கருள்வோ ருனை யன்றி யெவருளரே
தெய்வமென் ருட்படுவார்க் கருள் சிந்து புரத்தானே. ௨.

கொள்ளு நிலைவிளக்கிச் சிறு கோவணத் தோடிருந்தே
யுள்ளன வைத்தவனே யென துள்ளத்து ளேமருவி
யெள்ளிடா திங்கருள்வோ ருனை யன்றி யெவருளரே
தெள்ளிதி னுட்படுவார்க் கருள் சிந்து புரத்தானே. ௩.

காரண மாயையிருந் தெழு காரிய மாமுடம்பைப்
பூரண மாயளித்திங் குனைப் போற்ற விதித்தவரு
ளாரிய வெற்கருள்வோ ருனை யன்றி யெவருளரே
சீருட னுட்படுவார்க் கருள் சிந்து புரத்தானே. ௪.

ஆசைகொள் பொய்யுலகப் பட ரானதை நச்சியுழல்
பாசர் வழியையொரு சற்றும் பற்ற விடாதுசெய்தோ

---

* திருச்சிந்துபுரமென்பது திருச்சீரலைவாயெனுந் திருச்செந்தூர். சிந்து=சமுத்திரம்.

யாசையொ டெற்கருள்வோ ருனை யன்றி யெவருளரே
தேசுட னுட்படுவோர்க் கருள் சிந்து புரத்தானே. ௫.

இந்த வுடம்பெடுத்தே யிவ ணேற்றபொல் லாங்கனைத்தும்
வந்த புலந்தெரியா தற மாய்த்தவ னேயினுமெ
னந்தர மோர்ந்தருள்வோ ருனை யன்றி யெவருளரே
சிந்தைசெய் தாட்படுவோர்க் கருள் சிந்து புரத்தானே. ௬.

புன்மன தைப்பெரிதாப் பணிப் புன்றொழி லத்தனையு
மென்மன திற்படியா திறச் செய்தவ னேயினமு
மன்னம னைத்தடுப்போ ருனை யன்றி யெவருளரே
தென்னுட னுட்படுவோர்க் கருள் சிந்து புரத்தானே. ௭.

பெற்றவ ரும்மறப்பார் பிறந் தார்மக ரும்மறப்பா
ருற்றவ ரும்மறப்பா ரொரு காலமு நீமறவா
யற்ற மறுத்தருள்வோ ருனை யன்றி யெவருளரே
தெற்றென வாட்படுவோர்க் கருள் சிந்து புரத்தானே. ௮.

மண்ணினும் விண்ணினுநான் கென மல்கு திசைகளினு
மண்ணிய வுன்னடியா ருடை யன்பினுள் ளோயெனதுள்
ளெண்ண மறிந்தருள்வோ ருனை யன்றி யெவருளரே
தெண்ணர லைக்குளைசா றிருச் சிந்து புரத்தானே. ௯.

துப்புறழ் வாய்க்குறமா னினி தோடமு வுங்குகனை
யப்பனை யின்புறுகர்ந் தநு பூதிசொன் னேன்குரவா
வொப்புட னெற்கருள்வோ ருனை யன்றி யெவருளரே
செப்பமொ டாட்படுவோர்க் கருள் சிந்து புரத்தானே. ௧௦.

ஆவணிமீ ௧௨ மந்தவாரம்.

---

## ஐக்கியமன்றாட்டு.

பண் - பழம்பஞ்சுரம்.

திங்கள் வேணியன் மைந்த னேசிவ
னேயெ னாருயிர் நாதனே
மங்கு மஃறிணை யாவி யாக
வகுத்தி டாதிந்த மானுட
வங்க மாக வகுத்த நின்னருட்
பாட்டை நான்மற வேனினுஞ்
சங்கை காதரு ளுந்தி மூழ்கியுன்
றன்னை மேவ விழைத்தியே. க.

மின்னும் வேலமர் கைய வெம்பெரு
வேந்த னேவள்ளி காந்தனே
நன்னர் சேர்மனு யாக்கை யேற்று
நலம்ப டாவுறப் பினர்போ
லென்னை நீவினை யாம னன்குசெய்
திட்ட வீர மறக்கிலேன்
றன்னு ளாரரு ளுந்தி மூழ்கியுன்
றன்னை மேவ விழைத்தியே. ௨.

பேழ்கெ டாவரும் பேறு சால்சிவை
பிள்ளை யேசெழுங் கிள்ளையே
வாழ்வ றுவொரு வான்வி லேதின
மல்க யோக்கிய மேயிலாத்
தாழ்கு ழல்வடி வின்றி யானுட
றந்த வீர மறக்கிலேன்
றாழ்வி லாவரு ளுந்தி மூழ்கியுன்
றன்னை மேவ விழைத்தியே. ௩.

கோல வாற்சிகி வாக னவருள்
　　கூர்ந்தெ னைக்கொளு மோமனு
மாலு லாவு மனத்தர் போலெனை
　　வைத்தி டாதுயர் சித்தறைய்
ஞால மீதெனை வைத்த வுன்றொரு
　　நட்பை நான்மற வேனினுஞ்
சால நல்லரு ளுந்தி மூழ்கியுன்
　　றன்னை மேவ விழைத்தியே. ௪.

தேவர் நாயக வோமெ னுநினை
　　செல்வர் நாயக வம்மனை
யாவண் மோட்டு ளிருந்த நான்முத
　　லிந்த நாள்வரை யார்துயர்
யாவும் வீட்டியுய் வித்த தண்ணளி
　　நட்பை நான்மற வேனினுந்
தாவி லுன்னரு ளுந்தி மூழ்கியுன்
　　றன்னை மேவ விழைத்தியே. ரு.

ஆரல் போலவிர் மேனி யாயெங்க
　　ளாரி யாவள்ளி காரியா
வேரு லாங்கலை யில்லி போலெனை
　　யுஞ்செ யாததி யின்பமே
சேர ருந்தமி ழோடு செய்தவொர்
　　தெய்வ வீர மறக்கிலேன்
சார மாமரு ளுந்தி மூழ்கியுன்
　　றன்னை மேவ விழைத்தியே. சா.

மாசி லக்கர மாறு மேற்பவர்
　　வற்ச லாவதி யற்புதா

வாசி லாப்பொறி கற்று நூலுணர்
வற்ற மூடர்கள் போலெனை
நீசெ யாதுணர் வாகு மாசெய்த
நேய வீர மறக்கிலேன்
ரூசர் மூழ்கரு ளூந்தி மூழ்கியுன்
றன்னை மேவ விழைத்தியே. எ.

சிட்டர் காவல னேக டம்பணி
சேந்த னேதிவ்ய சாந்தனே
மட்டி னூல்கள் படித்து மேபொய்
வழிச்செல் வோர்களை யொப்பவே
சிட்ட னேனை விடாதுன் மெய்வழி
சேர்த்த வீர மறக்கிலேன்
றட்டி லாவரு ளூந்தி மூழ்கியுன்
றன்னை மேவ விழைத்தியே. அ.

அஞ்சொ லாளெங்க ளம்மை யாங்கச
நாய கிக்கு மணாளனே
கிஞ்சி னும்முனை நாடி டாது
கிடக்கை மீதிழி வேலைசெய்
பஞ்சை போலெனை விட்டி டாது
பணித்த வீர மறக்கிலேன்
றஞ்ச மாமரு ளூந்தி மூழ்கியுன்
றன்னை மேவ விழைத்தியே. கூ.

மண்ணும் வானமு மெச்ச வேபுகழ்
பாடி னேனக மாமணீ
கண்ணி லாமட வோர்சி னேகித
நீக்கி யுன்றெரு காமரே

யெண்ணி நாளு மிருக்க வாக்கிய
விட்ட நான்மற வேனிதுந்
தண்ண ருவரு ளுந்தி மூழ்கியுன்
றன்னை மேவ விழைத்தியே. ௧0.

ஆவணிமீ ௧௨௳ மங்களவாரம்.

---

## அங்கப்பேறு.

பண் - நட்டராகம்.

ஆதித்த னம்பரிதி தலம் யாவும் விளக்குதல்போற்
றீதற்ற மெய்யடியார் சிந்தை தன்னை விளக்கியுண்மை
போதிக்கும் பாவகியே யுனைப் போற்றிப் பழிச்சியென்னைப்
பேதிப் பிலாப்பேற்றை யிம்பர்ப் பெற்றுக் களித்ததன்றே.

கூரர ணப்படையா யண்ட கோடியெல் லாம்பயக்கு
மாரண வற்புதனே யறி வாய்விபு வானவனே
சீருட னுளவந்த திரு மேனியைக் கண்டுகண்கள்
பேருல கிற்பெறும்பே றன்று பெற்றுக் களித்தனவே.௨.

வாச நறுங்கடம்பா வெழில் வாண்மணி யார்சிலம்பா
தாச னெடுத்தவிந்தச் சன னங்கடைத் தேறிடுமா
தேசிக வாக்கியமாச் செப்பக் கேட்டென தஞ்செவிதான்
பேசற் கரும்பேற்றை யிம்பர்ப் பெற்றுக் களித்ததன்றே.

முன்னைப் பழம்பரமே முழு மூலச் சிவக்கொழுந்தே
யென்னுட்கணேயிருந்தே யெனக்கின் பிகைக்கும்பொருளே
கொன்னழ குன்னடியை நனி கூப்பியென் கையிரண்டும்
பின்ன மிலாப்பேற்றை யிம்பர்ப் பெற்றுக் களித்தனவே.

வட்டக் குயக்குறத்தி மணவாளனே தாழுநர்தங்
கட்டஞ் செகுப்பவனே கருணாகர வேலவனே
வட்டம தாச்சூழ வலம் வந்திரு தாள்களுமே
பெட்டி லரும்பேற்றை யிம்பர்ப் பெற்றுக் களித்தனவே.

ஒய்வி லிரும்வெறுக்கை யுள்ள வுத்தம னேயரனார்
சேயெனுஞ் செம்பொருளே சிவ ஞானப் பெருந்தகையே
காய மெலாமுனது கழ லைக்குரங் கிக்குரங்காப்
பேய்கள் பெரும்பேற்றை யிம்பர்ப்பெற்றுக்களித்தனவே.

முத்தர் முதுக்குறைவே சிவ மோன வருட்பரப்பே
யெத்திசை யுஞ்செறிந்த விறை யேயென்னை யாள்குகனே
நித்தனு நின்சரணே யென்ற னெஞ்சம துள்கியுள்காப்
பித்தர் பெரும்பேற்றையிம்பர்ப்பெற்றுக்களித்ததன்றே.

மாடுடை யண்டர்பிரா னெனு மாசில் சதாசிவனே
வீடுடை யாய்விமலா விரை வீசு கடம்பணியாய்
தாடரு முன்னிலைமை யைவி சாரித்தென் புத்திகெடாப்
பீடுடை நற்பேற்றை யிம்பர்ப் பெற்றுக் களித்ததன்றே.

ஏர்மலி யெம்பரனே யிணை யில்விசும் பானவனே
தார்மலி மொய்ம்பரனே சிவ சண்முக சங்கரனே
சீர்மலி யுன்னருளை யென்றன் சித்தம தெண்ணியெணாப்
பேர்கள்பெரும்பேற்றையிம்பர்ப்பெற்றுக் களித்ததன்றே.

தெள்ளறி விற்சிறந்தே யறு பூதி தெரித்தவெந்தை
யுள்ளறி விற்கலந்தே யொரு மோதநல் குங்குழகா
பொள்ளற் சடங்கெடுமுன் புரி வுற்றழுங் கென்னையுநீ
கொள்ளும் விதம்பணித்தா னனி கூடிக் களிப்பேனே. ௧0.

ஆவணிமீ ௧௬௨ மந்தவாரம்.

---

# உள்வைப்பு.



அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

**பண் - பழம்பஞ்சுரம்.**

உலகம் யாவும் படைத்தவனை யுகந்தெவ் வுலகும் புரப்பவனை
யிலகு முயிருட் கலந்தவனை யெங்கு நீப்பின் றிருப்பவனை
நிலவு மயிலைப் பிடித்தவனை நிகரில் சிகண்டி யூர்பவனை
யுலவா வெங்க ளுத்தமனை யுள்ளத் துள்ளே வைத்தேனே. க.

காதற் கியைந்த காதலனைக் கருணைக் கடலைக் கண்மணியைச்
சீதப் பாலைத் தேங்கனியைத் தெவிட்டா வின்பத் தீஞ்சுவையை
யாதிப் பெருமா னுயவனை யாறு முகத்துச் செம்மணியை
யோதற் கரிய வெம்மானை யுள்ளத் துள்ளே வைத்தேனே. உ.

அம்பொற் சிலம்பா ரடியழகை யடியா ரகத்தி னரமுதைப்
பைம்பொற் கவலை காத்தவளின் பரிவுக் குவந்த கட் டிமுத்தைச்
செம்பொற் சோதிச் செழுங்குருந்தைத்திகழ்மாணிக்கத்திருவளையை
யும்பர்க் கருளெம் பெருமானை யுள்ளத் துள்ளே வைத்தேனே. ௩.

தேனிற் சிறந்த மொழியானைத் திருவிற் சிறந்த வுருவானை
வானிற் சிறந்த பதியானை மதியிற் சிறந்த பெரியானை
மானிற் சிறந்த விழியாளம் மலைமா தேந்தும் பைங்கிளியை
யூனிற் போரு யி ரெம்மானை யுள்ளத் துள்ளே வைத்தேனே. ௪.

அன்னைக் கனையா யுள்ளானை யயனுக் கயனா யிருப்பானைத்
தன்னைப் போலொன் றில்லானைச் சாவிற் பிறப்பி னில்லானை
முன்னைப் பின்னைப் பிறழானை மூவா முருகப் பெருமானை
யுன்னற் கரிய வெம்மானை யுள்ளத் துள்ளே வைத்தேனே. ௫.

மெய்யின் மெய்யாய் நிற்பவனை விரியு மகண்ட வெளியானைப்
பொய்யில் வேதப் பொறையாளர் போற்று மபேத வுணர்வானைச்
செய்ய கோழிக் கொடியானைச் சிறந்த ஞானத் திருவானை
யுய்யு மாறெம் முத்தமனை யுள்ளத் துள்ளே வைத்தேனே. சு.

செச்சைத் தாரார் மொய்ம்பானைத் திருமான் மருமா னென்பானை
யிச்சைக் கலிக்கு ளாழ்ந்தோரை யெடுத்துக் கரையேற் றிகலானைப்
பிச்சைத் தலைவன் பிள்ளைதனைப் பிரமா பேணும் பேழ்மறையி
னுச்சிப் பொருளா மெம்மானை யுள்ளத் துள்ளே வைத்தேனே. எ.

எட்டின் மொழிக ளளவின்றி யியம்பி யியம்பி முடிபுறையாத்
தாட்டி கந்தா னுடை யானைச் சகல கலாவல் லோனையுயிர்
நாட்டி யஞ்செய் பவனையணு நடுவா னவனை நலிவிலரு
ளூட்டி யெனையிங் காள்பவனை யுள்ளத் துள்ளே வைத்தேனே. அ.

அரிய மாலிற் கரியானை யயனைச் சிறையிட் டருள்கோனை
நரியைப் பரியா வயர்ந்தவனை நமவென் றிறைஞ்ச விதித்தவனைப்
பெரியர்க் கருளும் பெரியானைப் பிறங்குங் கழுகு மலையானை
யுரிமைப் படுமெம் பெருமானை யுள்ளத் துள்ளே வைத்தேனே. கூ.

வெள்ளிக் கயிலை மலைவாழ்வை வியனூர் மோன ரகக்கழையைக்
கள்ளிற் பெரிய திருப்புகழைக் கழறி யிரியா வாக்கமுற்ற
வள்ளற் குள்ளங் குளிர்வித்த மழையா முகிலை வான்மணியை
யுள்ளற் கரிய வெம்மானை யுள்ளத் துள்ளே வைத்தேனே. க0.

ஆவணிமீ கஅவ சோமவாரம்.

ஆ திருப்பாடல் - ௬0க.

---

# மெய்ம்மார்க்க விளக்கம்.

---

## திரு நேரிசை.

பண் - கோல்லி.

நீரகம் பெருகு நாக நிருபனார் சுதைவார்க் கொங்கைப்
பீரகங் குளிர மாந்திப் பிரமனார் சிரசிற் குட்டி.
யேரகத் தமர்ந்த தேவை யிகனிசி சாரைக் காய்ந்த
தீரனை யன்றி வேறு தெய்வநாம் வழிப டோமே. க.

மாவலை யரிக்கு நேமி வழங்கிய தணிகைச் சேயைக்
கோவரர் பதியை ஞானக் குழவியைக் குமர வேளை
யாவியர் தேவா வானை யறிஞர்க ளகத்திற் றாங்குந்
தேவனை யன்றி வேறு தெய்வநாம் வழிப டோமே. உ.

பொய்தபு மயோத்தி ராமன் போற்றிய குருந்தை ஞானச்
சைவனைத் தார கத்தின் சதுர்தனை விளக்கி னானைப்
பையுளில் பரம யோகர் பரிவினில் வெளியாந் திவ்ய
தெய்வம தன்றி வேறு தெய்வநாம் வழிப டோமே. ௩.

தன்னிக ரில்லா தானைத் தனிப்பரஞ் சுடரை ஞான்று
மன்னுயி ரனைத்து மோம்பி மலரடி யிருத்தம் மானை
யென்னக மிருக்கும் வேந்தை யேர்ச்சிகா வளத்தி லேறு
தென்னனை யன்றி வேறு தெய்வநாம் வழிப டோமே. ௪.

வெறிநக ரளிகண் மூசு மென்சுருட் குறமின் னேந்து
பொறிமுலையழுந்து மொய்ம்புப்புனிதனைப்புனிதர்கோனைக்
குறிதிர் பேத மில்லாக் குகனைமஞ் சுமையாள் பங்கன்
சிறுவனை யனறி வேறு தெய்வநாம் வழிப டோமே. ௫.

கவலைமா கடலில் வீழ்ந்த கறையனேன் கரிசை நூற்றி
யவனையே யேத்த வாணை யயர்ந்ததண் கருணை யானை
மவுனிக ளகநி லாவு மாணிக்க மதனை வேற்கைச்
சிவமதை யன்றி வேறு தெய்வநாம் வழிப டோமே. சு.

வல்வினை துமிக்குந் தேவை மறைகளை நொடித்த தேவை
நல்வினை யாளர் நாவி னவின்மனு வினுக்காந் தேவைப்
பல்கணம் வாழ்த்தும் வேளைப் பரமபுங் கவர்க ளேத்துஞ்
செல்வனை யன்றி வேறு தெய்வநாம் வழிப டோமே. எ.

காந்திசெய் யரணத் தானைக் கனைகழற் சரணத் தானைச்
சாந்தர்க ளறிவிற் றோன்று சவியுடைச் சுடரை யன்பர்
வேந்தனை விபுதர் கோனை விமலனை விமலர் வாழ்த்துஞ்
சேந்தனை யன்றி வேறு தெய்வநாம் வழிப டோமே. அ.

துண்ணெனத் துடிதான் கொட்டி யாடிடு துரையை யூனக்
கண்ணினர் காணாக் கானக் கமலநான் முகன்மா லேத்தும்
விண்ணென விரிந்து ளானை மிளிர்வடி வேல்கூ லேந்து
திண்ணனை யன்றி வேறு தெய்வநாம் வழிப டோமே. கூ.

காய்சரு கருந்து முவ்வோர் கருத்தினுக் கிசைந்து ளானை
யோய்வறு புகழ்சொன் ஞேன்சொல் லொருவனைப்புறம்பாமார்க்கப்
பேய்கடா முணராச் சூரைப் பெருஞ்சிவ யோகர் பேணுஞ்
செய்தனை யன்றி வேறு தெய்வநாம் வழிப டோமே. க0.

ஆவணிமீ᾽ கசுஉ மங்களவாரம்.

---

## சுப்ரமண்ய ரகசியம்.

### திருத்தாண்டகம்.

பொன்னொளிவே ணிவிர்த்திபிர திட்டை வித்தை
பொதிர்தீபச் சாந்திதிகழ் சாந்த்யா தீதை
நன்னர்நிரோ சாதைநா தாந்தை சத்தி
நாதைவியா பிணிசமனை வியோம ரூபை
யுன்மனையொள் ளொளியனந்தை யனாதை மிக்க
வொளிசெயனா சிருதையெனுங் கலைகண் மேலா
யென்னகத்தி னீயுதித்தா லன்றோ சுப்ர
மணியமது தோன்றிற்றென் றிசைப்பேன் மன்னோ.

முனிவுகெழு தாரகனா மாயை யோடு
மோசவன்மைக் கிரௌஞ்சனையு ஞான வேலா
னனிமுருக்கிச் சிங்கமுக னென்னுங் கன்ம
நசித்தடல்கொள் வச்ரசத்தி யானல் லோர்க்குப்
பணிபுரிந்த சூரபன்ம னெனுமாங் காரம்
படராண வத்தைநெடுங் கூர்வே லென்னுந்
தனிஞானத் தாற்பிளந்தா லன்றோ சூர
சங்கார நடந்ததென நவில்வேன் மன்னோ. உ.

அருளாகு மகண்டசிவ ஞான சத்தி
யதனாலே பிளப்புண்ணு மாண வந்தா
னிருபகுதி படுங்கால மொருபா கத்தி
லெழுந்துவரு முபாதியைக்கி ழடக்கி மேற்கொண்
டொருபாகத் தெழுந்துவரு முபாதி தன்னை
யுயர்மாயை யடக்கியுல கெல்லா மெந்தம்
பொருளெனவே காட்டுகொடிப் போட்டா லன்றோ
புள்ளிமயி லூர்ந்துகொடிப் போட்டா ரென்பேன். ௩.

அகங்கார மலமடங்கி யமர்ந்த பின்ன
ரதுவிருந்த வவித்தியா புரத்தின் மேலுஞ்
சகம்பேணு மாயையுடை வலியால் வாதை
தழைக்கும்வா சனைமுளையா வண்ண மாறப்
பகம்பேணு மனோநாச மெனும்வெள் ளத்தைப்
பரவநனி செயினன்றோ சூர பன்ம
னுகம்பலவா யாண்டிருந்த புரத்திற் றண்ணு
ருததிபோய்ப் படிந்ததெனு வுரைப்பேன் மன்னே.

மாயைவரு மகங்கார மலத்தி னாலே
வவ்வப்பட் டளப்பறுகா லிடுக்க ணுற்றுப்
பேய்கள்போற் சிர்குலைந்து வருந்து மென்றன்
பிரியமுளோ ரோடெனக்கும் பெரிய வீடு
நேயமொடு கொடுத்தாண்டா லன்றோ வானோர்
நெடுநாளா யடைந்தபட ரறுத்தன் னார்தந்
தூயபதி தனைக்குமரப் பெருமா ளென்பார்
சுதந்தரமா யளித்தாண்டா ரென்பேன் மன்னே.* ரு.

அழியாத வாநந்தம் பிரம மென்றே
யறைசுருதிப் படிசுவ்வே யவ்வா நந்தம்
பழிசேராப் பிரமவெனல் விகார மேதும்
பகரவொண்ணுப் பெரியபர வஸ்து வென்றும்
பிழைதீர்ந்த ணியமெனறு னதிலே தோன்றிப்
†பிறழ்வதென்று மிவைசுப்ர மணிய மென்று
மொழியவரு மாகலினு நந்தந் தானே
சொரூபஞ்சேய்க் கெனவறிஞர் மொழிவார் மன்னே.

---

* இவ்வைந்து பாட்டுகளிலும் வருகின்ற இரகசியங்கள் இந்நூலாசிரியரது ஸ்ரீ சுப்பிரமணிய வியாசம் கசு - வது வினாவிடையில் மிகவும் விளக்கப்பட்டிருக்கின்றன. † பிறழ்தல்=பிரகாசித்தல்.

குகமெனுமோர் கூற்றினுக்குப் பொருளான் மாவின்
  குகையென்னு மிருதயமென் றுத லானே
குகனெனுமோர் திருநாமக் கடவு ளெல்லாக்
  குவலயத்து முளவான்ம கோடி நெஞ்சாங்
குகையிருக்கும் பரமான்மா வென்று மாவிக்
  குகசத்தம் பிறிதொருதே வனுக்கு முண்டோ
விகபரமுந் துலக்கியரு ளடிகே ளென்ற
  னிதயநடு வமர்ந்தவருட் டிருவே மன்னே. எ.

என்றுநிலை பரமான பொருளாந் தெய்வ
  மிணையில்லா வநுபவத்தில் வெளியாந் தன்மை
துன்றுமிலை மறைந்திருக்குங் காய்தா னந்தத்
  துடக்கான விலைவிலகத் தோன்று மாபோ
னின்றுவெளி யாமதனாற் சுப்ர மண்ய
  நித்தியமல் லாதுபுதி தன்றென் றோர்வார்
குன்றலற வரழ்வாரே யாண்டு மென்றன்
  குற்றேவல் கொண்டருளுங் குருவே மன்னே. அ.

பூணாரம் புனைதெய்வத் தந்தி தானே
  புணர்தணந்த குகவேட்கு ஞான சத்தி
நாணுணு மிடைவள்ளி யம்மை தானே
  நாதாந்த பரம்பொருட்குக் கிரியா சத்தி
காணுமல் வருந்தியரு ளுடு வார்க்குக்
  கரிசிலந்த விரண்டுசத்தி வாயி லாகச்
சேணுடர் கணிக்கரிய போக மூட்டிச்
  சேர்த்திடுமப் பரப்பிரமக் குழவி மன்னே. கூ.

உருநிலையிற் குழவிவடி வுடனி ருந்தே
  யுயர்தந்தைக் கோம்பொருள்சொன் னதுவி யப்பே

யருநிலையி லுயிர்தோறு மிருந்து மந்த
வாவிகட்கெட் டாதிருத்த லதிவி யப்பே
பெருநிலையி லரியனுமான் வீர வாகுப்
பெயருண்டயான் கொண்டவுருக் களைக்க டந்து
கரசிரங்கள் பலவோங்க நின்ற நீர்மை
கணிப்பவரார் திருப்புகழ்சொன் னவனுண் மன்னே.

ஆவணிமீ உ௦ வ புதவாரம்.

## நமன்றமர் நணுகாநெறி.

பண் - நட்டபாடை.

ஆதித்தரெ னச்சொல்சுரர் களினீள்பகை யறுத்த
சோதிச்சுடர் வடிவேலவர் சுகிர்தத்திரு நாம
மோதிப்புவி மீதேநித முவந்தாரரு ளுடிச்
சாதித்திடு வோர்பானமன் றமர்தாநணு காரே. க.

என்பார்தசை செந்நீர்நரம் பெனவேய்ந்தபொய் யாக்கை
துன்பாலழி முனமேசிவ சுதனென குகேச
னன்பாவதை யன்போடெண்ணி யன்பிற்படி யுமவன்
றன்காணினை வோர்பானமன் றமர்தாநணு காரே. உ.

பாளைச்சுருண் மீதஞ்சிறை யளிதானளி பருக
வாளைப்பொரு தத்தாரைக ளிலகும்வன மகளார்
தோளைத்தழு வுங்காமரி லுழல்சேயிரு தூய
தாளைப்புகழ் வோர்பானமன் றமர்தாநணு காரே. ௩.

மரணஞ்சன னஞ்சூழ்கவன் மருளேதுமி லாவோர்
புரணந்தனை யுடையாரடை பொருளாவிக ளுள்வாழ்

கரணன்மர க்தரூப கலாபச்சிகி யூர்வோன்
சரணந்தொழு வோர்பானமன் றமர்தாநணு காரே. ௪.

நிதம்வந்தனை புரிவோரக நிகழுங்கிரு பாளு,
மதவங்கஜ முகனாரிள வலெனுங்கும ரேசன்
பதபங்கய வியன்மான்மிய மொழிசீரிய பாடல்
சததஞ்சொலு வோர்பானமன் றமர்தாநணு காரே. ௫.

மனைபன்னிய ருஞ்சேயுற வோடேவிரி மண்ணில்
வினைபண்ணியு ழல்வோருளு மிளிர்வேன்முரு கோனன்
பினையுன்னடி யார்க்கேகளி பெருகும்படி தொண்டு
தனையேபுரி வோர்பானமன் றமர்தாநணு காரே. ௬.

பலிக்கப்பணா கொண்டேமறு கூடின்னிசை பாடிப்
புலிப்பொற்புரி யணாயாத்தொரு பூவெண்கிரி யுறைவோர்
வலிக்கொப்புறு குகதேவுயர் சரிதங்களை மனமே
சலிக்கப்படிப் போர்பானமன் றமர்தாநணு காரே. ௭.

அவமாமதி பாவம்பல வயர்ந்தோர்குழு வுள்ளு
நவமாமணி முடியும்பர்க ணுளுஞ்சலி யாமற்
சிவமேயென நினைகின்றவொர் செவ்வேளடி நேடித்
தவமேபுரி வோர்பானமன் றமர்தாநணு காரே. ௮.

மதங்கட்டிய மருப்புக்கரி யைப்பாய்முலை மகடூஉ
நிதம்பப்புழை வீழாவொரு நெறிநின்றறு முகவேள்
பதஞ்சிக்கிட விலையேயென பணுவோமென விழிநீர்
ததும்பத்திரி வோர்பானமன் றமர்தாநணு காரே. ௯.

தேர்ந்தோர்துதி செய்யுந்திருப் புகழ்சொன்னவ னெஞ்ச
மோர்ந்தேயருள் புரிந்தோனெனு முமையாள்சுதனடிக்கண்

வார்ந்தோடுநெடுங் மதுகச்சிடு வரிபோலவ னன்பிற்
சார்ந்தேயிருப் போர்பானமன் றமர்தாகனு காரே. கo.

ஆவணிமீ உஉஉ சுக்கிரவாரம்.

---

## வழிபாட்டின்மாட்சி.

—:0:—

பண் - இந்தளம்.

கரியுரி போர்த்தவர் காதல னுய
விரிகதிர் வேலுடை யாயுனே வேண்டித்
திரிபவ ருலகினிற் றீதடை வாரோ
பரிவுடை யின்னருட் பாடடை யாதே. க.

வானத்துய் வோரிறை யோனெனு மாண்பு
ஞானப்பொன் வேலுடை யாயுனே நாடி
யேனிற்கு மேசில ரிழிவடை வாரோ
தேனிற்கு மேலுயர் சேணடை யாதே. உ.

பொய்யுரை சீத்தருள் புரிகுரு நாதா
தொய்யலில் வேலுடை யாயுனேத் தொழுவோர்
வையமு ளேகடி மடியடை வாரோ
மெய்யதி மேதக வீறடை யாதே. ங.

செறிசிறு கிங்கிணி சேர்சர ணுதா
யறிவுடை வேலுடை யாயுனே வாழ்த்தும்
பொறியுடை யோர்மறு புதையடை வாரோ
வறிதறு வாழ்வினே யேயடை யாதே. ச.

நுண்ணிடைச் சசிமகள் பதியெனு நுதலார்
கண்ணுடை வேலுடை யாயுனேக் கருதி

மண்ணிடைத் திரிபவர் மருளடை வாரோ
விண்ணிடை நிறுவொரு வீடடை யாதே. ரு.

சகலச ராசர தாரக தேவா
விகலயில் வேலுடை யாயுனை யெண்ணிப்
புகலிலை யென்பவர் புலவடை வாரோ
நிகரறு பூரண நிலையடை யாதே. சு.

அறைமறை யாறங்க நெறியினை ரேத்தும்
பொறையுடை வேலுடை யாயுனைப் போற்றுங்
குறையில ரோகையில் குறைவடை வாரோ
நிறைவெனு மின்புறை நிலையடை யாதே. எ.

துவிதமி லாதவத் துவிதமெய்ஞ் ஞானச்
சவியுடை வேலுடை யாயுனைத் தாழ்ந்து
கவிகுயில் வோர்கலுழ் கறையடை வாரோ
விவிதமி லாவிப வம்மடை யாதே. அ.

தேட்டமொ டன்றறு வருக்குயர் தேற்ற
நீட்டிய வேலுடை யாயுனை நீங்கா
நாட்டமிக் குடையவர் நலிவடை வாரோ
வாட்டுமுன் ஞேடிரண் டறவடை யாதே. கூ.

திருப்புகழ் நாவலன் றிருப்புக ழணிக்கு
விருப்புடை வேலுடை யாயுனை மறவாக்
கருத்துளர் பிறிதொரு கருப்புகு வாரோ
வுருக்கிய வுடம்புட னுனையடை யாதே. கO.

ஆவணிமீ உகூஉ மந்தவாரம்.

---

## தாசப்பிரகாசம்.

பண் - கொல்லிக்கௌவாணம்.

பொன்மருவு பொடிமேனிப் புலவற்குத் தாசன்
புகரற்ற நறுநீபம் புனைவோற்குத் தாசன்
றென்மலய மாமுனிவன் குரவற்குத் தாசன்
செழுந்தூவி மயிலூருஞ் சிவனுக்குத் தாசன்
கன்மவினை போக்கியருள் கந்தற்குத் தாசன்
காங்கேயத் திருநாமக் கடவுட்குத் தாச
னென்மனதி னுள்ளவயி லிறைவற்குத் தாச
னெங்குநிறை விண்குமர குருதாச னனே. க.

சங்குமிலை சங்கரர்சு வாமிக்குத் தாசன்
றண்ணளியி னவர்தந்த குமரற்குத் தாசன்
பொங்கரவ ணிந்தவுமை மைந்தற்குத் தாசன்
பொருவற்ற வேணுமைப் புனிதற்குத் தாசன்
றிங்கண்முக வள்ளிமண வாளற்குத் தாசன்
றிவ்யசுர குஞ்சரியின் றலைவற்குத் தாச
னிங்கிதகு ணப்பரம முருகற்குத் தாச
னெங்குநிறை விண்குமர குருதாச னனே. உ.

தீரமலி தேவசே னனிக்குத் தாசன்
றிருவேறு செம்பாதச் சிலம்பற்குத் தாசன்
வீரமலி யொருசூரன் பகைவற்குத் தாசன்
வித்தார வடிவுள்ள குழகற்குத் தாச
னாரமலி தோள்ராம நாதற்குத் தாச
னயிரம காநாம வாதிக்குத் தாச
னீரமலி யிதயச்செவ் வேளுக்குத் தாச
னெங்குநிறை விண்குமர குருதாச னனே. ௩.

வென்றிவேல் கொடுகுன்று போழ்ந்தோற்குத் தாசன்
வெயின்மிக்கி லங்குகர வேலற்குத் தாசன்
பொன்றுத நித்தியசு ரேசற்குத் தாசன்
புகலரிய வித்தைதரு புலவற்குத் தாசன்
றென்றிசைந மன்பரவு சேந்தற்குத் தாசன்
செம்மைகெழு சேவலங் கொடியாற்குத் தாச
னென்றுநிமிர் முசுகுந்த னிறைவற்குத் தாச
னெங்குநிறை விண்குமர குருதாச னேனே. ௬.

தகவுற்ற வொருதார காரிக்குத் தாசன்
றமேமர்த ரற்காழி தந்தோற்குத் தாசன்
பகமுற்ற நந்திசர் குருவுக்குத் தாசன்
பாவகியெ னுந்தூய பெயரோற்குத் தாச
னகமற்ற சுகர்வாம ரடிகட்குத் தாச
னசறும காலோக குருவுக்குத் தாச
னிகனுற்ற வொருகங்கை மைந்தற்குத் தாச
னெங்குநிறை விண்குமர குருதாச னேனே. ௭.

சேடுடைய திருவிஞ்சு செட்டிக்குத் தாசன்
சேயென்னுந் திருநாமச் செல்வற்குத் தாசன்
மாடுடைய மணிகண்டன் மகனுக்குத் தாசன்
மாமாய மாயோர்னின் மருகற்குத் தாசன்
பீடுடைய மலைமேவு பெரியோற்குத் தாசன்
பிணங்காவி யன்வாகு லேயற்குத் தாச
னேடுடைய வெட்சிகொள்வி சாகற்குத் தாச
னெங்குநிறை விண்குமர குருதாச னேனே. ௮.

சீர்கொண்ட செங்கார்த்தி கேயற்குத் தாசன்
நீதற்ற குடைக்கூத்துத் தேவற்குத் தாச

ஞர்கொண்ட நலனேங்கு கடம்பற்குத் தாச
னல்லாறு முகமுள்ள நம்பிக்குத் தாசன்
ருர்கொண்ட சரஜன்மப் பெருமாற்குத் தாசன்
றாழ்வற்ற தமிழ்ச்சங்கத் தலைவற்குத் தாச
னேர்கொண்ட கதிரேசப் பெயரோற்குத் தாச
னெங்குநிறை விண்குமர குருதாச னனே. எ.

அக்கினிக ருப்பனெனு மண்ணற்குத் தாச
னநந்த மாஞ்சுப்ர மணியற்குத் தாசன்
பொக்கமறு முத்தையப் பெயரோற்குத் தாசன்
பொருவின்மா யாமாயக் குழவிக்குத் தாசன்
றுக்கமறு துடிக்கூத்துக் கடவுட்குத் தாசன்
றொன்மையய னர்சிட்டி செய்தோற்குத் தாச
னிக்குவளர் கந்தகிரி யீசற்குத் தாச
னெங்குநிறை விண்குமர குருதாச னனே. அ.

பணைநகில வனமகளின் பட்சநனி நச்சிப்
படிமீது புளிந்தனுச் சென்றோற்குத் தாசன்
றிணைமீது திமிசாக நிமிர்ந்தோற்குத் தாசன்
றெய்வமுது சன்னசி யானேற்குத் தாசன்
பிணையலணி யத்திமுகன் றம்பிக்குத் தாசன்
பேசரிய யாழ்முனிவன் பெருமாற்குத் தாச
னிணையளவை யில்லாத குகனுக்குத் தாச
னெங்குநிறை விண்குமர குருதாச னனே. கூ.

கல்லாலி னிறைபோல வோங்குபர வோதிக்
கண்ணுறு பெயர்க்கறிவு தந்தோற்குத் தாசன்
வில்லாரும் பழநிமிசை வெண்கச்சை சார்த்தி
மிளிர்கின்ற வொருதண்ட பாணிக்குத் தாச

னல்லார்கள் போல்வைக்க நினைத்தென்னை நேடி
நன்னவிர முண்டிதமாய் வந்தோற்குத் தாச
னெல்லாரு மேத்தருண கிரிகோற்குத் தாச
னெங்குநிறை விண்குமர குருதாச னனே. ௧0.

ஆவணிமீ உ௩௨ மந்தவாரம்.

---

# திருக்கருணைப்பிணக்கம்.

**பண் - பழம்பஞ்சுரம்.**

மண்டலம் விண்டல மேத்த மாதர் மயலே கொளுங்குறத்தி
கொண்ட மணாள ரரும்பொன் வேலர் குறள்கள் பலகோடி
தெண்ட னிடுஞ்சிகி யீசர் நல்கு திருவிற் சிறிதுகொளிற்
பிண்ட முடையநம் மோடு சிறிது பிணங்கிக் கொள்வாரே. ௧.

ஆச்சரி யத்திருக் கூத்தி னுலைய னங்காப் பீறுதிரை
யேச்சி லநுக்ரக மென்னு மைந்து மிழைக்கு மயூரேசர்
பூச்சர மொய்ம்பவிர் செவ்வே ணல்கு பொறியிற் சிறிதுகொளிற்
பேச்சடங் காதநம் மோடு சிறிது பிணங்கிக் கொள்வாரே. ௨.

சீரிய மாகர்க ளொன்று கூடிச் சிலம்பணி தாள்வணங்கிக்
கோரிய வாறுசெய் தாண்டு கொண்ட குமார குருபரனார்
பாரினி லேயருள் கூர்ந்து நல்கு பவுள்சிற் சிறிதுகொளிற்
பேரறி வற்றநம் மோடு சிறிது பிணங்கிக் கொள்வாரே. ௩.

காழடி மேலெழிற் றண்டை வீரக் கழல்க ளோலிடமா
மாழைகொள் கேகய மீது சாரி வருங்கு மாரகுரு
வூழிக லோயவுள் ளுள்ளி யீயு முவப்பிற் சிறிதுகொளிற்
பேழறி வற்றநம் மோடு சிறிது பிணங்கிக் கொள்வாரே. ௪.

ஆறிளஞ் சந்திரன் கொக்கி னிறைகொ ளலங்கா ரத்தலேயோ
டேறு நடத்திடுஞ் சம்பு மைந்த ரிருஞ்சே வற்கொடியா
ரீறறு பேரரு ளானல் கமுத வின்பிற் சிறிதுகொளிற்
பேறடை யாதநம் மோடு சிறிது பிணங்கிக் கொள்வாரே. ரு.

செத்தவர் சேரிடஞ் சென்றி டாது சிவாநந் தம்பெறுவோர்க்
கத்த னருட்டிரு மேனி கொண்டரு ளாறு மாமுகவேள்
சித்த மகிழ்ந்தளிக் கின்ற தெய்வத் திருவிற் சிறிதுகொளிற்
பெத்த முடையநம் மோடு சிறிது பிணங்கிக் கொள்வாரே. சு.

சீதரன் பங்கய னீரைஞ் ஞூறு திட்டி யன்சசிவீ
சாதவன் மண்மகன் மந்தன் பொன்னு மகிக ளரிபுகருங்
காதலி னேத்திடு கந்த வேள்செய் களிப்பிற் சிறிதுகொளிற்
பேத மறுதநம் மோடு சிறிது பிணங்கிக் கொள்வாரே. எ.

விரிதிரை வாரிதி சூழ்கி டக்கு நிலத்தில் வேதநெறி
திரிபு படாவகை செய்த யோகர் தினமுந் தொழுதணைந்த
பரிவுடைச் சண்முக நாதர் நல்கு பவுள்சிற் சிறிதுகொளிற்
பெருமை பெறுதநம் மோடு சிறிது பிணங்கிக் கொள்வாரே. அ.

சாதி குணம்பெயர் குட்டை நெட்டை சனிப்பு நாப்பணந்த
மாதி யவத்தையி லாம லுள்ள வகண்ட குமாரேசர்
போத மகிழ்ந்தளிக் கின்ற தெய்வப் பொறியிற் சிறிதுகொளிற்
பீதி விடாதநம் மோடு சிறிது பிணங்கிக் கொள்வாரே. கூ.

மறந்தரிப் புற்றுளிர் தேடி நாடி மருவி யிப்புவியி
லிறந்துதிக் கின்றதை நீத்தி ருமினென் றேசில் புகழ்பாடிச்
சிறந்தவன் றம்பிரா ஞன கந்தர் திருவிற் சிறிதுகொளிற்
பிறந்தலுத் திட்டநம் மோடு சிறிது பிணங்கிக் கொள்வாரே. ௧0.

ஆவணிமீ ௨௪ஃ ஆதித்தவாரம்.

# மிகைவெல் வயவை.

பண் - யாழ்மூரி.

மாமலைச் செல்வியையொர் புறம் வைத்துயர் வெண்டிகழ்
வளை புறை யிறை யவ ரருளி னுய்யுநறுங்
கோமிளிர் வானவர்கள் பழிச் சிப்பணிந் தாம்வரங்
கொள வுள கட வுள ரெனவி ளங்கியொண்மை
நாமகள் காமுறுமே ழிசைப் பூதக ணம்பல
சரி கம பத நியென் றுரிய வணம்பாட
வேமவு ளங்கனிந்து நடஞ் செய்குகன் மெய்யடி
தொழு தெழு மறி வுளர் மிகையை வெல்லுவரே. க.

மைச்சல ராசிவளை நில மேவுப சுக்களை
மறு புதை புக வயர் பிரம னார்சிரசிற்
கைச்சுமங் கொண்டுசுட்டித் திருக் காலுதை யுந்தருங்
கரு ணையை யுள விறை பிறக யன்புரியுந்
துச்சமி லாததவந் தனைக் கண்டவன் செய்யொரு
தொழி வினை நனி யுத வியபி ரானெனவே
மெச்சிநி தங்குறைவி லருள் வேட்டவன் மெய்யடி
தொழு தெழு மறி வுளர் மிகையை வெல்லுவரே. உ.

எரிதனி லேட்டையிட்டன் றெரி யாமலு மேடற
லெதிர் செல வுமை மறை விபின மாக்கதவ
மிரிபற மூடிடவும வள ராண்பனை பெண்பனை
யென வமை யவும் விட மறவு மொருபுத்தன்
பெரியவு டம்பிறவும் பழ வத்திபெண் ணாகவும்
பணி னவர் பர சிறை பிரிய மோடுதந்த
விரிசுட ரானவடி வுடை வேலவன் மெய்யடி
தொழு தெழு மறி வுளர் மிகையை வெல்லுவரே. ௩.

அக்கினி வத்திரத்தான் கையின் மாண்டசகோதர
ரெழு வர்க டரு கென வடல்கொ ளம்பொன்றி
லக்கண மேவரைந்து நம னுக்குவி டுத்தபின்
பவ ரொடு மற லியு மருகில் வந்துபிர
தக்கண மாப்பரவு முயர் வுற்றவொர் வீரனின்
றலை வனோர் நிக ரறு சரவ ணப்பெருமாண்
மிக்கெழின் மேவியவிர் திருப் பங்கய மெய்யடி
தொழு தெழு மறி வுளர் மிகையை வெல்லுவரே. ௪.

ஊனுமை கன்மமுடை யுயிர்க் கூளியைக்கொள்ளைகொள்
வலி மலி மற லழி வுறவு தைத்தகழல்
வானவன் வேண்மகிமை தனைக் கோடிநா ருண்டளவ
றை தரி னுமு டிவு பெறுவ தின்றெனவோ
ரேனமி லம்பினைகமுன் சொன வேற்றம தற்குடை
யவ னெவ னவன் மயி லிவரு மீசனவன்
மீனுறழ் பொற்சதங்கை மிக வேங்கிடு மெய்யடி
தொழு தெழு மறி வுளர் மிகையை வெல்லுவரே.௫.

எண்டிசை யும்பெருமை நனி கொண்டவொர் தக்கனீ
ளெரி மக மதில் வசு விரவி யிந்துபருங்
குண்டைய ரன்றேழன் புனல் வேந்தனு யிர்ப்புகி
ருதி சுத மக ளில குசனி மூலையிறை
சண்டன ரிந்தமனெண் கண ஞதிபல் பண்ணவர்
தர மற வடன் மற லதுவி லைத்தமகா
மிண்டனு நானெனவே மிளிர் வேலவன் மெய்யடி
தொழு தெழு மறி வுளர் மிகையை வெல்லுவரே.௬.

எண்ணறு சிட்டிபுரி விதி தன்னையுந் தண்டுழா
யிறை யையு நுதல் விழி யெரியி னுலெரித்தவ்

வெண்பலி யைப்பூசி மூழு வென்பொடு வெண்டலை
　மிலைந் தலைந் தெழுந் துழன் றிறுதிந டம்புரியுங்
கண்ணொரு மூன் றுடைய கறைக் கண்டனு நாவென
　மிளிர் சர வண பவன் கனை மில்புகழை
விண்ணவ ருய்வியக்குத் துதித் தன்னவன் மெய்யடி
　தொழூ தெழூ மறி வுளர் மிகையை வெல்லுவரே.௭.

சிறதி சிற்றமுடைக் கிர வுஞ்சனென் போனெடுந்
　திரி புர மென வெழு வவையு ளானைமுகன்
கூறரு மூன்றசுர ரெனத் தோன்றிய போதொரு
　குறு நகை கொடு பொடி படவெ ரிந்தவர்கண்
மாறுப டுந்தொழிலாற் செயு மாயமெ லாங்கெடும்
　வகை பணி யுயி ரையு நொடியி லுண்டருகா
வேறுப டாமலருள் புரி யென்றவன் மெய்யடி
　தொழூ தெழூ மறி வுளர் மிகையை வெல்லுவரே.௮.

மட்டில டங்காத வண்ட பிண்டச ராசர
　வகை முழு வது மவ னுருவி ருந்தநிசந்
தட்டவி லோசனத்திற் சத யூபனுக் கன்றருள்
　புரிந் தவன் பெரும் பயந் தணிய ஞாங்கரெறிந்
திட்டகு கேசனெனுஞ் சிவ னண்ணலை யெண்ணிநின்
　றர ஹர சிவ சிவ வெனவி ளம்பியவன்
விட்டக லாதவண மவன் றுய்யநன் மெய்யடி
　தொழூ தெழூ மறி வுளர் மிகையை வெல்லுவரே.௯.

தேங்கிள ரண்டநிரை களைத் தன்பெருங் கர்ப்பமுட்
　சிறு சிறு துக ளென நிறுவி யங்ஙனமே
தாங்கியு மப்பொருளி லுயிர் போலவி ராவியே
　தகு குணங் குணி யெனச் சமைய வேவிரித்து

மோங்கிடு மக்குணமொன் றிலி யென்னவு முள்ளதே
வொரு குக னென வரு ணகிரி யுன்னிமகா
விங்கல வணைந்தபடி யவன் றய்யநன் மெய்யடி
தொழுதெழு மறிவுளர் பிகையை வெல்லுவரே. ௧0.

ஆவணிமீ ௨௪௳ புதவாரம்.

---

## மெய்ப்போதகம்.

ணகரவெதுகைக்கலிவிருத்தம்.

திருவிராகம். பண் - வியாழக்குறிஞ்சி.

ஆனையி னதளரி யதள்வரி யதளொளும்
பேன வெயிறுகம டமயிலை யினயனம்
மானணி பசுபதி மகன்மயில் வருபெரு
மானடி களைநினை மலைவிலை மனனே. ௧.

வானவ ரதநிலை யரசல மறுடரு
மீன வுயிருமவ னிணையடி யுறவரு
டானரு ளுயர்சர வணபவ னெனுமொரு
கோனடி களைநினை குறைவிலை மனனே. ௨.

ஊனமி லறிவுள ருளநடு வழிபடு
மீனுறழ் ஞெகிழிகண் மிலைமல ரிணையடி
யானெழில் வயவரி யடிமுனி பணிகுக
ஞனட வடிநினை யுலைவிலை மனனே. ௩.

வானவர் தொழுதிடு மகிமையை யுளபெரு
மானிவ னெனநனி மருவமு னெணியவொர்
கானவர் மகளது களிநுகர் வுறவெதிர்
போனவ னடிநினை புகரிலை மனனே. ௪.

மானமி லரனடி மலர்களை யெணிவெளி
யானவ ரஞுருழி யபயமி டுசமய
மேனென வருமரு ளெழின்மழ மயிலிவர்
கோனடி நினையொரு குறையிலை மனனே. ௫.

ஊனுக ருணர்வில ருறவற வொழியுயர்
தேனுக ருணர்வுளர் திருமலி யுளமெனும்
வானுழி யவிரருண் மணியெனு மயிலிறை
யானைக யடிநினை யலலிலை மனனே. ௬.

கூனில வனுதன் மடவரல் குலமணி
யேனமி லிறையவ ரிடமுறை யுமையவள்
சூனு வெனுமமுத சுகமுத வொருகுரு
கானடி களைநினை கறையிலை மனனே. ௭.

ஆனுகொல் கனுடமோ ரளவற வுளவனு
ஞான நெடியவயி னனுகுகை யிறையடி
யேனுமு னபய மெனினஙன மடிமைகொள்
வானவ னடிநினை மமரிலை மனனே. ௮.

நானென தெனுமக நலிவுற வறுதின
மேனிலை கருதியுய் வியனறி வுடையருண்
ஞானிக ளகநடு நடமிடு மொருபக
வானவ னடிநினை வழுவிலை மனனே. ௯.

மோனர்கள் புகழருண் மொழியரு ணகிரியன்
வானவ ரினுமதி யமுத மதியையுற
வேனமி லருளரு ளினகுக னெனுமபி
தான னடிகணினை தளையிலை மனனே. ௧௦.

ஆவணி ௴ ௨௮௨ குருவாரம்.

---

# திருவாலவாய்.



## கருணைவிழைந்திரங்கல்.

பண் - கௌசிகம்.

பொன்னைப் பூமியைப் புன்புல வாக்கையை
மின்னை நாடி யுழன்றுள்ள வீணனேன்
றன்னை யாண்டவொர் தன்மையென் னாலவா
யன்னை யேயரு ளேகுகப் பிரமமே. க.

கட்டு மாடை கழற்றினை கந்தனை
மொட்டை யிட்டனை மோக மறுத்தனை
யெட்டி நீமறைந் திட்டதென் னாலவாய்ச்
செட்டி யேயருள் செய்குகப் பிரமமே. உ.

புண்ணி யந்தெரி யாவெறும் பொக்கனே
னெண்ண மோர்ந்தரு ளெந்தையிங் கேயுனை
நண்ணி னேன்சுக நல்கருட் காலவா
யண்ண லேயெனை யாள்குகப் பிரமமே. ௩.

ஆக மோடென தாவியு முன்றனக்
கேகொ டுத்துய்ய வெண்ணிய வென்னகத்
தேகு ளிர்ந்தரு ளீயெழி லாலவா
யேக னேயெனை யாள்குகப் பிரமமே. ௪.

எட்ட நில்லென நீயென்னை யேதள்ளச்
சிட்ட னனபின் ஞாயஞ் செலுங்கொலோ
நட்ட மின்றரு ணல்குதி யாலவா
யிட்ட னேயெனை யாள்குகப் பிரமமே. ௫.

பருதி முன்னிரு ணிற்குங்கொல் பக்கமா
மருளின் முன்மல நிற்குங்கொ லவ்வருட்
பொருளைத் தந்தொரு பூர்த்திசெய் யாலவாய்ப்
பெருமை யேயெனை யாள்குகப் பிரமமே. ௬.

நித்த லுங்கழு னெஞ்சக மாக்கியா
லெத்த லத்துமு னேணருள் காத்திடச்
சித்தம் வைத்தருள் சீருய் ராலவா
யத்த னேயெனை யாள்குகப் பிரமமே. ௭.

பாச மும்பசு வுந்திறம் பாவொளி
வீசு நின்னரு ளின்றி விளங்குமோ
வாசை யாயின ணேயதற் காலவா
யீச னேயெனை யாள்குகப் பிரமமே. ௮.

என்ன கப்புல மென்று மிருக்குநீ
யென்னை யின்னு மிரண்டறக் கோடலின்
றன்னி யஞ்செய னீதிகொ லாலவாய்
மன்னெ னத்திகழ் மாகுகப் பிரமமே. ௯.

குற்றம் யாவும் பொறுத்தருள் கூர்தியா
லற்ற மற்றலங் கார மதிர்க்துளோன்
முற்றும் வாழ்த்திய மூர்த்திநல் லாலவா
யுற்ற வொப்பி லருட்குகப் பிரமமே. ௧0.

புரட்டாதிமீ உ௨ மங்களவாரம்.

# திருக்கன்னிநாடு.

## உண்மைப்போதகம்.

கலிநிலைத்துறை.

பண் - இந்தளம்.

சீருளா ரேத்துஞ் சீருடை நஞ்சிவ பெருமான்
கூருலாம் வேற்கை யோடன வரதமுங் குறைவில்
பாரெலா மேத்துங் கன்னிநா டுறைதரு பாங்கை
யோரெலா வார்ப்பு மொருங்கியுய் வாயென துளமே. க.

வாக்குவன் மனதான் மதிக்கரு நஞ்சிவ பெருமா
னேக்கொரு பனிரண் டிலகொரு நூனமி லுருவாய்ப்
பாக்குகு பொழிலார் கன்னிநா டுறைதரு பாங்கை
யூக்கமொ டுணரின் வாழ்குவை நாளுமெ னுளமே. உ.

ஞானிகள் விழையொண் பொருளெனு நஞ்சிவ பெருமான்
மேனிலை விழைவோர்க் கருளவெ ணுமயின் மீது
பானிற வனம்வாழ் கன்னிநா டுறைதரு பாங்கை
நீநினை வாயே னிதநனி யுய்குவை நெஞ்சே. ௩.

நந்தலின் மறைகள் பழிச்சிடு நஞ்சிவ பெருமான்
செந்திரு முகமா றவிரரு ளுருவொடு தீமைப்
பந்தனைப் புரப்பான் கன்னிநா டுறைதரு பாங்கைச்
சிந்தைசெய் வாயேன் மனமினி துய்வது திடமே. ௪.

மாதவ னளித்த மதிப்பொரு ணஞ்சிவ பெருமா
னேதமி லடியார்க் கருளவெ ணுமுரு கேனமா
பாதகந் தீர்த்த கன்னிநா டுறைதரு பாங்கை
நீதெரி வாயேன் மருடபுத் துய்குவை நெஞ்சே. ௫.

எக்குணங் குறியு மிலாமுத னஞ்சிவ பெருமான்
பக்குவர்க் கருளும் பரிவொடு மேதவிய ருபய
பக்கமும் விளங்கக் கன்னிநா டுறைதரு பாங்கைச்
சிக்குடை நெஞ்சே கருதிடிற் சார்வது சிவமே. ௬.

பூவினில் வெறிபோற் பொருந்திய நஞ்சிவ பெருமான்
கோவிலி னிலமேவார் வடிவொடு குகப்பெயர் பூண்டு
பாவிகள் பழிதீர் கன்னிநா டுறைதரு பாங்கைத்
தாவிலா நெஞ்சே கருதிடி னிலைநமன் றமரே. ௭.

எங்கணு நிறைவா யிருந்துள நஞ்சிவ பெருமான்
சங்கரன் மகவாய்ச் சரவண பவப்பெயர் சார்ந்து
பங்கமி னதிபாய் கன்னிநா டுறைதரு பாங்கை
யிங்குழ னெஞ்சே நினைவுறின் மறலுனக் கிலையே. ௮.

அழிவுதிப் பணவா வறிவெனு நஞ்சிவ பெருமா
னிழிமனச் சீவர்க் கருள்வண மயின்மிசை யிந்த்ரன்
பழிதனை நூறுங் கன்னிநா டுறைதரு பாங்கை
யெழிலொடு நெஞ்சே நினைவுறின் வருபிறப் பிறுமே. ௯.

தத்துவா தீதத் தனிப்பொரு ணஞ்சிவ பெருமான்
வித்தைசால் புகழ்பா டியமுனி பாத்தொடை விரும்பிப்
பத்தர்பா டடவே கன்னிநா டுறைதரு பாங்கைச்
சித்தமே நீயுள் கிடிலடை வதுவிழுச் சிவமே. ௧0.

புரட்டாதிமீ ௭உ ஆதித்தவாரம்.

ஆ திருப்பாடல் - ௫0௧.

---

# திருக்கொடுமளூர்.

## புரிவுப்புகழ்ச்சி.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பண் - சாதாரி.

சிந்துசுல விந்தநிலை தன்னிலும தன்புடையர்
சேவடி புகழ்ந்துதொழவோ
நுந்திரு விரும்புபரி பக்குவர்கண் மும்மலமு
நூறியருள் செய்யவெனவோ
வந்தமடி யற்றபர மங்கள வகண்டசிவ
மாகவுள நீர்கழனிசூழ்
சுந்தர மலிந்துயர் திருக்கொடும ளூர்நனி
துலங்குகிறி ரெம்மிறைவரே. ௧.

சந்திய மதர்ப்பதர் நடத்துகிரி யைக்குரிய
சத்தியென நூல்கணுவலும்
புத்தமுத வாய்மையுடை வள்ளிதொழி லெண்ணிநினை
புந்தியர்க ளுக்கருளநீ
ரித்தரைய ரென்கொழுந ரென்றறிய நின்றிடு
மெனச்சொலுமை கொண்டபடியோ
சுத்தமுறு பத்தருய் திருக்கொடும ளூர்நனி
துலங்குகிறி ரெம்மிறைவரே. ௨.

வானவரு நாடரிய ஞானமய மானபெரு
வானென விருக்குமொருநீ
ரேனலி ருந்தமட மானினி நலங்கருதி
யேசறு புளிந்தவடிவ

மானவ னறும்புரிவி ஞனினைவர் நோய்களை
யறுப்பவ னிமாசலசுதை
சூனுவென வோதவொ திருக்கொடும ளூர்நனி
துலங்குகிறி ரெம்மிறைவரே. ௩.

பூர்த்திபுக ழுங்கருணை யங்கட லெனத்தவர்
புகன்றிட விருக்குமொருநீர்
பார்த்திப னருந்தவ நிரம்பிட வுரப்புடைய
பன்றிதொடர் வுற்றபெரிய
மூர்த்திமக ளுமிவர் நினைப்பவர்கள் வாழ்வரென
மூவுலகு நன்கறியவோ
தூர்த்தர்க ளிலாவொரு திருக்கொடும ளூர்நனி
துலங்குகிறி ரெம்மிறைவரே. ௪.

வானிலவு பானுவென வேயுயிர்க ளுள்ளிட
மதிக்குமுத லாகுமுணர்வா
யேலவு கின்றவொரு நீர்தமிய னுக்குநிக
ரேழைகள் புரக்கவெனவோ
மீனிலவு கண்ணிமலை மாமக டனக்கினிய
மெய்க்குழவி யாகிவிளைவுச்
சூனிய மிலாதுயர் திருக்கொடும ளூர்நனி
துலங்குகிறி ரெம்மிறைவரே. ௫.

இப்புடவி யிப்பிறவி வேண்டுகில மென்றுமுள
வீடவுனை யேயடைகுவோ
மெப்படியு மென்றுபணி யுத்தம ரகத்திடை
யெழுந்துலக கானமுலவு
மொப்பற மகந்தைமுத லாமறவர் வெல்லவென
வோதனிமை வாளுழவர்போற்

றுப்புடைய கார்மலி திருக்கொடுமை ளூர்நனி
துலங்குகிறி ரெம்மிறைவரே. ௬.

மாலயனும் வந்தனைசெ யற்புத விலாசபர
மாகவொளிர் கின்றவொருநீர்
மூலமல வாவிகளி னீலமல வாதனை
முருக்கிநினை வுந்திருடுமோர்
சாலமுல கோரவென வோநிமல மானசிவ
சண்முக மறைத்துநெடிய
தூலவுடை நீழலொர் திருக்கொடுமை ளூர்நனி
துலங்குகிறி ரெம்மிறைவரே. ௭.

விற்றிற மியங்கிரவி யுஞ்சசியு மங்கியும்
விளக்குமறி வித்திடவொணு
முற்றறி வெனுமறை முழக்கவுள நீருயிர்கண்
மொய்வினை முருக்கியருள்வா
னுற்றவுரு வம்பல வுளும்மிதுவு மொன்றென
வுணர்த்தவென வோநிலவளந்
துற்றுமெழின் மிக்குறு திருக்கொடுமை ளூர்நனி
துலங்குகிறி ரெம்மிறைவரே. ௮.

ஓருருவு மீருருவு மூவுருவும் வேறுருவு
மோய்வில்பல தேவருருவும்
பாருருவு நீருருவு மாரல்வளி வானுமறை
பன்னிட விருக்குமெவையும்
பேருருவில் வைத்துளவொர் நீருல குபிர்த்திரள்
பிடிக்கவென வோவுடைமரத்
தூரடியி லேலுயர் திருக்கொடுமை ளூர்நனி
துலங்குகிறி ரெம்மிறைவரே. ௯.

சொன்னய மிருந்தகலை வேண்டுகில மேகலைகொள்
சுந்தரிக ளாசையுலகம்
பொன்னழி புலைப்புணர்வு வேண்டுகில மெய்யடி
பொருந்தவரு ளென்பவர்களி
னன்னினை வறிந்தருள வோபுனித சோணகிரி
நாதர்குரு வாயவொருநீர்
தொன்னில வளங்கிளர் திருக்கொடும ளூர்நனி
துலங்குகிறி ரெம்மிறைவரே. ௧0.

புரட்டாதிமீ ௧௬உ மங்களவாரம்.

---

# போற்றி.

## சிவஞானப்பிரகாசம்.

### திருத்தாண்டகம்.

அவனிதனி லன்னைகர்ப்ப மமைந்த வன்றே
யருநலமுந் தீமையுமுண் டென்று மான்மா
நவயாகச் செயப்பட்ட தாலே முன்போர்
ஞான்றுமது விருந்ததிலை யென்றுஞ் சீவன்
புவியின்மிசை மரித்தபினு மிருக்கு மென்றும்
பூருவமு மியைபுமின்றிப் புலம்பு மார்க்க
மவமெனவே யென்னறிவி லுணர்த்தி யந்த
வறிவாக நிற்குமரு ளரசே போற்றி. ௧.

அதிர்த்தபடி நலந்தீதோ டமைந்த வான்மா
வயர்பாவ வினைக்குநர கெய்து மென்றும்
விதித்தவநி யாயவழி தனிலே செல்லும்
வியனுணர்வி லார்பின்னுந் தாதை யன்னை

மதத்துவலி கொடுசெய்த வினைக்கே பிள்ளை
மடமாக வந்ததென்று வழுத்தும் வார்த்தை
*முதற்சிருட்டி யோடுலகை முடிக்கு மென்றே
முழுஞாய மெற்குணர்த்து முதலே போற்றி. உ.

தாதையன்னை யிழைத்திட்ட தீமைக் காகச்
சந்ததிதான் கெட்டதெனிற் றுதை தாய்க்கு
மோதலிலச் சந்ததிக்கு முடம்பு நெஞ்ச
மொன்றாக விருக்கினவர் சுகதுக் கங்கள்
பேதமின்றித் தோன்றிடும்வே றெனின்ஞெ விந்தப்
பேச்சிறையு மொவ்வாதென் றெனதுள் ளாகப்
போதமதி லுணர்த்தியநல் லருளே நீதிப்
பூரணமே யாநந்தப் பொருளே போற்றி. ௩.

மக்களையே யன்னைதந்தை வஞ்சித் தாலு
மகத்தான வவரையவர் வஞ்சித் தாலுந்
தக்கபடி யவையருமே தண்டிப் பார்க
டகையுடைய புத்தேளு மதுபோற் செய்யு
மக்கமுள ரறநூலு மிதுபோ லோது
மாக்கைநடு வுள்ளவுயி ரறிநீர் மைத்தாற்
பொக்கமுறு சடமன்று சித்தே யென்றென்
புந்தியினன் னூலுணர்வைத் தந்தோய் போற்றி. ௪.

---

* ஆதிகாலத்தில் மநுவாய்ப்பிறந்த தாய்தந்தை செய்த தவற்றிற்குப் பிள்ளை கெட்டதாகப் பிறந்ததென்னின், அது அவர்கட்கு அபராதப்பொருளே யாகவேண்டும். ஆயின், அவரளவில் அஃதிருந்து தொலைந்துபோக வேண்டுமேயன்றி அது செய்யு நன்றுதீதுக்கேற்ப, பின்பு அதற்கும் பிள்ளை பிறந்ததெனப் பேச இடமில்லையென்றும். அதனால் முதற்சிருஷ்டியிலுண்டான தாய் தந்தையரோடே உலக முடியவேண்டியதாய் அவ்வசன முடிக்கும் அது பொருந்தாதென்பது இங்கே பொருள்.

நித்தியமா யுளவான்மா வைச்ச டம்போ
 னிருமித்த தாய்நிகழ்த்து மநீத மார்க்கஞ்
செத்தவனா யுலகமுடி வினில்வி சாரஞ்
 செய்வதாய்ப் பிதற்றுவது பிசகே யென்ன
வித்தனையி லிஞ்ஞான்று செய்த தீங்கிற்
 கிசையநடு வரசர்புரி தண்டத் தோடு
கத்தனுயர் தண்டமெனும் பிணியுள் வாதை
 காண்பதுமுண் டெனவுணர்த்துங் கருத்தே போற்றி.

என்றுமுள்ள கடவுளுடை நீதி யென்று
 மியங்குவதல் லாதிடையி லிறுவ தில்லை
தொன்றுவினைப் பிராரத்த மநுப விக்கத்
 தோன்றுகன்ம வுயிர்புதிது மிழைத்துத் தூலம்
பொன்றியதன் பின்கடவு ணீதிக் குள்ளாய்ப்
 புதிதிலெஞ்சி யுளகரும மநுப வித்துப்
பின்றாலஞ் சஞ்சிதத்தா லெடுக்கு மென்றே
 பேசுநிச நூலுணர்வெற் களித்தோய் போற்றி. ௬.

சொற்றவுனா தனைநம்பிச் சாவீ ரேனீர்
 சுவர்க்கநிலை யடைகுவீ ரென்னு மார்க்க
முற்றவரு மதிசயிக்க வருளிற் கூடி
 யுள்ளுக்குண் மறைந்திருக்கு முயிரைக் கண்டு
செற்றமிலா வாதார விறையைக் கண்டு
 செனிப்புடனே யிறப்பறுத்துத் திகழு மார்க்கங்
குற்றமிலா நெறியெனவெற் குணர்த்து ஞானக்
 குருந்தேயென் னுயிர்க்குயிராங் குகனேபோற்றி, ௭.

மோக்கமெனல் வெறுஞ்சூன்ய மதனை வேண்டி
 முயலுவதி லென்பயனிவ் வுடம்போ டென்றும்

போக்கியத்திற் காம்புவனந் தனிலே யுய்தல்
புணர்தணந்த வின்பமெனப் புகல்வோர் போக்குத்
தேக்கெறியுங் கலவியின்ப மறியாக் கன்னி
தீழ்ப்பாக வதைப்பேசு தரம்போ லாமென்
றூக்கமலி யறிவாள ருணக்கு ஞாய
மதையெனக்கு முணர்த்தியவென் னரனே போற்றி.

கருவிசில வடங்கியநித் திரையின் கண்ணே
காணுமொரு சுகம்போலக் கரணு தீத
மருவுசிவ யோகதிலுங் கிரிசை யோக
மல்குமொரு சுகம்போலச் சிவ போத
மருவினுயர் சிவபோதத் தடங்கி நிற்கு
மைக்கியத்து மெனவெணலா மவைக ளற்பம்
பொருவில்சிவ யோகவின்பு மோக்க வின்பும்
புகலரிதா மென்றுணர விதித்தோய் போற்றி. ௯.

எரிந்தபுரி யைப்போல வுடம்பி ருந்து
மில்லாத வோங்காரச் சிவன் முத்தன்
பரிந்தவநு பவமதுதா னறையி னுள்ளே
பயில்கூத்தை யொக்குமந்த வுடம்பு நீங்கி
யரந்தையடு சிவத்தையடை விதேக முத்த
னநுபவமம் பலக்கூத்தை யொக்கு மென்றுள்
ளிருந்தறிவித் திட்டவரு ளறிவே சந்த
மியம்பியநல் லருணகிரி யிறையே போற்றி. ௧௦.

புரட்டாதிமீ உ௲௨ புதவாரம்.

---

# பிரப்பன்வலசை.

——:o:——

## நன்னிலைவிளக்கம்.

### பண் - சாதாரி.

பூமக ளியங்குலகி னல்லதமிழ் நாவலர் புலம்பு கவிதைத்
தாமமணி நங்கடவு ளென்னுமுரு கையரடி தன்னை யெணியே
நாமுன மிருந்தவள மேகிளர் நயப்புள பிரப்பன் வலசை
யாமிதனை நண்ணுபவ ரன்புடைய ராவர்பழி யஞ்சு மனதே. ௧.

தொண்டரக நின்றுநிமிர் கின்றவரு ளின்பவுள்சு சொந்தமுறவென்
றண்டரலர் கொண்டுபுசி தம்புரியு மாதிமுரு கைய ரருளுங்
கொண்டுசில வைகல்வதி தந்தவிட மென்றுயர்வு கூறு மடர்பூ
வண்டறை பிரப்பன்வல சைப்பதி யிதாகுமெனுண் மல்கு மனதே.

மெய்யடிக ணெஞ்சக மிருந்துவிளை யாடியருண் மெய்ய ரெனுநம்
மையடிக ளாமுருக வேளடி நினைந்துதனி யாகி யளிநீர்
பெய்யிருகண்மூடியுளிருந்துணர்வுகொண்டவொர்பிரப்பன்வலசைச்
செய்யபதி யீதறிதி மெய்யறிவை நாடிடு திறத்த மனதே. ௩.

சீதமதி யைச்சடையில் வைத்துமலர் வாளியுட றீய விழிசெய்
யாதியிறை யாயகுரு சாமியெனு நம்பரனை யன்று கருதி
யோதுமொழி விட்டகமொடுங்குநிலை கண்டவிட மென்று குயிலுங்
கோதறு பிரப்பன்வல சைப்பதி யிதாமுறுதி கொண்ட மனதே. ௪.

தஞ்சமென நிற்பவர்க ளஞ்சன்மி னெனச்சொலுமை தந்த ருள்புரி
நஞ்சிவ பிரானெனு மயூரமுரு கையரடி நண்ணி யுழலு
நெஞ்சினை யொடுக்கியிர வும்பகலு நின்றவன முள்ள வளமே
விஞ்சிய பிரப்பன்வல சைப்பதி யிதாமடமை விட்ட மனதே. ௫.

அங்குலிக மம்பவள மென்பன வணங்கதர மூங்க ருமைசால்
கங்குலினும் விஞ்சுகுழ லுந்திகழ்தெய் வானைபொரு கான வர்சுதை
தங்களொரு கொண்கனெனு நங்கடவு ளன்னிலைவு தந்த தகைமை
யிங்கென விளம்பிடு பிரப்பன்வல சைக்கணரி யீதென் மனதே. சு.

உள்ளபடி யுன்னுபவ ருள்ளபடி யுய்யவென வுன்னு பெரிய
வள்ளன்முரு கையர்நடு நிற்குநிலை யைச்சொலி மறைந்த விடமும்
வெள்ளைகிளர் புட்டியி லெழுப்புகடல் வெள்ளலைகள் வீசு வளமு
முள்ளவொர் பிரப்பன்வல சைப்பதி யிதேயுலகை யுந்து மனதே.எ.

மித்தைபடு வாழ்வினை விடுத்துநிச வாழ்வினில் விளங்க நமையே
சுத்தமுறு கோவண முடன்றிரிய விட்டவொர் சுரேச ரடிசேர்
பத்தருயர் பூசனை புரிந்துவதி பண்புறு பிரப்பன் வலசை
யித்தலம தாமறிதி வைத்தநிலை நிற்குமென தேசின் மனதே. அ.

துன்றுமறு பொன்மவுலி யெண்டிசையு மின்னவதி சுந்த ரமலி
பொன்றொடையல்கிம்புரிவயங்குமெழின்மொய்ம்புடையபூரண ரரு
ளொன்றைநனியுன்னியுளொடுங்குணர்வுகண்டவொர் பிரப்பன்வல
சென்றவ ரிருந்தவரு மன்புடைய ராவரறி தெய்வ மனதே. கூ. [சை

நாடரிய தெய்வமென வேமறைசொ லாறுமுக னஞ்சிவனெனப்
பாடல்பல பாடியவொர் சோணகிரி கண்டவிரு பத்ம வடியைக்
கூடவென நாமினிது கொண்டநடை கட்குதவி செய்த சுகிர்தர்
பீடணவி வாழிது பிரப்பன்வல சைப்பதி பிடித்த மனதே. கO.

புரட்டாதிமீ உசஉ புதவாரம்.

## பரமப்பிரகாசம்.



### அருளாட்கொண்டதுபற்றியெழுமகிழ்ச்சி.

பண்-பழம்பஞ்சுரம். பண்-கொல்லி.

கங்கை சூடிறை புதல்வ ரோகன
கந்த மாதன விசரோ
வங்க மாறுடை யைய ரோதுடிக்
கைய ரோவெறி சூலமே
செங்கை மீதணி தேவ ரோசிவை
செல்வ ரோசுர குஞ்சரி
பங்க ரோவர துங்க ரோநமை
யடிமை கொண்டவொர் பரமரே. க.

வேரி கொண்ட கடம்ப ரோகுற
மின்னி டஞ்செ லிடம்பரோ
வாரி புண்டவர் குரவ ரோபவ
னிறைவ ரோவறு மங்கைமார்
பீரை யுண்ட புநீத ரோவடி
பேணு மன்பர்க ளன்பரோ
பார ருந்தவ ரைய ரோநமை
யடிமை கொண்டவொர் பரமரே. உ.

பால மீதெரிளிர் கண்ண ரோவுயர்
பன்னி ரண்டுகை மன்னரோ
கோல நீறணி சீல ரோதுடி
கொட்டி யாடிடு கூத்தரோ
நால ரோவடி வேல ரோசுரர்
நேரவ றுத்தவ ரோசிலம்

பால வேதிரி யடிய ரோநமை
யடிமை கொண்டவொர் பரமரே. ௩.

பூவ ருங்கிய மெய்ய ரோமணி
பூண்ட கிம்புரி மொய்ம்பரோ
சேவ ருங்கிய கொடிய ரோவரு
மூடிய ரோவுயர் செல்வராந்
தேவர் தாங்கிய வடிய ரோவதி
தேசி லங்கிடு வெண்மலைக்
கோவி ருங்கிய குமர ரோநமை
யடிமை கொண்டவொர் பரமரே. ௪.

பூநி ரம்பிய வழக ரோபடர்
போத னொர்தொழு குழகரோ
மாநி ரம்பிய கருட கேதனன்
மருக ரோநித முருகரோ
தூநி ரம்பிய பழநி வெற்புறை
சுமுக ரோவெழி லார்தமிழ்ப்
பாநி ரம்பிய புலவ ரோநமை
யடிமை கொண்டவொர் பரமரே. ரு.

அண்டர் தம்பகை நாச ரோவரு
ணேச ரோமக ரப்பெயர்க்
குண்ட லஞ்செறி காத ரோக்க
வென்று சொல்பவர் நாதரோ
விண்ட லம்புகழ் சேய ரோமுது
வேத மந்திர வாயரோ
பண்ட ருஞ்சிகி யிறைவ ரோநமை
யடிமை கொண்டவொர் பரமரே. சா.

உலகெ லாந்தரு நாத ரோதிக
    முலகெ லாம்பணி பாதரோ
வுலகெ லாந்தொழு மாத ரோநிலை
    யுலகெ லாஞ்சொலும் வேதரோ
வுலகெ லாம்பட ரார்வ ரோசெறி
    யுலகெ லாங்கமழ் மார்பரோ
வுலகெ லாங்கவ ரூழ ரோநமை
    யடிமை கொண்டவொர் பரமரே. ௭.

யோகஞ் செய்குந ரப்ப ரோநிறை
    யோகி லேவரு துப்பரோ
சோகம் பாவனை மூல ரோவளர்
    சோகம் பாவனை யாலுறும்
போகஞ் சேர்கெனு நீத ரோபரி
    பூர ணச்சிவ போதரோ
பாகங் கூர்பவர் தலைவ ரோநமை
    யடிமை கொண்டவொர் பரமரே. ௮.

பிறப்பி லாதவொர் பெரிய ரோபெரி
    யார்ப ழிச்சிட வுரியரோ
விறப்பி லாதவொ ரிறைவ ரோவது
    விதுவெ னச்சொல விசையுமோர்
குறிப்பி லாதவொர் நிலைய ரோவறு
    குணப ராபர வருளரோ
பறப்பி லாதவொர் முதுவ ரோநமை
    யடிமை கொண்டவொர் பரமரே. ௯.

ஏசி லாத சுரேச ரோசக
    தீச ரோபர மேசரோ

காசி லாவரு ளாள ரோவுழல்
கான டாத்தொரு தேரரோ
வாசி லாவரு ளுச லப்பெய
ரானி னேந்த குகேசரோ
பாச மாமல நாச ரோநமை
யடிமை கொண்டவெர் பரமரே. க0.

புரட்டாதிமீ உஅவ ஆதித்தவாரம்.

## வாதனை நீக்கமன்றாட்டு.

பண் - தக்கராகம்.

பூவா ரேர்முடி மலரய னரிமால்
புதுமா மலர்கொண் டருச்சித்தே
தேவா காவென விறைஞ்சிரு சரணு
சிவனே செவ்வேட் பெயர்நாதா
தாவா நோவெனுங் கலிதனி லமிழ்ந்தோன்
றலைவா காவென் றெலித்தாலே
வாவா வென்றெடுத் தணைத்தருள் புரியா
மனனே நீவந் தருளாயே. க.

பேழ்வாய்ப் பூதர்கள் பலபல பறைகள்
பிசகா மேகொட் டிடநடமே
காழ்வீ ரார்கழ லொலிதர வுழல்வோர்
கமழ்தோ ளேறு மலர்ப்பாதா
தாழ்வா நோவெனுங் கலிதனி லமிழ்ந்தோன்
றலைவா காவென் றெலித்தாலே

வாழ்வோய் வாவென வெடுத்தருள் புரியா
 மனனே நீவந் தருளாயே. ௨.

தூயோர் சொல்லினு நினைவினு முளலோர்
 சுசிமா ஞானச் சுடர்மணியே
காயா புள்ளதைக் கனிந்திட விழைப்போய்
 கருதா தார்க்கு மருள்குகனே
தாயாழ் பிணூறு கலிதனி லமிழ்ந்தோன்
 றலைவா காவென் றொலித்தாலே
மாயா மேயெடுத் தணைத்தருள் புரியா
 மனனே நீவந் தருளாயே. ௩.

பணியா ரஞ்செறி களச்சசி மகிழ்ச்சி
 படவே கூடும் புருகூதன்
றிணியார் கேகய மெனவரும் பொழுது
 திருவோ டேறு மொருவீரா
தணியா நோவெனுங் கலிதனி லமிழ்ந்தோன்
 றலைவா காவென் றொலித்தாலே
யணியோ டாதரித் தணைத்தருள் புரியா
 தவனே நீவந் தருளாயே. ௪.

பகவா னீயெனப் பனுவல்கள் பகர்மா
 பரமா விளம்பூ ரணவேளே
சுகவா னுயவி ரொருபர சிவனே
 துவர்சால் கோழிக் கொடியானே
சகவாழ் வாகிய கலிதனி லமிழ்ந்தோன்
 றலைவா காவென் றொலித்தாலே
யகனோ யோடிவந் தணைத்தருள் புரியா
 தவனே நீவந் தருளாயே. ௫.

அருளா முத்திரை தனைப்பரங் கிரிப்பா
லறுபேர்க் காயன் றருளியமாக்
குருவே சத்திய சரவணப் பொருளே
குகனே தேவர்க் கரியானே
சருமேய் பாடடைக் கலிதனி லமிழ்ந்தோன்
றலைவா காவென் றொலித்தாலே
யருகே யோடிவந் தணைத்தருள் புரியா
தவனோ நீவந் தருளாயே. ௬.

நீங்கா வன்பர்கள் சததமு நினைமா
நிமலா வேலா வருளாளா
வோங்கா ரப்பொரு ளெனமறை நவிலு
முதியா மரியா முருகோனே
தாங்கா நோவெனுங் கலிதனி லமிழ்ந்தோன்
றலைவா காவென் றொலித்தாலே
யாங்கோ டோடிவந் தணைத்தருள் புரியா
தவனோ நீவந் தருளாயே. ௭.

புலனோ ரைந்தையு மொடுக்குநுண் ணுணர்வோர்
புகழ்மா தேவா புலவாமா
வலனே யென்னிரு தயமலர்க் குகனே
மலைமா தேந்து மிளங்கோவே
சலமா நோவெனுங் கலிதனி லமிழ்ந்தோன்
றலைவா காவென் றொலித்தாலே
நிலமீ தாதரித் தணைத்தருள் புரியா
தவனோ நீவந் தருளாயே. ௮.

செப்பேர் மாதனக் கலைமக டுதிசெய்
திருவே தேஜோ மயமூர்த்தீ

யெப்போ தும்பெருந் தகையுடை யிளையோ
யெளியே னுடை யிறையோனே
தப்பா நோவெனுங் கலிதனி லமிழ்ந்தோன்
றலைவா காவென் றொலித்தாலே,
யப்பா வாவென வெடுத்தருள் புரியா
தவனோ நீவந் தருளாயே. கூ.

குமரா நீடொளி யருணையின் பெயரோன்
குருவே கோவே கூர்த்தவயி
லமலா பாதக மடுசிவ மணியே
யடியேன் பாவிற் குரியோனே
தமமா நோவெனுங் கலிதனி லமிழ்ந்தோன்
றலைவா காவென் றொலித்தாலே
யெமனீ வாவென வெடுத்தருள் புரியா
தவனோ நீவந் தருளாயே. க0.

புரட்டாதிமீ உகூஉ சோமவாரம்.

## துயரறுக்குமார்க்கவிளக்கம்.*

பண் - நட்டராகம்.

மணிம தாணி மார்பினர் மாசில் பரசுப் படையினர்
திணிம யூர வாகனர் சீத மேய நீபவீ
யணிவி சாகர் சேவடி யடைவ தேமெய் வீடெனுப்
பணிவி வேகர் தூவடி பரவச் சூர்கள் பாறுமே. க.

நாத கீதப் பிரியர்மெய்ஞ் ஞான யோகத் திருவினர்
பூத நாதர் பொருவிலாப் பூதி திமிரு மேனியர்

* இப்பதிகத்தை இங்கிலீஷ் நோட்டுப்போலவும் பாடலாம்.

வேத நீதர் வெய்ங்குழ லூது வாயர் வேலவர்
பாத நாடு வோரடி பரவச் சூர்கள் பாறுமே. ௨.

எண்ணு வார்க ணெஞ்சுணர்ந் தருளு மீடி லிருதய
வண்ண லேயென் றேத்துநர்க் கைய ராகு முருகவேள்
கண்ணி னூட்ட நிமிரவே கருதி ஞான யோகமே
பண்ணு வோர்கள் பதமலர் பரவச் சூர்கள் பாறுமே. ௩.

ஈச னேசு ரேசனே யெனுநர்க் கின்பு பொழியவே
மூசு கருணை மேகமா முதல னாதி முருகவே
டாச ராயிவ் வுலகிலே சார்பி லாது திரிதரு
பாச நாசர் பதமலர் பரவச் சூர்கள் பாறுமே. ௪.

சீல யோகர் செல்வமாஞ் செல்வம் யாவு நல்கருட்
கோல மேநன் மேனியாக் கொண்டு லாவு குமரவேள்
காலை நம்பி விடயவெங் கனலி யாற்றின் மேன்மயிர்ப்
பால ஞான நிற்குநர் பரவச் சூர்கள் பாறுமே. ௫.

தீங்கு றாத சேடுடைச் செந்தி னாத ரருள்கொடு
வீங்க லின்றி வீங்கிடும் விமல யோக நிலையிலே
யோங்கு சின்முத் திரையினு லொன்றி ரண்டெ னாதநற்
பாங்கி னோர்தம் பதமலர் பரவச் சூர்கள் பாறுமே. ௬.

அந்த மாதி நடுவிலா வமல ஞான மயசிவா
நந்த சரவ ணபவவே ணுமை மந்த்ர மோதியே
கந்த மாதி யைந்தையுங் கடியும் வன்மை யொடுநெடும்
பந்த நீத்து ளோர்பதம் பரவச் சூர்கள் பாறுமே. ௭.

சடில நாத ராஞ்சிவ சம்பு நன்கு நவின்றவா
நெடிய வேலி னிறைவனா நிமல னாநி னைந்துமா
கொடியநெஞ்சை யொருமுகங் கூட்டிநினைவுகூர்ந்துகோட்
படிற கன்று ளோர்பதம் பரவச் சூர்கள் பாறுமே. ௮.

சுகிர்த ஞான தேசிகா சூர நாச காமகா
சிகியி ராச வோஞ்சிவ சிவசி வசிவ சிவசிவோங்
குககு ககுக ஹரஹர குமர குருப ரவெனவே
பகரு மன்பர் பதமலர் பரவச் சூர்கள் பாறுமே. கூ.

தீஞ்சொ லருண கிரிசதா சிந்தை செய்ச டாநநா
வோஞ்ச ரவண பவநம வோஞ்சி வாய நமகுகா
வோஞ்ச ரவண குருபரா வோந மோந மவெனுமின்
பாஞ்சு சீலர் பதமலர் பரவச் சூர்கள் பாறுமே. க0.

ஐப்பசிமீ கஉ புதவாரம்.

---

## எண்ணலங்கார லகரி. *

—:o:—

பண் - இந்தளம்.

ஒன்று மவ ரோதிய தாதிமுக
மொன்று மவர் சூர னுடம்பெறிவே
லொன்று மவ ருன்னத ஞானகதி
யொன்று மவ ருண்மை வியாபகமே. க.

இரண்டா மவ ராடெழி லேறுகழ
லிரண்டா மவ ரேசறு தேவிவகை
யிரண்டா மவ ரேறிள மஞ்ஞைவிழி
யிரண்டா மவ ரேர்க்கொடி வியடியே. உ.

மூன்று மவர் சொல்லிய முத்ததமிழ்
மூன்று மவர் தம்முக மொன்றுவிழி
மூன்று மவர் முத்திகொ ளான்மவகை
மூன்று மவர் மொய்ம்புர மின்னூலே. ங.

---

* லகரீ=இடைவிடாதோடிக்கொண்டிருக்கும் பிரவாகம்.

நான்கா மவர் நல்கிய நாதமறை
நான்கா மவ ராகம நற்பிரிவு
நான்கா மவ ருரு நறுந்தகர்க்கா
ஞன்கா மவர் நட்பி னருள்*வரமே. ச.

ஐந்தா மவ ராற்று மருங்கரும
மைந்தா மவ ராணைசெய் பாசவகை
யைந்தா மவ ராறற வோர்க்குணர்த்த
லைந்தா மவ ரால்விரி பூதமரோ. ரு.

ஆறா மவ ராநந மென்றறைத
லாறா மவ ருண்ட முலைச்சியரெண்
ணாறா மவர் முக்கிய மானதல
மாறா மவர் மந்திர வக்கரமே. சு.

ஏழா மவ ரெண்ண மிழைத்தகட
லேழா மவர் சிட்டியி லேதோற்ற
மேழா மவ ரேர்க்கொடி யானவனு
வேழா மவ ரின்னிசை யின்சுரமே. எ.

எட்டா மவ ருழியப் பாலரின
மெட்டா மவர் குட்டு மிருஞ்சிரன்க
ணெட்டா மவ ரின்சிவ யோகாங்க
மெட்டா மவ ரீறி னெடுங்குணமே. அ.

ஒன்பா னவ ரைத்தொழு துய்வீர
ரொன்பா னவ ருத்திசொல் காதைரச
மொன்பா னவர் நூபுர முற்றமணி
யொன்பா னவ ராணை யுலாங்கோளே. கூ.

---

* வரம்=கனமின்மை, கண்டிப்பின்மை, கேடின்மை, விளக்கம்.

பத்தா மவ னாச்சிந்தை பண்ணுதிசை
பத்தா மவ ருக்கிதிற் பாடுகவி
பத்தா படி யாயென் றவர்சொனசம்
பத்தார் புகழ்ப் பாவலர் தேவவரே. ௧0.

ஐப்பசிமீ உ௨ குருவாரம்.

---

## அருளாநந்த லகரி.

பண் - பியந்தைக்காந்தாரம்.

சீரியர் பேணும் வேதஞ் சிறந்தசற் சைவப்
பெருமானென் றோது முறைகண்
டாரிய ரேத்தி யுன்ற னழிவற்ற திவ்ய
வடிதன்னை யெய்தி மகிழ்ந்தார்
பூரியர் கேண்மை யுற்றுப் புளையாய பொய்வாழ்
வதிலேச தாநா னுழன்றேன்
வேரியந் நீபத் தார்கொள் புயவெந்தாய் மேலுன்
வியனீரத் தாளுய் குவலே. ௧.

தடங்கணி யெங்க ளம்மை யெனுந்தேவ சேனை
தழுவுந் திருத்தோ ளுடையோய்
மடங்கலின் றோலை மேலே கவினப்பூண் போர்தம்
மகனெமெய் யின்ப மழவே
யடங்கிடா மோக முள்ள வடியேனை யும்மோர்
தொழும்பாக்க வந்த கிருபை
விடங்கமே யுன்னு ளுய்ந்தே னினமுநா னேத்துன்
வியனீரத் தாளுய் குவலே. ௨.

கற்பதுங் கேட்பதுஞ்சூ ழுனையன்றி யுண்டோ
கவினெறு வேடர் குலமான்
சொற்படி செய்யும் பெற்றி யுடையென்றன் சிந்தைச்
சுவதந்த்ர நட்பே தனுசர்
துற்செய லெல்லா மோயப் பெருஞ்சண்டை செய்த
சுடர்ஞாங்கர் வீரா வெளியேன்
விற்பன வுன்னு ளுய்ந்தே னினமுநா னேத்துன்
வியனீரத் தாளுய் குவலே. ௩.

ஐம்முகத் தெய்வம் வேறே யறுதுண்டத் தெய்வ
மதுவேறென் றோதும் விகற்பு
மைம்மனத் தோர்கட் கந்தோ விரண்டாகத் தோற்றி
மயக்கத்தை யுண்டு செயுமப்
பொய்ம்மருள் விட்டி யெற்குப் புரையற்ற பாலின்
றரம்போல் விளக்கி யவொரு
மெய்ம்மணி வேலின் மன்னே யினியீடி லாவுன்
வியனீரத் தாளுய் குவலே. ௪.

பேருரு வூரொன் றின்றிப் பிரிவற்ற சோதிப்
பெருக்கா நிலாவு நினையே
பேருரு வூரிங் குள்ளோர் பிறந்திற டைந்தே
யுழலா துணர்த்த வெனவே
பேருரு வூருங் கொண்டு பிரகாசிக் கின்ற
பெருமானென் றோர்ந்தேன் கருணை
மேருநல் லெந்தாய் நாயே னினியீடி லாவுன்
வியனீரத் தாளுய் குவலே. ரு.

எள்ளினுள் ளெண்ணெய் போல விடையேது மின்றி
யிருக்கின்ற வுன்னை யுணராக்

கள்ளுள முள்ளோர் போலக் கணக்கில்லாக் காலங்
  கழித்திட்ட வென்மேற் கருணை
யுள்ளநீ தந்த நெஞ்சா லுணர்ந்தேனின் னீர்மை
  யொளிசால் சிகண்டி யுகைப்போய்
வெள்ளியங் குன்ற வாழ்வே யினியீடி லாவுன்
  வியனீரத் தாலுய் குவலே. சு

சுத்தசன் மார்க்க முக்ய சுகாநந்த வாழ்வுச்
  சுவதந்த்ர னீயென் றறிந்த
முத்தரெல் லாம டைந்த முழுநன்மை நாடி
  யுளநாள் கழிக்க விஙனே
வைத்தநின் னட்புக் கேநா னளப்பில்லாத் தண்டம்.
  வழங்கும்பண் புக்கும் வலனே
வித்தகச் சேயே யெந்தா யினியீடி லாவுன்
  வியனீரத் தாலுய் குவலே. எ.

எண்ணிலா யாக்கை பெற்றே யுழிதந்த பாழ்த்த
  விழிநெஞ்ச னேனை யொருநீ
நண்ணிவந் தன்று சொற்ற நலம்போல வின்னு
  நறுநன்மை யெல்லா மருளு
மண்ணலா யுள்ள திவ்ய வருட்கொண்ட லேமும்
  மலச்சேற்றி லாழ்ந்த வெனதுள்
விண்ணினுள் ளன்பா மன்பே யினியீடி லாவுன்
  வியனீரத் தாலுய் குவலே. அ.

தேவருங் காணி னேன்பு செயுமைய ருங்கா
  ணருஞ்சோதி யாய வுனைநான்
பாவினு லேத்த விந்நாண் முனரென்ன புண்யம்
  பரிவிற்செய் தேனே வழியே

னுவியா யுள்ள வென்ற னுநந்த வெள்ள
வமுதே யனுதிப் பொருளே
லிவறு கந்த சாமி யினியிடி லாவுன்
வியனீரத் தாலுய் குவலே. ௯.

மட்டறு பத்தி கொண்டு புகழ்சொன்ன நாதன்
மனம்போல வாக்க மளித்தோய்
சட்டியி னேனைப் முன்னுட் டவறுது செய்து
சயங்கொண்ட கோனுள் ளிறையே
தட்டறு மெங்க டேவே யடிநாடு வோரைத்
தயவாக நோக்கு முனியே
விட்டுவி டாம னன்கு பிடித்துக்கொண் டேனுன்
வியனீரத் தாலுய் குவலே. ௧0.

ஐப்பசிமீ ௧௨ குருவாரம்.

---

## பூரணப்பொருள்.

---

திருநேரிசை. பண் - கொல்லி.

வேதத்தி னீறும் யாணர் மேயதந் திரத்தி னீறும்
போதத்தி னீறு ஞாலம் புகழ்பெரு யோகத் தீறு
நாதத்தி னீறு நாட்புக் கலையுடை யீறு மென்றன்
போதத்தைக் கவர்சே யாமோர் பூரணப் பொருளே யன்றே.

தன்னுடை யியற்கை யாகத் தயங்கரு ளாகும் யானைக்
கென்னுடை நினைப்பி யாவுங் கவளமா வீந்து பற்று
மன்னுடை யிறையா யென்னுண் மறைந்திருந் தாட்டு வானுய்ப்
பொன்னுடைச் சேயாய் நிற்போன் பூரணப் பொருளே யன்றே.

அறிவற்ற சடத்தி னுள்ளே யழிவற்ற பொருளாய்மேலோ
ரறிவித்தா லறியு மாவி யானதைச் சதசத் தென்று
வறிதற்ற வாக மங்கள் வழுத்துதல் பொருந்து மென்று
பொறிபற்ற வுணர்த்துஞ் சேயோன் பூரணப் பொருளே யன்றே.

நந்தலின் றிருத்த லானு ஞானமாய் விளங்க லானுஞ்
சுந்தர வேதஞ் சத்தாய்த் துலங்கிடு சித்தா யோது
மந்தர மாத்து மாவிற் கமையுமென் றழுத்த மாகப்
புந்தியி னுணர்த்துஞ் சேயோன் பூரணப் பொருளே யன்றே.

பாசமா நினைவிற் குள்ளே பரநினை வமிழ்ந்தி நிற்கும்
பாசமா நினைவை நீக்கிப் பரநினை வாலே யந்த
வீசனை யறிதன் ஞான விளக்கம தென்று தேவ
பூசனை யுணர்த்துஞ் சேயோன் பூரணப் பொருளே யன்றே.

தரணிவாழ் கம்பக் கூத்தர் தாஞ்செயுந் திறம்போ லந்தப்
பரநினை வதனிற் பாதி பரத்திலே யிருக்கப் பாதி
பரவினை யதனைச்செய்யப் பழகிமற் றதையுஞ் சேர்த்துப்
பொருதென வுணர்த்துஞ் சேயோன் பூரணப் பொருளே யன்றே.

பரநினை வதுவே ஞானப் பார்வையாத் திளைக்கு மந்தப்
பரநினை வில்லா வெல்லாம் பாசத்தி னினைவே யென்றும்
பரநினை வுதித்தாற் பாச நினைவது பாறு மென்றும்
புரையற வுணர்த்துஞ்சேயோன் பூரணப் பொருளே யன்றே.

பாசமா நினைவே தோன்று பகலென்று மதனை நீங்கி
யாசுறு மலத்தி லாழ்த லறிவிலா விரவே யென்றுந்
தேசிலா விரண்டு நீத்த திரம்பர நினைவே யென்றும்
பூசகர்க் குணர்த்துஞ் சேயோன் பூரணப் பொருளே யன்றே.

இத்திரம் வாய்க்கு மாறு லிருவினை நீங்கி மோன
முத்திரை யதனி னின்றே முத்தியை யடைவா ரல்லா

ரெந்திரத் தானுஞ் சேரா ரென்பது தீர்க்க மென்று
புத்தியி லுணர்த்துஞ் சேயோன் பூரணப் பொருளே யன்றே.

கருத்தடங் காதார் ஞானங் கதைப்பது கருத்தி லாதா
னெருப்பெனப் பொறித்த வேட்டை நேரடுப் பிடவைத் தாது
தரத்தினைச் சிவனு மென்றோர் பவரரி தாதா தேடும்
பொருப்பினு மத்தா னுள்சேய் பூரணப் பொருளேயன்றே.

மாசிமீ ௧௯௨ மந்தவாரம்.

---

## திருத்தேவை.*

திருவிராகம். பண் - கௌசிகம்.

கார்கொள்வானநீர்கொள்வேலை கானலிதெள்ளிடு
நீர்கொளோதம்விசநாளு நீளஞாலமெக்கணு
நார்கொளன்பர்வந்துவந்து நன்குபோற்றவுள்ளமாச்
சீர்கொணல்லதேவைவேளென் சிந்தையைக்கொள்கள்வனே.

தேர்ந்தகல்வியாளருஞ் சிவாகமங்கொள்செல்வருங்
கூர்ந்தபுந்தியோருமுண்மை கூறும்வேதநாதமே
யோர்ந்தபேர்களும்பொன்வாகை யோருமீட்டமீட்டமாச்
சேர்ந்துபோற்றுதேவைவேளென் சிந்தையைக்கொள்கள்வனே.

சைவமாவணுக்கநல்கு தாழ்வின்ஞானமாம்பழங்
கையிலேற்றருந்தலே களங்கநீத்தவின்பமென்
றையம்வென்றணைந்துய்வோர்க ளாவலோடிறைஞ்சுநற்
றெய்வமானதேவைவேளென் சிந்தையைக்கொள்கள்வனே.

---

* இஃது திருவிராமேச்சுரம்.

தீம்பழங்கைவாங்கிநன்கு தின்னும்வேலையின்பழுந்
நிம்பழந்தினைதபோதலை தின்மையுந்தினைத்தல்போல்
மேம்படுஞ்சிவாநுபோக மென்றுதேர்விவேகிகாண்
டேம்பிறங்குதேவைவேளென் சிந்தையைக்கொள்கள்வனே.

ஆதிமுன்னறியா மறைதியெங்குமுள்ளதென்
றேதநீத்தநெஞ்சிலே யிருப்பதுண்மையாகுமேற்
பாதகங்கள்செய்வதேது பந்தமேதென்போரவாந்
தீதிலாததேவைவேளென் சிந்தையைக்கொள்கள்வனே.

துன்புவந்தபோதெம்மாதி சோதிசாமியென்பதுந்
துன்புதீர்ந்தபோதுகாசு சோறுதெய்வமென்பது
மன்பிலாவுலோகர்கொள்கை யன்புளோர்விடாரவர்
தென்பராவுதேவைவேளென் சிந்தையைக்கொள்கள்வனே.

பண்ணுமீசபூசைகண்டு பாரிமைந்தர்மெச்சவென்
றெண்ணல்வீணர்செய்கையந்த வீசனந்தரந்தெரிந்
தெண்ணிலாதயாணர்நல்கு மீசனென்றதைச்செயுந்
திண்ணரேத்துதேவைவேளென் சிந்தையைக்கொள்கள்வனே.

அசபைமந்திரக்குருத் தறிந்துரைதஞ்செபித்
துசிதனோடுகூடுமோன வுண்மைகண்டுகொண்டவர்
விசனமூசுபூவும்வீவு மேவிடாரன்னோர்களைத்
திசையுமேத்துதேவைவேளென் சிந்தையைக்கொள்கள்வனே.

ஒத்தபூமிமேலுறங்க லேசன்மார்க்கயோகமா
முத்தர்சொற்றநூலெலாமவ் வாறெனவுண்முன்னுவோ
ரித்தலத்துவாஞ்சைநீத் திருக்கவேயவர்க்கொரு
சித்தநல்குதேவைவேளென் சிந்தையைக்கொள்கள்வனே.

கல்வியம்பரப்பினெல்லை காண்கினும்விண்வேந்தெனச்
சொல்விளங்கினுந்தனுண்மை காணொணாதுசோதியீ

நல்விவேகமஃதைநல்கு மென்றுசூழ்புகழ்க்கவிச்
செல்வனேத்துதேவைவேளென் சிந்தையைக்கொள்கள்வனே.

மன்மதஞ மாசிமீ உகவ சோமவாரம்.

ஆ திருப்பாடல் - ருாக.

## திருப்புலியூர்.

பண் - நட்டபாடை.

மூத்த மன்னநகை மங்கைய ராடவர் மூழ்கி விளையாடுஞ்
சுத்த மன்னுசர சுக்களுஞ் சோலையுஞ் சூழ வனப்பேறு
மத்த மின்னுமணி மன்று விளங்க வலங்கு புலியூரி
னித்த மின்னுருக னென்மன தைக்கவர் நீர்மையறியேனே.

மாசறு வானவர் மானவ ரேத்திட மங்கை சிவகாமி
யேசறு தூவுள நன்கு களிக்க வியங்கு கரம்வீசி
யாசறு மோர்சிவ னாரு ணடக மாடும் புலியூரி
னேச மகாருக னென்மன தைக்கவர் நீர்மை யறியேனே.

மாய மதர்ப்பின் மயங்குநர் காணரு மாண்பு பெருகீசர்
தூய வனற்கையர் மாலொடு நான்முகன் சூழுந் திருப்பாத
ராய மதிச்சடை யாரரு ணடக மாடும் புலியூரி
னேய முடைக்குக னென்மன தைக்கவர் நீர்மையறியேனே.

கோளி லருந்தவ மோங்கு பதஞ்சலி கூர்த்த புலிக்கால
னளு மகிழ்ந்திட ஞான மணங்கமழ் நாத ருயர்வேள்வி
யாளர் புகழ்ந்திடச் சங்கரர் நாடக மாடும் புலியூரி
னீள வயிற்குக னென்மன தைக்கவர் நீர்மை யறியேனே.

விற்கர மன்னருங் கண்டு களிக்க வியன்கொள் பொருளீயு
நற்கர மைந்தர்க ளூமவா மருணம்பர் திருப்பாதம்
பொற்கர மின்சடை யாடம காநடம் பொங்கு புலியூரி
னிற்கிறவொண் குகனென் மனைதக்கவர் நீர்மையறியேனே.

காண்ட னினைத்தலின் னுண்பொருளோடு கலாவுமறிவாள
ராண்டவனைத்துணை வேண்டுநர் யாவரு மன்பி னினிதோங்கத்
தாண்டவ நித்தலுஞ் செய்பர மேசுரர் தங்கு புலியூரி
னீண்ட வயிற்குக னென்மனை தக்கவர் நீர்மையறியேனே.

மட்டில் சிதம்பரந் தில்லைபொ னம்பல மன்று நடக்கோயி
றட்டி னறும்புண்ட ரீகபு ரந்தக ராலய மாவிதய
மிட்டர் தொழும்பிர மப்புரஞ் சிற்சபை யென்னும் புலியூரி
னிட்டை தருங்குக னென்மனை தக்கவர் நீர்மையறியேனே.

தகர மணக்கு நெடுங்குழன் மாதருஞ் சந்த மணியார்புக்
*தமரர் குழுக்களுங் கந்தசு வாமி குகேச வெனக்கூவிச
சிகரம் வளைத்துவைந் திக்கு நறுந்தொழில் சேரும் புலியூரி
னிகரி லருட்குக னென்மனை தக்கவர் நீர்மையறியேனே.

பலமுய ரச்சுதன் பங்கய னத்திரம் பங்க முறவுண்டே
யுலவிய வச்சிர வேலர சேமிடி யோட்டி யெமையாளுய
வலமுபர் முத்தைப காவென வேத்துநர் மல்கு புலியூரி
னிலவு மயிற்குக னென்மனை தக்கவர் நீர்மை யறியேனே.

பொன்றிக ழுங்குப மான்மகள் வான்மகள் புந்தி களிகூர
வென்று மியங்குமெம் மான்புகழ்க் கோனிறை யென்று துதிபாடு
கின்றவர் வெங்கவ னீங்கி நலங்கொளக் கேடில் புலியூரி
னின்றரு ளுங்குக னென்மனை தக்கவர் நீர்மையறியேனே.

சார்வரி௵ ஆவணி௴ உகவ புதவாரம்.

---

* இவ்வடி உயிரெதுகையும், மூன்றெழுத்தொன்றெதுகையுமாம்.

# திருப்போரூர்.

பண் - சீகாமரம்.

சொல்லி லாசம ருத நான்மறை
 தூய சோதியென் றேத மாகதி
நல்கி யாளவெனு ணட மாட வாவரிய
கல்வி கேள்வியி னூல வாவலி
 காதி மேலடி பாடு மாதமிழ்ச்
செல்வர் நாயகனே திருப் போரூ ரம்மானே. க.

மூவர் சூழ்முத லாய வோர்சிவன்
 மூல வோமுரு கோனென் றுனதை
யாவர் தாமறிவா ரடி யார லாமனுயர்
நாவர் பாடின தேசி லாவடி
 ஞான மீகுதி கானல் வேலவ
தேவர் நாயகனே திருப் போரூ ரம்மானே. உ.

பாட்டி லேபுக ழேழை யேன்மிடி
 பாற வோரருள் கூர்தி மாமலே
யாட்டி காதலனே யற வோர்சி காமணியே
நாட்டு மூடரு மாரி போலிசை
 பாட வேயவர் நாவி லேவரி
நீட்டு நாயகனே திருப் போரூ ரம்மானே. ௩.

கருப்பு காநிலே கூட வேயிரு
 காலே யேகரு தேழை யேனொரு
விருப்பு மேன்மையுற வினை யார்ப தந்தாரா

யிருப்பு மாதவ ரீச னேகும
ரேச னேயடி சேரு மாறுயிர்
திருப்பு நாயகனே திருப் போரு ரம்மானே. ௪.

மாண்டு ருதக மேவு பாசறை
மாற வேகினை யேழை யேனணி
வேண்டு மீசுரனே விழை யார்ப தந்தார
யாண்டு சேர்மதி வார மோனாயி
லாத பூரண வாசி லாவுயிர்
தீண்டு நாயகனே திருப் போரு ரம்மானே. ௫.

சேரு லாமடி சேர வேயரு
டேவ னேயெனு மேழை யேனுள
மோரு மீசரனே யெனக் கோகை யோடருளா
யேரு லாமயி லீச கானவ
ரேழை பூவணி யேயு தோளது
சேரு நாயகனே திருப் போரு ரம்மானே. ௬.

புருட ஞானதுன் பால தாகவெ
ஞனி னைந்திடு போத னேனகக்
குருடு தானறவே யருள் கூரி ளங்கோவே
முருட ரூரிடை யோரி ராவெழின்
மூல நாயக மான மாணினைத்
திருடு நாயகனே திருப் போரு ரம்மானே. ௭.

குறுக்க நீடலி லாவு னேரருள்
கோட லேகதி யாமெ ஞானினை
சிறுக்க னேனைவிடா தடி சேரி ளங்கோவே
நறுக்கொ ணுவர ஞல ருவயி
ஞாத காவென வோது வார்வினை
செறுக்கு நாயகனே திருப் போரு ரம்மானே. ௮.

நீர்க்கு ளேதிரி வாளை பாய்விரி
தாழை நீள்கமு கோதி சூழ்வள
மார்க்கும் வேதகிரி யர ஞர்தி ருச்சேயே
பார்க்கு ளேதிரி யேழை யேன்வினை
பாற வேயருள் பாடு வார்துயர்
தீர்க்கு நாயகனே திருப் போரூ ரம்மானே. கூ.

பொய்த வாவுறா யேனை மேனிலை
போக வேயருள் கூர்தென் மாகவி
பெய்த ஞானவெளிப் பெய ராஞு ளத்தேவே
பைத லாலிரு தேவர் தேடிய
பார மாதிரப் பேரன் மாதுதி
செய்த நாயகனே திருப் போரூ ரம்மானே. க0.

ஆவணிமீ உஉஉ குருவாரம்.

---

## திருத்தணிகைமலை.

### கருணாநந்த லகரி.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பண் - பஞ்சமம்.

பொன்ன ரங்க டாங்கு கொங்கைப் பூவையர் மையலிலே
பன்ன ளும்பட் டுழை கொண்டு படுவனஞ் சேர்முன்னே
தென்னர் வண்டு பாடு தெய்வத் தணிகை நெடுங்கிரிவாழ்
மன்னர் ஞானச் சேய்செம் பாத மலரை வணங்குதுமே.

கூனி யாடிக் கோல தூன்றிக் குறுகி நடந்திளைஞர்
பானெ கிழ்ந்த கஞ்சி யுண்டு படுவனஞ் சேர்முன்னே

தானி யார்த்தச் செல்வர் சேருந் தணிகை நெடுங்கிரிவா
ழானி யற்ற சேய்செம் பத்ம வடியை வணங்குதுமே. ௨.

ஈழை கீர்கீ ரென்றி ழுக்க விரும லெழும்புமுனே
தாழை வாழை யீனும் வண்மைத் தணிகை நெடுங்கிரிவா
ழேழை வள்ளி கொண்கன் மாலுக் கிகல்வளை தந்தபிரான்
மாழை ராம நாதன் பாத மலரை வணங்குதுமே. ௩.

கண்கண் மங்கிக் காத டங்கிக் கருத்து மயங்குமுனே
தண்கொள் பங்க யங்கள் விள்ளுந் தணிகை நெடுங்கிரிவாழ்
பண்கள் பாடு வாயன் சேயன் பனிமலர் மன்பணிகோ
கண்க ளீரா றெந்தை பாத கமலம் வணங்குதுமே. ௪.

கேச மெல்லாம் வெண்மை பூத்துக் கீழ்நடை காண்முன்னே
தாசர் பல்லோ ரேத்த வுள்ள தணிகை நெடுங்கிரிவா
ழீச னீசர் பால னாத னிமையவர் கோனம்மான்
வாச மொய்ம்ப னெந்தை பாத மலரை வணங்குதுமே. ௫.

மூளை குன்றி மாழை கொண்டு முழுது மடங்குமுனே
தாளி தண்டு மல்கு வண்மைத் தணிகை நெடுங்கிரிவாழ்
காளை காளை யாக ந்க்தான் கடவு ணறுந்தகரப்
பாளை யோதி வள்ளி மன்றுட் பதுமம் வணங்குதுமே. ௬.

கால்கை யோய்ந்து கின்மு டங்கிக் கவலை யழுந்துமுனே
சால்பு வீங்கு நேச ரேத்துந் தணிகை நெடுங்கிரிவாழ்
வேல்கொள் கையன் புள்ளிருப்போன் விடவரவந்தொழுத
வால்கொள் பாதன் சுந்த ரன்றுண் மலரை வணங்குதுமே.

வெள்ளை யாய பல்வி ழுந்து விரைவு தளர்ந்திடுமுன்
வள்ள னம்பன் பிள்ளை யேயெம் மனதை யுணர்ந்தருளுந்
தள்ளை யேயென் றன்பி னேத்தித் தணிகை நெடுங்கிரிவாழ்
மள்ளல் வேலன் மாசில் பாத மலரை வணங்குதுமே. ௮.

பாய்கி டந்து பவ்வீ பெய்து பையல்கள் சீயெனுமுன்
காய்கி ழங்குண் போர்க ளாத கருணை யிரங்கியரு
டாய்கி ரந்தி நாறை யென்று தணிகை நெடுங்கிரிவாழ்
சேய்கி ளர்ந்த வேரி யந்தாட் டிருவை வணங்குதுமே. கூ.

உண்ணீ ரன்னஞ் செல்ல லின்றி யுயிரு ளடங்குமுனே
தண்ணீ ரென்று முள்ள வண்மைத் தணிகைநெடுங்கிரிவாழ்
தெண்ணீர்மைச்சுரேசன்சந்தத்தெருளனிறைஞ்சியகோன்
கண்ணீ ராள ரன்பன் பாத கமலம் வணங்குதுமே. க0.

ஆவணிமீ உ௪உ புதவாரம்.

---

## மயிலமலை.

---

### நிறைவுவிழைந்திரங்கல்.

வெண்டளையான்வந்த தரவுகொச்சகக்கலிப்பா.

பண் - பஞ்சமம்.

சீரார் தெருளாக்கச் சேவடியே சேர்வேனென்
றாரார் மனைவிமகா ருற்றாரெல் லாமகன்றே
னாரார் மனத்திடைநீ நல்லன்பு வையாயேல்
வாராதோ கண்ணீர் மயிலமலை வாழ்குகனே. க.

நன்றுகறை யெண்ணு நிடேதனர்போ லூனுமுயிர்
கொன்றுபுசித் தோருமிழி கொங்குகுடித் தோருமென்றும்
பொன்றுதலி லாவுனைச்சூழ் புண்ணியத்தி னுய்ந்தார்நான்
மன்றுபட்டு மெய்த்தேன் மயிலமலை வாழ்குகனே. உ.

கட்டுனையில் லாதாருங் காமிகளுங் கள்வருநற்
சிட்டரென வானருன் சேவடிபா வித்தளவி

னெட்டுலகி னின்னடியே நெஞ்சிருத்தி யுன்னொருநான்
மட்டுமலை கின்றேன் மயிலமலை வாழ்குகனே. ௩.

நல்காவன் னெஞ்சருநன் ஞாயம் பிறழ்ந்தவருஞ்
செல்கால மெய்துமுனுன் சேவடிசிந் தித்துய்ந்தார்
பல்காலு நின்னடியைப் பாடுமெனக் குன்னருடான்
மல்காத தென்னே மயிலமலை வாழ்குகனே. ௪.

ஆராய வொண்ணா வதிபாவ மேபுரிந்த
நீராரு நின்னுருவை நெஞ்சிருத்தி யுய்ந்தார்க
டாராள மாவுனிரு தாடுதிக்கு மெற்குனருள்
வாராத தென்னே மயிலமலை வாழ்குகனே. ௫.

பாழ்வேட நம்பிப் பதிதரென நின்றோருஞ்
சூழ்வேக முள்ளோருந் தோத்திரித்து வாழ்ந்ததுண்டு
தாழ்வேது மில்லாவுன் றன்னைநனி கூடினல்லால்
வாழ்வேனோ நான்றான் மயிலமலை வாழ்குகனே. ௬.

காட்டார்க்கு நாட்டார்க்குங் காசில் கருணையினாற்
றாட்டா மனைகொடுத்தாய் தாள்பழிச்சு மென்னைவினை
யாட்டாத பேரருளா லாட்டி யளாவவர
மாட்டாயோ மாண்பார் மயிலமலை வாழ்குகனே. ௭.

வெண்பாவுஞ் செம்பாவும் வித்தாரப் பொன்பாவும்
பண்பார் கரும்பாவு நின்பேரிற் பாடுவேன்
கண்பார்வை வந்தெனது கம்பலையைக் காதியருள்
வண்பாத வஞ்சான் மயிலமலை வாழ்குகனே. ௮.

நின்னைமிகப் பொச்சாந்து நீளுலகி னில்லாமற்
றென்னிளமை யிற்றானே சேரவந்த பாக்கியநீ
யென்னையிது நாண்மறக்க ஞாயமிலை யெங்கணுமாய்
மன்னுமதி தாராய் மயிலமலை வாழ்குகனே. ௯.

சிந்தைமயங் காமலெனைச் சித்தாந்த வீட்டிடைவை
கந்தமணி தெய்வமகள் காட்டார் மகள்கொழுநா
சந்தமுனி நெஞ்சத் தடங்கமல மேயமுதான்
மந்திருதி கொள்ளு மயிலமலை வாழ்குகனே. ௧0.

ஆவணிமீ உகவ குருவாரம்.

---

## திருச்செங்கோடு.

———:0:———

### திருவிளையாடற்புகழ்ச்சி.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

**பண் - நட்டராகம்.**

நீரு லாநெடு வேணியன் மேல்விழி நின்றெழு சுடராகிச்
சீரு லாம்வர கங்கை படிந்தறு தெரிவையர் முலையுண்டே
யேரு லாமுரு வம்பல காட்டிமெய் யிறைவியின் பாலருந்திச்
சூரி லான்மலை சென்றவ னுலையுஞ் சுடர்திருச்செங்கோடே.

இரவி யேழ்பசுங் கொய்யுளை சந்திரனிரதமென் பவைகளிலு
நிருதி வாயு குபேர னுதாசன னீரிறை யிந்திரன்மா
தரும னீடுகைம் மாக்களி லும்பல சாரி புரிந்தகுகன்
கருது வார்க்கருள் செய்பதி நன்மணங் கமழ்திருச் செங்கோடே.

சார்த்தூ லத்திலும் யாட்டெழி லேற்றிலுஞ் சரபவிராசனிலு
மோர்ச்சீயத்திலு மான்கருடன் சுசியெகினமென் பவைகளிலும்
பார்த்தோர் விம்மிதங் கூரவி ருந்துபல் பவனி புரிந்தகுகன்
சீர்த்தூயன் பரையாள் பதிநல்லறஞ் சேர் திருச்செங்கோடே.

ஒப்பி லாச்சிறு பிள்ளையென் றுகியெவ் வுலகவுஞ் சியராலுந்
தப்பி லாசையி னுலெடுத் தெக்கழுத் தங்கொள வவரவர்முன்

செப்ப மோடுசென் றேபினர் மூப்புயர் தேகியைப் போலாகிக்
கப்பிலாத்தடியூன்றிநின் றேன்சினகரந் திருச்செங்கோடே.

பட்ட தாரு துளிர்த்திடக் கானுறை பருவிலங் கெல்லாமுங்
கிட்ட வந்திசை கேட்டவ சங்கொளக் கின்னர நனிமீட்டி
வட்ட மாமுலை யார்விர கங்கொள வார்குழ லினிதூதி
மட்டி லாவிளை யாட்டயர் சேயுறை மலைதிருச்செங்கோடே.

எண்ணி லாமுக மெண்ணறு காதுக ளெண்ணறு நறுநாக்க
ளெண்ணி லாவிழி யெண்ணறு நாசிக ளெண்ணறு கரதலங்க
ளெண்ணி லாவடி வுள்ள குகேசுர னெண்ணறு கருணையினா
லெண்ணி லாவடி யார்க்கருள் செய்பதி யெழிறிருச்செங்கோடே.

பன்னா ளும்பல துன்பினை யேதரு பகைஞர் குழாமறுத்தே
பென்னோ டண்ட ரெலாமையு மாண்டரு ளென்றரி வேண்டினகா
னன்னார் மிக்குடை யீர்சொன வாறினி நாமருள் செய்துமெனாச்
சொன்னோ னன்பரையாள்பதியம்பொழில் சூழ்திருச்செங்கோடே.

நம்பனீ படை வேந்தினை வாங்கிவிண் ணோடருஞ்சிவகணமுங்
கும்ப லாவெழு தரப்புவி வந்தொருகுனறையும்வலிசான்ற
தம்பி மாமுகன் றன்னையு மாய்த்துயர் சூரன தார்போந்த
வெம்பிரான்றளி யாவது நீர்வள மெழுதிருச்செங்கோடே.

சிங்க மாமுகன் பானு முனிந்தவன் சிரமறுப்புண்டபின்னர்த்
துங்கவேல்கொடு சூரனை யீர்ந்துயர் துசம்பரி யெனவாக்கிப்
பொங்கு வீரர்க ளோடு செயந்திபுக் கிருந்து பராசலம்போந்
தங்க ணுறற வோர்குரு வானவ னமர்பதி செங்கோடே.

மாறி லாக்கஜ நாயகி தன்னைநன் மணம்புரிந் திந்திரற்கோ
ரூறி லாமுடி சூட்டுபு வள்ளியை யுவப்பொடுகைப்பிடித்துக்

காறிலாப்புகழ்பாடியவெங்தையின்கருத்தினைநிறைவேற்றி
யீறிலாதொளிர்கின்றவனன்கிருப்பதுதிருச் செங்கோடே.

ஆவணிமீ" கூ0உ சுக்கிரவாரம்.

---

## கழுகுமலைபாதிகந்தகிரிபாதி.

---:o:---

கலிவிருத்தம்.

தக்கராகம். பண் - கொல்லிக்கௌவாணம்.

உலகமெம்மைக் கடல்கடக்கு முறுதியினைத் தாராய்
கலகமிகந் தவர்கருதுங் கழுகுமலை முருகா
விலகலற்ற விருத்தியெற்கு விளைவிலினி தளியாய்
பலகவிஞர் பரசுகந்த பருவதத்துப் பரமே. க.

வருதாவெல் லாங்களைதி மனதினினைப் போர்க்குங்
கருதார்க்கும் களிப்புதவுங் கழுகுமலை முருகா
வொருதாழ்வுஞ் சொலவிசையா வுவப்பிலெனை வையாய்
கிருதார்த்த ருள்குகந்த கிரியிருக்குங் கிளியே. உ.

அன்றுசொன்ன படியெனைவந் தாண்டுகொள வேண்டுங்
கன்றுதலில் லார்குரங்குங் கழுகுமலை முருகா
வென்றுமெனைத் திருவடிக்க ணிருத்திவிட வேண்டுங்
குன்றுதலில் லாதகந்த குதரமமர் குருநாதா. ங.

தாட்டாமரைத்திருவிற் றங்கவெனை வையாய்
காட்டார்வ முனிவருள்குங் கழுகுமலை முருகா
விட்டாசை யேற்கொளுதி விளைவினில்வல் லார்க்கு
மாட்டார்க்கு நல்லகந்த மலையிருக்கு மணியே. ச.

நாதநிலை ஞாங்கரெனை நன்கிருத்தி யாளாய்
காதலொடு நானேத்துங் கழுகுமலை முருகா
பாதகமெல் லாமுருக்கும் பரிவிலெனை வையாய்
மாதவர்கள் வணங்குகந்த மலையிருக்கு மணியே. ரு.

எள்ளுதலில் லாநெறியி லெனையிருத்தி யருளாய்
கள்ளுதலுள் ளார்மறந்த கழுகுமலை முருகா
துள்ளுதலில் லாதமதி துலங்கவெனக் களியாய்
பொள்ளுதல்கொள் ளாதகந்தப் பொருப்பிருக்கும் பொருளே.

திடம்பிறங்கு தெருளிலெனைத் தினமுநனி வையாய்
கடம்புமலர் கமழ்வளங்கொள் கழுகுமலை முருகா
விடம்பொருவென் மலமவித்துன் விரையடியைத் தாராய்
தடம்பொழில்கொள் கந்தகிரி தனிலிருக்குந் தகையே. எ.

நான்பாடு பாட்டைநவில் பவர்க்குநல நல்காய்
கான்பாடு வண்டறையுங் கழுகுமலை முருகா
தேன்பாகு கண்டெனவந் தென்னுணனி சேராய்
மேன்பாடு மல்குகந்த வெற்பிருக்கும் வேளே. அ.

எனைத்தள்ளி னுமெனை நம்பினவர்த் தள்ளேல்
கனைத்தண்டை சிலம்பவருங் கழுகுமலை முருகா
தினைத்தனையு நீங்காத திருவிலெனை வையாய்
நினைத்தவர நல்குகந்த கிரிக்கருணை நிதியே. கூ.

குருப்புகழ் விரும்புமருட் கூத்திலென்னை யாட்டாய்
கருப்புகழர் காணரிய கழுகுமலை முருகா
வருப்புகழர் நாடறிவி லனவரத மெனைவை
திருப்புகழர் புகழ்ந்தகந்த சிகரியுறை சிவமே. க0.

புரட்டாதிமீ ௨௨ மங்களவாரம்.

# திருவுடுப்பை.

## கலிநிலைத்துறை.

பண் - இந்தளம்.

மலையெ லாம்விளை யாடரு ளான்மலை மாமக
ட்லைவ னர்தலை மாமுளை தம்பி தவத்தினு
ரலைவி லாவித யாசன மீதம ராண்டவ
னுலைவி லாவடி வேல னிருப்ப துடுப்பையே. க.

தேவ சேனையை வேடர் குலத்துயர் செல்வியை
யாவ லோடு மணந்துயிர் நன்மை யளைத்துமோர்
தாவி லாது பயந்து நிதப்ரம சாரியு
மோவ வில்லியு மானவன் வாச முடுப்பையே. உ.

சரைகொ ளாத சதாகதி சாரதி யாயமர்
புரையி லாயிர நூறு பெரும்பரி பூட்டிய
யிரத மேலயி லேந்திறை யாக விருந்தமெய்
யுரையி னன்பல வாடல்செய் தான முடுப்பையே. ௩.

பிரம னாருள் பேணிமுன் வைத்திடு பாதுகை
சரண நன்கு சுமக்க நடாவிய சாமியே
பரம னேயெமை யாள்கெனு நல்லவர் பாலுலா
முரமு ளானெனை யாள்குகன் வாச முடுப்பையே. ச.

இந்தி ரன்புகழ் சாமர மேந்தி யிரட்டவொண்
சந்தி ராதபர் வெண்டர ளக்குடை தாங்கமா
லந்த ணன்மலர் மாரி சொரிந்திட வங்கைவே
லுந்து சீரொ டெழுந்தவன் கோவி லுடுப்பையே. ரு.

எரியின் மன்பகல் வத்தி பிடித்திட வேமனூர்
சுரிகை யேந்திட *முக்கணன் மூளிலே தூக்கவா
ணிருதி காகள மூத வெழுந்தவ ன்டொளி
யுருவு ளான்மயி லீச னிருக்கை யுடுப்பையே. சா.

அளகை யாளி யடைப்பை சுமக்கவு மங்ஙனே
கிளரு நீரிறை கேடில் படிக்கம தேந்தவும்
வளரு மேனியர் பீலி பிடிக்கவும் வந்தவார்ப்
புளர்சி லம்படி வேல னிருக்கை யுடுப்பையே. எ.

மாட்டி லேறு மகேசுரர் தந்தவொர் மாமணி
காட்டி ளூலறி வோமரு ளென்பவர் கட்டிடர்
வாட்டி யாள்கும ரேச னெனுது மயக்கெலா
மோட்டி யாளரு ளாள னிருக்கை யுடுப்பையே. அ.

நாங்க ணின்னடி நம்பிய வாவிக ளாயினு
மீங்கெ மக்கருள் வாரில ரேணயி லீசனே
தாங்கி யாளென முன்னூநர் வாதை தபுத்துவாழ்
வோங்க வேசெயு மெந்தை யிருக்கை யுடுப்பையே. கூ.

நீறு மேலணி நேயர்க ணித்தனு மேத்துமோ
ராறு மாமுக னன்பரு ணைப்பெய ராரியன்
கூறு மாதுதி கொண்ட பிராணெரு கோதிலா
னூறி லானுயிர் நாத னிருக்கை யுடுப்பையே. க0.

புரட்டாதிமீ அஉ ஆதித்தவாரம்.

---

* இம்முக்கண்ணர் திக்குப்பாலகரு ளொருவராய ஈசானமூர்த்தி.

## குமாராநந்தலகரி.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பண் - மேகராகக்குறிஞ்சி.

கங்கையினீ வந்ததனா லன்றோவக்
கங்கைதனிற் படிவார்க் கெல்லாம்
பொங்குகறை போக்கிநறும் புநிதமளித்
திடுமரிய புண்ணி யத்தை
மங்குதலில் லாமலடைந் தாளெனவே
லையவுனை மருவு கின்ற
புங்கவர்க ளறிகின்றா ரெனினினதொள்
ளருமகிமை புகல்வோர் யாரே. க

ஆதியறு பேரொளிநீ கடவுளுக்கு
மகனெனுஞ்சொ லணைந்த தாலே
சாதிபல வாயிருக்கும் பெண்ணுயிர்க
ளெல்லாமுந் தவத்தி னாகு
நீதிவழி மலடுதவிர்ந் துய்ந்தனவே
யெனவறிவார் நிபுண ரெல்லாம்
வீதிதொறு நினைநாடி நிற்குமெனை
யாள்குமர வேளே மன்னே. உ

தனதடியி னூபுரமா மணிபிரவி
களிலொன்றின் சன்னி தான
மெனுமொளிமுன் னுலகம்விளக் கிடுமிரவி
முதலியன விலகா வென்றே
யனகவொளி யுருமுருகன் பகிர்முகம்விட்
டகமுகம தானா னென்பார்

நினதடியைப் புகழ்புநிதர் குமரகுரு
பரனேயென் னினைப்பு ளானே. ௩.

உன்றனடி நூபுரத்தி னொலிதானே
பெரியவர்கட் குரிய பேராய்
நின்றிடுநின் னடிசுமந்த புள்ளுறையு
மிடமதுவே நெடிய சொர்க்க
மென்றறியு மறிவாள ருன்றனிரு
தாண்மகிமை யினைத்தென் றோது
கின்றவலி யுள்ளாரு முளரோவென்
பார்கருணை கெழுவே லோயே. ௪.

எண்ணரிய வுயிர்களெலா நீயிருக்கு
மூர்த்தமென வியம்பு நூலோர்
தண்ணளிசால் சாமியெனும் பெயருனக்குஞ்
சொலியிந்தத் தரணி யோர்க்கும்
விண்ணவர்க்கும் விளம்பிடுதல் சம்புவெனு
மிறைமொழியை நரிக்கு மீப்போம்
வண்ணவிப நாவலுக்கும் வழுத்துதலே
யொக்குமென்பார் வடிவே லோயே. ௫.

மும்மூர்த்தி களுமுன்ற னாணைவழி
முத்தொழிலும் புரிகின் றாரென்
றெம்மூர்த்தி களுக்குமுதன் மூர்த்தியா
யுளபரம னியம்பி னானென்
றம்மூர்த்தி சரிதநவில் காந்தமறை
தருமாயி னமர ரெல்லா
நம்மூர்த்தி குகனெனவுன் றாள்பணியா
தென்புரிவார் நறிய வேலோய். ௬.

பொருவிலிறை யாமுனது பெரியவிபூ
தியிற்சிறிதே புகல வொண்ணாச்
சருவவுல கயிச்சுரிய மெனப்பரம
னுமாத்தவுமை தனைமா காந்தச்
சுருதிவிளக் கிடுமாயி னினதுதிருத்
தகைமையணாத் துணையுங் கூறு
குருவெவர்கொன் மூவுலகத் தினுமுலக
குருவாய குமர வேளே. ௭.

தவமுடைய தேவர்களைத் தன்னுருவா
வுடையசிவன் றனை யுன்னைச்
சிவமெனவுண் மதித்துரிய சீடனென
வாயினன்முன் னொனினே னோரு
ளெவருனடி வணங்காத பெயரெவரும்
வணங்கினவ ரென்றே யாவார்
தவளமலர் முடிமுருகா நினதடிமண்
ணவர்பணியத தடையொன் றுண்டோ. ௮.

சேயெனச்சொன் மழவுருவைப் பரமேச
வடிவெனநீ செய்த காலை
மாயனெட்டு விழியன்முதல் விண்ணவரெல்
லாருமந்த வடிவு மின்னி
னாயிரத்தி னோரமிச மட்டுமறிந்
தனரல்லா லதிக மின்றே
பேயகத்த னாயவெனைப் பேணுக
வதுவென்னாற் பேசற் பாற்றோ. ௯.

சமாதான முடனுன்னை நினைத்தாலென்
னுள்ளமெலாந் தண்ணெனன் றுகு

முமாதேவி சுதனுமுன் னடிபாடி
வணங்கிலென துணர்வுள் ளோங்கிச்
சமாராத னைக்குரிய வருணகிரி
தண்ணளியுந் தானே யேயுங்
குமாராய நமவென்னு மாறெழுத்து
முச்சரிப்பார் குருவே யன்றே. க0.

புரட்டாதிமீ ககூ புதவாரம்.

## சத்தியபோதகம்.

கொம்பில்லாக்கலிவிருத்தம்.
பண் - கௌசிகம்.

தண்ண வன்கலை மானச் சனிப்புமா
னண்ணு சாவு நமக்கணை யாமனீள்
கண்ணன் மாமரு கன்முரு கையனை
யண்ண வாரு மழுங்கல்விட் டன்பர்காள். க.

நிதிக்கு லம்பல கூட்டினு நீணில
மதிக்க மாளிகை கட்டினு மாயமாந்
துதிக்கு மன்பிலின் பிகுகன் றாத்துதி
யதிர்க்க வாரு மழுங்கல்விட் டன்பர்காள். உ.

திணையி னுசை யவித்தருட் சேரடித்
துணையி னிற்பவர்க் கிறில் சுகந்தரு
மிணையி லாக்குக னுண்டவ னின்பினை
யணைய வாரு மழுங்கல்விட் டன்பர்காள். ௩.

சிறியர் மானத் தினம்பல காரமும்
வறிய கூழு நுகர்ந்து வருந்தலிர்

றறிய ஞானப் பிழம்பயி ஞதனின்
பறிய வாரு மழுங்கல்விட் டன்பர்காள். ச.

விடங்க லன்னவுள் ளுள்ளவர் வீழ்கதி
யடங்கு வாரதை யாரரு ளாற்றலாற்
றடங்கல் பண்ணித் தயாமுரு கையனின்
படங்க வாரு மழுங்கல்விட் டன்பர்காள். ரு.

கொம்பில்லா நிரோட்டகம். *

தில்லை நந்தியி னந்தனன் றிண்ணிய
னல்ல கண்ணார்க ளுடையி லங்கையா
னல்ல லில்லடி யாசையி னுர்க்கலை
யில்ல லந்தை யனந்தர்க ளில்லையால். சு.

கதிரை நாயகன் காசினி யாசினி
யதிர நீலண்ட சத்தை நடாத்திறை
கதிர றுநகைக் கானசை யார்க்கட
லிதர நீட லிடர்த்தலை யில்லையால். எ.

கச்ச ணிந்த தனத்தியர் காட்டக
லிச்சை நீத்தயி லீச னிருக்கழ
னச்ச ணைந்தநல் லார்க ளருக்கலி
யச்ச நீங்கிநன் கண்ணிட லாணையால். அ.

நாட்டத் திற்கினி யான்சிகி நாதன்கால்
காட்டத் தக்ககண் ணுளன் கணக்கில்சீர்
நீட்டத் தக்கதை யானினை நீரர்க
ளீட்டத் தன்கதி ரைத்தளி யீசனல். கூ.

---

* நிரோட்டகமாவது இதழ்குவிக்கும் உயிரெழுத்தும், மெய்யெழுத்துந் தீண்டாமற் பாடுவது.

அந்தத் தானடி யார்க்கினி யானல்ல
கந்தத் தான்கதிர் காலணி யானைகைத்
தந்தத் தானறை தாங்கிய தாரிளுன்
சந்தத் தானரூர் சாடயி ளுதனுல். க0.

புரட்டாதிமீ கஙிஉ ஆதித்தவாரம்.

## திருக்கந்தர்திருப்பல்லாண்டு.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பண் - பஞ்சமம்.

பொன்னுயர் நாட்டிறை புத்திரி தனைமன்றல்
புரிந்துசெந் தினைகாத்த
மின்னிளை மாமணஞ் செய்தரு ளுடிய
வித்தகர் தமையாண்டு
நன்னல நல்கருள் வேந்தென விளங்குபு
நான்மறை களும்விரித்துப்
பன்னரும் பரமென விருக்குநந் தேவுக்குப்
பல்லாண்டு கூறுதுமே. க.

மூப்பறு கட்டிள மைத்திரு மேனியு
மூப்புடை யார்க்கெல்லா
மூப்புடை மேன்மையு மூப்புடை யாவிகண்
முழுவது மூப்பிளமை
யாப்பறு மாறெமை யாள்குமா ராவென
நாடிறை மையுமல்கு
பாப்பணை யான்மரு மானெனும் வேலற்குப்
பல்லாண்டு கூறுதுமே. உ.

நீர்வள மார்பரங் குன்றிலு நீடெழி
     னிமிர்திருச் செந்திலினுஞ்
சீர்வள மார்திரு வேரகந் தன்னினுந்
     தீதறு பழநியினு
மேர்வள மார்திருச் சோலையங் கிரியினு
     மிருந்தடி நினைவார்க்குப்
பார்வள மேல்வள நல்கருட் குகனுக்குப்
     பல்லாண்டு கூறுதுமே. ௩.

தணிகைகந் தாசலஞ் சமரா புரிதிருச்
     சயிலமி லஞ்சியரு •
வணிகெழு வெள்ளியங் கிரிபொதி காசல
     மடிப்பா டுடுப்பைமகா
திணியகத் தேவைசெங் கோடுகுன் றக்குடி
     திருவுரு மலையாரூர்
பணியுயர் கூடலம் பதியுறை குகனுக்குப்
     பல்லாண்டு கூறுதுமே. ௪.

சித்தர்கள் காண்கதிர் காமமண் ணுமலை
     சீசயி லங்கயிலை
யெத்தவ ரும்புகழ் மேருசி ராசல
     மேர்த்திரு நீற்றுமலை
யுத்தம நீள்கழு கோதியெண் கண்ணெனு
     மொண்டலங் களின்மேவிப்
பத்தருக் கருள்புரி கின்றசெவ் வேளுக்குப்
     பல்லாண்டு கூறுதுமே. ௫.

நேசர்கள் வாழெழின் மயிலவொண் மாதிர
     நீர்மலி பெரும்பேறு

கோசரர் சூழ்கந்த கோட்டங் குமரவொண்
 கோட்டநல் வேற்காடு
மாசில்கு மாரபு ரம்பெரு வயலிரு
 கொடுமரூர் வதிந்தடியார்
பாசறை தீர்த்தருள் புரிமுரு கோனுக்குப்
 பல்லாண்டு கூறுதுமே. சு.

துப்புறு பூண்டிபுள் வேணகர் வேனகர்
 தூயவர் புகழாண்டார்
குப்பமி ருதபொ னம்பல மெனவே
 குயினில யங்களினு
மொப்பக நாடுகள் காடுகள் கீழ்மே
 லுலகுயிர்த் திரள்களிலும்
பப்புவர் மீக்கூ றிடநிறை குகனுக்குப்
 பல்லாண்டு கூறுதுமே. எ.

கட்சியி லேபடுத் துத்துயில் கொண்டிருட்
 காரியி னுங்கொடிய
வட்சிகண் மோகன மாழ்ந்துள வாயுளே
 யவம்பணி யவியாமல்
வெட்சியுங் கோடையு மணிதிரு மொய்ம்புகள்
 விளங்கிட மென்றாவிப்
பட்சியில் வருமுரு கோனெனு மாதிக்குப்
 பல்லாண்டு கூறுதுமே. அ.

எண்ணுந ரெண்ணம தோர்ந்தரு ளேந்தலு
 மிரவொடு பகலிறந்த
கண்ணர்கள் பின்றொடர் காதலுள் ளானுமொர்
 காலமு மிடர்நாச

நண்ணுத லில்லுயர் பெருந்திற லோனுமெஞ்
ஞாலமு நினைவொன்றூற்
பண்ணிடு மீசனு மாயுள்ள குகனுக்குப்
பல்லாண்டு கூறுதுமே. சூ.

அன்னையின் மேம்படு கருணையி னாற்குக
னடிகளைப் புகழ்தாசன்
றன்னைமெய் யடியவ னாக்கவென் றகம்புறஞ்
சார்ந்துவந் தேற்றமதி
சொன்னவ னைபநு பூதிசொன் னவற்குறு
சூராறுத் தேவராலும்
பன்னவொ ணாநல நல்கிய குகனுக்குப்
பல்லாண்டு கூறுதுமே. க0.

புரட்டாதிமீ கஅவ விஜயதசமி புதவாரம்.

ஆ திருப்பாடல் - சூ0க.

---

# திருவலங்கற்றிரட்டு முதலாங்கண்டம் முற்றிற்று.

---

குமரகுருபரன்றிருவடிவாழ்க.

திருச்சிற்றம்பலம்.

---

## திருவலங்கற்றிரட்டு முதலாங்கண்டத்தின்
## திருப்பதிகவகராதி.


| திருப்பதிகம். | பக்கம். | திருப்பதிகம். | பக்கம். |
|---|---|---|---|
| அங்கப்பேறு | ௭௫ | திருநெல்வேலிக்கோவில் | ௫௭ |
| அடிமை | ௪௬ | திருப்பரங்கிரி | ௨௨ |
| அடியாரகம் | ௬௬ | திருப்பழநி | ௩௭ |
| அடைக்கலம் | ௧௫ | ஷை | ௩௯ |
| அருண்மாட்சிமை | ௧௩ | திருப்புலியூர் | ௧௨௮ |
| அருளாநந்தலகரி | ௧௨௧ | திருப்போரூர் | ௧௩௦ |
| ஆறெழுத்துண்மை | ௧௯ | திருவருளடிமைப்பிரார்த்தனை | ௮ |
| ஷை | ௨௧ | திருவாலவாய் | ௯௮ |
| உள்வைப்பு | ௭௭ | திருவாவினன்குடி | ௪௨ |
| எண்ணலங்காரலகரி | ௧௧௯ | திருவுடுப்பை | ௧௪௦ |
| ஐக்கியமன்றாட்டு | ௭௨ | திருவுருமலை | ௫௪ |
| கழுகுமலைபாதிகந்தகிரிபாதி | ௧௩௮ | திருவேரகம் | ௨௯ |
| காப்பு | ௫ | துக்கரகிதபிரார்த்தனை | ௧௭ |
| குமாரபரமேச்வரஸ்தௌத்தியம் | ௬ | துயரறுக்குமார்க்கவிளக்கம் | ௧௧௭ |
| குமாராநந்தலகரி | ௧௪௨ | நமன்றமர்நணுகாநெறி | ௮௪ |
| சத்தியபோதகம் | ௧௪௫ | நின்றநிலைவிண்ணப்பம் | ௧௦ |
| சுப்ரமண்யரகசியம் | ௮௧ | பரமப்பிரகாசம் | ௪௧௧ |
| தாசப்பிரகாசம் | ௮௮ | பலகிரி | ௩௧ |
| திருக்கந்தர்திருப்பல்லாண்டு | ௧௪௭ | பிரப்பன்வலசை | ௧௦௯ |
| திருக்கருணைப்பிணக்கம் | ௯௧ | பூரணப்பொருள் | ௧௨௪ |
| திருக்கன்னிநாடு | ௧௦௦ | பூரணம்விழைந்திரங்கல் | ௫௯ |
| திருக்குன்றக்குடி | ௪௯ | பொய்ம்மார்க்கநீக்கம் | ௬௩ |
| திருக்கொடுமளூர் | ௧௦௨ | போற்றி | ௧௦௫ |
| திருச்சிந்துபுரம் | ௭௦ | மயிலமலை | ௧௩௪ |
| திருச்சீரலைவாய் | ௨௬ | மிகைவெல்வயவை | ௯௩ |
| திருச்செங்கோடு | ௧௩௬ | மெய்ப்பற்று | ௬௧ |
| திருச்சோலைமலை | ௩௫ | மெய்ப்போதகம் | ௯௬ |
| திருத்தணிகைமலை | ௧௩௨ | மெய்ம்மார்க்கவிளக்கம் | ௭௯ |
| திருத்தேவை | ௧௨௬ | வழிபாட்டின்மாட்சி | ௮௬ |
| திருத்தோத்திரம் | ௫௧ | வாதனைநீக்கமன்றாட்டு | ௧௧௪ |

## திருவலங்கற்றிரட்டு முதலாங்கண்டத்தின்
## திருப்பதிக வுட்பொருட்பெயரட்டவணை.


| பெயர். | பக்கம். | பெயர். | பக்கம். |
|---|---|---|---|
| காப்பு | ரு | கருணைவிளைழந்திரங்கல் | கூஅ |
| பாசநீக்கப்பிரார்த்தனை | உஉ | உண்மைப்போதகம் | க00 |
| சடாக்ஷரஜெபம் | உசு | புரிவுப்புகழ்ச்சி | க0உ |
| ஐக்கியபிரார்த்தனை | உகூ | சிவநடைப்பிரகாசம் | க0ரு |
| அடிமைப்பரிபாக வறிவிப்பு | ஙக | நன்னிலைவிளக்கம் | க0கூ |
| வியப்பு | ஙரு | அருளாட்கொண்டதுபற்றியெழுமகிழ்ச்சி | கககு |
| அழையெனும் பிரார்த்தனை | ஙஎ | கருணைந்தலகரி | கஙஉ |
| அடிமை | ஙகூ | நிறைவுவிளைழந்திரங்கல் | கஙச |
| ஷெ | சஉ | திருவிளையாடற்புகழ்ச்சி | கஙசு |
| பரிபூரணமன்றாட்டு | சுசு | | |
| தலைவனதநுக்கிரகமாட்சி | எ0 | | |


### பகற்பண்.

காந்தாரம், பியந்தைக்காந்தாரம், காந்தாரபஞ்சமம், பஞ்சமம், நட்டபாடை, நட்டராகம், தக்கேசி, சாதாரி, புறநீர்மை, பழம்பஞ்சுரம், இந்தளம், கௌசிகம். } ஆ கஉ.

### இராப்பண்.

கொல்லி, கொல்லிக்கௌவாணம், தக்கராகம், சீகாமரம், வியாழக்குறிஞ்சி, மேகராகக்குறிஞ்சி. } ஆ சு.

### பொதுப்பண்.

திருத்தாண்டகம், யாழ்மூரி. ... ... ... ... ஆ உ.

ஆ பண் உ0.

## திருவலங்கற்றிரட்டு

## முதலாங்கண்டத்துத் தவறுதிருத்தம்.

———:o:———

| பக்கம். | பாட்டு. | வரி. | தவறு. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௯ | ௭ | ௫. | மோமான் | கோமான் |
| ௧௧௨ | ௪ | ௪ | மூடி | மூடி |
| ௧௫௭ | ௮ | ௨. | குனறையும் | குன்றையும் |
| ௧௪௨ | ௨ | ௧ | பெரொளிநீ | பேரொளிநீ |

# பிரகடனம்,



| | ரூ. அ. பை. |
|---|---|
| திருவலங்கற்றிரட்டின் முதலாங்கண்டமாகிய செவிச்சுவை மிகச்சிறந்துள்ள இப்பண் பாடல் 601. பிரதி 1 - க்கு | 0—6—0. |
| உலகில் ஆண்பெண்ணெனப்படும் இருபாலாரு மெளிதிற்படித்துச் சதா சிவாநந்தங் கோடற்குத் திவ்ய குருபீடமெனத் திகழாநின்ற குமரகுருதாசசுவாமிகள்பாடல் 404 - பக்கங்கொண்ட நறும்பதிப்பு. பிரதி 1 - க்கு | 1—2—0. |
| மேற்றுலக்கிய இரண்டு நறும்பிரதிகளும் ஒன்றாகக்கட்டிய புத்தகம் 1 - க்கு | 1—8—0. |

இவைகளும் மேற்படி சுவாமிகள் உலோகோபகாரமாகவருளிச்செய்து பல்லோராலு மச்சிடப்பட்ட மற்றப் பத்திய கத்திய ரூபமான புத்தகங்களும் இராமநாதபுரந் தாலூக்கா உச்சப்புளிப் போஸ்டைச்சேர்ந்த பிரப்பன் வலசையிலிருக்கும் தி. உடையநாயகம்பிள்ளை, பாம்பன் சா. அ. முருகையாபிள்ளை, மதுரைப் புதுமண்டபம் புஸ்தக ஷாப்பு எஸ். முத்தையபிள்ளை யிவர்களிடத்தில் விலைக்குச் சுவல்பப் பிரதிகள் கிடைக்கும். தேவையாயிருந்து தெரிவிப்போர்க்கு மேற்கண்டவர்கள் வி. பி. போஸ்டிலு மனுப்புவார்கள். மேல்விலைக்குப் போஸ்டுச்செலவு வேறு.

உ

குஹமயம்.

திருவிராமேச்சுரத்தைச்சேர்ந்த பாம்பன்

ஸ்ரீமத் - குமரகுருதாசசுவாமிகள்

அருளிச்செய்த

# திருவலங்கற்றிரட்டு.

பல்சந்தப்பரிமளமாகிய

## இரண்டாங்கண்டம்.

இதனை,

சென்னைக் கவர்ணமென்றுத் தந்திரியாபீசு சிக்னலரும்

ச. மாணிக்கப்பிள்ளையவர்கள் புத்திரருமான

எம். சண்முகப்பிள்ளை செய்த

பொருளுதவிகொண்டு

இராமநாதபுரந் தாலூக்கா பிரப்பன்வலசை

தி. உடையநாயகம்பிள்ளை

சென்னைப் பண்டித மித்திர வச்சுக்கூடத்திற்

பதிப்பித்தனர்.

முதற்பதிப்பு—500 பிரதி.



1902.

## நான்காரைச்சக்கரம்.

### நேரிசைவெண்பா.

குடிலைமெய் கூறு குருவடிக ளியுங்
கொடியனபோ மாறு குயிலு—மிடிமடன்
கொய்குகனை நாடு குமர குருதாசன்
செய்திருவ லங்கற் றிரட்டு.



"பல்வகைத் தாதுவி னுயிர்க்குடல் போற்பல்
சொல்லாற் பொருட்கிட னாக வுணர்வினின்
வல்லோ ரணிபெறச் செய்வன செய்யுள்."

என்பது நன்னூல்.

# பிரகடனம்.



திருவலங்கற்றிரட்டின் இரண்டாங்கண்டமாகிய 532 - திருச்செய்யுள்களையுடைய விது, யாப்பிலக்கண வழிவரு சந்தேகங்களை களையொழித்து உறுதிவிளக்கு மவ்விலக்கணமாகவும், சந்தக்குழிப்புகளைச் சால விளக்கு மிலக்கணமாகவும், அவ்விலக்கணங்கட்கும் செய்யுட் பேதங்கட்கும் அரிய சித்திர கவிகட்கும் (சொன்னயம் பொருணயம் தொனிநயம் துறுமி விளங்காநின்ற) பேரிலக்கியமாகவும், ஸ்ரீ சுப்பிரமணியஸ்தோத்திரமாகவும், சிவ யோகஞானசாஸ்திரமாகவும் அமைந்துள்ளது. இதனோடு திருத்தல தரிசன காலங்களிற் பாடியருளிய கட்டளைக்கலித்துறைகளுஞ் சேர்ந்திருக்கின்றன. காலிக்கோகட்டடம் பிரதி 1 - க்கு ரூபா 0 அணா 11—0

இந்நூலின் முதலாங்கண்டம்: செவிச்சுவை மிகச் சிறந்துள்ள 601 - பண்பாடலடங்கிய 154 - பக்கங்கொண்ட நறும்பதிப்பு. பிரதி 1 - க்கு 0—6—0

இவ்விரண்டுகண்டமுமொன்றாகக்கட்டிய ஷை 1-க்கு 1—0—0

உலகி லாண்பெண் ணெனப்படு மிருபாலாரு மெளிதிற் படித்துச் சதா சிவாநந்தங்கோடற்குத் திவ்ய குரு பீடமெனத்திகழாநின்ற குமரகுருதாசசுவாமிகள்பாடல். 404 - பக்கங்கொண்ட நறும்பதிப்பு. பிரதி 1 - க்கு 1—2—0

இப்பாடலும் மேற்காட்டிய முதலாங்கண்டமும் ஒன்றாகக் கட்டிய பிரதி 1 - க்கு 1—8—0

மேற்கண்ட எல்லாப் பிரதிகளு மொன்றாகக்கட்டிய புத்தகம் 1 - க்கு } 2—0—0

மேற்படி, சுவாமிகளருளிச்செய்த ஒன்பது நூலடங்கிய சிறுநூற்றிரட்டு வரலாற்றொடு புத்தகம் 1 - க்கு } 0—2—6

பரிபூரணாநந்தபோதம் மூலமுமுரையும் பிரதி 1 - க்கு 0—7—0

தகராலயரகசியம் மூலமுமுரையும் ஷை 1 - க்கு 0—5—0

இவற்றுள்ளும், மேற்படி சுவாமிகள் உலோகோபகாரமா யருளிச்செய்து பல்லோராலு மச்சிடப்பட்ட மற்றப் பத்திய கத்திய ரூபமான புத்தகங்களுள்ளும் சுவல்ப பிரதிகள் இராமநாதபுரந் தாலூக்கா உச்சப்புளிப்போஸ்டைச்சேர்ந்த பிரப்பன்வலசையிலிருக்கும் தி. உடையநாயகம்பிள்ளை, பாம்பன் சா. அ. முருகையாபிள்ளை, சென்னை அருணாசலமுதலி தெருப் பண்டித மித்திர அச்சுக்கூடத் தலைவர் ஈ. இரத்தினவேலு முதலியார் இவர்களிடம் விலைக்குக் கிடைக்கும். தேவையாயிருந்து தெரிவிப்போர்க்கு மேற்கண்டவர்கள் வி. பி. போஸ்டிலு மனுப்புவார்கள். மேல்விலைக்குப் போஸ்ட் டுச்செலவு வேறு.

உ

சிவமயம்.

குஹப்பிரம்மணேநமஃ

திருச்சிற்றம்பலம்.

# திருவலங்கற்றிரட்டு.

பல்சந்தப்பரிமளமாகிய

இரண்டாங்கண்டம்.

## க - வது வெள்ளியல்.

### க. நேரிசைவெண்பா.

ஏந்திசைச்செப்பலோசைபெற்றுவரு

மீராசிடை யிருகுற ளிருவிகற்பம்.

சீராரு நன்னெஞ்சே செங்கமலக் கட்கடவு
ளோராரு மாமருக னென்றுகிக்—கூராரும்
வேலேந்தி மாற்றலரை வென்றமரர் கட்குச்செங்
கோலீந்த கோன்றுணையைக் கொள். க

மேற்படி, ஒருவிகற்பம்.

அன்னைக்கோ ரன்னையுமா யப்பனுக்கோ ரப்பனுமாய்
முன்னவற்கு முன்னோனு மா,யுரிமை—பன்னவுள்ள

வன்பினர்கட் கன்பினனு மாய்நிற்கு மாறுமுகன்
றன்பதநெஞ் சேநினைந்து தாழ். உ.

தூங்கிசைச்செப்பலோசைபெற்றவரு
மிருகுறளொருவிகற்பம்.

சீலந் தருஞ்சதா சித்தமே கச்சைகொண்
டாலும் பராபரித் தன்னைபோற்—சாலவும்
பாலொடு சாதம் பகுக்கும் பரிபுர
மாலும் பதவே ளருள். ௩.

மேற்படி, ஓராசிடையொருவிகற்பம்.

நாளுமுள் ளேநினை நச்சிய யாவுமுன்
றுளொலா நல்குநன் னட்,பொடு—கோளுறு
வாளஞ் சிலம்பார் பலர்ச்சரண் டந்தெனை
யாளுங் குகவே ளருள். ௪.

மேற்படி, இருவிகற்பம்.

பாவம் பொடிக்குமே பத்தியை யீட்டுமே
சாவுந் தொலைக்குமே தா,ரக—மாவருள்
கூட்டுமே முத்தியைக் கூட்டுடன் காணெனக்
காட்டுமே சண்முகன் கால். ௫.

இருகுறட்குமிடையில் தனிச்சொற்கு முன்னே வருமீரசை யீராசெனவும், ஓரசை யோராசெனவும் பெயர்பெறும். விவரம்: மேல்வந்த பாக்களிலிடப்பட்ட (,) இக்குறிக்குப்பின் அவை நிற்கு மாற்று னறிக.

ஒழுகிசைச்செப்பலோசைபெற்றவரு
மிருகுறளொருவிகற்பம்.

திங்கட் கிடையானின் சேயாகுஞ் செவ்வேளி
னங்கழற் கேயடிமை யானுயே—யிங்குநனி

தங்கமன மின்றேகத் தானென்று நெஞ்சேநீ
யெங்கிருந் தாலுமினி யென். ௬.

மேற்படி, இருவிகற்பம்.

பெரிதிற் பெரிது பிரமாண்ட மோம்ப்
பெரியபிர மாண்டப்பால் பொற்பான்—முருக
னபிராம நுனி நிற்குமெனி னெஞ்சே யுருவம்
விரோதவுரு வன்று விபு. ௭.

தற்புருட மீசானஞ் சத்தியோ சாதமதி
யற்புத வாம மகோரமு மும்—பொற்பார்
முகமெனுஞ் சத்தி முகமொன்றாய் நிற்கு
முகமே யிறைசண் முகம். ௮.

பூமியினைப் பொன்னதனைப் பூவையனைப் புத்திரனை
நாமிடலை வெற்றியினை நாகமதை—போமில்
விரிவித்தை முத்திகளை வேட்போர்க் கருள்செய்
கருணைநிலை யேகந்தன் கண். ௯.

நூல்கடா யாம்வேத நூலாக மங்கட்கும்
வால்கெடா மெய்ம்மைக்கும் வாக்குவலி—யால்வெளியா
மெல்லா மொழிமூலத் திற்கு மிருக்கு மகித
நல்லார் தொழுங்குமர னு. ௧௰.

அடிகே ளடிகே ளடியியேன் றேத்து
மடியார் கவிச்சுவையை யன்பா—லுடனுகர்ந்து
நல்வற் சலம்பெருகு நாதசத் திக்கிருக்கை
செல்வக் குமரன் செவி. ௧௧.

அன்பூற் றெடுக்க வடிநாடி நிற்பவர்கட்
கின்பூற் றெடுக்க வினிதருளித்—துன்போட்டு

மாசி லபய வரதங்க ளென்பனவே
காசின் முருகையன் கை. கஉ.

ஆன்மாக்க ளைக்க மறியுங் குணமொன்றே
தான்பீக்கொண் ஞானமெனுஞ் சத்தியுமவ்—வான்மாக்க
ளூழ்வினைக ளோட்டியருளொண்கிரியா சத்தியுமே
காழ்வடிவுச் சேயிரண்டு கால். கங.

சதாநினைவோர் நெஞ்சத் தவிசிருக்குங் கந்த
னதீதசொரு பந்தா னளப்பி—லிதாகிதமாந்
தானங் கடந்தவுண் மைச் சைதன்ய நீங்காத
வானந்த மாம்பரமான் மா. கச.

திருவாரும் பைங்கடப்புத் தேங்கண்ணி சூடி
வருவானே புள்ளி மயிலோன்—குருவாகிக்
கூடிக் களிப்பானே கோட்டாலை தீர்ப்பானே
பாடிப் பழிச்சுவார் பால். கரு.

என்றுமுள்ள கந்தவே ளிட்டபல னைப்புசித்
தொன்றென்னு நல்வீ டுறுகாறு—மொன்றினையு
மெண்ணு திருந்துள் ளிதயநடு வேருகனை
யெண்ணுவது தானே யிதம். கசா.

மாமாய லோக மயக்கப் பெருக்கிற்காங்
காமாதி யாறையுங் கைவிட்ட—தூமாண்
பொறியாளர் சிந்தைப் புலத்திலெஞ் ஞான்றுஞ்
செறியாறு மேமந் திரம். கஎ.

வீட்டெண்ண மாட்டெண்ணம் வித்தாரம் பேசெண்ணந்
தேட்டெண்ண மாகவே செப்பனைத்து—மோட்டியருட்

கந்தன் குமரன் கதிர்வேலன் பாதநனி
சிந்தித்த லேநற் செபம். கஅ.

தந்நாரர் மக்களினந் தாரமும் வாழவென
வெந்நாளும் பொய்புகன் றீடழிவார்—தந்நேயம்
பண்ணுமன மோய்த்துப் பதியிளம் பூரணன்கா
லெண்ணியுயிர் வாழ்வதுதா னின்பு. கசு.

வையம் புரந்துய்யும் வாட்பொருந னானாலு
மையமெடுத் துண்பவனே யானாலு - மெய்யுணர்ந்து
தண்ணிருக்கும் பூங்கடப்பந் தாரான் பதப்போதை
யெண்ணியிருக் கின்றதுதா னின்பு. உ0.

மாணிக்கப் பொற்குழையு மாசற்ற சண்முகமுங்
காணப் பசுஞ்சிகிமேற் காதலுளார்—காணவதி
யுல்லாச மாகவரு மோமுருகை நாடியவா
வில்லா திருப்பதுவே யின்பு. உக.

நல்வினையுந் தீவினையு நாடா நடுநிலையிற்
றொல்வினைக ளையளவுஞ் சோர்வின்றிப்—பல்புவிவாழ்
மிச்சையிலா வாவிகளை மெய்க்காப்பில் வைத்தருள்சே
யிச்சைவிடா துய்வதுவே யின்பு. உஉ.

காமமுங் கள்ளுங் கரப்பும் பராசனமு
நேமவொண் சற்குருவி னிந்தையும்—பூமிதனி
லாற்றுவா ரோடுசேர்ந் தான்முனிவ ருக்குநனி
தோற்றுஞ் சகிக்கொணாத் துன்பு. உங.

வினைவென்ஞா னப்பொதிகை வேந்தனையிற் காவி
புனையவிலை யென்றே புகன்றான்—முனைநந்தி
மார்க்கண்ட மாமுனிக்கு மண்டலத்தின் மும்மலமும்
வேர்க்கொண்டார்க் கேது விதி. உச.

இச்சையொழித் தேசிலிளம் பூரணனுக் காட்படுநன்
னிச்சயசன் யாச நிலையறியாப்—பிச்சரெல்லா
நீண்டசடை முண்டனமாய் நீறுமணி காவியுடை
பூண்டறையும் யாவுமுழுப் பொய். உரு.

தூக்கநிலை யிற்கண்ட சொப்பனம் போலவே
சாக்கிரமு மென்றறியாத் தன்மையர்தாம்—யாக்கையை
மெய்யென் பெயர்கண்டு மெய்யெனக்கொண் டேமெய்யைப்
பொய்யென்ப தேபெரும் பொய். உசு.

மாக்காயம் வாக்கு மனந்தூய்மை யாய்நின்று
நீக்கா தெனைக்கொள்ளு நிர்மலவே—னாக்கமருள்
பொய்யா வெழுத்தைப் புகன்றிவட் பொய்யாகு
மெய்யைமெய் யாக்கலே மெய். உஎ.

நற்றொண்டர் கேண்மையு ஞானமும் வாய்மையு
மற்பர்கட் கின்பமா யாராவே—சிற்சபையுற்
றுய்யவொரு சேய்நோன் புஞற்றுநர்க் காருமிது
மெய்மெய்மெய் மெய்மெய்மெய் மெய். உஅ.

ஆக்கித் தரம்பார்த் தளித்துயிர்கள் யாவுமறு
போக்கோடு மீட்சி பொருந்தாம—லாக்கவடி

சேர்த்துக் கொளற்குள்ள தெய்வத்தைத் தான்மறக்க
நாத்திக ரல்லமே நாம். உ௯.

ஆசற்ற வண்டத்து மாச்சரிய பிண்டத்து
மாசற்ற ஞான மணியாகித்—தாசர்க்குட்
பூத்துவிரி கின்றவருட் புண்ணியனைப் போச்சாக்க
நாத்திக ரல்லமே நாம். ௩0.

நித்தக் குமர னினைப்போ ரகத்திருந்து
சித்தப் படிக்கருளுஞ் சீர்வள்ள—லித்தரையிற்
பஞ்சமு மற்றாலும் பாலித்திங் காட்கொள்ளு
நெஞ்சே மயங்காம லில். ௩௧.

அருவா யுருவா யருவுருவ மாயெங்
குருவா யிலங்குங் குகேசன்—றிருவடியி
னிட்டஞ் சதாவுள் ளிருக்கவுள் கிற்பட்ட
கட்டையுஞ் சேருங் கதி. ௩உ.

பூவின் மணம்போலப் புந்தியகத் தேமறைந்து
மேவிக் கமழும் விறல்வேலோய்—கூவியழு
மென்னெண்ணம் போன்முடியா தென்றாலு மென்விரத
முன்னெண்ணம் போன்முடியா தோ. ௩௩.

[பின்முடுகு.]

நினைத்தார் வினைத்தா னெரிக்குமரு ளைத்தா
வெனைத்தா வுனைத்தா வெனத்தா—வனத்தார்கள்

சேர்புவளர் மாதரசி சேர்தலைவ வாசிறலை
யேர்புமயி லேறிறைவ னே. ௩௪.

[முன்மொழிந்து.]

ஞானவயில் வேலிறைவ நாகமயி லேறிறைவ
வானவர்பி ரானிறைவ மாலிறைவ—கோனிறைவ
வென்று துதிப்பா ரிருமையு மேல்வாழ்க்கை
யொன்றுவ ருள்ளே யுணர். ௩௫.

[மொழிமாற்றுப்பொருள்கோள்.]

கரத்திற் சிலம்பிரண்டு காலி னெடுவே
லுரத்திற் குழைசெவியி லொண்ணூ—லுரத்த
தலையிலணை ஞாணிடையிற் சார்முடியுண் டென்ப
மலைவிலர்மா தேவன் மகற்கு. ௩௬.

இதற்கு வேறாய், செய்யுட்கண் முதலினு மீற்றினு நிற்கு மொழிகள் தம்முட் பொருளேக்க முடையனவாயுள்ள பூட்டுவிற்பொருள்கோள் நடையை, இவ்வியல் ௩-வது பாவிலும், இந்நூலாசிரியரது குமரகுருதாசசுவாமிகள்பாடலில் "பகலெல்லாம்" எனும் பிரபந்தத்து ௯ - ௧௭ - ௨௨ - ம் வெண்பாக்களினுமறிக.

[இரதபந்தம்.]

இருள்பொருதா வம்பலச்சித் தென்னுமுரு காநீ
டிருவிண்ணோர் தேடுமருந் தேமாண்—பொருவாச்சீர்
தேசுதருஞ் செந்திருநுந் தீர்த்தவிற லோங்குசிதா
வாசிறந்த மாவின் பருள். ௩௭.

## ௨. இன்னிசைவெண்பா.

ஒழுகிசைச்செப்பலோசைபெற்றுவருமொருவிகற்பம்.

உள்ளபடி யெவ்வுயிர்க்கு மோவலற்ற வன்னையப்பன்
வள்ளிகொழு நன்றானே மா.நான் முடிபுமிது
வுள்ளலவ னைத்தான் மறந்தொருவன் மற்றவர்க்குப்
பிள்ளையெனச் சொல்லல் பிழை. ௩௮.

இகலுலகி லீன்ற விருவர்க்குந் தாதை
வகைமுறையெண் ணிற்றே வரைபோ மொருவன்
றகவின் றிடைநீங்கு மன்னூர்க்கே தன்னை
மகனென்று சொல்லல் வழு. ௩௯.

மேற்படி, * பலவிகற்பம்.

செய்தவினைக் கீடாகச் சேர்ந்திட்ட வன்னைபிதா
மெய்மையன் றுயா விளங்கா ரணைத்திற்கு
மீசரனே யன்னைபிதா வென்றுணரா மேவேறு
பேசுவது மாதப் பிதம். ௪௦.

வாளன்ன கண்மகண்மெய் வாழ்க்கைத் துணைவியல்லள்
வேளென்னு மெம்பெருமான் வேலோன் பதம்விழைந்து
நிற்பார்க் கனிச்சையே நித்தவாழ்க் கைத்துணைவி
யத்துணைவி வாய்ப்ப தரிது. ௪௧.

இரண்டாமடியிற் றனிச்சொற்பெற்றுவரு
மேற்படி, பலவிகற்பம்.

எச்சிவ னெச்சித்தி பெற்றானு மென்றெய்வத்
தச்சன்போ லேதுந் தருமன்றி—யச்சிவம்போற்

---

* ஒன்றல்லனவெல்லாம் பலவென்பது தமிழ்வழக்கு.

பேரண்டஞ் செய்திடுமோ பேரருளை வென்றிடுமோ
நல்லுணர்வி னுய்ந்து நவில். சஉ.

விரிபுவன வத்துக்கண் மூலமா மேன்பான்
பெரிததனுன் மாயை பிரமங்—கருதுமறி
வில்லா வதற்கஃது திருக்கு முயிர்பிரம
மப்பிரமத் தின்மே லது. சா௩.

அதுவாம் பரப்பிரம மான்மாவுக் கான்மா
வதனுலே யத்துவித மாகு—மிதுதானே
யுண்மைச் சிவாநுபவ முள்ளடங்கி நின்றீ
தறியா ரிரண்டொன்றென் பார். சச.

மேற்படி, மூன்றுமடியிற் றனிச்சொற்பெற்றுவருவது.

தெவ்விறந்த தெய்வநா மென்போய்கோள் சிற்றறிவா
மெவ்வுயிர்க்கண் ணுந்தே விருப்பதுபோ லுன்கண்ணு
மவ்வரிய தேவுள்ள தாகலினீ—யவ்வுயிரு
ளொன்றெனவெண் ணிக்குகளை யுள்கு. சரு.

மேற்படி, அடிதோறுந் தனிச்சொற்பெற்றுவருவது.

ஆதரமார் நெஞ்சு மதன்மூல—போதமுநற்
சாதனையி னிர்ச்சலனஞ் சாருமேற்—பேதச்
சரியைகிரி யாயோகந் தாண்டோர்—விரியறிவா
மவ்வறிவே யோஞ்சே யருள். சசா.

ஒரூஉத்தொடைபெற்றுவரு மேற்படி, பலவிகற்பம்.

ஞானமின் றேன்முத்தி நண்ணுது ஞானமும்
யோகமின் றேல்வந் துதியாதவ் யோகமு
மெய்ப்பத்தி யின்றி விளையாது மெய்ப்பத்தி
யின்கருணை யின்றெய்தா தே. சஎ.

இப்பாக்களானே, நான்கடியா யிரண்டாமடியிற் றனிச்சொற் பெற்றுவரு நேரிசைவெண்பாவிற் சிறிதுபேதப்பட்டு வருவது இன்னிசைவெண்பாவென வறிக.

---

## ரு. பஃறொடைவெண்பா.

ஒழுகிசைச்செப்பலோசைபெற்று
ஐந்தடியான்வருமொருவிகற்பம்.

பத்தி மிகுமாயிற் பற்றென்று மிங்கில்லை
பத்தி மிகுமாயிற் பண்ணரிய யோகதுவே
பத்தி மிகுமேற் பதிமுருகன் ஞானமெய்தும்
பத்தி மிகுமேற் பரமசுக முத்தியெய்துஞ்
ரு. சித்தமே யித்தைத் தெளி. சஅ.

மேற்படி, ஆறடியான்வரும் பலவிகற்பம்.

நாம்பிரம மென்று நவிலொருவன் வீணேமெய்
யாம்பரம தேசிகனு வானேநன் னெஞ்சேசொல்
லோங்குக வேளவன தொள்ளருள ருன்னினிங்ங
னீங்குமல மெல்லா நிறைவுமுறு மாதலினே
ரு. ரேசி லுருவை யிதயத் தமர்த்தந்த
வாசில் குணமுனக்கு மாம். சகூ.

மேற்படி, எழடியான்வரும் பலவிகற்பம்.

பிரமக் குழவியின் பேரருளிற் சித்தி
வருமே வராவிடினு மாகதிகுன் றுதிதனுக்
கப்பூதி மெய்ப்பொருள ராஞய ரேனதி
துப்பேறு நீலநக்கர் சோமாசி மாறரருட்
ரு. சாக்கியர் வாயிலார் சத்தி குலச்சிறையர்

மூர்க்கர் முருகர் பெருமிழலை யார்மாறர்
காரிகணநாதர் கரி. ரு0.

மேற்படி, பன்னீரடியான் இடையிடையே
தனிச்சொற்பெற்றுவரும் பலவிகற்பம்.

சின்மைசொல் சேய்வயதிற் றேடியெனை யாளவந்த
பொன்மையயில் வேலோய் புகலக்கேள்—முன்னர்நான்
சென்றுசென்று நின்ற செயலெல்லாம் யோசிக்கி
னென்றனக் கேயிறும் பூதுண்டாய்—நன்றில்
விசன பவபானம் விஞ்சுமவை யெல்லா
முசிதமுள்ள நீதா னொழித்தான்—சசியடியே
யேத்தியினி தாடவென் றிட்டநன் றிககாகத்
தோத்திரஞ் சொல்வேன் றொழுவேனுன்—நேத்திரன்,
சென்றுசே வித்துச் செபிப்பேனின் னெறிழுக்
தென்றனையு மந்திரமு மென்கோவே—பொன்று
வழிதந்து முன்சொற்ற வாக்கைநிறை வேற்று
யிழிவொன் றிலாதனைத் தே. ருக.

## உ. சவலைவெண்பா.

ஒழுகிசைச்செப்பலோசைபெற்றுவரு
மிருகுறளொருவிகற்பம்.

கூடுஞ் சரணு யுதக்கொடியோய் கூரயிலோ
யாவும் புரக்குமுனை யாப்பினவி
ஞவுந் தொழுமுடலு நாளுநினை யுண்ணெஞ்சுந்
தூவுண்ணுந் தோழுண்ணு வே. ருஉ.

மேற்படி, இருவிகற்பம்.

வளைதுகிலை வாயுடம்பைச் சுத்தியாய் வைத்துக்
கொளல்போலுள் வைத்துக் கொளநினைவோ

ருன்னை மறந்து மிருப்பாரோ வோகைதரற்
கென்னை விழுங்குமுருகே. ருந.

## ரு. சிந்தியல்வெண்பா.

ஒழூகிசைச்செப்பலோசைபெற்றவரு
நேரிசைச்சிந்தியல் ஒருவிகற்பம்.

கேழ்த்தா ரகதேவைக் கேகயமூர் கேடிலியைத்
தாழ்த்தா தெனையாளுந் தாளானை—யூழ்த்திதம்
வாழ்த்தா திராதெனது வாய். ருச.

என்று மியலாதா வெண்ணுவது போர்செயவென்
றந்நா ளுறுதிசொன்ன வள்ளிலேவேன்—மன்னூர்வி
னெந்நாள் வருமோ வினி. ருரு.

மேற்படி, இருவிகற்பம்.

நாற்றச் சரீரத்தை நன்குசெய வென்றுகுக
னீற்றினையெற் கிட்டானந் நேமத்தை—யாற்று
திருப்பேனோ வேழை யினி. ருசு.

வெண்பொடியை யேடியேன் மேனி மிசைத்திமிர்ந்து
கண்களிரண் டிற்குமிடைக் கைகாட்டி—நண்போ
டுளைத்தோ னெனைக்காவா னோ. ருஎ.

பிறக்கும் பொழுதே பெயருரு மன்புஞ்
சிறக்கவிதித் தேதன்னைச் சேர்ந்துய்—நெறிக்கனெனை
வைத்தகுக னானோ வந்து. ருஅ.

### மேற்படியோசைபெற்றுவரும்
### இன்னிசைச்சிந்தியல் ஒருவிகற்பம்.

பாராளும் வேந்தர்க்கும் பண்ணோர்பா வாணர்க்கும்
வீராதி வீரர்க்கும் விண்ணோர்க்கு மேயதிக
மாரா ரயிலனடி யார். ௫௯.

### மேற்படி, இருவிகற்பம்.

எபக்சபரா தம்புரியி னுஞ்சகிப்போ மெந்தம்
படியர்க் கிடும்பரா தஞ்சகியோ மெஃறல்
செடியறுசேய் வாக்கதனைத் தேர். ௬௰.

### மேற்படி, பலவிகற்பம்.

இருட்டிட யருவருத்திங் கெல்லொளிக ளிச்சிக்கும்
பெற்றியுள்ள நெஞ்சே பிறங்கொளியெல் லாஞ்சடமா
மென்றுருகுகச் சோதிவிரும் பே. ௬௧.

இங்குவந்த ௫௯-௬௰-௬௧-ம் பாக்களானே, மூன்றடியாய்த் தனிச்சொற்பெற்றுவரு நேரிசைச் சிந்தியற்குப் பேதமாய்த்தனிச்சொற்பெறாது வருவதே யின்னிசைச்சிந்தியலென வறிக.

---

## ௬. குறள்வெண்பா.

### ஒழுகிசைச்செப்பலோசைபெற்றுவரும் ஒருவிகற்பம்.

இருட்டளையின் * றியாதனையின் றேயிருக்க நெஞ்சே
கருத்திற் குமரற் கருது. ௬௨.

* இங்கே காய்முன் நிரைவந்து கலித்தளையாய் வெள்ளைத் தன்மை குன்றுதலின், "சீருந்தளையுஞ் சிதையிற்சிறியஇஉ அளபோ-டாருமறிவரலகுபெறுமை" எனவரு யாப்பருங்கலக் காரிகை விதி

யானே குற்றியலிகரம் அலகுபெருதென வதனைக்களைந்து மெய் போற்கொண்டிகொல், முதற்சீர்:வெண்டளைபெறுமாறறிக. குற்றிய லுகரம் வரினு மிவ்வாறேகொள்க. அன்றி, இவ்வுகரங் குற்றெழுத் தேபோனின் றலகுபெறுதலே யிதன்பின்னுள்ள செய்யுளின்கண் "வெனக்கென்று" என்பது மேல்விதிப்படிப் புளிமாவாகாது. புளி மாங்காயாகி நிற்றலினுணர்க. "வந்துநீ சேரி னுயிர்வாழும்" என வரு பிறரது வெண்பாட்டினுள்ளும் 'வந்துநீ' என்பதிலுள்ள குற்று கரமு மவ்வாறலகுபெற்றுக் கூவிளமென நிற்றல்காண்க. இவ்வாறு குற்றியலிகரமும் அலகுபெறுமென்றறிக. ஓசைநயம்பற்றி, இவ்வா றலகுபெறுதலே, இந்நூற்குப் பெரும்பாலு முடம்பாடு.

தூஉ விசாகாவுன் றேமற்ற நல்லருளைத்
தாஅ வெனக்கென்று தாழ். சுங.

இதில், "தூஉ" "தாஅ" என அளபெழுந்தனவுளுள்ள குறில் கள் : "ஓசைகுன்றுநெட்டளபாய்விடினேர்நேர்" எனும் யா-காரிகை யின்படி நேரசைகளாகி யவ்விருசீருந் தேமாவாயினமை காண்க.

களிப்போஒ* களிப்பென்று கூறிவில் லார்சே
யொளிப்போத ரன்னவர்சார் புய். சுச.

* இதில், காய்முன் நிரைவந்து கலித்தளையாதலின், இங்ஙனம் அளபெடையலகு பெருதெனும் விதியாலதனைக்களைந்துழி முதற்சீர் புளிமாவாகி வெண்டளைபெறுமா றறிக.

பொய் விழியிச்சை பொன்னயிலோன் றண்ணருளின்
மெய் விழிபில்லார் மேற்று. சுரு.

இதில், அளபெழுந்த ஒற்றெழுத்துக்கள் "ஒற்றளபாய்விடினே ரலகாம்" எனும் யா - காரிகையின்படி, குறின் மாத்திரை பெற்று நேரசையாகித் தேமாவாயினமை காண்க.

எண்ணெண் கப்பிலேந்து பெண்ணைத் திருவடியை
வெண்ணெண் குவார்க்கில் வெறிது. சுசு.

இதில், அளபெழுந்த ஆய்தவெழுத்துக்கட்கும் மேல்விதி கொள்க.

மேற்படி, கூன்பெற்றுவருவது.

சதந்ந்—குகனே குகனே குகனேயென் றேதிற்
சுகமே சுகமே சுகம். சுஎ.

இதில் "சததம்" என முதலிற் கூன்வந்தது. இதனைத் தனிச்சொல்லெனவுங் கூறுப. இதனுல் வெண்பாஃ இடையுங் கடையுங் கூன்வரப் பெருதெனக் கொள்க.

பிறப்பென்னும் வாய்பாட்டான் முடிபவை.

துப்புரவு நாடுபிரே மப்பிரமன் யுத்தின்மே
லெப்பிரம முள்ள தியம்பு. சுஅ.

சிறுநுவைப் பெருநுவாச் செய்யு மறைமறைக்கு
நீறுகொண்மெய்ச் சேயோர் நினைப்பு. சுகூ.

ஆபு மிகவோங் கரிபிரமர் வாழ்வனைப்பில்
சேயுருவன் வாழ்விற் சிறிது. எo.

காசென்னும் வாய்பாட்டான் முடிபவை.

திண்மைத் திருவருள்சிந் திப்போ ரெவர்க்குஞ்சேய்
வண்மைத் தரிசனமே மாண்பு. எக.

இறந்துபிற வாக்குழவி யெந்தையறி யார்க்கில்
சிறந்த சிவாநுபவச் சித்து. எஉ.

என்னறிவா யாண்டி லிருக்குமொரு சேயென்னு
மின்னறியார்க் கில்லையுயர் வீடு. எங.

கற்றில் சிவயோகக் காட்சியுளா ரெவ்வருக்கு
மூறில் குகனருளா னுண்டு. எச.

கேழார் திருமேனிக் கேடிலியின் சேயவனைத்
தாழாத தெய்வமுண்டோ சாற்று. எரு.

அல்காத வோங்கந்த னாகமவ னன்பர்க்கேன்
பல்கா தருளறிவே பன்னு. எசு.

நாளென்னும் வாய்பாட்டான் முடிபவை.

சிவஞ்சத்திக் கந்நியமாச் சேயை யுணாப்போர்
பவம்பற்றிப் பாசமறகொள் வார். எஎ.

சேய்நீயு நானுமே யோமென்று செப்பினான்
பாய்மா வுரியணிநம் பன். எஅ.

நன்று ரணஞ்சொலல்போ னற்குமர நானேநீ
யென்றான் பரமசிவ னே. எகூ.

மலரென்னும் வாய்பாட்டான் முடிபவை.

ஆதியில்சே யாண்மை யளப்பவரா ரென்றறியு
மோதுணைகள் காந்தத் துள. அ0.

ஓதியுணர் வோய்சேய்விட் டோமறையா கங்குருவுஞ்
சோதியு முண்டோர் சொலாய். அக.

அருக்கம் புனைபவன்சேய்க் கன்னியம தாக
விருக்கும் பொருளொன் றிலை. அஉ.

மடற்போதன் மான்முதலோர் மாமுருகெண் ணாரேற்
கடப்பாரோ துன்பக் கடல். அங.

விளங்கயன்மால் விண்டு படைகளிருந் தென்சூர்ப்
பிளந்ததவன் வேலே பிற. அச.

பகவற்குச் சேய்சிறிதென் பார்க்கு விகார
வகநிற்கு மைந்து மறு. அ௫.

மேற்படி, இருவிகற்பம்.

ஒன்றறை யிரண்டு செயுமிரண் டொன்றுசெயுங்
கொற்றக் குமார குரு. அ௬.

இதுகாறும், காய்முன் நேர்முதலாகிய காய்ச்சீர்வரு வெண்சீர்வெண்டளையாய ஏந்திசைச்செப்பலோசைபெற்றும், மாமுன் நிரைமுதலாகிய மாஞ்சீரும் விளஞ்சீரும் விளமுன் நேர்முதலாகிய மாஞ்சீரும் விளஞ்சீருமாகவரும் இயற்சீர்வெண்டளையாய தூங்கிசைச்செப்பலோசை பெற்றும், மேலிருதளை விரவியும் மாமுன் நிரைமுதலாகிய புளிமாங்காய் கருவிளங்கா யெனப்படு சீர்களும் விளமுன் நேர்முதலாகிய தேமாங்காய் கூவிளங்கா யெனப்படு சீர்களும் வருமியற்சீர்வெண்டளை கலந்தும் நிகழு மொழுகிசைச் செப்பலோசைபெற்றும் வந்த பாக்களானே வெண்பா: வெண்டளையன்றி வேற்றுத்தளைவரப் பெறாதெனவும், வெள்ளடி: அளவடியாம் நாற்சீரின் மிக்குவருவதில்லை யெனவும், வெண்பாவுக்குச் சிறுமை யிரண்டடியே யெனவும், எல்லா வெண்பாவுக்கு மீற்றடி முச்சீரேயா மெனவும், அவற்றினீற்றுச்சீர்: இவ்வியல் ௬அ - முதல் அ௬ - வது பாவரையுங்காட்டிய வாய்பாடுகளானே முடியுமெனவும், முச்சீர்கொண்ட வெள்ளடியி னீற்றுச் சீர்க்கண் மோனையெழுத்தல்லது அதனினவெழுத்து வருதல் மிக்கழகெனவும், வெண்பாவுக்கும் அதன் கடையடிபோனடக்குஞ் சில செய்யுள்களுக்குமே யீற்றுச்சீர்: நாள் மலரெனும் ஓரசையானு நிகழு மெனவுமுணர்க. கலிவெண்பாவைக் கலியியலிற் காண்க.

வெண்பா முற்றிற்று.

# வெண்பாவினம்.

## க. தாழிசை.

தாழிசைக்குறளென்னுங்குறட்டாழிசை.
இரண்டடியாயீற்றடிகுறைந்து
நாற்சீரின் மிக்கபலசீரான்வருபவை.

கங்கை மைந்தனல் வேல னீகதி
காணு மாறவன் கால்கட் கன்றலர்
துங்க மாமலர் சாத்தித் தோத்திரஞ் சொல்லுவலே. அஎ.

பொய்சொ லேலினிப் பொய்சொ லேலெனப்
பொன்னி னுவசைத் தோதி யேகிய
துய்ய சேயடி சேர மாதுதி சொல்லுவலே. அஅ.

சிற்ற வென்னகஞ் செவ்வி தாஞ்சமஞ்
சேர்ந்து சண்முக வாளென் றேகவி
சாற்ற வேவவன் பாத மாமலர் தாழுவலே. அகூ.

பெண்ணி னார்வமு மண்ணி னார்வமும்
பிள்ளை யார்வமுங் கண்டு போதுமென்
றண்ணல் சண்முகன் பாத வார்வ மழுந்துவலே. கூ0.

நாக ராக்கமுந் தேவ ராக்கமு
ஞால வாக்கமு நச்சி டாதுயர்
நாக நாயகன் சேந்தன் சேவடி நச்சுவலே. கூக.

அன்பர்க் கன்பின ளைம ளைமய
வாறு மாமுக னன்பு கூர்ந்தபின்
கன்மத் தான்வரு மாதர் காமருங் கைத்ததரோ. கூஉ.

ஆரற் பூதர நாமத் தான்ற்ரு
மாதி சொன்னல வாய்மை கண்டபின்
பாரப் பூமியின் மோகப் பாடு படிந்ததரோ. ௬௩.

தொண்டர் செய்மனுக் கண்ட ருள்செயுஞ்
சோதி வேலிறை யெந்தை தண்ணளி
கொண்ட பின்றமி யேன ரந்தைகள் குன்றினவே. ௬௪.

குறள்வெண்செந்துறையோடுமாறுபட்டுவருஞ்
செந்துறைச்சிதைவுத்தாழிசைக்குறள்.

இன்பக் கடலா லிலகொரு சேயவ
னன்பிற் பெரிய வடியவர்க் கெளியோன். ௬௫.

செப்பலோசை சிதைந்துவருந்
தாழிசைக்குறளென்னுங் குறட்டாழிசை.

இன்று சரவணப வாயநம வெனநாவே
யன்றென்செய் தாயோ வறம். ௬௬.

பிறப்பிறப் பில்லிமகன் பிறவா னிறவான்
றிறத்தவவன் சேடருமன் னர். ௬௭.

பொய்யா மொழிப்புலவ னுணைப் புகனு
னையா விலீலவே ணு. ௬௮.

## வெண்டாழிசை யென்னும் வெள்ளொத்தாழிசை.

மூன்றடியா யீற்றடி வெண்பாவேபோல முச்சீரா யாசிரியத்தளையான் வருபவை.

பார்வி சும்பும் படர்ந்து நிற்பா
னார்கொ ளன்பர் நண்பு வப்பான்
சீர்கொள் வேற்கைச் சிவன். ௯௯.

நாளுந் தாளை நாடு வாரை
நீளுந் தூய்மை நிறுவிக் கொள்வான்
கோளுண் ணூத குகன். ௧00.

சனக ராசன் சாமி தம்பி
யனக வாவென் பார்க ணிற்பான்
கனக வேல்கொள் கரன். ௧0௧.

கடிகொ ணீபங் கமழு மார்பா
வடிகொ டாயென் பவர்கண் ணூர்வான்
முடிவி லாச்சண் முகன். ௧0௨.

உடலி ருப்பா னுயிரி ருப்பா
னிடையி ருப்பா னிடர றுப்பான்
வடமி ருப்பான் மகன். ௧0௩.

நன்றி ருப்பா னவையி ருப்பான்
மன்றி ருப்பான் மகனு வர்க்கா
ரொன்று முய்மீ னென. ௧0௪.

நன்று மில்லி நவையு மில்லி
கன்ற லில்லி கருத லில்லி
வென்றி வேற்செவ் வியன். ௧0௫.

ஒன்றி லொன்றில் லாமை யோதின்
வென்றி வேளை வினைதொ டாதம்
தென்று மன்னோ னிரான். கூ0௬.

சித்தெ னுஞ்சேய் திரள சித்து
வத்து வாகா னதுவு மாணவ்
வத்த னுகா தரோ. கூ0௭.

சித்த சித்தாத் தெரியு மென்னிற்
சித்தின் மாயை யாகுஞ் செவ்வேள்
சித்தி னின்றே தெளி. கூ0௮.

அற்ற லிவ்வி கார மந்தத்
தோற்ற மென்னிற் றாய்தின் றெய்மா
னூற்ற நின்றே யுணர். கூ0௯.

இன்னிசைச்சிந்தியல்வெண்பா
வொருபொருண்மேன்மூன்றடுக்கிவரும்
வெள்ளொத்தாழிசை.

தேனார்பே ரின்பநனி சேர்ந்தார்போ னன்னெஞ்சே
ஞானநந் தச்சேயை நாடிநலங் கொள்ளாமே
யேனோநா நிற்க விவண்.

முற்றற்ற வின்பநனி சேர்ந்தார்போ னன்னெஞ்சே
வெற்றிக்கை வேற்சேயை நாடிநலங் கொள்ளாமே
யெற்றுக்கு நிற்க விவண்.

தீதற்ற வின்பநனி சேர்ந்தார்போ னன்னெஞ்சே
கோதற்ற வேற்சேயை நாடிநலங் கொள்ளாமே
யேதுக்கு நிற்க விவண். கூகூ0.

## உ. துறை.

விழுமியபொருளுமொழுகியவோசையுமாய்வருஞ்
செந்துறை வெள்ளையெனுங்
குறள்வெண்செந்துறை.

---

கந்தன் பாத கமலத் துகளுளொன்
றந்த மிலாப்பே ரண்ட மாமே. ௧௧௧.

உலகா மாயைக் கிருக்கை யோங்குச
ன்லகி லடியா மருட்சன் னிதியே. ௧௧௨.

---

ஈற்றடியிரண்டுமிரண்டுசீர்குறைந்துவரு
மூன்றடியோரொலிவெண்டுறை.

தேவரிறை யாய்மிளிருஞ் சேயவனீ செய்துள்ள புவனந்தானே
மாவதிச யங்கட்கு மன்னுகரி யென்றறியார்
நாவிறைவ னற்புதமிஞ் ஞாலமிசை யென்னெனுமே. ௪௧௩.

மேற்படி, நான்கடியோரொலி வெண்டுறை.

இறையெனலே திருவினையே திருவினையி னுயிரேதென்
றியம்பு கின்ற
கறையனையுங் கடவுளென வொருவனுள னெனுமார்க்கி
காதற் சேயா
யறிவொடுநீ யமைக்கினவ னும்பரனுண் டென்பானென்
றறிவலியோர் சிறிதுமிலர்க் கயிலோயேன் புகல்வேனே. ௧௧௪.

முதலிரண்டடியும் அறுசீரா யோரோசைத்தாய்ப்
பின்னடியைந்து நாற்சீராய் வேறோசைத்தாய்வரும்
எழடி வேற்றொலி வெண்டுறை.

அகிலமீன்றா தருவதற்குங் காப்பதற்கு மாய்ப்பதற்கு
  மயனஞ் சாவும்
விகிர்தமுமி லொருபுத்தே ளுண்டென்றல் பொய்யெனவே
  விளம்பி யிங்குச்
சிலைமதவே ளம்பிற் சிந்தைகிழி தைவோர்
தொலைவறுமா நந்தந் துய்க்கவறி வாரோ
௫. கலைஞரவாங் கந்தன் காமரடி நேடு
நிலையுமறு வன்பு நித்தலுமுள் ளோரே
மலைவறுபே ரின்ப வாரிபடி வாரே. ௧௧௫.

இங்ஙனம்வந்த ௧௧௩ - ௧௧௫-ம் செய்யுள்களானே வெண்டுறை:
மூன்றடிச்சிறுமையு மேழடிப்பெருமையு முடைத்தென வறிக.

## ௩. வெளிவிருத்தம்.

வெண்டளையான் மூன்றடியாத் தனிச்சொற்பெற்று வருபவை.

தேமா காய் காய் காய்—தேமாந்தண்பூ.

சேவற் கொடியெம்மான் செப்பாதொன்
  றோர்வேனோ—வென்செய்கோயா
னேவிக் குகனருண்மே லேற்றுதா
  ளாவேனோ—வென்செய்கோயான்
பாவுக் கருள்குமரன் பாரானே
  னுய்வேனோ—வென்செய்கோயான். ௧௧௬.

தேமா கருவிளங்காய் தேமா கருவிளங்காய்—தேமாந்தண்பூ.

கந்தன் சுகங்கருதுங் காதன்
மலிந்ததிங—னென்செய்கோயான்
சொந்தங் கவர்ந்தணையுஞ் சோகம்
பிறந்ததிங—னென்செய்கோயான்
வந்தென் றலைவனவன் மாலாய்
மருவிலனே—யென்செய்கோயான். கக௭.

வேறுதளையானுங்கடியாத்தனிச்சொற்பெற்றுவருபவை.

கூவிளம் மா மா மா—தேமாங்காய்.

*ஏமருள் சவ்வும் ரவ்வு மவ்வு—மெங்கோமான்
மாமலி னவ்வும் பவ்வும் வவ்வு—மெங்கோமா
ஞேமொடு ரியு மையுங் கிலியு—மெங்கோமா
ஞமயம் வெல்லு மௌவுஞ் சௌவு—மெங்கோமான். கக௮.

புளிமா புளிமா புளிமா புளிமா—தேமாங்காய்.

தனியாய் வருவான் சவையாய் வருவா—னெங்கோமான்
முனியாய் வருவான் முருகாய் வருவா—னெங்கோமான்
றெனியாய் வருவான் சுரனாய் வருவா—னெங்கோமான்
மனுவாய் வருவான் மயிலே றியெனு—மெங்கோமான். ககக௯.

முதற்சீர்: தேமா:

வானூ டிருப்பான் வளியூ டிருப்பா—னெங்கோமா
கானூ டிருப்பான் கடலூ டிருப்பா—னெங்கோமா
னூனூ டிருப்பா னுயிரு டிருப்பா—னெங்கோமா
னூனூ டிருப்பா னயிலா ளியெனு—மெங்கோமான். க௨0.

---

ஏமமென்பது ஏமெனநின்றது. ஏமம்=களிப்பு.

கூவிளம் தேமா கூவிளம் தேமா—தேமாங்காய்.

மண்டல மாளு மந்திர மாளு—மெங்கோமான்
விண்டல மாளும் விண்முழு தாளு—மெங்கோமான்
முண்டக மாளும் விண்டுமொய் யாளு—மெங்கோமான்
வெண்டட மாளும் வேலிறை யான—வெங்கோமான். கஉக.

முதற்சீரு மூன்ருஞ்சீரும், கருவிளம்.

மகமுத ளைதன் வழுவறு வேத—னெங்கோமான்
றுகளறு போதன் றுதிநுகர் காத—னெங்கோமான்
குகவடி யியென் பவருளை கொள்வோ—னெங்கோமான்
புகழ்பவர் நேசன் புகழ்முனி யீச—னெங்கோமான். கஉஉ.

வெண்பாவின முற்றிற்று.

க-வது வெள்ளியன் முற்றிற்று.

---

# உ-வது ஆசிரியவியல்.



## க. நேரிசையாசிரியப்பா.

ஈற்றயலடி முச்சீரா யேனையடி நாற்சீரா
யேந்திசை யகவலோசையான் வருபவை.

நேர்+நேர்=தேமா.

வேத நாதன் வேலேந் தெம்மான்
பாதஞ் சூழ்வோர் பார்ப்பா
ரோதை வேதத் துண்மை யன்றே. க.

இதனானே யாசிரியப்பா: மூன்றடிச் சிறுமை யுடைத்தென்ப தறிக. பெருமை யெத்துணைத்தெனின் "உரைப்பாருள்ளக்கருத்தி னளவே பெருமை." என்பது யா-காரிகை. ஆதலினளவின்றென்க. மாமுன் நேர்வருவது நேரொன்றாசிரியத்தளை. அதுவேயேந்திசையக வலோசை.

சொல்லா னுண்மை சொல்லும் வேத
மெல்லா மேத மில்லாக் கன்ம
காண்ட ஞான காண்ட மாமந்
நீண்ட பாகந் தம்மு ணெய்தை
யாதி யல்லா தஃது நீயென்
றோது சாம வோத்து வாக்கைத்
தன்பா லுள்ள சால்பிற் றன்பி
னன்கார் ஞான நாட்டிக் கூறு
மாக மந்தா னன்மா வீச
னேக மில்லை யோக மென்றே
சாற்று கின்ற சால்பிற் றிந்தக்
கூற்றி ரண்டுங் கோதில் சோஹஞ்
சிற்சி வோஹ மென்று தேற
நிற்ற லாலோங் கார நீர்மை
யாக மத்து மார ணத்து
மேக மென்றே யெண்ணி நின்பா
ஞானு நின்றே னட்பி
னீன மில்வே லேந்தெந் தாயே. ௨.

மேற்படி, தூங்கிசை யகவலோசையான்வருவது.

நிரை + நிரை = கருவிளம்.

துவம்பத பசுமலந் துமித்துயர் சமாதியி
லவமறத் ததப்பதி யடங்குத லசிபத

மெனப்பகர் மகாமொழிப் படியுறு மிருங்கதி
மனச்சுழ லிறப்பினில் வருமெனல் சரதமத்
ரு. திரமதி லெனைவிடச் சிகியிவர்
பிரணவத் திருவுருப் பெரியைநீ யருடியே. ௩.

விளமுன் நிரைவருவது நிரையொன்றாசிரியத்தளை. அதுவே தூங்கிசை யகவலோசை.

மேற்படி, ஒழுகிசை யகவலோசையான்வருபவை.

முதலடி: நேர்+நிரை=கூவிளம், நிரை+நிரை=கருவிளம்,
நிரை+நேர்=புளிமா, நேர்+நிரை+நேர்=கூவிளங்காய்.

நீயெனுந் துவம்பத நிலையா *காமியமு
மாயமே வாணவ மலமு மொழியு
மதுவெனுந் தத்பத மதிற்சஞ் சிதமு
மதமலி மாயா மலமு மொழியு
ரு. மாயினை யென்னு மசிபிற் பிராரத்தமு
மேய்வறு கன்ம மலமு மொழியு
மென்பா ருரியோ ரெனக்கு
மன்போ டத்திற மளியருட் குகனே. ச.

* இங்ஙனம் தேமா புளிமா கூவிளம் கருவிளமெனும் ஆசிரியவுரிச்சீரல்லாத காய்ச்சீராகியவெண்சீர்வரலாமோவெனின்; "அகவலகத்துந் தாஞ்சீர் மயங்குந் தளையுமதே." என்பது யா - காரிகை. ஆகலிஞரோவிடத்து வரலாமென்க. "பின்னுப் பிணியவிழ்ந்த நன்னெடுங் கூந்தல்" என்றார் பிறருமென்றறிக நேரொன்றாசிரியத்தளையும், நிரையொன்றாசிரியத்தளையும், விரவுவது ஒழுகிசை யகவலோசை.

## உ. இணைக்குறளாசிரியப்பா.

ஈறு முதலுமொழிந்த விடையடிகளுட் சிலவற்றைக் குறளடியாகவுஞ் சிந்தடியாகவுங்கொண்டுவருவது.

அறைந்த—துவம்பத நிலையிற் றொல்லிருள் கெடுத்தே
நவம்பகர் நற்சுசி
தானெய் தியேயத் தத்பத
ஞானதே வருளி னனிநின் றிறையறிந்
தவத்தை யசிபத
*சிவத்தி லடங்கியச் சிவசமா னஞ்சொ னல்ல
வத்து விதந்தா னொரு
முத்தி யபர முத்தி யிலையது
பரமுத் தியேயப் பரத்துவ
வரம்பெற் றும்பரு டியோங்குக வேளே. ரு.

இதில் "அறைந்த" என அடிமுதற்கட் கூன்வந்தமையின்; ஆசிரியப்பா இடையுங் கடையுங் கூன்வரப்பெறுமெனக்கொள்க. என்னை? "அடிமுதற் பொருளைத் தானினிது கொண்டு—முடிய நிற்பது கூனென மொழிப" என்பது யா-காரிகையுரைவரு சூத்திரம்.

* இவ்வாசிரியவடியில் ஐஞ்சீர் வரலாமோவெனின்; "வெண்டளைவிரவியு மாசிரியம் விரவியு—மைஞ்சீரடியுமுளவெனமொழிப" என்பது தொல்காப்பியம். "அருகிக்கலியோடகவன்மருங்கினைஞ்சீரடியும்—வருதற்குரித்தென்பர்வான்றமிழ்நாவலர்" என்பது யா-காரிகை. ஆகலி னொரோவிடத்து வரலாமென்க.

## ௩. அடிமறிமண்டிலவாசிரியப்பா.

எல்லாவடிகளையுமாறிமாறியுரைக்கவோசையும்
பொருளும் பிழையாது வருபவை.

தொம்பத நிலைதான் றெல்லத் தாவிதமே
டம்பதி நிலைதா னருளத் துவிதமே
பப்பசி நிலைதான் பரமாத் தாவிதமே
யெம்பி ரான்சே யெனைச்சே ரசிபிலே. ௬.

முத்திக் குற்பவ முதலினுக் கிரண்டே
முத்திக் குற்பவ முயலிடைக் கொன்றே
முத்திக் குற்பவ முடிவிற் குற்றதே
முத்தி யுயிர்மெய் முதல்வ னுயிரே
௫. முத்தி முதற்குக முடிமுற் றெனையே. ௭.

இச்செய்யுள்களான், ஆசிரியப்பா நான்கிற்கும்ஏயெனுமசையா னிறுதல் சிறப்புடைமையும், ஓ-ஈ-ஆ-ஐ முதலியவற்றா னிறுதல் சிறப்பின்மையு முண்டெனவுணர்க. இவ்வடிமறிமண்டில நடையையே அடிமறிமாற்றுப்பொருள்கோள் என்ப.

---

## ௪. நிலைமண்டிலவாசிரியப்பா.

முற்று மளவடிகொண்டு முடிபவை.

சிவாக மத்தைச் சேர்ந்த தாய
சிவகுரு போத்தரஞ் செப்பு மாறு
பிரகிரு தியின்மேற் பிறங்கப் பிராகிர்த
பரசிவ லோகத் தின்மேற் படரு
௫. மகேசதத் துவத்தில் வடிவே ருங்கு
குகேச னுலகாக் குறிக்குங் குமார

னுலக மதன்மே லோகைசால் சத்தி
யுலக மதன்மே லுயர்சிவ லோக
முளவவ் வுயர்சிவ லோக முறுநர்
விளைபுவி தோன்று ரெனக்குக வேளே
பொதிகை முனியெனும் புனிதற் கோதின
னதனுற் குமாரன் கதிகீழ் நிலையெனிற்
கூறுது நீயிர் தேறு மாறதை
யீறறு குமார னாறறு சிவத்தைச்
சத்தியை நீங்காச் சச்சிதா நந்த
வத்து வென்னுஞ் சத்திய முணரா
துருவகை யானே பிரிவினை செய்யூப்
பரவு முயிர்கண் மருவு கதிப்பொருட்
டச்சே யுலகு மச்சிவை யுலகு
மிச்சை யின்றி விளம்பப் படுமவை
போலச் சிவவுருப் போற்று நர்க்கு
மேலுளத் திட்ட கோலவப் பிராகிர்த
சிவலோ கப்பயன் றெரிக்கப் படுமா
லிவையிழுக் கென்றறி நவையறு புந்திய
ருருவான் மூன்றும் பேத முண்மையி
லொருமை நிலையென் றுய்த்தினி தோர்ந்தே
போதமி னிட்டையிற் பேதமி றரிசன
மாதலைச் சேயெனு வறிபவ ரப்பொரு
ளாக விளங்கி யழிவுதிப் பென்னுந்
தோக மிகந்துய் வாரே சுருதி
பெரிய சிவஞ்சுப் பிரமணி யப்பொரு
ளொருசிறி தும்பே தம்மிலை யுணரி
னெனலா னெந்தை யிருங்குக தேனவ
நனிதொழு துய்திர் ஞாலத் தீரே.

எதிலே நீளமோ வதிலே யகலமு
மெதிலே யகலமோ வதிலே நீளமு
மெதிலே கனமோ வதிலே நீளமு
மெதிலே நீளமோ வதிலே கனமு
மெதிலே யகலமோ வதிலே கனமு
மெதிலே கனமோ வதிலே யகலமு
முண்டன் னணமே யுணரின் முறையே
யெங்கே யறிவோ வங்கே யுண்மையு
மெங்கே யுண்மையோ வங்கே யறிவு
மெங்கே யின்பமோ வங்கே யறிவு
மெங்கே யறிவோ வங்கே யின்பமு
மெங்கே யின்பமோ வங்கே யுண்மையு
மெங்கே யுண்மையோ வங்கே யின்பமு
மெங்கே சிவையோ வங்கே சிவமு
மெங்கே சிவமோ வங்கே சிவையு
மெங்கே சேயோ வங்கே சிவையு
மெங்கே சிவையோ வங்கே சேயு
மெங்கே சேயோ வங்கே சிவமு
மெங்கே சிவமோ வங்கே சேயு
மாமென் றறிபவர் தாமே யறிஞர்
போமுன் றெரிவீர் பூமியு ளீரே. ௭௦.

அநாதி சிவத்திற் கநாதி மகன்சே
யநாதி யச்சேய்க் கநாதி யுயிரென
வுள்ளவை பொதுமையிற் பிள்ளைக ளாமால்
கள்ளமி லருளைக் கொள்ளுயி ரெல்லாம்
பொக்கமில் சிறப்பு மக்க ளாமா
லிக்குண முளர்தாந் துக்கமில் சிவத்திற்
கென்றும் பௌத்திர ரென்று வாரா

லென்றோர்ந் துலகீர் குன்றீர்ந் துளவே
லத்தற் கினிய புத்திர ராகி
முத்தி யின்பந் துய்த்துய் வீரே.

வள்ளுயிர்க் குயிரா யுள்ள குகேசற்
கற்புடை மைந்தரா நிற்குநர் தாமே
சூர்தருங் கோர மார்கவின் கோர
மதிகோ ரங்கோ ரதரங்கோ ரரூபந்
தரள தரங்கோள் பெருகு பயாநகங்
காள ராத்திரி நீளிய பயோற்கடஞ்
சண்டமா சண்டஞ் சண்டகோ லாலஞ்
சண்டதரஞ் சரோருக மண்டிச லசவதி
வீமம் பெரிதென் வீம விடணங்
கரளம் விகரள முரணுறு குலிச
மிடர்முக் கோணம் படலாங் கோணம்
விரிதிர்க் கதரம் பரிவர்த் துளமே
யேழு நிலமே சூழெண் டலமே
தீர்க்க வொளிமயல் சேர்க்கு மாயை
யெனுமிரு பத்தெட் டனுளொன் றிற்கொன்
றதோமுக மாகப் பொதிர்*பல் கோடி
நரகமு ளதையு மருவா துயர்நிலை
யண்மி வாழும் புண்ணிய ராவா
ரிமைக்கு முன்னர்த் தமக்குத் தாமே
தீங்கு தேடும் பாங்கிலர் போலச்
சிவமைந் தனையு மவனன் பனையு
மிகழும் வினையின் மகிழுஞ் சிதடர்
முன்பி னீட்டிய நன்கு மிழந்து

*இப்பல்கோடியை யிருபத்தெட்டுக் கோடியென்க.

சொல்லிய நரகெலாஞ் செல்லுந ராவா
ராதலி னுலகுளீர் நீதியி னின்மினே. கக.

*தருமமும் யாகமும் புரிகுந ரிடகலைத்
தாரைபோய்ப் புகையிரா வாரிருட் பக்கந்
திகழ்தென் னயனம் புகழ்பிதி ரூர்வெளி
தீங்கின் மதியெனும் பாங்க ரெய்துபு,
துலங்கணி யிந்திரன் றலஞ்சேர்ந் தாய்வர்
தூயவஃ தகல்வோர் காயம் வாயு
தெளிபுகை பேகந் துளிமழை யோடதி
தேந்தரு மன்னம் மாந்தர்விந் துவுறீஇத்
தையலா ருதர் மெய்திப் பிறப்பர்
தொல்லர னரிதொழு நல்லவர் பிங்கலை
தோய்ந்துசென் றிரவியூ ரெய்ந்துய ருலகந்
தெளவலின் றுய்வார் செவ்வே ளருள
ரித்துணை யெனுஞா னத்தினுய் வாரே. கஉ.

ஆசிரியப்பா முற்றிற்று.

---

# ஆசிரியப்பாவினம்.

## க. ஆசிரியத்தாழிசை.

மூன்றடியாய்த்தனியேவருபவை.

விளம் விளம் விளம் விளம்.

வேலவ னடியவர் மிறைபுரி டாரொரு
காலது புரியினுங் கறைநர குறறவிர்ந்
தேலதி காரமங் கிழைப்பவ ராகுவர். கந.

---

*இச்செய்யுண்மோனைவிவரம் : கலியியல் ககள-வது விருத்தத்தின் கீழே விளக்கப்பட்டிருக்கிறது.

முடிவறு குகன்வெளி முழுவது மிருப்பினு
மடியவ ரகமிக வமர்ந்துள னதாகதிர்
படிகமு ளுதயம் பலிப்பது போலனி. ௧௪.

குகனடி யவரகங் குகனிருத் தலினவ
ரகமகிழ் வுறவுண வருத்துந ரவனுகர்
மகிழ்நல மடைவரிவ் வார்த்தைபொய் யிலையிலை. ௧௫.

அடியவ ரகந்தொறு மருட்குக னிருத்தலி
னடியவர்க் கிடுமல லவற்கிடு மலலது
கொடிதினுங் கொடிதெனக் குறிக்கவு ளதுநிதம். ௧௬.

பார்நல முழுவதும் பரநல முழுவதுஞ்
சார்பவ ரேகுகன் சார்பினிற் றுறந்தவர்க்
கோர்மகிழ் வுறப்பணி யுஞற்றுவ ரனுதினம். ௧௭.

இரப்பவ ரிலையெனி னீபவர் களுமிலை
புரத்திலவ் வாகுகன் புரிவுயர் துறவிக
*ளரித்தெனின் வீட்டறத் தவர்களு மிலையிலை. ௧௮.

சுப்பிர மணியனைச் சூழுநிட் டாபரர்க்
கிப்புவி புகழ்ந்திட விருந்தவிர் சுரர்களு
மொப்புயர் மகிழ்வொடு முஞற்றுவர் சிறப்புகள். ௧௯.

சித்தியின் மனமொரு சிறிதுமி லறிவுளர்க்
கத்துவி தமுதல்வ னுங்குக னரும்பர
முத்தியி னிலவொரு முதமுவந் துதவிடும். ௨௦.

---

*அரிதென்பது அரித்தென விரித்தல் விகாரமாயிற்று.

அவமெனு மிருத்தியு வவுடதஞ் *சிந்திகொண்
டுவகைசெய் யோமமொர் †மந்திர முருகருட்
டவமுடை யவர்க்கிடு சருவிவை களிலறும். உ௧.

காலமென் மிருத்தியு கடந்திட வழியிலே
மேனுறை விபுதரும் விதிவயப் படுவரென்
றோலிடு மடிக்குக னுரிமைய ரோதுவர். உ௨.

கருவிளம் தேமா கூவிளம் கருவிளம்.

வரநதி யாடன் மந்திரஞ் செபித்திட
திரவிய வோமஞ் செய்தலுண் டெனினுநற்
பரிகரிப் பேசிற் கோங்குக பரன்மதி. உ௩.

கருவிளம் தேமா கருவிளம் கருவிளம்.

திருத்தலச் சேவை சிவவுரு கிறுவுதல்
கிரிச்சிர மாதி கிளர்பல விரதமு
மிருப்பினு மேலாம் பரகரிப் பிறைமதி. உ௪.

கூவிளம் கூவிளம் தேமா கூவிளம்.

செய்துள தீமைக ளுரு மாறுபன்
மெய்யிடை யூறற வேதங் கூறினுந்
துய்யது சேயருண் ஞான சூரியன். உ௫.

கருவிளம் கூவிளம் தேமா கருவிளம்.

குகனருண் ஞானமி லாதார் குயிற்றிய
வகவினை தீர்வண மேலே யதிர்த்தபல்
வகைவழி யாற்றுதன் மாண்பே மரிக்குமுன். உ௬.

இச்செய்யுள்கள்: எயெனு மசையாற் சிறப்பிலிருவிடினும், ஒற்றினனு முயிரினனு மீருய்வரவும் பெறுமெனும் பொருளைக்

---

*சிந்தி=சிந்திற்றண்டு. † மந்திரம்=மிருத்தியுஞ்சயமந்திரம்.

கொண்டு "ஒத்தவடித்தாயுலையாமரபொடு-நிற்பதுதானே நிலைமண்டிலமே. என்னென் கிளவியை யீறுப்பெறுதலு—மன்னபிறவு மந்த நிலைபெற—நிற்கவும்பெறூஉ நிலைமண்டிலமே" என யா - காரிகை யுரைவரு சூத்திரத்தானும், அவைகட்கிலக்கியம்: யாப்பருங்கல விருத்தியிலிருத்தலினாலும் நிலைமண்டில வாசிரியப் பாக்க ளாகாவோ வென ஈண்டோராசங்கை நிகழும். அதற்கு,"மூன்றடியொத்த முடிவினவாய்விடி-னான்றவகவற்றாழிசையாகும்." எனும் யாப்பருங்கலச் சூத்திரவழியாய், யா-காரிகையுரைவரு முதாரணச் செய்யுளில் "வானுற நிமிர்ந்தனை வையக மளந்தனை" எனுமடியளவாய் மூன்றடியாய்த் தம்மு ளளவொத்துவந்த விவ்வாசிரியத் தாழிசைகளைப்போல மூன்றடியி லந்நிலைமண்டிலவாசிரியப்பாக்கள் வரினு மித்தாழிசைகளைப்போலத் தம்மு ளளவொத்த முடிவுபெறாமல்,விளஞ்சீர் மாஞ்சீரடிக்கடிமாறி விரவி வரவேண்டுமென்றறித லியைபு. வேறுகூறின்; மேலைச்சூத்திரமுதலியன விரோதமாம். அவ்வாசிரியப்பா: நான்கடியில்வரும்போதும்,அடிக்கடி தொடை சீர் மாறி விரவி வந்தாற்றான் அஃது அளவடிக்கலிவிருத்தமுமாகாதியங்குமென்க. ஆசிரியத்தாழிசையடி: நாற்சீரின்மிக்க சீரானும் வரும்.

செப்பலோசையான் ஒருபொருண்மேன் மூன்றடுக்கிவருவது.

அல்லில் கதிதா னருள்சிறந்த வேலிறை
புல்லநம் முள்ளே புகுமே லவன்றாளிற்
கல்லெனு நன்னுதங் கேளாமோ கேளோய்.

செம்மை யினர்கட் டிகழ்ந்துபுணர் வேலிறை
பொம்மிநம் முள்ளே புகுமே லவன்றாளிற்
கொம்மெனு நன்னுதங் கேளாமோ கேளோய்.

தோமில் குயமான் சுதைமணந்த வேலிறை
போமுனம் முள்ளே புகுமே லவன்றாளின்
யாமணி நன்னுதங் கேளாமோ கேளோய். ௨௭.

## உ. ஆசிரியத்துறை.

நான்கடியா யீற்றயலடி குறைந்துவருவது.

கரத்தி லயர்வேலுங் கட்டழகார் மொய்ம்பிலணி கடம்பு மாறு
சிரத்தி லவிர்முடியுந் தேசுசெறி காதணியுந் திகழ மாசி
லாரத்தி லணிபுரள வொளிர்தேவி யிருவரொடு
வரத்தையருள்குகனேர் வரினெற்குங் கருக்கட்டு வருவதுண்டோ.

மேற்படி யீற்றயலடிகுறைந்திடைமடக்காய்வருவது.

[சிலேடை.]

ஏர்க்கமெல் லெளவிலையென் முத்தமுரு வகையற்கு முதியபாரிற்
சூர்க்கொலை காரனெனு மோர்நாம மெந்நாளுந் தொடருமாலோ
சூர்க்கொலை காரனெனு நாமமற் றொடராதே [க்க நேரும்.
லார்க்குநன் மேல்வாழ்க்கை யனுத்தணையு மெய்தாதென் றதிர்

முதலடியுமூன்றமடியும்பதினன்குசீரா
யேனையடிகள் பதினறுசீரா
யிடையிடைகுறைந்துவருவது.

தத்தாந் தனன தனன தானன
தன்னன தையன தன்னன தனதன
தந்தானன தந்தானன தனன தானன தனன தான,

தத்தாந் தனதன தத்தன தனன தந்தன தந்தன தந்தன தனன
தனனந் தந்தன தனனந் தந்தன
தாந்தன தாந்தன தந்தன தனன.

பட்டாங் கறிவில் பொருளே மாயைமன்
விண்ணென வுள்ளது மன்னது வெனவுணர்
பண்பேறிய கண்காரர்கள் பழியே கூறிட வுளமா மாயை

யொட்டாங் குணவய முற்றிழி யுலகோ
 ரும்பெரு நிந்தைந வின்றிட நெடுநா
  ளூறழ்வுந் துந்தொழில் களினைந் தென்றினி
   யோங்கிய வான்றளி கண்டதி லகலா
மட்டார்ந் திருள்வெல் குழலார் வாயித
 ழின்மலி நல்லமு துண்ணுவ மெனவிழை
  வம்பேயுள விண்டேவனை
   வலிசான் மாதவ ருனையால் வானம்
விட்டாந் தனைமகள் கர்ப்பவ ழியிலே
 வந்நழி யண்டனை யும்புல நினையாள்
  விமலன் சந்ததி யெனுமங் கந்தனை
   வேண்டிடு வாஞ்சைய னங்கெனு மகளே. ௩0.

முதலடியுமூன்றாமடியுநாற்சீரா
யேனையடிகளைஞ்சீரா யிடை யிடைகுறைந்
திடைமடக்காய்வருவது.

[சிலேடை.]

அயன்மால் புகழ்முருகோ னறுமுக நாங்காணிற்
பயமே பெருகிப் பரவி யிடும்போ லும்மன்றே
பயமே பெருகிப் பரவி யிடலின்றேற்
றயவீ யெனவவனந் தாள்பணி வாரோ தவமுடையோர். ௩௧.

இத்துறைகட்குச் சீர் வரையறையின்மையின்; எத்தனை சீரா னும் அடிக ணீண்டுங் குறைந்தும் வருமெனக்கொள்க.

## ங. ஆசிரியவிருத்தம்.

### அறுசீர்க்கழிநெடிலடியான்வருவன.

**மா மா காய் மா மா காய்.**

விடையம் விழைந்து செலுமனத்தை மீட்டுள் வாங்கு பூரகமுந்
தடையெவ் வளவு மிலாதுவெளி சரிக்க விடுமி ரேசகமு
முடைய வகத்தே புரிகின்ற வனக கும்ப கமுமோங்கு
நடைமிக் குளரோ டுறவெனையுநடத்திடாயோ நன்குகனே. ௩௨.

**காய் காய் காய் காய் மா தேமா.**

மனமடங்கிச் சுகிக்கவென வளியடக்கு
மடயோக மும்பற் றுகு
வினைதொடங்கு மனமடக்குஞ் சிவராச
யோகமுநல் வினையா ளர்க்கே
தினமியங்கு மவற்றுளெனக் கியைபாய
சிவராச யோகே மீக்கொண்
டெனையடைந்து வாழவருள் புரியாயோ
தாவிபயி லுகைக்கு மெந்தாய். ௩௩.

**கூவிளங்காய் கூவிளங்காய் கூவிளங்காய் கூவிளங்காய் தேமாபுளிமா.**

நாலொடிரு பத்தெனவி யம்புகிற
தத்துவநு வஞ்செய் பகுதி
மூலமதன் மேலெனவி ளம்புபொருள்
சீவனதன் முன்ன ழிவிலா
வேலனெனு மீசனிரு பத்தொடுறு
மேழினில்வி லாச வெளியாய்
மேலுளது சுப்ரமணி யம்மெனநி
னைத்துறல்வி வேகி நிலையே. ௩௪.

விளம் மா மா விளம் மா தேமா.

வித்துளங் குரத்தைப் போலப் பிராணனில் விளேம னத்தைச்
சுத்தமா வடக்கின் மூச்சுந் தோன்றுமோ வம்பார்க் கத்தாஞ்
சித்திசேர் ஞான் யோகர் சிந்தையு ணடனங் காட்டுஞ்
சத்திவே லீசா வெற்கு மருளதைத் தயவி னன்றே. ௩௫.

கருவிளம் தேமா புளிமா கருவிளம் தேமா புளிமா.

தனதன தானு தனனு தனதன தானு தனனு.

மறுவறு வேலா மயின்மேல் வருமொரு தேவா மலநோய்
தெறுமதி வீரா சிவனே சிவகுரு நாதா திருவே
துறுமிய சேயோய் தொழுவோர் துதிவிழை காதா சுகமே
யுறுசிவ யோகே யுயர்வா னுனுமெனே வாவா வுணவே. ௩௬.

மா மா விளம் மா விளம் காய்.

எந்தக் கரும மிழைக்கினு மனமொன் றின்பது விளேநிலையிற்
பந்தித் துயரோர் சகசம தேசெய் பண்புடை யோர்கட்கே
யிந்தச் சிவயோ குறுநனி யவரு ளின்பக டம்புரியுஞ்
சொந்தச்சிவனே குகளடுகுகனே தொண்டெனேயுங்கொள்ளே.

கருவிளம் தேமா புளிமா கருவிளம் கருவிளம் கூவிளங்காய்.

தனதன தானு தனனு தனதன தனதன தானதனு.

உடலினு ளேயோ ருடலா யுளதிது வெனவறி யாவெளியா
ருடலினு ளேயோ ருயிரா யுளதறி யவும்வல ரோசொனவா
றுடலுயிர் காணு ருனேயே யுறலறி யவும்வல ரோவருளா
லுடலுயி ரோடே யுனேநா னுணரவு முறவுமெ ணுய்குகனே.

கூவிளம் கூவிளம் கூவிளம் கூவிளம் கூவிளம் கூவிளங்காய்.

பந்தம விந்தவர் தம்மன பாலுரு வாமது பாறியகா
ளிந்தையி னெஞ்சருவாயவிர் பேராநுண் ஞானிக ணிர்மையையு

மந்தவி ரண்டும கன்றொளிர் மாகதி யாளரி னீர்மையையுந்
தந்தெனை யாள்கரு ணைக்கட லேகிறை சந்த்ரச டாநநனே. ரு௯.

ஐம்புல வாரிப டிந்தலை வீண்மன மானதின் வாசனைநீத்
திம்பருய் வாரிட னேரிய சாந்தமெ ழும்புமொர் சத்துவமாய்த்
தும்பறு ஞானம தாமென மாதவர் சொல்வண நீயதனை
வம்பற வென்கணு மன்பொடு செய்குற மங்கைகம ணந்தவனே.

கருவிளம் கருவிளம் கருவிளம் கருவிளம் கருவிளம் கருவிளங்காய்.

[சதாக்கரம். *(நாறெழுத்து)]

படரறு பரகதி தனையுற நினைபிறொர்
பயனுமி னசைமுழுதுங்
கெடும்ந னலைவுடை மனம்வசம் வருமிது
கிளருள முடையவர்கட்
கடைதல ருமையிலை யெனவுனி யொருநிலை
யனுதின மவர்வுறவென்
கடவுள யிலிறைவ னடிமலர் தொழுவது
கடமையி ரவுபகலே. சுக.

*நூறெழுத்து=மெய்யெழுத்தாகிய வொற்றொழித்து. என்னை? "குற்றிகரங் குற்றுகரமென் றிரண்டுமாய்தமு—மொற்றுமென வொருநான்கொழித்துக் - கற்றோ - ருயிருமுயிர்மெய்யு மோதினர்கொள்ள." என்றவழிக்காண்க.

கூவிளம் கூவிளம் கூவிளம் கூவிளம் கூவிளம் தேமாங்காய்.

தானன தானன தந்தன தானன தந்தன தந்தானு.

நோவடி யேன்மன வெந்துய ரோடநு வன்றுய ரன்பாலே
காவடி யார்பதி யென்றுள பூரண கந்தம கிழ்ந்தாடே
மாவடி வேறிய பங்கயன் மாலுமு வந்துதொ ழும்பீடார்
பூவடி மேவுச தங்கைவி டாதுபு லம்புசி லம்போடே, சஉ.

கருவிளம் தேமா புளிமாங்காய் கருவிளம் தேமா புளிமாங்காய்.

தனதன தத்த தனந்தானா தனதன தத்த தனந்தானா.

மருவல ருட்க வருஞ்சேயோய் மலைகளி னித்த மிருந்தேமா
வரியத வத்தி னுயர்ந்தோரா லறிவரி யத்த னெனுஞ்சேவே
ளொருவனும் வட்ட நெடுங்கார்கோ ளுணியுமு னக்கு மனம்போலே
பெரியவ ணக்கம யர்ந்தாரே பிழையன தைச்செய் தரந்தானே. ௪௩.

தேமா கருவிளங்காய் கூவிளம் புளிமா கருவிளங்காய் கூவிளம்.

அந்தத் தினையுமிடை தன்னையு மறிதற் குரியமதி யொன்றிலா
மந்தர்க் கணுகுபல னல்குமிம் மகியிற் பழமறைவி ளம்புமா
றைந்திற்கிரண்டுபெறு தில்லையென் றறையப்படுமதனிலென்னைநீ
பந்திப் பொழியநனி பந்தியே பரமற் கினியகுக சம்புவே. ௪௪.

புளிமா தேமா கூவிளம் புளிமா தேமா கருவிளம்.

உனைய லாதோர் தேவரை யுவகை யோடு பரசுதல்
கனியு ளாது காயுணுங் கயமை போனு மெனவிரு
வினிய ஞான யோகின ரினிது காண்ப ரவர்நிலை
தனையெ நாளு நானுறத் தயவு கூர்தி மழவையா. ௪௫.

தேமா கூவிளம் கூவிளம் கூவிளம் கூவிளம் கூவிளங்காய்.

ஈடி லாவெழி லீடறு வல்லமை யீடறு கல்வியெலாங்
கூடி வாழவெ னுநினை நல்லவர் கூரயி லோயுனதோ
ரீடி லாவுரு வானதை வேலுட னேரித யாசனமே
ளுடி யோகினி லேயடை வாரருண் ஞானமு மங்ஙனமே. ௪௬.

விளம் விளம் காய் விளம் விளம் காய்.

பஞ்சபு லன்வழி யேபோந்து பாழ்படு மனமதை நுதனடுவிற்
றுஞ்சிடவைத்தது துஞ்சாது சொக்கிடு நேர்மையையெற்கருநா

ளஞ்சய வங்குலி யாவணமா வருளிய நீயெனே முழுதுமினிச்
சஞ்சல மின்றிநிலைக்கவருள் சண்முக பாயொளிர் தண்ணளியே.

புளிமாங்கனி கூவிளம் கூவிளங்காய்
புளிமாங்கனி கூவிளம் கூவிளங்காய்.

தனனாதன தானன தானதனா, தனனாதன தானன தானதனா.

வலிநீடெழின் பாசுசி தேசுநிரா
மயமேயவு னேருரு மேவவவர்
மலிநீருளர் யாவரு மேமனமா
மலர்மீதயி லோடொளி சானுருவே
நலியாமனி றீஇய தேதபதேர்
நவைதீருரு வாமனு வேபுரிவார்
கலியாணகு ணாகு கேசசதா
கருதார்வலர் காணரு ணடகனே. சஅ.

இந்த சஅ-வது செய்யுளடிகளின் சீர்களைப் புளிமா புளிமா
வெனப் பிரிக்கின்; எண்சீரில் கருச-ம் விருத்தத்தி னளவாம்.

காய் காய் காய் காய் காய் மா.

சாந்தமெனுஞ் சத்துவந்தான் றுமதத்தைப்
பெருக்குகிற தசைமிசைத லானுங்
காந்தியறு பழஞ்சோறு கைதொடுத
லானுமிரா சதப்பெருக்குங் காரஞ்
சேர்ந்தனவெல் லாநுகர்த லானுநனி
கெடுமதுவே தெரிந்துநல மாக
மாந்திடுவார் மனமமர்ந்த மாமுருகா
வெனதகத்து மருவியருள் புரியாய். சகூ.

காய் காய் காய் காய் காய் *காய்.

ஊனுண்டி றத்தினர்ச தாவுன்னும் யோகெய்தி
யோர்ஞான மேவினனு

மீனந்த ணாந்தவதி சுத்தமுள சத்துவம்
தெய்தார்க டாழ்வரென்றே
மானந்த விர்ந்தவுண வுண்டுகிளர் சாதுக்கண்
மாசறும் னத்தகத்தி
லானந்த நிர்த்தனமி டுங்குமர குருவென்னு
மரசென்னை யாளத்தனே. ௫௦.

*இக்காய்ச்சீர்: இச்செய்யுட்கடையிற் கனிச்சீராய் நிற்கிறது. அதனிடைநிற்குந் தகரவொற்றைச் "சொல்லாரும் வல்லின மெல்லினமோடிடைதோன்று மொற்று - நில்லாது" எனும் விதியானே களைந்தலகிட அது கூவிளங்காயாமாறு மறிக.

இந்த ௫௦-வது செய்யுளடிகளி னீற்றுச்சீர்களை யிரண்டு மாஞ்சீர்களாக வலகிட்டு எழுசீராகக்கொளினென்னையெனின்; அவ்வாறு கோடற்குச் சிலவியைந்தும் சிலவியையாமலும் வருமெனற்கு இச்செய்யுளினிறுதிச்சீராகிய "யாளத்தனே" என்பது நேர்நேர், நிரையாய்த் தேமாங்கனியென நிற்பதே யுதாரணமாம். ஆகலின், இவ்வொலியுடைய விருத்தம்: அறுசீரெனவே பெயர்பெறும், இஃதிரட்டித்துவரிற் பன்னிருசீரெனவேபெயர்பெறுமென்றல் துணிபென்க. இத்துணிபு: அடியில்வருகின்ற ௫௬-௫௭-ம் விருத்தங்கட்குங் கோடலியைபு.

மா மா மா மா மா காய்.

போகஞ் செய்யி ருளியெண் ணெய்மீன் மூலங் கடுகணையாப்
பாகஞ் செவ்வாற் கோதும் பையரி பச்சைப் பயறுகுளஞ்
சாகம் பைங்காய் தேனெய் வெண்ணெய் ததிசுக் காகுமினு
மூகந் தருநன் பான்மே லென்றுண் ணுறுவர்பிரான்முருகோன்.

௫௧ - வது செய்யுட்கண்வருகின்ற ஈருளி=வெள்ளுள்ளியும், ஈரவுள்ளியும். அரி=அரிசி. குளம்=சருக்கரை. சாகம்=இலைக்கறி. ததி=தயிர்.

மா காய் காய் மா காய் காய்.

சார்த்து விகவுணவா மொழியுச்சி
தனினுப் புப்புளிகா ரமொழித்தேர்
பூத்த பச்சரிசி பசும்பயறும்
புனையின் றொருசேரிற் குட்படவே
சேர்த்து நன்மிளகுத் துகளிட்டுச்
செய்சா தத்தழியா னின்பானெய்
வார்த்த பின்றிரவிற் பால்பழமுண்
டாண்பார் நினைசேயென் மனத்துளதே. ௫௨.

தேமா தேமா தேமா தேமா தேமா கூவிளம்.

எண்ணெய் வீவு நாளில் வாதை யீயு மாநெயும்
வெண்ணெய் பாலு மிக்க வுண்ணின் விந்து வூறுமே
பெண்ணை நேட நேரு மென்று பெட்பி லாதினி
துண்ணு சீரி யோர்பி ராமெ னைப்ப வேலவனே. ௫௩.

கருவிளங்காய் கருவிளங்காய் கருவிளங்காய்
கருவிளங்காய் புளிமா தேமா.
[சதாக்ஷரம். (நூறெழுத்து.)]

சருமயத்தை யுடையதொக்கு ளுமிருக்கு
நிலைகுறித்த சனமேமொ கொஞ்சம்
வருபசிக்கு நுகர்குணத்தர் மனமடக்கு
வகைபடுப்பர் மயலா னையா
ரரிவையிச்சை துயின்மிகுத்த லெனுமவத்தை
களையறுப்ப ரருளாம் வாழ்வு
பிரிவறச்சின் மயமடுப்ப ரடிமையெற்கு
மருளுருத்ரர் பெருமா னேயோ. ௫௪.

இந்த ௫௪ - வது செய்யுட்களுள்ள காய்ச்சீர்களைப் புளிமா தேமா வெனப்பிரிக்கில்; பதின்சீர்க்கழிநெடிலடியுமாம்.

மா விளம் காய் மா மா காய்.

உணவின் றேலுட லாமாக்கை
யுளசத் துண்ணும் வயிற்றனென்
றெண்ணும்வல் லாருளை யொவ்விடுத
லெவர்கட் கென்னி னுயிர்ப்பணிசவு
நணுகும் பேர்க்கது வின்றேலின்
றென்றோர் மெய்யர் நயப்படவே
பணிமந் தாகினி சுதபதனைப்
பரியா வருளெற் கருளன்றே. ௫௫.

கருவிளங்காய் கருவிளங்காய் கருவிளங்காய்
கருவிளங்காய் கருவிளங்காய் கருவிளங்கனி.

தனனதன தனனதன தனனதன தனனதன
தனனதன தனனதனனா.

நிறைவிலனு வறிவினசை வெனுமனது தனதுநிலை
நிலைசொலின துயர்மவுனமே
யுறுமநனம் வினைகளடி யுடனழியு மலமுப்பு
முயிருமுய ரமுதடைமெனு
வறிபவர்கள் சனனமெனு நினைவினொடு மறதியெனு
மவதிலய விளிவுமிலரா
யிறைவனுனை யடைவரென திதயமலர் வதிதருமொ
ரிமயகிரி மகள்குமரனே, ௫௬.

தனந்தன தந்தனன தனனதன தந்தனன
தனனதன தந்தனதனா.

விளரியையு டம்பெனவு டைமனத லைந்தவழி
விசையொடுமி யங்குவளிதா
னளவதுக டந்துவெளி வருமுறுகண் விஞ்சிடுமவ
யதும்மழியு மென்றுலகிலே

தெளிவுநவி லிந்தவுரு நலமடைய வென்றிரிய
 செபதபமு யன்றுமதையே
குளிர்கொளவ யர்ந்தநகர் குழுவிடைவி ளங்குபொரு
 குபரகுரு தொண்டனிவனே. ருள.

தேமாங்காய் தேமா புளிமாங்காய் தேமாபுளிமாங்காய் தேமாங்கனி.

 உண்டாகி வியும் பலன்காண வேயோ
 ஞுடம்பான தேதானெனக்
 கொண்டாணை யின்று டகங்கார நெஞ்சங்
 குழம்பாத டைந்தால்வலா
 வண்டாத வண்டங் களுந்தம்வ யந்தா
 மபிர்ப்பின்றெ ஞவைவ்வழிக்
 கண்டா ரகத்தே யுறுங்கந்த வேளென்
 கணுங்கூட லேசெய்யுமால். ருஅ.

இச்செய்யுளடிகளின் உ-கூ-ம் சீர்களையும், ச-ரு-ம் சீர்களையும் தேமாங்காய் தேமாங்காயெனப் பிரிக்கினும் பிரிக்கலாம். அங்ஙனமாயின்; மோனைக்குரிய ஐந்தாஞ்சீ ரக்கரம் நான்காஞ்சீரிற் சேர்ந்தெழில்குறையும். இதனாற் சீர்பிரித்தலு மழகுபெறப்பிரிக்கவேண்டுமென் றறிக.

தேமா கருவிளம் கூவிளம் தேமா கருவிளம் கூவிளம்.

யாவு மறிந்திடு போதமே நாளும் வளர்ந்தபல் காமரா
வீவு மிகுந்திழி பேய்மன மென்ன மருண்டலை யுந்தமை
மேவ நிரந்தரம் வைத்தெலா மிச்சை யெனத்தெரி வாருயி
ராவி நிறைந்தொளிர் சோதியே யன்பி னெனக்கருள் சாமியே.

கருவிளம் கூவிளம் கூவிளம் கருவிளம் கூவிளம் கூவிளம்.

தனதன தாந்தன தாந்தன தனதன தந்தன தன்னன.

அகமன மாழ்ந்திடி னிண்டபே ரகிலம றைந்திடு மங்ஙனே [லி
குகனொளி தோன்றிடும்வீப்பினேகுலமனமுண்டெனி னின்ன

சமயமது தோன்றிடு மாண்புசா றலைமைம றைந்திடு மென்னு நால்
பகர்வர ராண்டவ னும்பரா பரனெனி லங்கயி லண்ணலே. ௬௦.

கூவிளம் கூவிளம் தேமா கூவிளம் கூவிளம் தேமா.

பற்பல சூழ்மன மோய்க்கப் பைரவி சாம்பவி பண்பார்
பொற்புயர் கேசரி யுண்டோர் பூர்த்தித ராவிவை மேலாஞ்
சிற்பர முத்திரை தானே சேணிலை யென்றதி லானோர்
தற்பர மாயடை தேவே சண்முக மேயெனை யாளே. ௬௧.

கருவிளம் புளிமாங்காய் கருவிளம் புளிமாங்காய்
கருவிளம் புளிமாங்கனி.

தனதனந் தனதான தனதனந் தனதான, தனதனந் தனதானனா.

[சதாக்கரம். (நூறெழுத்து)]

இருதிறம் பகர்நாசி நுனிவிளங் கிலலாட
மெழிலுறுந் தலைமேலுமே
முருகிருந் தொளிர்பார்வை நனிபொருந் திடனுடன்
முதல்வனும் படர்வோனுமே
மருவிநின் றிடலாகு முனமொழிந் துளநாலு
மெனவறிந் தவிர்வாழ்வினா
ரருமருந் தெனுஞான முருகுவந் தெனைமேவி
னமலவின் புறுவேனரோ. ௬௨.

கூவிளம் கூவிளம் கூவிளங்காய் கருவிளம் தேமா புளிமா.

தானன தானன தானதனா தனதன தானா தனனா.

சேயவ னீடொளி நாடியொரே திடமுறு கான்மா தொனியே
மாயமெ னுநவின் மாவிருளே மலையென வாதா டுருவே
நேயமில் பேய்பல காணினுமா நிறையயி லோனே யிவையா
மோய்வடை யோமென வேயிழியா நுறுவது சேயோ னடியே.

தேமா புளிமா புளிமா புளிமா புளிமா புளிமா.
தானந் தனனா தனனா தனனா தனனா தனனா.

தேவென் குகவே ணிணையோர் செயலா லழுன்பீ றிடுமேன்
மாவின் பழுதார் கலிபோல் வளைபா வணையே புரிவார்
வீவின் றெழுசீ தளமே மிகுமே லழல்போ னிணைவார்
யாவுந் தெரிவே லவனால் யமனா றுவெல்லியோ குளரே. ௬௪.

---

எழுசீர்க்கழிநெடிலடியான்வருவன.

கூவிளங்காய் கூவிளங்காய் கூவிளங்காய் கூவிளங்காய்
கூவிளங்காய் கூவிளங்காய் கூவிளம்.

தானதன தத்தனன தானதன தத்தனன
தானதன தத்தனன தானனா.

[இதுமுதலிரண்டும், அட்டோத்தரசதாக்கரம்.]

மூவிதம லத்துளொரு மூலமல மற்றுவிடின்
மூடவொர்ம றைப்பிலைபொ னுடுவாழ்
தேவரும்வ ழுத்திடுவர் மூவருமதித்திடுவர்
சிவனமுத த்திருவு மேவுமேல்
வீவொடுபி றப்புமிலை யேயெனும்வி திப்படிசெய்
மேதையரு ளத்தொளிர்கு கேசனே
தாவறவெ னக்குணனி கூடிடுநி னைத்தகதி
சார்தனிச மற்புடைய தாசரே. ௬௫.

க-ரு-ரு-ம் சீர்கள்: புளிமாங்காய்.

தனதான தத்தனன தனதான தத்தனன
தனதான தத்தனன தானனா.

சிவயோக நிட்டைபுரி பொழுதீனர் பிச்சரெரி
திணிதோளு டைக்குறள்க ளாலுமே

சுயரூறு கிட்டிடினு மசைபாதி ருத்தனுமெய்
கலையார்ப டைப்புணனு மாழையா
லெவரோதி கழ்ச்சிமொழி களையேபொ றுத்திடனு
மெதிரூழ்ச கித்திடனு மேசதா
தவமாக வுற்றவர்கள் பெறுபேறெ னக்கருடி
தமியேனி னைப்புளகு கேசனே. சுசு.

இவ்விரண்டு செய்யுளு மடியொன்றற்கு நெடிலுங் குறிலு மளவொத்த விருபத்தேழெழுத்தைப் பெற்றமையின் ஆசிரியற்றண் டகமாம். இவ்வா றிருபத்தேழெழுத்தின் மிகுத்து வருமடியுடைச் செய்யுள்களு மத்தாண்டகமாம். ஈண்டு வந்த குழிப்புடைச்செய்யுள் களைாப்பக் குழிப்புப்பெறு தெழுத்தளவிற் சீர்கள் பொருந்திவரு வனவு மத்தாண்டகமேயாம். அங்ஙன மொவ்வாது வருவது அளவழி தாண்டகமாம். உஎ-எழுத்திலிழிந்த விருபத்தாறெழுத்துடைய வடி முதல் நான்கெழுத்துடைய வடிவரைவரும் உகூ-அடிகளில், எவ்வடி யிலேனு மளவாக நான்கு கொண்டுமுடியுஞ் செய்யுளை: ஆசிரியற் சந்த மெனவும், அங்ஙன மளவொவ்வாது முடிவதை: அளவழிசந்த மெனவும் வித்தகர் விளம்புப. என்க.

புளிமாங்காய் தேமா புளிமாங்காய் தேமா
புளிமாங்காய் தேமா புளிமா.

வினையென்றி யம்பு பவசங்கம் யாவும்
வினைவாயொ ழிந்து சுகவாழ்
வினையொன்ற வென்று துறவேறி ஞான
வெளியாகி னங்கு நினையே
நினைநெஞ்சர் நன்கு புரிராச யோக
நிறையுட்ப டர்ந்த படியே
*யெனையன்ற றைந்த முடிவின்று தாவெ
னிறையேகு மார குருவே. சுஎ.

*வினையென்று மிரண்டனுருபு நான்கனுருபாய் மயங்கிற்று.

தேமாங்காய் தேமா தேமாங்காய் தேமா தேமாங்காய்தேமாதேமா.

தானான தான தானான தான தானான தான தானா.

தேவாதி தேவ யோகாதி யோக சேவேற னூர்தர் சேயே
மாவாதர் வாத மேலான மாசில் வாசாம கோச் ரேசா
பாவாணர் கோவி சாகாம கேசை பாலாப கேச வேலா
காவாவெ னுமெ யாயோது தாசர் காசாசை மேவு வாரோ.

புளிமா.

தனன தனன தனன தனன தனன தனன தனனா.

ஒருவ னுருவு முமையி னுருவு மொருதி ருவுரு வினிலே
மருவ நெடிய சரண மயிலின் மலர றுமுக சிவமா
முருகு கமழ முருகு திகழ முருக னெனவும் வருவோர்
கருது னடியை யருளெ னடியர் கவலை வலைபி னுழையார்.

மா மா மா மா மா மா கூவிளம்.

ஆனை யேறு கோவி லார ருட்கு மூர்ந்தை யாண்மையா
லானை யேறு போது லாவு மாண வத்தை வென்றுளார்
பூனை போது லாவு வார்கள் பூவின் மிக்க சூதுடைப்
பூனை போது லாவி டார்கள் பூவு டம்பு போம்வரை. ௭0.

நினைவி லாத நிசசொ ரூப னூர்க்கு முத்தி பந்தமென்
பனவெ நாளு மில்லெபா யாத பசுவின் கண்ண வேயெனு
நினையு நெஞ்சர் பந்தம் வீய நியதி செய்து னணையா
லனக வாழ்க்கை சேர்வ ரெனையு மாண்ம யூர தேவனே. ௭௧.

௭0-௭௧-ம் விருத்தங்களைக் காய் காய் காய் கூவிளமெனப்பிரிக்கின்; அளவடிக் கலிவிருத்தங்களுமாம்.

விளம் மா விளம் மா விளம் விளம் மா.

உலகினி லுளபஃ றெழில்வழி யேயு
முயரதி சயமனைத் தினுக்கும்

பலமலி குருவின் வழிவரு மமல
 பரமவித் தைபெறிதெ ஞவோர்
நலமுளர் குருவின் வழியதைக் கொளவே
 நவையுறு வினைபல புரிவார்
தலமிசை யறியா ரெளிதென நினைவார்
 தமியனுக் கருள்சிவ குருவே. ௭௨.

எக்குரு வினையுஞ் சிவமெனத் தாழ்த
 லேசறு சிவகுரு வினுக்கே
தக்கவந் தனமாத் தழைக்குமென் றறியார்
 சாத்திரத் திருந்ததைப் பிடித்தே
மிக்கவும் பழகி வெறுங்கைய ராவர்
 மிகைதபு குருமொழி நிற்போர்
விக்கின மிலராப் பயனடை வாரெம்
 மெய்யருட் கொடைமடக் குகனே. ௭௩.

யாவரு மறிந்தே வாழ்ந்திடு நிமித்தம்
 யாவையுந் தெரியரன் சீட
பாவம தடைந்தே நினதெதிர் நின்ற
 பாங்கினை யினிதுண ராதா
ராவலி னின்றோர் வளர்த்தவ ரினுமே
 லருட்குரு வெனவறி வாரோ
நாவலர் புகழ்நன் னறைமலர்ப் பாதா
 நான்பணி யொருகுரு மணியே. ௭௪.

தங்குரு தமக்கிங் கெதுகுறை செயினுஞ்
 சழக்கனென் றிகழுவோர் ஞாய
மெங்கணு மிலைதங் குருவினை மதியா
 திருப்பவர் புரிதவ மவமாய்ப்

பொங்கழ னரகு மனுபவித் தலைவார்
பொறியிலர்க் கோதிய குருவுஞ்
சங்கடப் படுமே யெனக்கருள் புரியுந்
தனியிளம் பூரண குருவே. ௭௫.

மந்திரங் கருக்கள் பேய்சில யோக
வழிகளிற் சித்திக ளுண்டாந்
தந்திர வடண ரும்பல புரிந்தார்
தரணியி லவையரு ளாமோ
சிந்தனை குறைந்த திருவினர் வாக்கே
செய்திடு மருள்வினை யாட
லந்தமெய் வலியே யறிவென வுணர்வா
ரனுமுக நினைப்பணி வோரே. ௭௬.

மாந்தரை மயக்கு மாசையின் மீக்கொண்
மனத்தினர் செயல்பல நாளுங்
காந்தனல் கொடுபுக் கிடங்கொளுத் திடுவோன்
கருத்தழிந் தொருபொழு ததிலே
போந்திற முறழு பேயென வுணர்வோர்
புறநெறி போந்துழல் வாரோ
சாந்தநின் னறிவே தலைப்படு பெரியோர்
தவப்பொரு ளொருகுக தேவே. ௭௭.

தன்மதி கெடுத்துப் பிறப்பிறப் பழுத்துந்
தனக்குள வாணவ மாயை
கன்மமிம் மூன்று மறுமெனிற் சிறிதுங்
களங்கமில் பொருளெனத் தன்னைச்
சின்மய மாய்க்காண் ஞானியை யினிதா
டேவநின் னடிதொழு நாளுந்

தன்மய மாகத் தயவுசெய் யாயோ
சரவண பவமுரு கோனே. எஅ.

தனதன தானு தனதன தானு தனதன தானன தானு.

[ஒற்றிலாச்செய்யுள்.]

சரவண சாதா சசிமக ளுதா சததள வாரிச பாதா
சிரவண ரீசா குறமக ணேசா சிவபத தாரக தேவா
வரவண வோரா கமுளவி ராசா வருளொரு ஞானவி னோதா
கரவண வாமே வருகென வேநீ கருணையி னுல்லை யாயே. எகூ.

தேமா கூவிளம் தேமா கூவிளம் தேமா கூவிளம் கூவிளம்.

பெத்த நீத்துயிர் முத்தி நாடியர் பெற்றி யோரென வேயிருந்
தித்த ராதல மூட ராசைகொ ளீன போகநு கர்ந்துசாம்
பித்த ரங்ஙன மூழி தென்பபி ணக்கி லாரிது சொல்வரோ
வத்த னேயயி லத்த னேயெனை யாள னின்கட னேயரோ. அ௦.

மூன்றுஞ்சீர்: புளிமா.

தன்னின் மேலறி பவன்ம காகதி சாரும் வேளையி லுள்ளவா
பின்ன மின்றமர் வுறினு டம்புயிர் போல வின்புபி றங்குவா
னன்ன வேளையில் விலகின் வேறென வாவ லுகலி னீயெனை
நன்னர் மீக்கொளு நிலையில் வையொரு நைவி லாவயி லையனே.

புளிமா கூவிளம் புளிமா கூவிளம் புளிமா கூவிளம் கூவிளம்.

தனன தத்தன தனன தத்தன, தனன தத்தன தானனு.

இருள றைப்பொரு ளறியு மட்டுமொ
ரெழில்வி ளக்கது தேவைபோ
லருண்மு தற்பொரு ளினைய டுத்திடு
மளவு நிட்டைய வாவுவோர்
மருவு முப்பொருண் மறைய நிற்பது
மலர்சி வத்துவ மாமெனு

வொருமு கப்படு வலியை யெற்கரு
ளொளிய யிற்கும ரேசனே. ௮௨.

சீர்வாய்பாடுபேதிக்கினும், ஓசைகெடாதுநடப்பது.

உருவமானவொர்குருவினுணர்வுறுதல்போலருளுருவொடே
வருகு கேசனை வழிப டாதர மார்க்க மேயதி சீக்கிர
மருளு மேனல மதுவ ளேனுய ரருவ மாகிலே யாமெனுந்
தெருளர் நாயக பிரிவுறுவருள் செய்தி நானினி துய்யவே. ௮௩.

தேமா கருவிளம் கருவிளம் புளிமா புளிமா புளிமா புளிமாங்காய்.

தூமா பிரணவ நிலையுரு வருவாச் சுடரோர் சிவலிங்கமும்வீயாப்
பூமா ணயிலிறை யெனவழி படலாம் பொழிலார் மதுராபுரியாட
லாமாறொருமனனைசைஇயபொழுதேயயிலோனவணஞ்செயலாலே
யோமாயிடுதலினெனவுணருணர்வோருளேயேவிழைவார்குகதேவே.

மா விளம் மா விளம் மா விளம் காய்.

சகமுஞ் சரவுயிர் பரமுந் தன்னளி
சால்சன் னிதியென வேசததந்
திகழுந் திருவுள மொன் றுண் டெனவுணர்
தீரர் பவஞ்செய வேதுணியா
ரகமும் புறணியு முணரா விழுதைக
ளயருந் துரிதம பாரமெனப்
புகழுன் கருணையை மறவே னல்லருள்
புரிமெய்ஞ் ஞானச டாநநனே. ௮௫.

தனனத் தனதன தனனத் தனதன, தனனத் தனதன தனதானா.

[சதாக்கரம். (நூறெழுத்து)]

அறிவிற் பெரியவ னழகிற் பெரியவ
னறனிற் பெரியவ னரசாண்மா

நெறியிற் பெரியவ னருளிற் பெரியவ
னிலையிற் பெரியவ னிசமாமோர்
செறிவிற் பெரியவ னிணையற் றுளபல
செயலிற் பெரியவன் முருகோனே
பொறிபற் றவவனை நினையற் புடையவர்
புகழெற் கினியவ ரெனலாமே. அசு.

தனனு தனதன தனனு தனதன, தனனு தனதன தனதானு.
[சதாக்கரம். (ஒற்றிலாநூறெழுத்து)]
பிரமா வுணரிறை மறைமா துணரிறை
பெரியா ருணரிறை துளவேறே
ருரமா ஆுணரிறை மகமா ஆுணரிறை
யுரியோ ருணரிறை யளியாலே
கரமா வுணரிறை கடியா ருணரிறை
கலையா ருணரிறை பெருமாயா
மரமா வகிரிறை யெனுநீ ளயிலனை
மதியா தவரசு டொழியாரே. அஎ.

தனன தானன தனன தானன தனன தானன தானதானு.
[இதுமுதலிரண்டுவிருத்தமும், ஒற்றிலாச்செய்யுள்.]
குமர தாரக பரம போதக குழக ஞானசு டாநநாகா
சமர தானவ பகைவ பாவக சருவ காரண காரணாகா
வமர ராசறு பொருந காவயி லமல பூரண போதுமீதே
யமர ணுவளி யெனுந லோரிட ரடைவ ரோர்வுபி ரேகுநாளே.

எழாஞ்சீர்: தனனதானு.
தொடலை சூடுர வழுக வாவறு சுமுக வாவயி லரசுவாகா
விடலை வாசிகி யிறைவ வாநிறை விமல வாசிவ குமரவாகா
குடிலை வாகுற மகள வாவிடு கொழுந வாவென நவிலுநாவோ
ரடலை யேசெறி சுடலை கூடினு மணுவு மாகுல மடைகிலாரே.

அஅ - அகூ - ம் விருத்தங்களி னடியீற்றுச் சீர்களை இரண்டு மாஞ்சீர்களாகப் பிரிக்கின்; எண்சீர்க் கழிநெடிலடிகளுமாம்.

கருவிளம்கூவிளம்கருவிளம்கூவிளம்கருவிளம்தேமாபுளிமாங்காய்.

கொடியப வங்கெட வுயர்தற வண்டிநல்
குரவுளர் போலே பெரியோர்தா
மிடுவவ ணிந்தடர் சடைமுடி முண்டித
மெனமன்ற யேகூ றெதிலேனுஞ்
சடுதியில் விஞ்சுபு வெறியுண லும்புணர்
தனமுளர் மண்பொன் மறமாகுஞ்
சுடுவச னங்களு மிலரிறை யென்கிறு
துதிமுத லாமோர் முருகோனே. கூ0.

கருவிளம் கூவிளம் கூவிளம் கூவிளம்
கருவிளம் கூவிளம் புளிமாங்காய்.

தனதன தந்தன தானன தந்தன, தனதன தந்தன தனதானு.

சிவதவ வங்கமெ னுநவி லஞ்சடை
சிரமுறு முண்டித மிலேயெல்வீ
ணவமுள சிந்தைய னேமையுயி வன்கலே
யறிவில னென்றுல கினரேசா
வவதிபு ரிந்தறி வானதி றந்தழி
வணவிவ ருந்துவ ரதனுலே
சிவதவ வங்கமெ *நாளும்வி ரும்புவர்
திருநிறை யுங்குக னடியாரே. கூக.

* "நாளும்வி" இதிலுள்ள மகரவொற்றை இவ்வியல் ருO - ம் விருத்தத்தி லெடுத்துக்காட்டிய விதியாற் களைந்து கூவிளமெனக் கொள்க. இதனுனே வல்லின முன்வரப்பெறுத மெல்லின வொற்றுக்களும், மூவினமு முன்வரப்பெறு மிடையின வொற்றுக்களுஞ்

சந்தத்தைச் சிதைக்காவென வறிக. முறையே தந்தச்சத்தமும், தன்ன தையச் சத்தங்களுந் தோன்று விடங்களில் அச்சிதைவின் றென்றும். வல்லினவொற்றேறிவருவது தத்த, மெல்லின வொற்றேறிவருவது தன்ன, இடையினவொற்றேறிவருவது தைய, வல்லின முன்வரப்பெறு மெல்லினவொற்றேறிவருவது தந்த வெனவு மறிக.

கூவிளம் கருவிளம் கருவிளம் கருவிளம் கருவிளம் கருவிளம் தேமா.

[சதாக்கரம். (நூறெழுத்து)]

போனதும் வருவதுங் கருதுத றவிர்ந்துகொள்
புசிப்பினுட் கிடைத்ததை மாந்தி
மேனியி லுடுத்துடை யருந்துத லிரண்டையும்
விருப்புள ரளித்திடி னேற்று
நானென தறுநெறி நனிநடந் துளக்கடி
நணுகியு துறவிக ளுடும்
வானவ ரரசென வருமொரு மழவனை
வணங்கடி யவர்க்கிலை மாலே. ௬௨.

கருவிளம்.

தனதன தனதன தனதன தனதன, தனதன தனதன தனந்தனு.

அரிறபு தவநனி வளர்துற வுடைமையி
லணிபணி நறுமண மணிந்திடா,
துருவிழி மணியொடு தவளநி றவிசித
முவகையு டனிதமு மணிந்துமா
பரிவுகெ ழுகுழவி குணமென வுலகினர்
பணிவிடை முதலிய புரிந்தபோ
துரியப ரமடைக வெனுநலர் கதியிவ
னுமடைய வருள்புரி கடம்பனே. ௬௩.

புளிமா கூவிளங்காய் புளிமா கூவிளங்காய்
தேமா கூவிளங்காய் கூவிளம்.

தனன தந்தனன தனன தந்தனன, தான தந்தனன தந்தன.

பிறவியென்றுபுகல் பிணியை வென்றுநிலை
பேறெனுஞ்சுகம்வ ழங்குமே
னறவி னும்பெரிய னருண்ம ருந்து'தனை
நாளு முண்டுலகி னிங்கையா
மறமெ னும்பெயரை யுடைய பண்டமனு
டான முந்தொடுத லின்றுளோ
துறமு தொண்டரடை பலனு றும்படிசெய்
சூழெ னெஞ்சினுள கந்தனே, ௬௪.

விளம் மா மா காய் மா காய் கனி.

ஒன்றொடி ரண்டு மூன்று காலங்கள் பூசைக்
குரியவென லென்கொலெனினோ
நன்றொடு தீது கூடு ஞாலநடை யாளர்
நலமாக நாளுதிக
வொன்றுத லருமை செய்யும் பாரணைமுன் னோனு
முடையானை யேத்தலினையு
மென்றதஃ தென்பர் சித்த சுத்திகொடு சேயை
யெக்காலு நாடுபவரே, ௬௫.

பீடுடை யாதி யேழா டாதங்க டோன்று
பினுமுன்னு மெண்கடிகையு
மாடியின் றக்கி ணய ரைம்ப முன்னு
மருமைத்தை யாரம்பமாந்
தோடமி லுத்த ராய ணத்தின்பி னுஞ்சிர்
துதைகின்ற கார்த்திகைநலங்

கூடுமோ வணிதிறத்த வைகாசி யென்று
கூறுமதி தோன்றுமுனமும். கூசு.

மார்கழி புரட்டை யானி பங்குனியென் மாதம்
வந்தபினு *மேழொன்பது
சேர்கடி கையுமா தித்த னரவுதொடு வேளை
திகழ்கின்ற மதியையரவஞ்
சார்வழி நீங்கு வேளை யுங்கோளி லஃத்தோ
தயஞ்செய்ம கோதயமுமே
யேர்வளர் புண்ய கால மிக்கால மூழ்கி
யிட்டெந்தை யேத்தனலமாம். கூஎ.

இங்குள்ள கூசு - கூஎ-ம் பாட்டுக்கள்: ஒருவினைகொண்டு முடிதலிற் குளகமாம். "குளகம் பலபாட் டொருவினைகொள்ளும்" என்றார் தண்டியாசிரியரும். எனின், தனிநின்று முடியுஞ்செய்யுண் முத்தக மாமென்க.

அடியீற்றிற் கனிச்சீர்பெறு மிச்செய்யுள்கள்: அங்ஙனம் "நாவலூரர்" என்பதுபோன்ற காய்ச்சீரும் பெறும்.

கூவிளம் கூவிளம் கூவிளம் கூவிளங்காய்
கருவிளம் தேமா புளிமா.

கார்த்திகை சட்டிவை காசிவி சாகமுநன்
கடிதரு தைப்பூ சமுமா
கீர்த்திசெய் பங்குனி யுத்திர மாசறுசுக்
கிரனது வாரங் †குகுவை
நீத்தெழு நற்சிவ ராத்திரி யுங்குகனை
நெடுவழி பாடு புரிவோர்

---

*ஏழொன்பதுசேர்கடிகை=பதினாறுநாழிகை.

†குகுவைநீத்தெழுநற் சிவராத்திரி=அமாவாசை சம்பந்தமில்லாத மஹாசிவராத்திரி. குகு=அமாவாசை.

பூர்த்திசெய் மெய்யறி வுள்ளவர் சன்னிதியிற்
புகுதுவர் வீடெய் துவரே. ௬௮.

சேயைமு னிட்டொரு காலொரு நூவளவே
செயுமெத னுக்கு மனப்போ
லேயுத வுங்கட னுள்ளவ னென்றறிவே
னிதவுடை யச்சே யினையே
நோயறு மாநட் ரேயத னைஞரே
நுகர்முன மின்பே நுகர்வீ
ராயநல் வத்துக ளாலுமு ளாலுமவற்
ககமகிழ் வாமா பணியே, ௬௯.

கூவிளங்காய் கூவிளங்காய் கூவிளங்காய் கூவிளங்காய்
கூவிளங்காய் கூவிளங்காய் தேமா.

தந்தனன தந்தனன தந்தனன தந்தனன, தந்தனன தந்தனன தானா.

மண்டுதிரை யென்பதரு ளென்பதில டங்கவது
வண்பதிய டங்கவிரு ளோயீ
பண்டுமல *மிஞ்சறிவ டங்கவது தண்கருணை
பம்பிறைய டங்கவரு ளாலே
கண்டவர றிந்தடைசி தப்பரந டஞ்செயொரு
கந்தகுக நின்கழல்கள் பாடோர்
தொண்டினிது தந்தமுறை யென்றனையு மிந்தவுட
றுஞ்சிடுமு னுண்டுகொள வாவே. ௭௦௦.

---

*மிஞ்சுதல்=மிகுதல். இது "மிஞ்சுதல் விஞ்சுதன் மீமிசை மிக்கது" எனப் பிங்கலநிகண்டிலும் வருவது காண்க.

தேமாங்கனி கூவிளம் கூவிளம் கூவிளங்காய்
தேமாங்கனி கூவிளம் கூவிளங்காய்.
தாந்தாந்தன தந்தன தந்தன தந்தனனு
தாந்தாந்தன தந்தன தந்தனனு.
[சதாக்ஷரம். (நூறெழுத்து)]

தீங்காஞ்செய னன்கற னன்செய னன்குறவே
தேம்பாண்குழ கன்குக னங்குறவே
ளாங்காந்திமி குந்தவு டம்பிடி யன்றவமா
யாண்டூன்றிறை யென்றுபு கன்றவமா
யோங்கேண்டிய ரென்றறை கின்றபெ ருங்கடலே
யோம்போம்புணை கொண்டுக டந்திடலே
நாங்காண்பல னென்றுது ணிந்தவர் தம்பதியே
நான்சேர்ந்திடு மொண்பதி யென்பதியே. ௧௦௧,

எண்சீர்க்கழிநெடிலடியான்வருவன.
காய் காய் மா தேமா காய் காய் மா தேமா.

நெடியபசுந் தோகையுடை மயில்காள் கேளீர்
நின்மலனைச் சின்மயனாய் நிகரில் லானை
யடியவர்கட் கெளியவனை யாநந் தத்தே
னெங்கு மிருப்பவனை யடியே னுள்ளே
குடிகொளறி வாயென்று முளவோர் செவ்வேள்
குழகுமயி லூர்தியெனு நாமந் தாங்க
வடிவுடைநுங் குலஞ்செய்த தவந்தா னென்னே
மாறுநும் மாண்புடைமை யென்னே யென்னே. ௧௦௨.

காலமறி ஞானிகள்போ லுதயந் தேர்ந்து
களிபெருகக் கூவுநறுங் கோழி காளோ
தூலமறி புன்மதியே துறுமி யாடு
துகளுள்ளா ரெத்துணையுந் தெரியொண் ணுத

குறுமீனே சோட்டிறைவ னெனுமீ டில்லான்
கோதிலறு மீன்மைந்த னெனும்பேர் தாங்கச்
சிறுமீனே பெருமீனே யனந்த மாகத்
திகழ்பெரிய விண்ணிலொளி திளைக்க வீசு
மறுமீனே நுங்களருந் தவந்தா னென்னே
யழியாநும் மாண்புடைமை யென்னே யென்னே. க0சு.

ஆண்டன்மை பெண்டன்மை யலிபின் றன்மை
யனைத்துமிருந் தவ்வியல்பொன் றில்லா மேலோன்
காண்டன்மை யாளரருட் கண்ணுய் நாநா
கலையியுஞ் சீராளன் கரிய கால
னேண்டன்மை யெருக்கியசெங் காலன் சேயோ
னெனும்பெரிய சாமிவிசா கப்பே ரேற்கச்
சேண்டன்மை சிறந்துசுடர் விசாக மேநீ
செய்ததவ மென்னேசால் பென்னே யென்னே. க0எ.

கொலைபுரியுங் கூரியவன் படையே தாங்கு
குன்றவர்கா ளெம்பெருமா னடியார் ஞான
நிலைபுரியும் பேரருளோ னெடுங்கூர் வேல
னிறைபரமற் கோம்பொருள்சொல் லாசா னென்பா
னலைபுரியுங் கார்கோள்சூ ழவனி மீதே
ரார்குறவர் மகள்கொண்க னெனும்பேர் தாங்கச்
சிலைபுரிநுங் குலஞ்செய்த தவந்தா னென்னே
சிறுமையினும் மாண்புடைமை யென்னே யென்னே.

சிலங்கொள் வோரெல்லாம் வணங்கி யாணர்த்
தேவர்கா ளெம்பெருமா னிணையில் லாதான்
காலங்கள் கடந்தபிரா னுருவில் லாதான்
கருணையே யுருவாக வுடைய தூயோ

ஞலங்கொள் கண்டமுளான் மகனைய் நுங்கட்
கருள்சேனை பதியென்னும் பெயரோன் றேற்கக்
கோலங்கொ ளீயிரிழைத் துளநோன் பென்னே
குன்றநும் மாண்புடைமை யென்னே யென்னே. ௧௦௬.

ஒருருவு மோர்பெயரு மிலியென் றேதெம்
முடையானை யொளிர்சுப்ர மணிய னெல்லாப்
பாருயிரு மாள்பொருட்டே யவையெண் ணெண்ணப்
பலதாங்கி நிற்கின்றான் பார்வா ழன்பீர்
சீருருவுஞ் சீர்ப்பெயரு மிலாத வீன
தெய்வப்பேர் வேறுபெயர் தாங்கா தன்னே
னோருயரும் பேர்தாங்கி யேத்த நீவி
ரென்னதவஞ் செய்தீரோ முன்னை நாளில். ௧௧௦.

அசைவற்ற தெய்வமெனச் செறிகு கேசற்
கசைவான திருநடன முளதென் றேத
லிசைவற்ற தீர்வையெனி னிறைவற் கந்த
விருவகையு மிலையென்று லாட்ட வாடு
நசையுற்ற வுலகில்லை யதுதா னில்லா
நறும்பரமு மிலையென்று மதனை லீசன்
வசையற்ற ஞானியைப்போ லிரண்டு நீரு
மரீஇயிருப் பானென்பார் மதியுள் ளாரே. ௧௧௧.

நனவிற்கா முறுமுலகத் திழிபோ கத்தை
நாணுளு நச்சுமவா நீங்கா தார்க்குக்
கனவித்தை யினர்ஞான நந்த நூல்கள்
கழறுநிலை கைவருமோ துவித நோக்கா
மனவித்தி யாசத்திற் கியைந்த மூர்த்த
வழிபாடே கைவருமென் றறையு மாவிற்

பவவிர்த்தி யுடையாரத் தாவித யோகாற்
பார்க்கவரு குகனேயென் பரிவா யுள்ளான். ௧௧௨.

தானதன தானதன தனனந் தான
தானதன தானதன தனனந் தான.

நீரொலிபோ லாரவர்கூ டொலியுஞ் சார்போர்
நீடியரா லாடொலிகூ வொலியுங் காடார்
கார்ரொலிபோ லாநமன வொலியுஞ் சாவே
காண்முழவே ணர்முருடு வொலியும் போமா
பேரொலியி நூபுரமார் சரணன் சூர்மா
பீறயிலோ னேயெனுளே பெருகன் பாலே
கீரொலியா லேயவனி ரடியும் பாடோர்
கேடிலியா னேனதுளே கிளரன் பீரே. ௧௧௩.

காய் காய் காய் மா காய் காய் காய் மா,

சிவசத்தி யெனுமதற்கு முப்மலமுந் தூலஞ்
செறியவற்றிற் கநுசூக்க முயிர்க்கதுவுந் தூலஞ்
சிவசத்திக் குயிர்சூக்க மவ்வுயிருங் குகனுந்
தேவனது சத்தியினுக் கேதூல மதுவுஞ்
சிவனுக்குச் சூக்கமது வுங்குகற்குத் தூலந்
திகழ்குகனவ் வரியசத்திக் கேசூக்க மெனவோர்
சிவரவ னைகவெனிற் சிவசுதந் தரத்தைச்
சேரிறைவற் களித்திடுவார் தொன்ஞானர்வி னமே. ௧௧௪.

தல்முறைநீ ருபி நமலே சலமுறையா சலம்வாழ்
சரவுபிருந் தலமுறையா வெனுமதுபோ லாகாம்
புல்முடையார் தவநடைசேர் மனமடையார் சிவபா
புண்ணியமுள் ளாருலகோர் வினைவழிபி லுழையார்

நலமுடைமி ரிவையுணர்ந்து நசை*பனைதைத் திருத்தி
ஞாலநுழை யாமலருண் ஞானநுழைந் திருக்க
மலமகிகோ பாலபிரான் வாரயிற்கை மழவன
மலரடியை நனிநினைமின் வருபகலு மிரவும். ௬௧௫.

தேமா கூவிளம் தேமா கூவிளங்காய்
புளிமா கூவிளம் தேமா கூவிளங்காய்.

தன்ன தானன தந்த தானதனு, தனன தானன தந்த தானதனு

தொன்மை நூலள வின்றி யோதினுமே
சுகிர்த மாவிர தஞ்செய் தாலுமரோ
புன்மை மாறிட வென்று பாசனையே
புரிய மீசுர னண்பி லாவிடினோர்
நன்மை யேதென வெந்தை மாயசதா
நடன பேதரு கந்த மாதனவேண்
மென்மை யீரடி நம்பு மாதவரே
விமல மாமரு ளின்ப ருதவரே. ௬௧௬.

விளம். ஈறு: புளிமா.

பூரண வருவவு பாசனை யினுமொரு
புரையுமி லுருவவு பாசனை யெளிதென
வாரண மொழிவண மாசறு பரிவுட
னயருரு வகருமம் யாவுமா கோசர
காரண னாகிய கடவுள டைகவென்னோர்
கடமையை யுடையவர் கருமிக ளோவ்லர்

*மனமென்ப திரண்டனுருபேற்புழி மனத்தையென வாதல்போலாகாது, இங்ஙன மனதென்ப தவ்வுருபேற்புழி "மனதை" எனவானதறிக. இது அழுதை, விழுதை, பொழுதை யென வருதலொக்கும். இவ்வாறு, "மனதின்வண்ணம்" "பேய்மனதையண்டிநான்" என்றார் பிறருமெனவறிக.

சூரண வாநெறி யீதென விழைபவர்
தொழுமுரு காவெனை வளைகவு னருளே. ககஎ.

மா விளம் விளம் மா மா விளம் விளம் மா.

அவனை யேமறந் தாற்றறன் செயலென்
றுமதே தெருமுதிப் புட னுலப்பு
மெவனு நானிலை யெனறி ழைப் பானே
லேத மின்னெறி யேயுள னவனே
மவுனி யாவெனல் லாஞ்சிவன் செயலா
வழங்க யோக்கிய னெனுமுறை யோர்வோர்
சிவப ரம்பொரு ளீதென வணக்கஞ்
செய்வி சாகவெ னைக்கொள நினையே. ககஅ.

தனத்த தன்னன தனதன தனனு,தனத்த தன்னன தனதன தனனு.

திறத்த மண்ணென மழையென விரிவே
திளைத்த விண்ணென வளியென வெரியா
நிறத்து மின்னென வுளபொருள் களின்மே
னிகழ்த்து மின்னுயிர் களினிறை பெரியோன்
மறத்தை யெண்ணுநர் புரிசெய றடைதா
*வலிக்க முன்னுவ திலையி தை யுடையோர்
குறத்தி மன்னவ குருபர வருளே
கொடுத்தி யென்னொரு பரிவெனை நுழையே. ககக.

மா.

நெஞ்சி னோர்பு விருத்தி மீறி நிகழுஞ் சீவச் செயலு ளோர்க
ளஞ்சி டாம விழைப்ப வெல்லா மாதி சிவனின் செயலென் றோதின்

---

* வலித்தல்=பேசுதல். என்னை ? "வலித்தலே *** பேசல்" என்பது தகரவெதுகை. இச்சொற்றனே வலத்தலெனவும், வழுத்தலெனவுந் திரிந்து நிகழ்ந்தவழி அகராதிக்காரரு மவ்வகராதியு ளவற்றைவரைந் தப்பொருட் படுத்தினர்.

விஞ்சு நரகத் தீயில் வேவர் மீண்ட னந்த யோனி சேர்வர்
கிஞ்ச முந்தப் பாரென்போர்கள்கேண்மைவேலனடிமையானே.

கூவிளம் கூவிளம் புளிமா கருவிளம்
கூவிளம் கூவிளம் புளிமா கருவிளம்.

தானன தானன தனனத் தனத்தன
தானன தானன தனனத் தனத்தன.

கோமள வார்முலை மலையைச் சுமப்பவர்
கோசிக மேகலை யனையிற் றரிப்பவர்
மாமண நாண்மலர் குழலிற் றரிப்பவர்
பாலையி லாடவர் மடியைப் பிடிப்பவ
ராமட மாதரா யறவிட் டருட்கட
லாடிட வேதினை யடியர்க் ககப்படு
போமய வேலவ னடியைத் துதித்தனு
மோர்தினை வாதனு முறுவர்க் குழுக்கியம். கூக.

கூவிளம் கருவிளம் கூவிளம் கூவிளம்
கூவிளம் கருவிளம் கூவிளம் கூவிளம்.

தையன தனதனத் தானனத் தானன
தையன தனதனத் தானனத் தானன.

வள்ளியை மணமுடித் தோன்மலர்ப் பாதமே
வல்லையி லுறனயப் பாமெனச் சூழுமா
வொள்ளிய வெயிறுடைக் கோவணத் தாருமே
யுவ்வியி னிமிர்சடைத் தாபதத் தாருமே
தெள்ளிய மதிமறைக் காடுருப் பாருமே
செவ்விய தலைமழித் தேகறத் தாருமே
யெள்ளிய மனமதைத் தானடக் கார்களே
யெவ்வித மதிமதர்ப் பேறுநட் பாளரே. கஉஉ.

தேமா கருவிளம் தேமா கூவிளம் தேமா கருவிளம் தேமா கூவிளம்.

தானா தனதன தத்த தத்தன, தானா தனதன தத்த தத்தன.

நாமா ரெனுவறி யத்தி லைப்பவர்
நாநா விகாரம றாத்த ணைத்திடு
கோபா னனுபய னர்ப்பு தப்பொறி
கோனு தபோதகன் விட்டு புத்திரி
சீபா னிராகுல சித்த னைப்பறு
சேயோ னருமலி பொற்ப தத்தினை
யோபா சிலாதெனின் முர்பி றப்புட
னேயா வுமேயறி நிட்டை பற்றுவர். ௧௨௩.

புளிமா கூவிளம் தேமா கூவிளம் புளிமா கூவிளம் தேமா கூவிளம்.

தனன தந்தன தானா தானன தனன தந்தன தானா தானன.

குமர சம்புது கேசா வாருணி குரவ கிப்புரி பூணீ டோளிறை
யமரர் குப்பிடு மாகீ தேனினு மமுதி னுஞ்சுவை யாபோர் பூரண
சமர சாப்பெற நாயே னுடிது தருணம் வந்தனை தயியா யோகன
திமிர மங்குறமா தேசே தரு திறநெடுப்படை போபோர் வொடு.

கருவிளம் கருவிளம் கருவிளம் கருவிளம்
தேமா தேமா புளிமாங்காய் கூவிளம்.

தனத்தன தனத்தன தனத்தன தனத்தன
தத்த தான தனத்தத்த தான்ன.

[அட்டோத்தரசதாக்கரம். (நூற்றெட்டெழுத்து)]

சிறப்புறு கடைச்சவை தனிற்றமிழ் வளர்த்தமா
செப்பு கீர னினைத்திட்ட வாறணி
விறப்புறு திருப்பர மலைத்தலை யினிற்கரர்
பெச்சு நீரா யழைத்திட்ட கோவவன்

மறப்புறு நினைப்பற விருப்பொடு குளித்ததின்
மட்டி லாம னினைத்திட்ட வேலவ
பிறப்பறு பரத்துவ வருட்குரு நிலத்துழல்
பிச்ச னேனை வளைத்துக்கொள் யோகினே. கஉரு.

கருவிளம் கருவிளம் கருவிளம் புளிமா
கருவிளம் கருவிளம் கருவிளம் புளிமா.

தனதன தனதன தனதன தனன, தனதன தனதன தனதன தனன.

[ஐகாரமொழிந்த நெடிலு மொற்றுமிலாச்செய்யுள்.]

அருணிலே புகவென வறுதின நினையு
மளியுடை யெனையுண வயிலிறை வருக
கருணிலே தெறுபர சிவகுரு வருக
கடகரி முகனிளே யவனனி வருக
தெருணிலே யினரக நடுமணி வருக
தினையிடி நுகரொரு குறைவிலி வருக
பொருணிலே யுணரலே யுணிதுணா வருக
புதுமல ரணியணி மழமுனி வருக. கஉசு.

புளிமாங்கனி புளிமாங்கனி புளியாங்கனி தேமா
தேமாங்கனி தேமாங்கனி தேமாங்கனி தேமா.

சடமாசுக ளழிவாகுமொர் சுடுகானிடை நின்றே
தத்தத்தன தத்தத்தன தத்தத்தன தந்தா
தடதாகிட தடதாகிட தடதாகிட தந்தா
தாத்தத்தன தாத்தத்தன தாத்தத்தன வென்றே
நடமாடிறை யருண்மாசறு மழவேயுமை மைந்தா
நச்சுக்குண ரச்சப்பட மொட்டுத்தடி கொண்டே
வடவானல மெனவேவரும் யமதூதுவர் வந்தால்
வாட்டப்பட வாட்டைப்புரி யேத்தெற்குளி ருந்தே.

வாய்பாடு பேதிக்கினு மோசைகெடாது நடப்பது.

[நாற்கூற்றிருக்கை.]

ஒருபூரண சிவனார்செவி யொருநுண்பொருள் சொன்னு
யுரமாரரு ளிருதேவிய ரொருசேர விழைந்தா
யொருகூருட லிருகூறுற வொளிவேலெறி தந்தா
யுணர்வேறிடு முத்தேவரு மிருதாடொழ நின்று
யொருமாமுனி யறிவேயுற வொருபோதனை செய்தா
யுரைமாமறை யிருசம்பவர் முத்தீமுத லானுய்
திருநான்முகன் முக்கண்ணுள னிருமாலுரு வொன்றுத்
திகழுந்திரு வுருவாயினை யெனையும்படர் குகனே. கஉஅ.

நாற்கூற்றிருக்கைச் சித்திரம்.



| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| | | | க | | | |
| | | க | உ | க | | |
| | க | உ | ௩ | உ | க | |
| க | உ | ௩ | ௪ | ௩ | உ | க |

கருவிளமும், புளிமாவும்.

தனதனத் தனனு தனதனத் தன்னு
தனதனத் தனனு தனதனத் தனனு.

துதிரசத் திருவே சுடர்தனிக் குருவே
சுவைமிகுத் துளதூ வுடையபுத் தமுதே
யதிரசப் பயமே யமலமுப் பழமே
யகிலசக் கரையே யறுமுகத் திறையே

மதிரசப் புயலே மதவருட் கடலே
வரதநற் கரனே மலர்முகக் குகனே
முதிரசத் தியனு யுளவெனைப் புரிவான்
முனமடக் கிடுமோர் நிலையினிற் றிணியே. கஉகு.

தனதனந் தனனு தனதனந் தனனு
தனதனந் தனனு தனதனந் தனனு.

வினைபுரிந் திடுசா திகுலமென் றுளவோ
வினையிறந் திடுமா மதிவனந் தனிலே
யுனைவிழைந் தறியா ரெவர்களுங் கடையா
யுளர்நறுங் குணநீ தியின்மிகுந் தறிவா
லுனைவிழைந் தறிவோ ரெவர்களுந் தலையா
யுளரெனுந் துணிபே யுடையவென் பதியே
முனைவரன் புடனே பணியுநன் குகநான்
முழுதுமின் கனியே கொளவெழுந் தருளே. கஙo.

புளிமா-கூவிளங்காய் தேமா கூவிளம்
புளிமா கூவிளங்காய் தேமா கூவிளம்.

தனன தானதன தான தானனு தனன தானதன தான தானனு.

புகழ்பி ராமணர்க ளான மாசிலார் புகரி லாதகதி மேவு வாரலார்
நிகம போதவுத வார்பிறருவர் நிசமெனுமிருதி கூறு நேருளே
யகமி லாதசிவ யோக ரேபிரா மணரெ னுநவிலொர் தீர்வையாமனே
நிகழுறு தணவுஞேயவேலனேயெனைவிடாதுகொளும்வேதநாதனே

கருவிளமும், கூவிளங்காயும்.

தனதன *தத்ததனு தனதன தத்ததனு
தனதன தத்ததனு தனதன தத்ததனு.

வடமொழி யிற்சதுமா மறைபயி றற்கிழிவா
மரபுளர் கட்கதிகா ரமிலையெ னச்சொலினு

மிடறு பத்திமைஞா னமிவைகள் சொற்றிடு நா
னினியத மிழ்க்கவியர் திகளில வர்க்கிலேயோ
சுடர்பர வைக்கினியா ரடியவர் மெய்ப்பெயரே
சொனபதி கத்திடையே யுளர்குல மெக்குலமா
மடமதொ ழித்துணர்வா லுணர்திரெ னச்சொலுமேன்
மதியர்ப ழிச்சுமகா குமரனெ னைக்கொளுமே. கநஉ.

* தத்தனஞ வெனுங்குழிப்பு: "தத்ததஞ" என வரினும் வரலாமென வறிவித்த திதென்க. தனவியைந்து "தத்தன" தனனவியைந்து "தத்தனன" எனவாமாறு, தனஞவியைந்து "தத்தனஞ" எனவாம். தனனன என வியைவதில்லை. பிறவுமன்ன.

கூவிளமும், கூவிளங்காயும்.

மீசைந ரைத்ததுபோ லாசைந ரைத்தவரே
மேதைய ராமுதியோர் மேனித ளர்ந்ததுபோற்
பாசம னத்தெழுபே மேதளர் வானவரே
பாசறை தீர்பெரியோ ராசது சேர்சிறியோர்
நீசரெ னப்படுவார் பூமிசை மற்றவரென்
னீதியை யுய்த்துணர்வோர் யாவரு மற்புதனுர்
தாசரெ னப்படுவா ரன்னவ ராவலொடே
தாழொரு கந்தபிரா னேயெனை யுண்டிடுமே. கநந.

புளிமா.

உடலே பெரிதா யுதரஞ் சழிவா
யுளருஞ் சனைதா லுளரும் பொருளே
யடர்பா வுளரும் பெரியோ ரலரே
யறிவா யவரும் பொருளே யுடையோ
ருடலே சிறிதாய் வயதே குறைவா
யுளரென் றிடினும் பெரியோ ரவரே

படல்வே லணையுந் தெரிவோ ரவரே
யறிவா லறிவீர் மனுவா னவரே. கந-ச.

கூவிளங்காய் கூவிளங்காய் கூவிளங்காய் கூவிளங்காய்
கருவிளங்காய் கூவிளங்காய் கருவிளங்காய் கூவிளங்காய்.

தானதந்த தானதந்த தானதந்த தானதந்த
தனனதன தானதன தனனதன தானதன.

தாதுவிஞ்சு சேடிருந்து தாதடங்கு போதுசம்பு
சரணமுற ஞானகுரு நெறியடைமி னோடியெனு
வோதுகின்ற நூல்விரும்பு ஞாலமைந்த ரேசுமந்த
வுடலுறுதி யோவிடையு மழிவடையு பேயதனுன்
மாதுகொஞ்சு பீடைமங்க வோடியன்பர் தேடுகந்தன்
மதிமருவு ஞானிகள்சொல் வழிநையவினை வாயடைவீர்
கோதுகொன்று ளார்விரும்பு வேதமிந்த வாறியம்பல்
குறைவறுவி வேகமென வறிநருமனேகரரோ. கந-ரு.

புளிமாங்காய் கருவிளங்காய் கருவிளங்காய் கருவிளங்காய்
கருவிளங்காய் கருவிளங்காய் புளிமா தேமா.

அறியாமை கடுத்தறிரி பெனுங்கசடு தவிர்ந்துநிச
மறைசுருதி பிடித்துநவில் குருமுன் னுகிக்
குறியாத குறிப்பொருளை யுரிமையொடு முணர்ந்துறுதி
கொடுகருவி முதலியன தழையா நீர்மை
பெறுமாறு மனமடக்கி யிருப்பவர்கள் விரும்புபரப்
பிரமமெனுந் திருமுருகப் பெருமாள் கூறு
மறைநாடி யிரவுபகல் வழிபடுமென் கவலையற
வளிப்பதவன் செயலெனவென் றுணிபே மன்னே. கந-சு.

தேமா கூவிளம் புளிமா கூவிளம் தேமா கூவிளம் புளிமா கூவிளம்.
தான தந்தன தனன தந்தன தான தந்தன தன்ன தந்தன.

ஆதி முன்பதி சிகர மந்தர
மாசி லின்பருள் வகர மொன்றுற
வோதி ஞெண்சிவ மெனவெ ழுந்திடு
மூறு கொன்றிடு மதன றும்பொரு
ளேதின் மங்களம் வசிய மென்றெழு
மேயி தென்குரு பெயரு ளொன்றென
வாத லுந்தெரி பவர்கள் கந்தன
தாடல் கண்டிட வடிவ ணங்குக. கநஎ.

இவ்வளவில் வந்துள்ள சந்த பேதங்களன்றிப் பிறபேதங்களும் எண்சீரில் வரும். அவை யெங்ஙனமெனின் ; அடுத்த கலியியலில் கூ௯-முதல் கூகூ-வரையுள்ளவிருத்தங்களொழிந்த பிற அளவடிவிருத்தங்களுட் சிலவற்றி னடிச்சந்தங்க ளிரட்டும் வழியிலென்க.

ஒன்பதின்சீர்க்கழிநெடிலடியான்வருவன.
புளிமா கூவிளம் புளிமா கூவிளம்
புளிமா கூவிளம் புளிமா கூவிளம் கருவிளம்.

கலந்த வைந்தின கரந்தி ரோதைம
கரம்ப ழுங்கறை யிரண்டி ருப்பதி ய*வங்கியாம்
மலந்த ளும்படி விரும்பு வோர்தலை
பலந்தி ரோதைக ளிரண்டு மேகடை யமர்ந்திடச்
சலந்து கோடலு மிரண்டெ னும்பதி
கனிந்து கோடலு மருஞ்சி காரமெ னுமொன்றையே
மலர்ந்து கோடலு மியைந்த வாறெனும்
வரம்பர் நாடொரு கடம்ப னேயெனை யுணும்பிரான்.

*அங்கத்தையுடையது அங்கி. அஃதான்மா.

கருவிளங்காய் தேமா தேமா கருவிளங்காய் தேமா தேமா
கருவிளங்காய் தேமா கூவிளம்.

தனனதன தான தான தனனதன தான தான
தனனதன தான தானனு.

†சகரமுத லாறு மாசில் பதியகர மாவ தாவி
சரதநம பாச மாமெலா
நிகழுமொழி மேனி,லாவு பொருள்சரவ ணேச னென
நிருமலன யாவெ னுருமே
பகரிவையொ டோமு மேறி னெடியதச மாம்வி சேட
பலனுறவ வாவு மூழுளோர்
புகழுமைதை யேனும் வீர வுறுதியொடு கோடி யேசெய்
புனிதமுறின் வீடு மாள்வரே. கநகூ.

கூவிளம் தேமா கூவிளம் தேமா
கருவிளம் தேமா கூவிளம் கூவிளம் கூவிளம்.

தானன தந்த தானன தன்ன,தனதன தந்தத் தந்தன தானன தானனு.

[சதாக்கரம். (நூறெழுத்து)]

வாசக மந்த மானத மென்னும்
வகையினி லொன்றிற் கொன்றுயர் வாய்நல மீயுமா
னுசமி லந்த வாசக மென்ன
நவைநசை துன்பச் சந்தெறு மாமநு வோதிடா

---

†இவ்வாறு திருப்பரங்கிரிப்புராணம் அ - வது சருக்கம் உகூ - வது செய்யுளில், "நவ்வாதிய சவ்வாதி நலஞ்சே ரெழுத்தோதி-யெவ்வாறருள்பெற்றார்" எனவருவதுங்காண்க. "இந்த, சகூகூ - வது செய்யுளில் ஸ்ரீசுப்பிரமணிய சடக்கரமும், பொருளும், சடக்கரத்தில் நவாக்கரமும்,சடக்கரத்தில் தசாக்கரமுங் கூறி அவற்றுளொன்றனை யேனுஞ் செபிக்கு மளவும், பயனும் விளக்கப்பட்டன.

தாசறு மந்த மானத மென்னு
மடைவின்மு யன்றெட் பம்பெறு வீரிலை வேலோடே
யேசறு கந்த னெனமின்னி
யெளிவரு மெந்தைக் கின்புள ராமடி யார்களே. கச0.

கூவிளம் கருவிளம் புளிமாங்காய் கூவிளம்
கூவிளம் கருவிளம் புளிமாங்காய் கூவிளம் கூவிளம்.

நானன நனநன நனநத்த நர்தநந்
நானன நனநன நனநத்த நத்தன நந்தன.

வார்கர விரல்களில் வளர்சுட்டி லொண்கணென்
வாசக செபமணி தனைவைத்து ருட்டுக நன்குநீ
ளோர்விரன் மிசையொலி யளவிட்டு மந்தமன்
ணோர்புகழ் செபமணி தனைவைத்து ருட்டுக மஞ்சேர்
வார்பணி விரன்மிசை யெழின்மிக்கி லங்குநன்
மானத செபமணி தனைவைத்து ருட்டுக மந்தபூ
வார்விலர் வல்முற வுமுருட்டு கென்பரம்
பாரண வறுமுக விறைவற்கு ரித்தாள வன்பரே. கசக.

இதன் குறிப்பில் நா - ந வருமிடங்களில் தா - த வருமாயின்; நான்காஞ்சீ ரந்தமும், ஐந்தாஞ்சீ ராதியும் 'தந்தா' என நிகழும். அஃ திங்கேலாது. ஆகலின், இப்பாப்போன்று நிகழ் பாக்கட் கிடுகுறிப் பில் நகரமே வரல்வேண்டுமெனை வறிக.

---

## பதின்சீர்க்கழிநெடிலடியான்வருவன.

தேமா.

பூத லோக போக வாசை யேயு ளார்பு
கன்ற மந்தி ரங்க ளோதல்
போத சந்த்ர நாடி யோடு போழ்தும் லோக
போக மேதும் வேண்டி டாதார்

நிதில் பாநு நாடி போடு போதார் வேத
　　சித்தி முத்தி வேண்டு வோர்கள்
கோதி லங்கி நாடி யோடு போது மென்று
　　கூறு வார்கு கோசர் தாசர். ௧௪௨.

கருவிளம் கூவிளம் கூவிளம் கருவிளம் தேமாங்காய்
கருவிளம் கூவிளம் கூவிளம் கருவிளம் தேமாங்காய்.

வாதகு கேசவ ணக்கமு னவனது சட்கோண
　　வரைபொறி செய்துகு வித்திடு சலமதை வற்றுக
தரமுறு கங்கைகோ தாவரி நருமதை காவேரி
　　தகையுறு சிந்துச ரச்வதி யமுனைச தாசார
நிறைகு கிட்டிணி தாமிர பருணிநெ டுஞ்சிரே
　　¶ நிகழொரு † பத்திரி யாகவு மனைகணி சஞ்சேரன்,
சரவண தீர்த்தமொ டிவெளி முழுகுக தப்பாது
　　தவளவி பூதிநி ரப்பிட லணிதுக தக்காரே. ௧௪௩.

முதலாம் நான்கா மாறு மொன்பதாஞ் சீர்கள்: கூவிளம்.

காலையின் மாலையி லங்கநி யாசமு மஞ்சேறு
　　கையினி யாசமு நன்குபு ரிந்துயர் காங்கேயன்
மூலம னுச்செபி யாதவர் தஞ்செப முற்றான்
　　முட்டடை யும்பல னுந்துறை வாயயின் மொய்ம்பீசன்
சிலவெ ழுத்துவ ணாந்துதி கழ்ந்திடு சட்கோணஞ்
　　சேர்வழி பாடிம தேவித மென்பர ருஞ்சேயோன்
போலொரு மெய்ப்பொருண் மெய்க்குரு வுண்டுகொலென்றோரும்
　　புண்ணிய நண்ணிய கண்ணிய வின்புபொ லிந்தோரே.

---

¶ நிகழ்தல்=ஒளிவிடுதல். இது "துளங்குதனிகழ்தல் சுடர்தல் *** என்றிவை யொளிவிடலாகும்" எனப் பிங்கலநிகண்டினும் வருவது காண்க. † பத்திரி=துங்கபத்திரி. இது தலைக்குறை.

தேமா விளம் விளம் விளம் மா மா விளம் விளம் விளம் மா.

நல்லை யாசன மளித்திடல் கைகழு நீர்தா
னல்கல் கால்கழு நீர்தரன் முக்குடி நீர்தா
னெல்லை யீந்திட லொண்சல பாட்டுத லாடை
யுடுத்தன் முப்புரி நூலிடல் சந்தனம் பூசல்
வல்லை மாமலர் சார்த்துத லட்சதை தூவன்
மாசி லாப்புகை தீபிகை வெண்கருப் பூரந்
தொல்லை யில்லமு தந்துவர்க் காய்மனு மலிரன்
சோட சங்குக னுக்கிடு நருங்களி துய்ப்பார். கூஙரு.

கூவிளம் கருவிளம் கூவிளம் கூவிளம் கருவிளம் கூவிளம்
" கூவிளம் கருவிளம் கூவிளம் புளிமாங்காய்.

தத்தன தனதன தந்தன தத்தன தனதன தந்தன
தத்தன தனதன தந்தன தனதானா.

பத்தவ மரிநுடி துந்துபி கத்திரி திமிலைக டிண்டிமம்
வட்டணை சிறுபறை மண்கணை பலதாமே
தித்திமி திமிதிமி தெந்தன டட்டட டடடட டிண்டிடு
தெய்த்தன வெனவெளி வந்தருள் குகதேவா
நித்தப ரமகுரு சங்கர சித்திர மயில்வரு சுந்தர
நிட்கள சரவண சம்ப்ரம வயிலீசா
வித்தகா யினிலுனை நம்பிய பத்தனை னதுதுய ரந்துமி
யிட்டம ருவவருளென்றறை யெனையாளே. கூசு.

இப்பதின்சீரில், இங்குவந்த சந்தபேதங்களன்றிப் பிறபேதங்களும் வரும். அவையெங்ஙனமெனின்; அடுத்த கலியியலில்வரு நெடிலடிக் கலிநிலைத்துறைகளுட் சிலவற்றி னடிச்சந்தங்க ளிரட்டும் வழியிலென்க.

## பதினோருசீர்க்கழிநெடிலடியான்வருவது.

புளிமா கூவிளங்காய் புளிமா கூவிளங்காய்
புளிமா கூவிளங்காய் கூவிளம்
புளிமா தேமா புளிமாங்காய் கூவிளம்.

தனன தந்ததன தனன தந்ததன தனன தந்ததன தந்தனு
தனன தந்த தனத்தந்த தானனு.

உலக வாட்டுமன முலைந்து கின்றவனை மொழிவ தின்றுமல பந்தமே
யுயரு மென்று நினைக்கின்ற வேழையே
னலகி றந்தவுன தடியை யடைந்தாக பனுக வந்தருள்வ தெந்தநா
ளறைந்தி யண்டர் துதிக்கின்ற பாதனே
பிலகு தங்கமுடி சூடிகை கிட்டரிபி ரதன பஞ்சிகைகள் கண்டபா
விழைசி லப்பு துதிக்கின்ற மேனியோய்
மலர்ந ரந்தமுயர் புழுகு கந்தபொடி மலய சங்கமழ்சு கந்தமே
மலிக டப்பு மணக்கின்ற மார்பனே. கசஎ.

---

## பன்னிருசீர்க்கழிநெடிலடியான்வருவன.

காய்.

பிருதிவில காரமதல் வகரமனல் ரகரமுயிர்
பீடுடைய யகரமேலே
பிரபலம தானவெளி ஹகரமென நிற்கின்ற
பீசவிவ ரந்தெரிந்தோர்
திருவுதவு மாமனுவி லனலுடைய பீசமது
சேரினல னீங்குமென்று
செப்பிடுவ ரவ்வாறு செப்புமவ் ரேபாம
சேய்விமல மேனிதானே
பொருவருமெ ருஞ்சோதி யாயுள்ள தானுமெரி
புதல்வனெனு நாமமொன்று

புனிதமுடை யச்சேய வன்பெறுத லானுமெழில்
பூக்கின்ற பாவகிப்பேர்ப்
பெருமையுடை யவனும மனுவிலுள ரகரமொரு
பீடையும ளித்திடாது
பேசரிய கறைசிக்கு மருளுதவு மென்பருயர்
பெற்றிகள வாவுவோரே. க௬அ.

இதுபோன்ற வோசையுடைச்செய்யுள் :இதில்வரும் காய்ச்சீர்களோடு சிலவிடங்களில் மா, விளம், கனி, பூ வெனுஞ் சீர்களைக் கொண்டு முடியும். அவ்விவரம் அடியில்வரு க௬௯-வது செய்யுட் கண் வெளியாம். இவ்வா றோசை சிதையாது வரு விருத்தங்களிற் சீர்கள் பேதப்படுதல் வழுவல வென்க.

உச்சவிசை மந்தவிசை யொத்தவிசை யென்பன
வுணர்ந்துகலி காலமதிலு
முண்மையரு ளீயுமெங் குமரகுரு மனுவைநனி
யுச்சரிக் கின்றவர்களே
நச்சரவு தீண்டாது ககனவா சிகளாக
நவினிசா சரர்கள்பற்றார்
நமன்றமர் நெருங்கார் பெருந்தீ யெனப்பேய்க
ணண்ணுவெ னுவாகமம
நிச்சய நிகழ்த்துமென வுங்குகன துருவாக
நிகழுமோ ரக்கரத்தி
னிலவிடு மகாரமு முகாரமு மகாரமு
நிரப்பற்ற விந்துநாதம்
விச்சைதரு பரமென்னு மாறுமுள வெனவுமவை
வேலிறைவ னெழுத்தை
மேவுமொரு சூக்கமென வும்பகர்வ ரிவ்வுலகை
வெல்லுமா விளம்புபவரே. க௬௯.

இது பதினன்கு சீரடிச்செய்யு ளாகாதென்பதை இவ்வியல் ருo - வது செய்யுளின் கீழ்விளக்கிய நியாயத்தினுணர்வதோடு, இத னிரண்டாமடியிலும் "ஞவாகம" என்பது இரண்டு மாஞ்சீராகாமல் நேர் நேர், நிரையாக நிற்பதுணர்க. ஆதலின்; இவ்வோசைப்படு மிதன் முற்செய்யுளும், பிற்செய்யுளும் பன்னிருசீரடிச் செய்யுளே யாத லியைபென்க.

கருவிளம் கருவிளம் கருவிளம் கருவிளம் கருவிளம் கருவிளங்கனி
கருவிளம் கருவிளம் கருவிளம் கருவிளம் கருவிளம் கருவிளங்கனி.

தனதன தனதன தனதன தனதன, தனதன தனனதனன.

சமானமில் பதாதியு டையாய்விம லதாரக
சதாநட னஞானமுருகா
சராசர மெலாமரு ளியேநிறு வியீறுசெய்
சதாசிவ நகாரியயிலோய்
விமானசு ரநாயக விரோதந டையாளர்கள்
வினைதவி றனாறுவிறலோய்
விவேகப ரிபூரண விலாசம றைநாயக
வியாகர ணநாதகுழகா
வமானக ருணாகர வரைத திவாகர
வதீதகு ருநாதபரிபூ
வபேதநெ றியாளர கபீடம மரீசுர
வபூருவ சிகாவளபரா
குமாரகு ருதாசனி றைவாகுற மடாடவள்
குரோதமி றெய்வானைதலைவா
குருபமில் குகேசவெ மையாளென வளாவுநர்
கொளார்பிற வியேய்வரமுதே. கருo.

காய் காய் காய் காய் மா மா காய் காய் காய் காய் மா மா.

மந்தசபம் பெரிதிதினு மானதம துயர்விதினும்
வனப்பு மீக்கொள்
வன்னமுந் வாகவழி படுமூர்த்தி நினைதலுயர்
விதினு மாசார்
பந்தமெனுங் கருவிகடந் தொளிர்குகனை யறிந்துணர்வு
படர்ந்த வாறே
படரறுச மாதியினைப் பாராது பார்ப்பதுயர்
விதுபோ லீசன்
றந்தமுத னூலுகிழ்த் திடுமினனம் விளக்கியச
மாதி தன்னைச்
சாரவிய லாதுதபங் கிடுமினரு ரிரவிபதி
சரியா வேளை
வந்திடுமோர் சுழுனைநிகழ் போதுலக நினைவொழிந்து
மதியாய் நின்றான்
மரிஇபிடு வாரந்த வறிதறுச மாதியிஃது
பாய மன்றே. கருக.

கூவிளம் மா மா விளம் மா மா விளம் மா மா விளம் மா மா.

*சானுமண் டலமீ ரெட்டே மாத்திரை தழைக்கு மீது
சதுத்தச முடனெட் டாகச் சாரொரு பிராண யாம
மீனமி லுயர்வு பாதி யெனினிழி வாகுங் காலே
யெனினதி யிழிவா மிம்மூன் றினிலெது மேலா தார்க்கு
நூனமின் மூன்றுங் கையி னுடிப்பொழு தளவி னுகு
நுவலரும் பெரிய வாழ்க்கை நுழைவிருப் புதித்த பேர்காள்

*சானுமண்டலம்=வலதுமுழந்தாளை வலதுகையான் வலயமாகத் தடவுமளவிலுண்டாகுங் காலம்.

வானவ ரெல்லா மேத்து வானவ னுனை செவ்வேளின்
மலரடிப் பரிவி னின்றே மருவுமி லுயர்வா பொன்றை.

விளம் விளம் மா மா விளம் காய் விளம் விளம் மா மா விளம் காய்.

ஆண்டொரு நாறுபி ராணு யாம மயர்ந்தட லத்தினையே
யாசறு குசை நுனி வீழ்நீர் பாத பருந்துந ரெய்துவரே
நீண்டவி வேகபி ராணு யாம நெறிப்படி யொன்றடர்வோர்
நிறைநதி யெக்கியம் விரதந் தானு திபில்வரு நீள்பயனே
டேண்டரு சொர்க்கமு பேய்வர் *பிரத்யா காரந் தம்புரிவோ
ரெழின்மறை யெக்கியம் யாவுந் தந்தா மிழைக்கவ ராகியவை
காண்டொறுங்காண்டொறுநின்பாதேம்செய்கடியுயர்சிவலோகிற்
கைக்கொளு வாரெனு மோயா கமமா கந்தனி னைப்போரே.

புளிமா மா காய் மா மா காய் மா மா காய் மா மா காய்.

தெரிதற் கரிய குகதேவைச்
சிந்தை நடுவே நாட்டியதிற்
சித்த நனிவைத் திருப்பதுதான்
றெளிதா ரணமென் றேர்ந்துதினம்
புரிபொற் புடையார் மூவேழாப்
புகலு கின்ற தலைமுறையுட்
புலவார் நரகங் கிடந்தாரைப்
பொள்ளென் றெடுத்தே யவர்களுடன்
பெரியற் புதமார் சிவலோகிற்
பெரிய போக நுகர்ந்துய்வார்
பிழையில் பொருளைக் கபிலநடை
போலத் தியான மேபுரிவோ

*பிரத்தியாகாரம்=சீவவுபாதியை நீக்கிப் பிரபஞ்ச வுபாதியைச் சிவசொரூபமாகப் பார்த்தல்.

ரிரிபுற் றழறு கிடக்கின்ற
வினமு ழுவதுங் களையேற்றி
யேய்ந்த வுடம்பு விட்டவர்போ
லிருப்பா ரெனுநல் லாகமமே. கநுச.

இப்பன்னிருசீரில், இவ்வளவில் வந்த சந்தபேதங்களன்றிப்பிற பேதங்களும் வரும். அவை யெங்ஙனமெனின்; இவ்வியலுள் முற்போந்த வறுசீர் விருத்தங்களுட் சிலவற்றி னடிச்சந்தங்க ளிரட்டும் வழியிலென்க.

---

## பதின்மூன்றுசீர்க்கழிநெடிலடியான்வருவது.

தேமா தேமா தேமா தேமா தேமா தேமா தேமா தேமா
தேமா தேமா தேமா தேமா புளிமாங்காய்.

தத்த தத்த தத்த தத்த தத்த தத்த தத்த தத்த
தத்த தத்த தத்த தத்த தனதானா.

எத்த லத்து ருப்பொ ருட்கு மிக்க சித்தி னிற்ப தற்கு
விட்ட முற்ற வர்க்க கத்தி லகலாதே
சத்த சத்தி யைப்பெ ருக்கு நிர்த்த னத்த ருக்*க ளித்த
சத்தை வர்ச்சி தப்ப டுத்து னருள்சூழா
முத்தர் சித்தர் பத்தர் மெச்சி யுட்ப டுத்து னற்ப தத்தை
முற்று மெற்க ளப்பில் பக்க முடனேவீ
சித்தி ரக்க லைக்கொ டிச்சி யற்பு வைத்த ணைத்த ணைத்து
திக்கு நட்பி னிற்க ளிக்கு முருகோனே. கநுரு.

---

* அளித்து அசத்தையெனப் பிரித்துக்கொள்க.

## பதினான்குசீர்க்கழிநெடிலடியான்வருவன.

புளிமா மா மா மா மா மா விளம் புளிமா மா மா மா மா மா விளம்.

அரிய மூல மொன்று மேய வாவி கட்கு ளறிவினின்
றருள்செ யன்பு ளானு மந்த மூல மோடு கருமமும்
பிரிவு றாத பிரள யாக லர்க்கு நல்ல மான்மழு
பிறழு கின்ற பெரிய நான்கு புயமொ டால காலமார்
கரிய கண்ட மூன்று கண்க ணிலவு வந்து பொருவிலாக்
கதியை நல்கு கருணை யானு மூல மாயை கருமமும்
விரிய வுள்ள சகலர் கட்கு வினைநி லத்தர் மேனிதான்
மிளிர வந்த நுக்ர கஞ்செய் விமல னுங்கு கேசனே. கநிசு.

இச்செய்யுளின் எ-வது கச-வது சீர்களில், மூவினவொற்றுக்களும் வரலாமெனவும்; ஏனைய சீர்களில் வல்லொற்றும், வருஞ்சீர்முதற்கண் வல்லினநிற்க மெல்லொற்றும் வருமாயின் அவை யோசையைக்கெடுக்குமாகலின் வரவொண்ணாவெனவு மறிக. இவ்வாறு வேறு சிலவிருத்தங்கட்குங் கோடன் மரபு. சில விருத்தங்களின் சீர் உதாரணவாய்பாட்டுக்குச் சரியாயிருக்க வச்சீர்கட்கிடையின் மேற்காட்டியவாறு வரும் வல்லொற்று மெல்லொற்றுக்களும், அடியிடைவருஞ் சீர்களின் மாத்திரையளவு; குறுக நீளவருங் குறினெடில்களும் ஓசையைக்கெடுக்கும். இவ்வித வழுவொன்றுமில்லா விருத்தங்களே யிக்கண்டத்தி லுள.

தேமா காய் மா காய் மா காய் விளம் மா காய் மா காய் மா காய் விளம்.

அண்ட நேமிவியர் வைபை மானசபோ
டைந்தெ னப்புகலும் யோனிசே
ராவி யாவையுமி ரட்ச கம்புரிய
ஞாதி யீசனும்வி ரத்தியே

கொண்ட கண்டகதி நம்பு சீவரது
 கொள்ளு மாறெளிதின் முன்னைநாள்
குமர னுனவுனை யேகு ரங்கிமறை
 கூறு மோம்பருள்வி ளைந்ததான்
மண்ட லத்துமுயர் விண்ட லத்துமருண்
 மலிய நிற்குநிலை யெக்கணு
மருட புத்தருளி யாளு ஞானகுரு
 மாசி லாநினைய லாதிலை
தொண்ட னேற்குமருள் கென்ற லட்டுமுறை
 தூய நின்செவிபு காதெனோ
தோகை மஞ்ஞைவரு துய்ய னேயமரர்
 தொழுசு பாவமுரு கையனே. கநஎ.

புளிமா கூவிளம் மா கூவிளம் மா கூவிளம் கூவிளம்
புளிமா கூவிளம் மா கூவிளம் மா கூவிளம் கூவிளம்.

படவ ராவணி யிடைய ளுகிய பரசு பாணித னக்குமா
 பரிவ ருமக ளுக வந்துணை படர்ச கோதர னுகவுஞ்
சுடரு ஞானவி லாச மேயசு வாமி யாகவு முள்ளவே
 டுகளி னித்திய பிரம சாரிசு சீல மார்கிர கத்தனே
யடவி வாழ்முனி சன்னி யாசியு மாவ னுன்குமி லாமெனு
 வறிவி வேகிக ணெஞ்சி னுருமல ங்கு சோதிவி யோமமே
மடமு லாமெனை யாளு மாறெதிர் வருத லின்றுங்கொ னுளெகொல்
 வளர்புலா லுடனீங்கும்வேளைகொன்மதியிலேனறியேனரோ.

கூவிளம் விளம் விளம் விளம் விளம் விளம் காய்
விளம் விளம் விளம் விளம் விளம் விளம் காய்.

ஈசனை யுள்ளிட மர்ச்சனை புரிபவ
 ரெய்துப லத்தினு மேசால

விழிவுறு மேவெளி யர்ச்சனை புரிபவ
ரெய்திடு பலனென வேகூறு
பாசறு சிவதரு மோத்தர மொழியறி
யடியவ ருள்ளிட மேநாளு
மற்றமி லுன்றனை யர்ச்சனை புரிவத
சத்திய மாவது முண்டோசொல்
பாசவு யிர்க்குழு வத்தனை யுஞ்சிவ
பதமடை காறுமி ரட்சகனுய்ப்
படர்கிரு பைக்கட லேசுர குஞ்சரி
பதியென வருமொரு பரமேசா
நாசமின் ஞானவி னோதமு தால்குடை
நாடக வேன்மழ வாகுழகா
நாடெனை யாளிறை யேநறு மாமண
நாறடி மான்மக ணுயகனே. கரு௬.

இப்பதினெண்குசீரில், ஈண்டுவந்த சந்தபேதங்களன்றிப் பிற பேதங்களும் வரும். அவை யெங்ஙனமெனின்; இவ்வியலுள் முற் போந்த வெழுசீர் விருத்தங்களி னடிச்சந்தங்க ளிரட்டும் வழியி லெண்க.

---

பதினைந்துசீர்க்கழிநெடிலடியான்வருவது.

கூவிளம் கருவிளம் கூவிளம் கருவிளம்
கருவிளம் கருவிளம் கூவிளம் கருவிளம்
கருவிளம் தேமா கருவிளம் தேமா கருவிளம் கூவிளம் தேமா.

**தானன தனதன தானன தனதன,தனதன தனதன தானன தனதன**
**தனதன தானு தனதன தானு தனதன தானன தானு.**

[ஒற்றிலாப்·பஞ்சபங்கி. இருநூறேழுத்து.]

பூமக டொழுதிரு நாயகி திரிபுரை
பொறையுடை மலையிறை காதலி நிருமலி
புடவிய ராறு வமுதுண வீட புகழுடை யீசுரி பூமா

நாமக டுதிபுரி பூரணி சிவையுமை
நறையளி யுழுகுழ லாரணி யரவணி
நடவிறை பீடா ரிடைமுறை தேவீ நகைமலி நாரணி வீயா

மாமக ளருடரு நீறணி பனைநல
மறைதரு கவுரிவ ராகிய மரிதிரி
வடிவென வேவீ சொளிவிழி மாதா மகனென வானவ ரேசா

கோமக ளுழைமக ளுயக னெனவரு
குறைவிலி யறிவது நாடொரு பருமணி
குடிலைவி சாகா துடிநட நாதா குகவெனை யேகொள வாவே. கக௦.

பொறையுடை மலையிறை காதலி நிருமலி
புடவிய ராறு வமுதுண வீட புகழுடை யீசுரி பூமா
நறையளி யுழுகுழ லாரணி யரவணி
நடவிறை பீடா ரிடமுறை தேவீ நகைமலி நாரணி வீயா
மறைதரு கவுரிவ ராகிய மரிதிரி
வடிவென வேவீ சொளிவிழி மாதா மகனென வானவ ரேசா
குறைவிலி யறிவது நாடொரு பருமணி
குடிலைவி சாகா துடிநட நாதா குகவெனை யேகொள வாவே.

இது பதினொருசீராசிரியவிருத்தம்.

புடவிய ராறு வமுதுண வீட புகழுடை யீசுரி பூமா
நடவிறை பீடா ரிடமுறை தேவீ நகைமலி நாரணி வீயா

வடிவென வேலீ சொளிவிழி மாதா மகனென வானவ ரேசா
குடிலைவி சாகா துடிநட நாதா குகவெனை யேகொள வாவே.

இது எழுசீராசிரியவிருத்தம்.

புகழுடை யீசுரி பூமா
நகைமலி நாரணி வீயா
மகனென வானவ ரேசா
குகவெனை யேகொள வாவே.

இது வஞ்சிவிருத்தம்.

பூமக டொழுதிரு நாயகி திரிபுரை புகழுடை யீசுரி பூமா
நாமக ளெதிபுரி பூரணி சிவையுமை நகைமலி நாரணி வீயா
மாமக ளருடரு நீறணி பவைநல மகனென வானவ ரேசா
கோமக ளுழைமக ளுயக னெனவரு குகவெனை யேகொள வாவே.

இது வேறு எழுசீராசிரியவிருத்தம். ஆக - ௭.

இப்பங்கிக்கு வேறாகவும் நூற்றுக்குமேற்பட்டும் வரு மரிய பெரிய பங்கிகளை : இந்நூலாசிரியரது கஉஅக - திருச்செய்யுட்டொகையுள்ள குமரகுருதாசசுவாமிகள்பாடலிற் காண்க.

---

பதினறுசீர்க்கழிநெடிலடியான்வருவன.

புளிமா விளம் விளம் மா மா விளம் விளம் மா
மா விளம் விளம் மா மா விளம் விளம் மா.

சிவமு மாசிவ சத்தியு மெழிலே
திகழ்முழும் மூர்த்தியு மவ*ரடி. களுமே

---

* அடிகள்=தலைவி. என்னை? "கோமக டலைவி யடிக ளாயை" என்பது பிங்கலநிகண்டு.

சீர்கொ ணீயென மிளிர்முறை மைக்கென்
　　சென்னி மீதுபன் னிருவிரன் மேலு
மவமி லேனைய தேவரு நீயென்
　　றுருகு முறைக்குயர் தலைபிலு மாசா
ஞயி லங்கிடு முறைக்கில லாட
　　மதிலுந் தந்தையு மரசுமென் முறைக்கு
நவிலும் வாயெதி ராகவு மெய்ம்மை
　　நண்ணு வேதிய னுமுறை மைக்கு
நாப்பண் மார்பிலு மொய்த்தாய் முறைக்கு
　　நல்ல வோட்டிலு மாக்கரங் கூப்பி
யுவகை யோடுனைத் தாழ்வே னின்னு
　　முற்ற வன்னைபி தாகுரு தேவென்
றுன்னு முறைக்கிரு நான்குவந் தனமு
　　முளுற்று வேனருள் வேலுடை யானே.　　கசுக.

**கருவிளங்காயும், கூவிளங்காயும்.**

தனனதன தானதன தனனதன தானதன
தனனதன தானதன தனனதன தானதனு.

தலைகுனித லாகநவி றலும்விரல்க ளார்வலது
　　சயமுடியி லேறுதலு மிருகரமு மாசிரமே
தறுகுதலு மேனவிர முறுமிருகை யோடுபய
　　சரணவிரு சானுநில முறுதலும லார்சிரமே
லிலகிருகை சேரவிரு சரணுரமு நேமிதொட
　　விவைதலும்வி சேடசிக ரமதுமிரு தோள்செவியோ
டிருகழலும் வாணுதலும் விரிதிணையி லேபடலு
　　மிணையவுன தேசிலடி தொழுதுபுகழ் வேனிலும்வி
ணலைமனதை யேகமென வறுதலமு ளோபிறவி
　　யனுதினம்வி டாதுநினை யுறூவலுறு வேன்வெளியா

யவிர்திசையெ லாநினது சுயஞ்சசொ ரூபமென
வகமகிழ்வொ டேகருதி வழிபடுவ லேயினிமே
னிலையறியு மாறருளி யடிமைகொள வேவருதி
நிமலனெனு மாதிசிவ னுடையகும ராவழகார்
நெடியதமிழ் பாடருண கிரிபுகழ்கொள் காதன்மிகு
திருமலக்கு கேசநெடு வயிரவி வேலவனே. ௧௬௨.

இப்பதினறுசீரில், ஈண்டுவந்த சந்தபேதங்களன்றிப் பிறபே தங்களும் வரும். எங்ஙனமெனின்; இவ்வியலுள் எண்சீர் விருத்தங் களி னடிச்சந்தங்க ளிரட்டும் வழியிலென்க.

"இரண்டுமுதலாவெட்டீறாகத்-திரண்டசீரானடிமுடிவுடைய-விறந்துவரினு மடிமுடிவுடைய-சிறந்த வல்ல செய்யுளுள்ளே," எனக் காக்கைபாடினியார் சொன்னார்; அதனாலிங்ஙனம் எண்சீரின் மிக்க சீரான்வரு மடிகள் சிறப்பிலவெனச் சிலர் செப்பாரோவெனின்; ஒன்பது, பதினொன்று, பதின்மூன்று, பதினைந்தெனுஞ் சீர்களை யடி யாகக்கொண்டு சந்தநயமின்றி முடியுஞ் செய்யுள்களை யன்னணஞ் சிறப்பிலவென்றல் அச்சூத்திரக்கருத்தன்றி யிவ்வியலிற்போந்தவை போன்ற சந்தநயப்புடைச் செய்யுள்களைச் சிறப்பிலவென்றல் கருத் தன்றாம். ஏனைய பத்து, பன்னிரண்டு, பதினான்கு, பதினாறுசீரடிச் செய்யுள்களும் எண்சீரடிக்குட்பட்ட செய்யுட்சந்தங்களே யிரட்டும் வழியின் மிக்கசீரடியாக நிகழ்தலின்; அச்சூத்திரவழியே சிறப்புள வே. "கழிநெடிலடியே கசடறக்கிளப்பி - னறுசீர்முதலா வையிரண் டீறு - வருவன பிறவும் வகுத்தனர்கொளலே" எனவரும் யாப்பருங் கலச்சூத்திரத்தை யநுசரித்த வாறாக "மற்றுமென்பதனாற் பதின் சீரின் மிக்குவருவனவுமுள" என்பதும் யா - காரிகையுரை. இவ்வா றளவாயிரட்டும்வழி முதலடியின் முதலெழுத்திற் கியைந்த வினவெ ழுத்துக்கொண் டெத்தனை முறையேனு மிரட்டித்தோரடியாய் நடந் தவ்வடி நான்காகியிறும் விருத்தமெல்லா முதலடிச்சீரெண்ணையே

பெயராகப்பெறும். ஐந்தின்மேற்பட்ட வித்தளைசீரிரட்டையாசிரிய விருத்தமென்றேனும், நான்கின்மேற்பட்ட வித்தளையடியாசிரியவிருத்தமென்றேனும் பெயர்பெறா. என்னை? "கழிநெடிலடிநான்கொத்திறின் விருத்தமஃ - தழியா மரபின தகவலாகும்" என்பதியாப்பருங்கலம்.

ஆசிரியப்பாவின முற்றிற்று.

உ - வது ஆசிரியவியன் முற்றிற்று.

ஆ இயல் உ - க்குத் திருச்செய்யுள் - உஅச.

---

# ந-வது கலியியல்.

## க. ஒத்தாழிசைக்கலி.

### நேரிசையொத்தாழிசைக்கலிப்பா.

க. [மூவடித்தரவு ஒன்று.]

பண்டைக்குக் குடமஞ்ஞை பண்ணியதீ தாவிழிந்து
பண்டப்பொற் புயர்காஞ்சிப் பதியெய்தித் தவம்புரிநாள்
வண்டற்ற கதியவைகட் களித்தமுது மழுவேய்கேள்.

உ. [ஈரடித்தாழிசை மூன்று.]

ஈரிரண்டு கணத்தலைவ ரிழைத்ததெவ் வாலிறந்த
பேருவண மோடனமும் பிழைக்கவருள் கூர்ந்ததுநீ.

அக்காலத் தரியயன்மா லாள்பதிக ணலிவோர்ந்து
மிக்காரும் வளமுன்போல் விளங்கவருள் செய்ததுநீ.

பராசரன் மகாரறுவர் படுசாபந் தீர்த்தவர்க்குச்
சுராசுரர்க ளுறற்கரிய தூய்மதியன் றீந்ததுநீ,

௬. [தனிச்சொல்.]

எனவாங்கு.

௭. [மூவடி வெள்ளைச்சுரிதகம்.]

எண்ணிடு மெற்கு மருள்வாயென் றேத்துமொன்
கண்ணுமுற் றுள்ளங் கவர்ந்தரு ளாமெலினைத்
திண்ணமின் வீட்டிற் செலுத்து. ௩.

இதனுனே தரவுமூன்றடிச்சிறுமை யுடைத்தெனவும், தாழிசை யிரண்டடிச்சிறுமை யுடைத்தெனவுமுணர்க. பெருமைபேசப்புகின், தரவுக்குப் பாடுவோனது பொருண்முடிவு குறிப்பாம். ஆசலி னடி வரையறையிலையென்ரும். தாழிசைக்கு அப்பெருமை நான்கடியும் இடைமூன்றடியுமாம். என்னை? "சுருங்கிற்று மூன்றடி யேனைத் தரவு *** தாழிசைப்பாச்சுருங்கிற் றிரண்டடியோக்க மிரட்டி" என்பது யா - காரிகை. தரவடிகுறித்து "உரைப்போருள்ளக்கருத் தினளவேபெருமை" என்பதுமது. ஒருசெய்யுளிற் றரவடிக்குத் தாழிசையடி: சுருங்கி நடக்குமெனற்கு இச்செய்யுளே யுதாரண மாம். என்னை? "சுருங்குந்தரவினிற்றாழிசையே" என்பது யா—காரி கை. இவ்வொத்தாழிசைக்கலிப்பா: ஆசிரியச்சுரிதகமும் பெறும்.

அம்போதரங்கவொத்தாழிசைக்கலிப்பா.

௧. [ஆறடித்தரவு ஒன்று.]

படன்மலர்சூ டசுரர்குலம் வருமிறையாஞ் சூரனுட்வெம்
படர்தடியும் பெருமொய்ம்புப் பதுமனுமே புரிதவசுக்
கெழில்சேருந் தனதுயர்வாழ் வினையளிப்பா னிருவனாயும்
பொழில்சேரு முடலொன்றிற் புகவிட்டவ் வுடலையயில்
கொண்டுபிளந் தொருபாதி கொடியாமற் றொருபாதி
தொண்டுபுரி வாகனமாத் துளங்கவருள் செய்தோட்கேள்.

உ. [ஈரடித்தாழிசை மூன்று.]

முதுமறைச்செந் நெறிமறந்து முதிரகந்தை கொடுநின்ற
பதுமத்தா னடுச்சிகரம் பறித்தபர மேட்டியுநீ.

பொன்னனைய வரம்பிளந்து புரைக்குடரைக் களமணிந்து
மன்னகமே மலிந்தவய மாவுரித்த சிம்புளுநீ.

ஆர்கலியை நனிகலக்கி யகங்கரித்த மயிலையும்
வார்கமடத் தையுமடக்கு மாண்புடைய தெய்வமுநீ.

௩. [பேரெண்ணாகியநாற்சீரீரடியம்போதரங்கம் இரண்டு.]

உலகினை யளந்தவ னரமுது கென்பினை
யிலகுகங் காளமா வேந்திநின் றவனுநீ.

அப்பக மாந்திரு வலரிடத் தாளிலே
நப்பொடு சார்த்திய நாரண னிறையுநீ.

[அளவெண்ணாகிய நாற்சீரோரடி யம்போதரங்க நான்கு.]

திண்சலந் தரன்வகிர் திகிரிக் கரனுநீ.
ஒண்பரி திவலவற் குதவு பரனுநீ.
அரியய னுடலெரித் தணிநீற் றரனுநீ.
திரிகுண மிலாவெண் டிறபார் சிவனுநீ.

[இடையெண்ணாகிய முச்சீரோரடி யம்போதரங்கம் எட்டு.]

விடமுண்ட கண்டனு நீஇ.
வெங்குரண்ட நாசனு நீஇ.
கந்தர்ப்ப தகனனு நீஇ.
காலுதைத்த காலனு நீஇ.
சசிமிதித்த தாளனு நீஇ.
சசிபரித்த சடையனு நீஇ.

கரியுரித்த கத்தனு நீஇ.
கங்கையணி கடவுளு நீஇ.

[சிற்றெண்ணாகிய விருசீரோரடி யம்போதரங்கம் பதினாறு.]

முத்த னீஇ.
முனிவ னீஇ.
அத்த னீஇ.
அனக னீஇ.
சத்து நீஇ.
சித்து நீஇ.
இன்பு நீஇ.
அன்பு நீஇ.
ஆதி நீஇ.
சோதி நீஇ.
கால நீஇ.
ஞால நீஇ.
அரிது நீஇ.
பெரிது நீஇ.
ஆவி நீஇ.
யாவு நீஇ.

௪. [தனிச்சொல்.]

அதனால்.

௫. [ஆறடி நேரிசையாசிரியச் சுரிதகம்.]

நின்னடி நினைந்து நின்னடி புகழ்ந்துன்
னின்னரு ளடைந்தே யென்னையு மறிந்தா
னுன்னையு மறிந்தே யொல்லையத் தாவிதந்
தன்னினி நாமெனு நாச் சமரச மாக

நிற்கவென் றுள்ளுமென் னினைப்பை
யற்புட னோர்ந்தினி தாள்வதுன் கடனே. ௨.

"இருமூன் றடியே தரங்கக்கும் வண்ணகக்குந் தரவாவது" என யா-காரிகை கூறுமாறு, இவ்வம்போதரங்க வொத்தாழிசைக்கலிப்பா விற்கும், இதனடுத்து வருகிற வண்ணகவொத்தாழிசைக்கலிப்பா விற்கும் தரவடி பெருக்க சுருக்கமின்றி யாறடியேயாம். "ஈரடியிரண்டு மோரடி நான்கு - முச்சீரெட்டு மிருசீரிரட்டியு-மச்சீர் குறையினு மம்போதரங்கம்." என்பது யா - காரிகையுரைவரு சூத்திரமாகலின்; இவ்விரண்டாஞ் செய்யுளி லிடையெண் சிற்றெண் அம்போதரங்க வடிகள்; நான்கு மெட்டுமாகச்சுருங்கி வரினும் வரலாமென்க. அம்போதரங்கம்; அசையடியெனவும், சொற்சீரடியெனவும் பெயர் பெறும்.

"கால நீஇ, ஞால நீஇ, ஆவி நீஇ, யாவு நீஇ என்பன: பொருளினதுண்மையை மறுத்துப் பிறிதொன்றாக வுரைக்கும் பொருளவநுதி யென்னு மோரலங்காரமாம். என்னை? "சிறப்பினும் பொருளினுங் குணத்தினு முண்மை - மறுத்துப் பிறிதுரைப்ப தவநுதி யாகும்" என்பது தண்டியலங்காரம்.

வண்ணகவோத்தாழிசைக்கலிப்பா.

௧. [ஆறடித்தரவு ஒன்று.]

புனல்கொண்டும் பூக்கொண்டும் பூரணனைப் பூசித்துத்
தினமிளிரு முடற்குனே திருவுடையா ருடலென்று
மிழிவற்ற புகழ்கூறி யிணையற்ற மனுவோது
தொழினித்த முளநாவே சுசியுடையார் நாவென்று
நனவதிலுங் கனவதிலு நாயகனை நனிநினையு
மனமதுநன் மனமென்று மகிழ்நெடிய வேலோய்கேள்.

உ. [நாலடித்தாழிசை மூன்று.]

தக்கவரி குமாரிகள்செய் தவநிலைமுன் னெழுந்தருளித்
திக்கனைத்து மேபுகழச் சிலநாளின் மேனுங்கண்
மிக்கவிருப் பம்போல விரைமாலை சூட்டிடுவேம்
பக்கமுளீ ரென்றுரைத்த படிபிழையா திழைத்தனையால்.

பண்டிளமை யறுமுனிவர் பரங்கிரியிற் புரிதவசு
கண்டவர்க ளருகிருந்து கருணைநிச நெறியாக
வெண்டிசையு மப்பாலு மிணையறநின் றிடலுணர்த்தி
யண்டருமே பெறற்கரிய வரும்பெருவாழ் வளித்தனையால்.

யாக்கையிரு ளென்னவரும் யமனையொரு பசகமென
நோக்குமிக லுளவிடும்ப னுன்னோடுடன் றெதிர்க்கக்கண்
டேக்கமிகு முனிவரரு முவணையருந் தாமதிக்க
வாக்கையுயிர் பிரித்தருளி யங்கவனைக் கொண்டனையால்.

௩. [முடுகியலாகிய அராக நான்கு.]

நிறமலி தமனிய னையரிய சிறைபணி நிருமித வினைமருவினை.
அறமலி நெடியவ னயர்தவநல னுற வடல்வளை யினிதருளினை.
மறமலியரியெனுமெறுழிசெ யிடரறமதுகையுறு கொலைசெய்தனை.
திறமலி சுரர்புகழ் குறுமுனி யுயர்கவி செயநல தமிழருளினை.

௪. [நாற்சீரீரடி யம்போதரங்கம் இரண்டு.]

விந்துவு நாதமும் விளங்க நின்றுமவ்
விந்துவு நாதமும் விலங்க நின்றனை.
ஆரணச் சொல்லிடை யடங்கி நின்றுமவ்
வாரணச் சொல்லையு மகன்று நின்றனை.

[நாற்சீரோரடி யம்போதரங்க நான்கு.]

சின்மய வெளியெனச் செறிந்து நின்றனை.
நின்மல வொளியென நிலவி நின்றனை.

சதசத் தசத்தெனாச் சத்தென நின்றனை.
பொய்த்தவ ரறியொணாப் பொருளென நின்றனை.

[முச்சீரோரடி யம்போதரங்கம் எட்டு.]

சுகிர்த வருளென விளங்கினை.
துகளி லியல்பென வியங்கினை.
பிரம விபுவென விருந்தனை.
பெரிய பதியென விலங்கினை.
நெடிய திருவென நிரம்பினை.
நிகில குருவென நிகழ்ந்தனை.
நிகரில் கடியென நிமிர்ந்தனை.
நிரவ யவனென நிறைந்தனை.

[இருசீரோரடி யம்போதரங்கம் பதினாறு.]

தழைவு மாயினை.
விளைவு மாயினை.
சமமு மாயினை.
தவமு மாயினை.
அயில னாயினை.
மயில னாயினை.
மழவ னாயினை.
கிழவ னாயினை.
வீர னாயினை.
தீர னாயினை.
முருட னாயினை.
திருட னாயினை.
மலைய னாயினை.
புலவ னாயினை.

பூம ருயினே.
ஓம ருயினே.

இ. [தனிச்சொல்.]

எனவாங்கு.

௯. [ஆறடி நேரிசை யாசிரியச்சுரிதகம்.]

எல்லினு பல்லினு மெண்மனத் தெண்ணியுன்
னல்லடி பரவி நாடுநா யேனைக்
காப்பது கடனுக் கருதியெஞ் ஞான்றுநீ
நீப்பாறு திருவரு ணீட்டிடல் வேண்டும்
வீவில்புள் ளிருக்குப் வேளூர்க்
கோவில்வாழ் முத்துக் குமார தேவே. ௬.

பின்வருகின்ற வெண்கலியுள்ளும், வெண்டளையான் வருங் கொச்சகக்கலியுள்ளும், கட்டளைக்கலியுள்ளும் வரத்தக்க தேமா புளிமாவெனு நேரீற் றியற்சீர்களும், கலிப்பாவிற்சிறுபான்மை வரத் தக்க கூவிளம் கருவிளமெனு நிரையீற் றியற்சீர்களும் இவ்வொத் தாழிசைக்கலிப்பாக்களின் தரவு தாழிசைகளில் வாராமற் காய்ச் சீரே வந்தவா றறிக. "என,வாங்கு" என்ற தனிச்சொல் : "அடை நிலைக்கிளவி தாழிசைப்பின்னர் - நடைநவின்றொழுகு மாங்கென் கிளவி" எனுந் தொல்காப்பியச் சூத்திரவழிவந்தது. நடைநவின்று வருமெனவே, அல்லாதனவெனப்படும் "அதனால்" முதலியனவு முள; அவை யித்துணைநடைநவின்று வாராவெனக் கொள்க. அவ் வாங்கு: இடப்பொருட்கிளவியாயேனும், அசைநிலைக்கிளவியாயேனு நிற்கும்.

---

## உ. வெண்கலி.

கலித்தளையும் வெண்சீர் வெண்டளையும் விரவி
யகவற்றுள்ளலோசையான் வருகின்ற
பதினறடிவெண்கலிப்பா.

மேலென்று சொலப்பட்ட பொருட்கெல்லா மேலாயெக்
காலுமிருந் தெங்கணுமாக் கழுமுபொருளொன்றதனைப்
பரசுப்ர மணியமெனப் பகருமுயர் சுருதியதன்
சரணச்செங் கமலமலர் தங்கியநுண் பூழிகளை
யாதிபரா பரனென்னு மரனார்தம் மொய்ம்புகளு
மோதிசெறி பருப்பதியி னுயர்தனபா ரங்களுமே
யில்காலம் பொருந்தியினி தய்ந்தவெனச் செல்வமிகு
தொல்பிரபா கரன்மைந்தர்க் ககத்தியனார் சொற்றதிடங்
காந்தத்தி னுபதேச காண்டத்தி னுளததனல்
வேந்தர்க்கும் வேந்தாகு விட்டுணுவு மேனேரு
நன்சரணத் துகண்மாண்பு நவலரிதெத் துணையுமதைப்
புன்கவிஞ ஞானே புகலுவலித் தகையுடைநீ
யென்றுதிகொண் டெளிவந்துன்னின்னருணன் கிவாயேற்
றென்றலகிலெனைப்பொறியனென்றெவர்தாஞ்சொலவிசையா
ராதலினங் குகவெனையுன் னருணிலைவைத் தினிவருதல்
போதலுமில் லாமுடிவிற் போக்கு. ௬.

காய்முன் நிரைவருவது கலித்தளை.

பலதளையும் விரவிப் பிரிந்திசைத்துள்ளலோசையான் வருகின்ற
பத்தடி வெண்கலிப்பா.

அருணைநல் லவிமுத்த மணிதில்லை மணியாரூர்
திருமலி பொழின்மதுரை திருக்காளத் தியுமுறையே
நினைக்கமெய் விடுக்கவொரு நிலையுறீஇத் தரிசிக்கச்
செனிக்கவுட் செவிகேட்கச் சிரத்தையுட னருச்சிக்க

முத்தியா மெனநூல்சொன் முறைபோலப் பலனல்கு
மத்தனார் நின்காற்றண் ணலர்பெரிய தந்தோள்பட்
டுள்ளமா மகிமையினுட் குளிர்ந்தனரக் குளிர்கொண்டே
வள்ளலா யின்பீவர் மலர்ச்சரணம் பினர்க்கென்னி
னற்றமி லறுமுகவுன் னடிப்பூகம் முடிப்பார்வாழ்
வெற்றென மட்டிடலா மிங்கு. ௫.

ஆசிரியத்தளையானுந் தன்றளையானும் வருகின்ற
நான்கடி வெண்கலிப்பா.

ஆசறு மயின்மழுவ னருந்தமுத முலைகடழ
றேசவி ரவன்றந்தை திருவுருவுந் தழலேயா
ஞசமி லவற்சுமந்த நறுந்தேவுந் தழலினிய
தாசருள் கவனுமொண் டழல். ௬.

இப்பாவானே தனியேவருங் கலிப்பா நான்கடிச்சிறுமையுடைத்தென்பதறிக. பெருமை யெத்துணைத்தென்னின்;அளவின்றென்க. என்னை? "எள்ளப்படாக்கலிக் கிரண்டாகு மிழிபுளைப்போ - ருள்ளக்கருத்தினளவே பெருமை." என்பது யா—காரிகை. வெண்பாவேபோல,ஈற்றடி முச்சீரா யேனையடி நாற்சீராய் முடிதலின்; இங்கு வந்த பாக்கள் வெண்கலியாம்.

## கலிவெண்பா.

ஒருபொருண்மேல், ஒழுகிசைச்செப்பலோசைத்தாய்த்
தனிச்சொலின்றிப்பதினான்கடியான் வருவது.

தெவ்வற்ற கண்ணுவனூர் செப்பியவோர் சாபத்தை
யிவ்வழியே தீர்ப்பாமென் றெண்ணியநீண் மாலென்பார்
மாசில் சிவமுனியாய் மானனை பார்க்கவியை
யாசினைக் காற்புணர்ந் தோர்பெண் ணளித்தஃ
துபேந்திரனும் வேட னுறையுள் வளர்ந்து

நபேந்துபோன் மின்னியிடு ஞான்றுநின் பானல்கி
வாழ்ந்தா ரிரப்பார்க்கும் வாழ்வளிக்கு மாண்புற்றார்
தாழ்ந்தா ருளுந்தாழ் சழக்கனே னென்றருவே
னெஞ்சா னினைப்பே னிறைபாக்க ளாற்றுதிப்பேன்
றஞ்சநின் பாதமெனத் தாழ்வேனின் னுமத்தைப்
பன்னுநர்க் குந்தண்டம் பண்ணிடுவே னன்பானே
யென்னகத்தி னிற்கு மிரும்பொருளே வேன்மன்னே
பொன்றாக் கருணைப் புணரியினுன் புக்குய்தற்
கொன்றா யணைத்தா ளுவந்து. ௭.

மேற்படி, இடையிடையே தனிச்சொற்பெற்றுப்
பதினெட்டடியான் வருவது.

வனப்புமீ தூர வளர்மணிக்க லாபந்
தனைக்ககன நீட்டித் தலநின்—றெனைக்கொ
ளிறைசெவ்வேள் கால்விழைவா ரெல்லாரு நாளுங்
குறைவில்லாச் செல்வரெனக் கூத்தா—டிறைமஞ்ஞாய்
நீசூர னுயிருந்து நீடாக்க விண்ணோர்க்கு
மாசூர் புரிந்து மகிழ்போழ்து—தேசாரவ்
விண்ணோருன் மாண்பு விளியவெற்றி கொள்ளவெனு
வெண்ணிச்சேய் மூல மிகறருகா—னண்ணவ்
வுடம்புபோ யிந்த வுடம்புறுநீ வேரிக்
கடம்புமா வெட்சியுங் காமர்த்—தடந்தோளிற்
பூணும் பெருமான் புரிவுடையா ராநந்தங்
காணும் படிக்கருளுங் கத்தனெரு—கிணமுமில்
கூரிலே வேற்கையன் குன்றெறிந் தோனடியாஞ்
சீரியதா டாங்கு திருப்பேறு—சார்வுற்று
யவ்விண்ணோர் நாமெல்லா மர்ச்சிக்கும் வாழ்வுற்றுன்
றெவ்வனென் றேதத் தெளிந்தென்று—மிவ்வுலகி

னின்னிறையே யென்னிறையா நேடி யலையெளியே
னின்னலுற லாங்கொ லிசை. அ.

இடையிடையே தனிச்சொற் பெறாதும் பெற்றும் வெண்டளை யான்வந்த இவை: பதினொன்கடி பதினெட்டடிப் பஃறொடைவெண் பாக்க ளாகாவோ? "அடிபலவாய்ச்சென்று நிகழ்வ பஃறொடை" என்பது யா—காரிகையன்றோ வெனின்; கூறுதும். தொல்காப்பியத் தில் "நெடுவெண்பாட்டே முந்நாள்கடித்தே" எனவும், யாப்பருங் கல அடியோத்து விருத்தியுரையில் "மெய்ப்படக்கிளர்ந்த வெண்பா விரிப்பின் **** ஒரிரண்டு முதலா முறைசிறந் தீரா - றெறுமென்ப வியல்புணர்ந்தோரே" எனவும் வருதற்கேற்ப இலக்கணவிளக்கம் எ௬௮-ம் சூத்திரவுரையில் "வெள்ளோசை தழுவிவருங் கலிவெண் பா : பன்னீரடியின் மிக்கே வருமெனக்கொள்க." என விளக்கி யிருத்தலின், பதினொன்கு பதினெட்டடியுடைய விச்செய்யுள்கள் கலிவெண்பாவெனவே பெயர்பெறும் அசனலிங்கே வைக்கப்பட் டனவெனவும்,ஐந்தடி முதற் பன்னீரடியளவும்வருவெண்பாவையே பஃறொடைவெண்பாவென மேலைக்காரிகை விளக்கிற்றெனவும் இங்ஙனம் பொருள்கோட லியைபாம். இவ்வாறு கொளாவிடின் மே லிருதிறச்செய்யுட்கும் பேதமிலையெனு முரணுண்டாம். சிதம்பரச் செய்யுட் கோவையில் வெண்டளைபெற்றுத் தனிச்சொலின்றி ௨௨- அடியான் வந்த "தொடலைக்குறுந்தொடி" எனுந் தொடக்கத்துச் செய்யுளை வெண்கலியில் வைக்கப்பட்டதூஉம் இம்முரணுண்டாகா மையைக் காட்டும். கந்தர்கலிவெண்பாவு மிங்ஙன முதாரணமாம். அற்றேல், ஸ்ரீ உமாபதிசிவாசாரியார் ௧௯௦-அடியிலருளிச்செய்ததூ உம், இடையிடையே தனிச்சீர்பெற்றதூஉமான ஒருசெய்யுளுடைய நூற்பெயர் "போற்றிப் பஃறொடை" என விளங்குவானேனென் னின் ; அதுவும் பஃறொடையாலாய கலிவெண்பாவே; தொடையா

லப்பெயர் பெற்றதெனவாம். அது, "நெடுங்கழிநெடில்" "குறுங் கழிநெடில்" எனப் பிரபந்தப்பெயர்கள் காணப்படல் போலும்.

வெண்பாவுக்குரிய காய்ச்சீர் நான்கனுள்; இடையிற் குறினெடிலிணைந்த நிரையசையுடையனவும், இரண்டு மாஞ்சீராகப் பிரிக்கத் தருவனவுமான "தம்பிரானே" என்பதுபோன்ற கூவிளங்காயும், "சருவசாரம்" என்பதுபோன்ற கருவிளங்காயும் வெண்பாவில் வரவொண்ணாவெனவும், வரின் ஓசைநயங் கெடுமெனவு மறிக. கலிப்பாவில் வரு காய்ச்சீர்கட்கு மிந்நியாயங்கொள்க.

---

## ௩. கொச்சகக்கலி.

### தரவு கோச்சகக்கலிப்பா.

தனிச்சொல்லுஞ் சுரிதகமுமில்லாது தனியேகலித்தளைபெற்று
ஏந்திசைத்துள்ளலோசையான் வருவன.

காய்.

வளர்தில்லைக் கனகசபை மதுரைவெள்ளிச் சபைசோதி
கிளராலவனவிரத்ன சபைதனிமங் கெழுநெல்லைத்
தளர்வறுதாம் பிரஞ்சித்ர சபைகுற்றா லநிருத்த
மளவின்றிச் செயுமரனு மருணிதியா மறுமுகனே. ௯.

நிரை+நிரை+நேர்=கருவிளங்காய்.

தனதனனா தனதனனா தனதனனா தனதனனா.

கடல்கடைபால் விதிமுதனீள் கடவுளரார் மகிமையெலா
மடமருவா நினதுமகா மகிமையிலே சிறிதெனவே
யடமறுநூ லறையுமெனா வறிமதியோ ருனதிருதா
ணடனமதே விழைவரரோ நவைதபுவே லிறையவனே. ௧௦.

நிரை+நேர்+நேர்=புளிமாங்காய்.

தனதான தனதான தனதான தனதான.

[அட்டாட்டாக்கரம். (அறுபத்துநான்கெழுத்து)]

*நனிநாடு நனிநாடு நனிநாடு நனிநாடு
முனிவேறு நமனுள்கண் முரணாகி யணுகாமு
னனியாய நணுகாம லருள்பேறு மெமரீர்பொய்
நுனியாத சுரர்சூழு நுதிவேல னிருபாதம். ௧௧.

காய்முன் நிரைவரு கலித்தளையே யேந்திசைத் துள்ளலோசை.

மேற்படி, கலித்தளையும் வெண்சீர் வெண்டளையும் பெற்று அகவற் றுள்ளலோசையான் வருவன.

காய்.

நமனணுகாச் சிவநிலயங் களிலுமந்த நமனென்பான்
மமதையொடடங் †குரோசத்துள் வாராத மாண்புடைய
வமலவழி முத்தங்கா ளத்தியிலு மமர்சிவனார்
குமரனடி நினைவாளைக் குறுகானந் நமன்பாதோ. ௧௨.

மறலியொரு குரோசமள வஞ்சரியா மதுரையிலுந்
திறமையவ னிருகாவ தஞ்சரியாத் தில்லையிலும்
விறல்வினையர் துயர்தீர்த்து விளங்குசிவ னார்தந்த
வறுமுகனை நினைவாளை யணுகானந் நமன்பாதோ. ௧௩.

* பின்வரு மிரட்டைத்தொடைச் செய்யுட் கிச்செய்யுளு மிலக்கியமாம்.

† குரோசம்=ஐந்நூறுகோல் நீளம். என்னை? "நாலிருசாண் கொண்டது நற்கோலா மைந்நூறு - கோலியைந்த நீளங் குரோசமாம் - நாலு - குரோசமோர் காவதமாங் குன்றுத சாண்டான் - பிரோதந்தீர் முந்நால் விரல்." என்றபடி.

முதற்சீர்: நேர்+நேர்+நேர்=தேமாங்காய்.

சீர்பூக்கு முயிர்க்குயிராத் திகழ்குகனுஞ் செவ்வேளி
னூர்பூக்கு நிறையருளான் முத்திபெற ஞானமில்லார்
கார்பூக்கு மயிர்வெளுப்புக் கண்டவர்க்கும் பல்லிலர்க்கு
மேர்பூக்கு மியோகமிலை முத்தியில்லை யெனவறைவார். ௧௪.

வேதாக மப்பொருளை மெய்க்குருவி னிநிதோர்ந்த
மேதாவி யோருடம்பு மெய்யில்லையென் றொருமெய்தேர்
போதாவி யாவுமெந்தப் புளையுடனின் றுனுமவை
யாதார வேலிறைவ னருளடைந்து வாழுமென்பார். ௧௫.

வாதாந்த வெளிச்சோதி மயிலேறுந் திருச்சோதி
நாதாந்த நிலைத்தேவுன் னவையிலரு ளிகழ்வினையின்
வேதாந்தம் படித்தோரு மெய்ந்நூலை மறுத்தோரும்
போதாந்தம் பிடித்தாலும் புகுதுவரோ பவம்போக்கி. ௧௬.

மேற்படி, பலதளையும் விரவிப்
பிரிந்திசைத் துள்ளலோசையான் வருவது.

திருமருவு புயமாயன் றிகழ்கமலத் தயனறியாப்
பெருமைமலி பரசிவனும் பீடுசால் செவ்வேளு
மொருபொருளென் றுணர்வார்தம் முணர்விலுணர் வாய்விரவு
மருணிமல குகனேநல் லறிவாவ தருள்குதியே. ௧௭.

இந்த ௧௭-வது செய்யுளில், நிரையீற் றுசிரிய வுரிச்சீரும், காய்ச்சீராகிய வெண்பா வுரிச்சீரும், நேர்நடுவாகிய வஞ்சி யுரிச்சீரும் வந்தன. "அறிவாவத" என்பது நேர் நடுவான புளிமாங்கனியெனும் வஞ்சி யுரிச்சீராம். இச்சீ ரருகிவரும். இதனானே நேரீற்று மாஞ்சீர்களும், நிரை நடுவான விளங்கனிச்சீர்களும், இத்தரவுகொச்சகத்துள் வாராவென வுணர்க. என்னை? "மாஞ்சீர் கலியுட்

புகா கலிப்பாவின் விளங்கனிவந் - தாஞ்சீரடையா" என்பது யா - காரிகை.

கருவிளமும், கருவிளங்காயும்.

தனதன தனதனனா தனதன தனதனனா.

[ஒற்றிலாச்செய்யுள்.]

திருவரு சுடருருவே தெரிவரு மதியுருவே
பெருவரு மொளியுருவே மறைமறை புகழுருவே
குருவரு ளருவுருவே குறுமுனி பரவுருவே
யிருடபு முருகுருவே யெனுநல ரிடரிலமே. கஅ.

உலகுளீர்—தளர்வறுநா வதுகழும்பு சாரதிதந் தலைவன்
றுளர்கழல்க டிதிட்பவ ருக்குதவுறமே யுளர்பண்டைக்
களமொழிந்து கதிகாண்ப ரென்றிடுமா கமாகம
விளவுருவக் குகனேதிக மேத்துநெறி பற்றுதிரே. கசூ.

இதில், "உலகுளீர்" என அடிமுதற்கட் கூன்வந்தமையின் ; கலிப்பா இடையுங் கடையுங் கூன்வரப் பெறுமெனக் கொள்க. என்னை? "அடிமுதற்பொருளைத் தானினிதுகொண்டு - முடியநிற்பது கூனென மொழிப" என்பது சூத்திரம்.

செப்பலோசையான் வெண்டளைபெற்று வருவன.

சேவிருக்குங் கைத்திக்கை செஞ்சரண திக்கமொன்று
தூவிருக்கு நல்லார் சொலுமாறு தண்ணளிபிற்
பூவிருக்கு நான்முகனம் பொற்சிரசு குட்டியுடன்
பாவருத்த வேவவதை தந்தவனம் மானேயோ. உ0.

வேதற்கு மேலா விளம்புரிக் கும்பரற்குங்
கோதற்ற வாகனமுங் கொள்கொடியு மோருருவே
பேதற்ற ஞானப் பெருக்கிலமிழ் வாரினிய

காதற்கு ளாமா கருணையிறை யாம்வள்ளி
நாதற்கு வாகனமு நன்கொடியு மீருருவே. ௨க.

இஃதைந்தடியான் வந்த தரவு கொச்சகக்கலிப்பா.

சுரிதகத்தரவு கொச்சகக்கலிப்பா.

க. [தரவு.]

தொடையிலைச்சு குழன்முடித்த சூர்மகள்போ னேக்குடையாய்
பெடையனத்தை நிகர்த்துலவு பெண்ணரசி பேரழகி
யிடைசிறுத்து முலைபெருத்த விளவிழும மலிமங்காய்
சடைதரித்த முனிவரருந் தாழ்ந்துவிழை சிறுநகையாய்,

௨. [தனிச்சொல்.]

எனவாங்கு.

௩. [சுரிதகம்.]

உணர்வழிந் தரிவைமோ குழிதரா
திணர்முடிக் குகனடி யேத்துமா னவரே. ௨௨,

சுரிதகத்தரவிணைக் கொச்சகக்கலிப்பா.

க. [தரவு இரண்டு.]

நறுநரலை கடைந்ததே நம்பனெழில் வடிவுகண்டு
பொறிநகிலம் விம்முறுமோ கினியாய பொழுதார்வ
முறுமுரிமை யான்மாலென் றெருநாமங் கொண்டிடவும்
பொறிவிரும்பி நோற்றதனன் மாதவப்பேர் பொருந்திடவும்.

மூட்டின பொருணீயா முடிசரதம் யாரறிவார்
தாட்டலையை கிளர்தாசர் தாமறிவார் சருவவுயிர்
நாட்டிய முனக்குள்ளே நல்வினையுந் தீவினையு
மீட்டுயிர்க ளின்கணக்கு மிடுதீர்வு முனக்குள்ளே.

உ. [தனிச்சொல்.]

அதனுல்.

௯. [ஆசிரியச்சுரிதகம்.]

சேவடி யருளிற் செறுத்திடல்
பாவகி யெனும்பேர் படைத்தவெம் பரனே. உ௫.

இப்பாட்டில் வந்த வொருதனிச்சொல்லோடு பிறிதொரு தனிச்சொல்: இரண்டு தரவுக்குமிடையில் வரினும் வரலாம்.

வெண்டளையான்வரு நான்கடித்தர விரண்டுகொண்டு முடிகின்ற

இயற்றரவிணைக் கோச்சகக்கலிப்பா.

பாலுந்தி நஞ்சாற் கறுத்தமரி பாய்பரிபான்
காலுன்னி நோற்ற கனகத்தின் பானசபாஞ்
சூலுழிநற் கட்டழகே சோபிக்க வந்தவனைத்
தூலுறுப் புச்செயற்குத் தொன்மையா னேகமுங்
கோலமுமாய்க் கண்டோ மவனே குலதெய்வ
ஞாலத்தீர் காண்மினென நாவசைப் போர்கல்லா
மாலடியி னுள்ளூன்றி யக்கனசை வற்றபொழு
தேனுமத னென்செய்தா னென்பார்க ளென்றசனே உ௪

சிஃறாழிசைக் கோச்சகக்கலிப்பா.

க. [நான்கடித்தரவு ஒன்று.]

ஓருருவும் பெயருரு மிலியாகி யுயர்மேலிழ்
நேர்நடுவுங் குறுமையுமின் றகண்டமென நிலவோர்நீ
சீர்மருவும் பசுவெல்லாஞ் சிவகதியை யெளிதுறுமா
றேர்மருவும் பசுபதிக்கோ ரெச்சமெனத் தோன்றினையே.

அ

௨. [தனிச்சொல்.]

எனவாங்கு.

௩. [மூன்றடித்தாழிசை மூன்று.]

உண்மையுண ருனனடியே னெண்பெயரு முருவிருப்பு
மெண்மையிலை வியனெனவே யெழின்மலர்நீர் கொடுபூசை
பண்ணுதிலை தண்டமிழிற் பரசினது முண்டன்றே-அதான்று.

முக்குணமே நிர்க்குணமா நிலவுமெனத் தலைநூல்கள்
புகலுமாக ணிசமெனவென் புந்திமதித் தவ்வாறு
திகழனது திருநாமஞ் செபித்ததுநா னுண்டன்றே-அதான்று.

நானழைப்பேன் வாவெனவந் நாள்வரலா நீயென்று
ஞானநின தருள்வாக்குப் பொய்யாதென் றனுதினமுன்
கானமினங் கலையேநான் கருதியது முண்டன்றே.

[பெயர்த்தும், தனிச்சொல்.]

அதனால்.

௪. [ஆசிரியச்சுரிதகம்.]

தெய்வச் சோழன் சிந்தைசெய் தாற்ற
திருவே தணிகைத் தேவே சுவர்க்கர்
கோவே பரம குருவே குருந்தே
குன்றக் கொடிச்சி கொள்ளருட் டலைவா
சத்தியச் சைவ சமயக் கரும்பே
நெடில்வேன் மன்னே நின்கழ
லடியே யடையா றடியேற் கருளே. ௨௫.

பஃறாழிசைக் கோச்சகக்கலிப்பா.

௧. [நான்கடித்தரவு ஒன்று.]

சொல்லானும் பொருளானுஞ் சுட்டரிய விபுவாய்மற்
றெல்லாமா யல்லவுமா யிருக்குமொரு நிலைநின்று

பல்லுயிரும் பரமசுகப் பரிவனுகிப் பிழைத்திடுமா
றல்லறெறு மைம்முகத்தோ டதோமுகமு மானேய்கேள்.

௨. [ஈரடித்தாழிசை யாறு.]

நன்னருளிற் றிளைத்துய்யு நுணங்கியோர் வழிச்செல்லா
தின்னலுறு மிழுதைகளோ டிவன்கூட லினிமுறையோ.

விரைகமழு மென்னடிமலரே விழைந்துதுதிக் கின்றவொரு
தரமுடையே னருள்விழுப ஞ்சாராது முய்வேனே.

சந்ததமுங் கம்பலைமைய னலராசிக் கண்ணுழ்ந்து
சிந்தைமயங் கிடினினிய திருவருளி னலமாமோ.

திருவருளைத் தினமெண்ணித் தெருளின்றிக் கழிப்பேனுற்
குருவருணன் குடையார்தங் குணநலமு நலமாமோ.

தினமுமன நான்வாடத் திருவருட்குப் பிரிவாயே
லெனையடைநர்க் கேதுறுக ணென்றதும்பொய் யாமோதான்.

இன்றெனது முகம்வாடி யிளைக்கமறைந் திருப்பாயே
லன்றெனது முன்சொன்ன வறைக்கானி யனுமதோ.

௩. [தனிச்சொல்.]

அதனுல்.

௪. [நான்கடியாசிரியச் சுரிதகம்.]

என்முகம் பார்த்தின் டிரங்கனின் கடன்கா
ணன்முகத் தறுமீ னகிலப்பா லுண்ட
விளம்பூ ரணனே யிறும்பு
களம்பூ ணெழில்சால் கதிர்வே லிறையே. ௨-சீர்.

மயங்கிசைக், கோச்சகக்கலிப்பா.

௧. [நான்கடித்தரவு இரண்டு.]

மணிமலி யுவணவரர் மாமுனிவர் களைநோக்கா
வணிமலி யெமைப்பூசித் தடையரும் பேறனைத்துந்

தினிமலி சரவணவேள் செயற்குரியா னறிமினெனுத்
துனிமலி பிறைமுடியன் சொற்றவுப ருணக்குரியோய்.

அறுமீனுக் கறுசேயா யன்றிருந்த போழ்தாற்ற
லுறுமரிய திருலீலை யுஞற்றுவா னெருகணத்தே
மறுமேவா வெண்ணிறந்த வடிவங்க டன்கண்ணே
கோறுவுறவே காட்டியவை தோன்றியவா மறைத்தோய்கேள்.

உ. [ஈரடித்தாழிசை யாறு.]

சலசப்போ தமர்செல்வி தான்புகழு முலைகொங்கைக்
கலசப்பா லினிதுண்டு கயிலைபுக் கிருந்தனையால்.

வெண்காந்தள் பற்றைமுத லாயநல் விரைமலர்கொண்
டொண்காந்து தாளர்ச்சித் துய்வார்பங் குற்றனையால்.

சிறைபுக்க சயந்தற்குந் தேவர்க்குங் கனவிற்போய்ச்
சிறைமீட்டிக் காப்பமெனச் சொனவண்ணஞ் செய்தனையால்.

விண்ணிருடி களின்முதன்மை மேவவென யாழ்முனிவன்
பண்ணுதவ மோர்ந்தப் படியருடே வாயினையால்.

பிரமன்சொற் படியுன்றன் பேராயி ரந்துதிக்குஞ்
சுரர்மிக்க பொறிபெறீஇச் சுகிக்கவருள் கூர்ந்தனையால்.

அறுவாய்நோன் பாற்றியவோ ரந்தணனை யரியதிருப்
பெறுமனுவாம் வேந்தாகப் பிறங்கவருள் புரிந்தனையால்.

ஈ. [தனிச்சொல்.]

எனவாங்கு.

ச. [முடுகியலாகிய அராக நான்கு.]

ஆசறு கின்சர ணுசையில் விஞ்செறுண்
மோசமி லந்தர மோகமெ ழுந்தது.

வீரிதரு முலகத்து பருவர லெனநவி
லரியவ ருரைகளெ னுளநனி மருவின.
தத்துவ ஞானம திக்கழி யாகில
யத்தினே யேகினே புத்தியு மேயது.
அருளைய டைந்திடி னமுதுரு மென்றெனு
மொருமதி விஞ்சிய துணர்வுவி ளைந்தது.

[பெயர்த்தும், ஈரடித்தாழிசை யாறு.]

சண்பைநகர்த் திருஞான சம்பந்தற் பார்த்ததுபோற்
கண்குளிர்வி னென்னையுநீ கருதிநிதம் பாராயோ.

வாகீசர் பனுவலெலாம் வள்ளுறையக் கேட்டதுபோ
லேழைபினென் பனுவலையு முற்றுநீ கேளாயோ.

சுந்தரந்தின் முடியிலடி சூட்டியாட் கொண்டதுபோ
லென்றனக்குஞ் சேவடிப்பூ விரண்டினையுஞ் சூட்டாயோ.

வாதவூ ரடிகளுக்கு மனமுவந்து சொற்றதுபோற்
சிதமலர்ச் செவ்வாயைத் திறந்தெனக்குஞ் சொல்லாயோ.

ஏழாட்டைத் தண்டிதனை யெடுத்தாசீர் வதித்ததுபோற்
கேழாட்டி னென்னையுநின் கிருபைகொளச் செய்யாயோ.

கண்ணப்பு பொருவனைமுன் கரம்பற்றிக் கொண்டதுபோ
லண்ணலெனையுங்கரத்தினுற்பற்றிக்கொள்ளாயோ-அனுவைநீ,

ரு. [இருசீரோரடி யம்போதரங்கம் எட்டு.]

ஆட்டினு லாடாதோ.
ஆட்டாக்கா லாடிடுமோ.
ஊட்டினு லுண்ணுதோ.
ஊட்டாக்கா லுண்டிடுமோ.
ஒட்டினு லோடாதோ.

ஓட்டாக்கா லோடிடுமோ,
காட்டினுற் காணுதோ,
காட்டாக்காற் கண்டிடுமோ,
[பெயர்த்தும், தனிச்சொல்.]

அதனுல்.

௬. [நான்கடி யாசிரியச் சுரிதகம்.]

எனுது போத மென்ப திணையினுன்
றனுது போத மாகத் தழைத்துநான்
மேம்படு பொருளாய் விளங்க
வோம்பரு ணிட்டைபின் றுதவி யருளே. உஎ.

இச்செய்யுள்: தரவு, தாழிசை, அராகம், அம்போதரங்கம், தனிச்சொல், சுரிதக மெனக் கலிக்கோதப்பட்ட ஆறுறுப்பும் மிக்குங் குறைந்தும் பிறழ்ந்தும் உறழ்ந்தும் மயங்கியும் வந்தமையான், மயங்கிசைக் கொச்சகக்கலிப்பாவெனப் பெயர் பெற்றது.

அராகவுறுப்பு: நான்கடிமுத லெட்டடியந்த மெத்துணையடியானு நாற்சீர் கொண்ட வளவடிமுத லெல்லா வடியானும் வரப்பெறு மெனக்கொள்க. என்னை? "அளவடி முதலா வனைத்தினு நான்கடி - முதலா யிரட்டியு முடுகிய னடக்கும்" என்பது யா-காரிகை யுரைவரு சூத்திரம். வண்ணக வொத்தாழிசைக்கலிப்பாவில் வருமாறு குறிலிணை பயின்றவடி; அராகமெனப்படும். அஃதப்பாவிற் கவ்வாறே வரல்வேண்டு மென்க.

"அடக்கியல் வாரந் தரவோ டொக்கும்" எனவரு தொல்காப்பியச்சூத்திரப்படி அடக்கியலாகிய சுரிதகமானது தரவடிக் கொத்த வடியாக வருவிவரம்: ஒத்தாழிசைக்கலிகளிற்காண்க. அக்காப்பியம் "தரவியலொத்து மதனகப்படும்" எனக் கூறுமாற்றுன், ஏனையகலியினு மச்சுரிதக மவ்வா றொத்துவருதலைப் பஃறாழிசைக் கொச்சகக்

கலியிலும், தரவடிக் கதிகவடியாக வருதலைச் சிஃறாழிசைக்கொச்சகக்கலியிலுங்காண்க. "வெண்பா வாசிரியங் கலியே வஞ்சியென - நுண்பா வுணர்ந்தோர் நுவலுங் காலை—யிரண்டு மூன்று நான்கு மிரண்டுந் - திரண்ட வடியின் சிறுமைக் கெல்லை" என யா—காரிகை யுரைவரு சூத்திரமிருத்தலின்; ஆசிரியப்பா: இரண்டடிச்சுரிதகமாயும் வருதலைச் சுரிதகத்தரவு சுரிதகத்தரவிணைக்கொச்சகக்கலிகளிற் காண்க. நேரிசைவொத்தாழிசைக்கலியல்லாத மற்றக்கலிகளில் ஆசிரியச்சுரிதக வீற்றயலடி: முச்சீரின்றி நாற்சீராய் வருதலுஞ் சிறுபான்மையெனக் கொள்க.

---

## ௪. கட்டளைக்கலிப்பா.

எள்ளுக் குள்ளெண்ணெ யென்ன வினைத்தினு
　　மிருக்கு மோர்சச்சி தாநந்த பாமுனை
துள்ளத் திற்கிறை யேனுமொவ் வாதவட
　　யுற்று ளோருநின் பேறுந வாரிக
ளெள்ளி னேருமு னன்பர் கலங்கிட
　　வேசி னேரும்பொ னடர்க ளென்னினு
மள்ள லீதி துவாந்தப்புக் கேங்குவா
　　ரன்பி னுமெனை யாளுமுந் நகடனே. ௨௰.

ஏக நோக்குறு வோர்பிச்சர் பாலர்போ
　　லேக தேச மிருப்ப ரெனநவில்
யோகர் சொற்பொரு ளிற்றெற வேயுணர்
　　யூக மற்றவர் புத்தியில் பித்தரா
மோகந் தீர்பர மென்றுகொண் டாடுவர்
　　முத்தி வேட்கை யுளார்க்கிங் கின்னருண்
மேக மாமுரு கையவுன் றண்பதா
　　வேண்டு மென்னெஞ்ச மப்பதங் கொள்ளுமோ. ௨௧.

கருவி யெல்லாங் கடந்தவ ரேனுமக்
கருவி யோடுறு காற்சிவ சன்னிதி
மருவி யாநந்தக் கண்ணீர் வடித்திடன்
மலர்க்க ரங்களைக் கூப்புதல் வாழ்த்துதல்
திருவெண் ணீறிடல் தேசிகற் போற்றுதல்
சிவசி வாவெனச் செப்பல் விடார்வை
யருகி னேரெவ ருங்குண மில்லரென்
றறிவ தேயென் விவேகமெண் கண்ணனே. ௩0.

அறிவில் பாச பதார்த்தமு ளொன்றனை
யந்த ரங்கத்தில் வைத்திருப் போரையுஞ்
சிறிய போதப் பசுப்பிடிப் போரையுந்
தெளிவி லாவிழி தெய்வங்கொள் வோரையு
நறிய நின்னடி பற்றிநிற் கின்றவென்
னன்னெஞ் சானது ஞானிக ளாபுதித்
தறிஞர் பூசனை செய்யவென் ணுதுகா
ணழகு மாமயி லூருமெண் கண்ணனே. ௩௧.

எட்டெ ழுங்குடி வான்மீகி சோலையி
லிராம தேவரு பேர்ப்பரங் குன்றினின்
மட்டி லாமச்ச மாமுனி வேங்கட
மலையிற் கொங்கணர் மாவரங்கத்திலே.
சட்டை மாமுனி யுந்தங்கி னரவட
டழைக்கு நன்மையெல் லாமவர் சித்தெனக்
கட்டு ளாக்குமெல் லாருந் தலைத்தெய்வக்
கருணை நீத்தவ ரேகந்த சாமியே. ௩௨.

தில்லை யிற்றிரு மூலர் *வயித்தியன்
சேதி மப்புலந் தன்வந்திரி யுங்கெடாத்

---

*வயித்தியன் சேதிமு=வைத்தியேசுரன் கோவில்.

தொல்லை யாருநர் தனிற்கம லன்சுடர்
சுடரண் ணுமலைக் கண்ணிடைக் காட்டிறும்
வல்லை யேயொரு சேதுவி னந்தியும்
வதிந்தா ரம்பரெல் லாமவர் சித்தெனுஞ்
சொல்லும் யாவரு மைந்தொழி லுடையன்
றுப்பெண் ணுதவ ரேகந்த சாமியே. ௩௩,

சதுரர் சூழ்புழு நிப்புலம் போகர்மா
தணிகை யிற்கரு வூரரங் கேரளப்
பதிய னந்தன் படுக்கையில் வண்டமிழ்
பாடு கும்ப மகாமுனி வைகைபாய்
மதுரை யிற்சுந்த ராநந்த ராதியோர்
வதிந்தா ரம்பரெல் லாமவர் சித்தெனக்
கதறெல் லாரு மனுதிப் பிரான்செயல்
கருதா வேழைக ளேகந்த சாமியே. ௩௪,

சருவ சிவரு மீச வுபாசனை
தன்னின் மேம்படு வாரஙன் மேம்பட
வருளு நாயக னுளர சாகவு
மருள்பெ றும்பசு வாட்பட் டிருக்கவு
மருவு தீர்வையுண் டாமென வோரவோர்
மதியி லாரடி யார்களை யேபெறும்
பொருளெ னச்சொலி நாத்திக ராவரென்
புந்தி மேய புராண விசாகனே. ௩௫,

மகத்தெ னச்சொல்விட் சேப மடங்கின்
மகிமை நாமம் விடாமற் செபிப்பதுஞ்
சுகத்தை மூடிக லாவர ணங்கெடச்
சுத்த மூர்த்தித் தியானம் விடாமலே

டகத்திற் செய்வது மஞ்ஞான வல்லற
வகந்தை விட்டரு ளின்வய நிற்பது
மிகத்தை நீக்குநர் செய்கையென் றுள்கிடா
ரெம்மெய் கண்டுயர் வாரயி லீசனே. ௫௬.

[இதுமுதலிரண்டுபாட்டும், இடையிறுதிமுற்றுமடக்கு. (யமகம்)]

கமழ்க டப்பணி பூணுறுங் கண்டனே
கனையில் விண்மண்ணு நிற்கும கண்டனே
யிமிழ்சி லப்பணி தாங்கிரு காலனே
யெனவயுந் தந்துபின் வாங்கொரு காலனே
தமிழ்நெ டுங்கவி பாடுநர் நாதனே
தந்தைதக் குங்குரு வானவ நாதனே
யமிழ்த ராசைகொள் பேரின்பக் கட்டியே
யடிய னேனையு மாணலங் கட்டியே. ௫௭.

தேமா கூவிளம் கூவிளம் கூவிளம்
தேமா கூவிளம் கூவிளம் கூவிளம்.

தான தானன தானன தானனா, தான தானன தானன தானனா.

ஆட ராவணி வோனரு ளாளியே
யாறெ ணாநவின் மாதளி யாளியே
பீட ருவறி வாமருள் வாரியே
பீலி மாமயி லேறுப வாரியே
நாட வாவினர் காணுக ணாடியே
நாச மேதுமி லாதவி ணாடியே
சிட ராமவ ரேபல கோடியே
சேரு மாறெனை யேநனி கோடியே. ௫௮.

வண்ணத்திடை, மடக்கு நடக்கு நேர்மையைக் குமரகுருதாச சுவாமிகள் பாடலில் ஸ்ரீ கதிர்காமவேலர் வண்ணத்தின்கட்காண்க.

இங்கு உ௮-முதல் ௩௮-வரை வந்த யாப்புகள் : எண்சீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்த மாகாவோ வெனின் ; "மாச்சீர் முன்வரு நாற்சீ ரடியே - நேர்முத னிரைமுத லிரணிறை யானே - பதினே ரெழுத்தும் பன்னீ ரெழுத்து—மியைந்தனை யடியாய் நடந்தஃ திரட்டித்—தொத்துநான் கிறுவது கட்டளைக் கலிப்பா" என்பது சூத்திரம். ஆகலி னகாவென்க. இச்செய்யுள்களி னடிகளி னன்கா மெட்டாஞ்சீர்கள் காயின்றி விளமாகவே வரல்வேண்டும். அன் றெனி னோசைகெடுமெனவும், உ௯ - வது செய்யுள் முதலடியிற் 'பாலர்போ' எனுஞ் சீரில்வந்த ரகரவொற்றைப்போல இடையின வொற்றுக்களும், வல்லினமுன்வரப்பெறாத மெல்லினவொற்றுக் களும் வரின்; அங்ஙன மோசைகெடாதெனவு முணர்க.

கலிப்பா முற்றிற்று.

---

# கலிப்பாவினம்.

---

## க. கலித்தாழிசை.

இரண்டடியாயீற்றடி மிக்கு ஒருபொருண்மேன்
மூன்றடுக்கிவருவது.

செய்வினை தீர்த்துன் சேவடி வைத்திடவெந்
தெய்வத் தினிவேலோய் நட்ட மென்பா னடியாயோ.

மொய்வினை தீர்த்துன் முத்தடி வைத்திடவெஞ்
செய்ய திருவேலோய் நட்ட மென்பா னடியாயோ.

பொய்வினை தீர்த்துன் பொன்னடி வைத்திடவெந்
துய்ய சுடர்வேலோய் நட்ட மென்பா னடியாயோ. ௩௯,

மேற்படி, வேறு.

தெளிபத்தி யாம்வலையிற் சிக்கிவயப் படுகுகவே
ளளிபற்று சேவடியை யணைமினோ போமுன் னடியார்காள்.

வேண்டுவன வீகருணை மேன்கற்ப கக்கரவே
ளண்டவனூர் சேவடியை யணைமினோ போமுன் னடியார்காள்.

எம்மையடை வார்க்கென்று மின்னனலி வேதென்ற
வம்முநகன் சேவடியை யணைமினோ போமுன் னடியார்காள்.

மூன்றடியா யீற்றடிமிக்குத் தனியேவருவன.

வாழ்விவை யெனவே மதித்திங் கிட்டவையும்
பாழ்பட வுயிரும் பதைக்க வுடனீக்கு
மூழ்வினை தெரியீ ரோசே யருளுக் குரியாரே. சக.

இன்றிருந் தெதிர்நா ளிலதாம் பொருளேமெய்
யென்றிருந் துளநா டொலையா தெறுழ்வேலன்
பொன்றுலங் கடியா மலரே நாடீர் புவியாரே. சஉ.

வல்லுறழ் முலையார் மயல்பட் டுழன்றுமுகை
வல்லெனப் பெயர்த்து மதியற் றதினுழைத
னல்லுணர் வாமோ நவில்வீர் சேய்வாழ் நகரீரே. சங.

தோதகஞ் சிருட்டி தொடங்கி யனுபவித்தும்
போதுமென் றுணராப் புரைசேர் மனமுடையீர்
காதலி லினுநில் லாமே குகனைக் கருதுமினே. சச.

நான்கடியாயீற்றடிமிக்குத் தனியேவருவது.

கைவரு பொற்பயனே கருதிக் கறையேசால்
பொய்ம்மரு டர்ப்புகாழும் பொறியில் புலவீர்காள்
சைவரு ணச்சொருசேய் சரணைப் புகழ்வீரே
லையற லற்றவர்கா ணருளும் பொருளு மடைவீரே. சரு.

நான்கடியாயீற்றடி மிக்கு, இடைமடக்காய்த் தனியேவருவது.

வலப்பனு ளுஞ்ரான் பலைச்சார் புறைவார்முன்
சிலப்பனுப் நின்றுன் றிருக்கா னினைநெஞ்சே
சிலப்பனுப் நின்றுன் றிருக்கா னினையாமேல்
புலப்பனு வாயால் பொச்சாப் புண்ணே னினைநெஞ்சே. ௪௬.

நான்கடியா யீற்றடிமிக்கு இரண்டாமடி குறைந்து
முதலடியுமூன்றாமடியுமொத்து, இடைமடக்காய்த் தனியேவருவது.

குருகு நிலவு கோடை குரு
முருக னடன மாடுமே
முருக னடன மாடு போர்நங்
கருது பழியர் காறு மாறு கடுகவே. ௪௭.

இக் கலித்தாழிசைகள்: சீர்வரையற்ற விரண்டடியும் பலவடியுங் கொண்டுமுடியும். என்னை? "அடியெனைத்தாகியு மொத்துவந் தளவினிற் - கடையடி மிகுவது கலித்தாழிசையே" என்ப தியாப்பருங்கலம்.

---

## உ. கலித்துறை.

நெடிலடிக் காப்பியக் கலித்துறையென்பது

### கலிநிலைத்துறை.

தேமா கூவிளம் கூவிளம் தேமா புளிமாங்காய்.

ஊனும் பேரறை நாவிழி மூக்கு முறுகாதுஞ்
சிறுங் காயமு நின்னன வென்று தெரியாமே
யூனும் பேருரு வாதிய வாகம் முடைபென்னு
வாரும் பேதைய ரோவுணர் வார்நா லெய்லோனே. ௪௮.

தேமா புளிமா தேமா புளிமா புளிமாங்காய்.
தான தனத்தா தான தனத்தா தனதானா.

வீவு ணுதிப்பே மேவு சகத்தாள் வினையிரே
மூவர் முதற்றே வாக விருப்போன் முதுவேதா
யாவு நினைப்பா லீயு முரத்தான் யதிராசா
தாவி மயிற்கோ னேய மிகுத்தோர் சுகமேலே. ௪௯.

தேமா கூவிளம் கூவிளம் தேமா கூவிளங்காய்.

ஈரைந் தாகிய வங்குலி கூப்பி யிரெழிற்கை
சேர நெஞ்சினு நெற்றியின் மேலுஞ் செய்வதுபோ
லோரைந் தைந்தையுஞ் சேயவன் பாதத் தொட்டிவிடா
விரம் விஞ்சிட நாடுதிர் மோக்க வேட்கையரே. ௫௦.

பட்டி லீர்கரும் பேனமுக் கேறு வார்கதுப்பை
வெட்டி யந்தில முண்டிதம் பார்த்த மென்மையைப்போ
லெட்டு நெஞ்செழு மிவ்வுல காசை யேமழித்துப்
பிட்டு ணீசுரன் மைந்தனை நாடிற் பீடுறுமே. ௫௧.

கூவிளம் தேமா கூவிளம் தேமா தேமாங்காய்.

கூடுந ருங்கே சங்களி லொன்றுங் கொய்யாம
லீடுதல் கண்ட வாறணி மன்றுண் ணின்றாடு
பீடுடை நம்பர் நந்தன னின்பம் பெய்யேக
நாடுத வந்தா னீளினி னைந்த நன்காமே. ௫௨.

தானன தான தானன தான தானனா.

நாரண னன ராமனும் ராம னடார்வே
பூரண பான வேடனு நீறு பூசிசா
காரண னேயெ னுகினை வேலர் காரனே
டாரரு ளிதெ னாருளாழி யாடாரே. ௫௩.

இரண்டாஞ்சீர்: புளிமா. ஐந்தாஞ்சீர்: புளிமாங்காய்.

வான்மதி வளர்செவ் வேணியன் பொய்ம்பா மலையேறி
கூன்மதி யெனவுட னிவிளை யாடுங் குணியோவென்
மேன்மதி முகவெம் மானயி லானை விழைவோரே
தேன்மதி யுறுவார் கீழ்நடை மேவார் திகையாரே. ௫௪

தேமா கூவிளம் தேமா கூவிளம் கூவிளம்.

தத்த தத்தன தத்த தத்தன தத்தன.

சொக்க ரிக்குடி மக்க ளுக்குள துக்கபால்
பொக்கெ னக்கெட வக்கி யுக்கெழ மக்கிடாய்
நக்க டிக்கைக்கொ ணாச்சர் பக்கந டக்குமா
அக்கி ரக்குத ஞக்கு மிக்கதி றக்குமோ.* ௫௫

இதில், பொருக்கென வென்பது பொக்கெனவென மரீஇ யிற்று. அங்கி; அக்கியென வலித்தல்விகார மாயிற்று.

கூவிளம் கூவிளம் கூவிளம் கூவிளம் தேமாங்காய்.

ஏறு சென்னியின் மாமணி மின்முடி யேதாங்கு
மாசையொ டிவ்வுல காளினு முன்னான மாமேரய்
தோவிர் பொன்னடி போமுடி மேலணி செய்விக
தாரரு ளங்களி யேகொளும் வாதனை ராராரே. ௫௬

தேமா புளிமா புளிமா புளிமா புளிமா.

தந்தா தனனா தனனா தனனா தனனா.

ஒன்றாய் மிகையா யுயிரா யுடலா யுறவா
யன்றா யறிவா மொளியாய் வெளியா யருளாய்

---

* இச்செய்யுளடைத்தொடைவிவரம்: இவ்வியல் ௧௩௧-வது விருத்தத்தின் கீழ் விளக்கப்பட்டிருக்கிறது.

நின்றே நிறைதே வொருதே வதுவே நிகழ்சே
யென்றே யுணர்வா ரணவார் நசைநோ யினையே. ௫௭.

தேமா தேமா தேமா தேமா தேமாங்காய்.

தானா தானா தானா தானா தானானா.

[நெட்டெழுத்துச் செய்யுள்.]

கார் மாலோ டானா வேதா காணாமா
சீர் மாதே வாமே லோனீ சேயானோ
னீ காலே பாடே ணோசா னாவோரா
லேரீ தூமா னாவா ரேசா லேகாரே. ௫௮.

கருவிளம் தேமா புளிமா புளிமா புளிமா.

தனதன தானா தனனா தனனா தனனா.

திருமுரு காப்பா சிலைபோழ் திறலோய் தெருளோய்
குருமுரு காகோ குகவே டழைநீள் குருகே
பெருமுரு காமான் மகளார் வலவா வுரனார்
செருமுரு காகா வெனவோ துநர்பார் செனியார். ௫௯.

புளிமா புளிமா கருவிளம் கருவிளம் கூவிளங்காய்.

தனனா தனனா தனதன தனதன தானதனா.

அறுகா லளிழு சலர்பல தருதரு வார்வளமே
சிறுகா லனம்வாழ் பல்குள முளவெழில் சேர்பொழிலே
யுறுகா லனிலா மதுரையி லுறைமுரு கோனனாரே
தெறுகா றருவா னடிநினை மதியினர் சீர்பெறவே. ௬௰.

ஐஞ்சீரா னடக்கு மிக்கலிகளி னடிகளில், எச்சீர்க்கண் மோனையெழுத் தல்லது இனவெழுத்து வரினு மிதுகாறும் வந்த வாறுக ஐந்தாஞ் சீர்க்கண் வருவதே சிறப்பு. பின்வரு கட்டளைக் கலித்துறைக்கு மிவ்விதி கோடலியைபு.

தேமா கூவிளம் கூவிளம் கருவிளம் புளிமா.

அப்பொ னேதிலை யார்திருந் தவரெனக் குனித்தோன்
வெம்பு வஞ்சகர் முப்புர வியன்கெடச் சிரித்தோ
னம்பு மாயக னாகிய நறுங்கய முகத்தான்
றம்பி யன்புடை யார்நமன் விடுதுயர் தடுப்பார். ௬௧.

சீர்வாய்பாடுசிதையினு மோசைகெடாது நடப்பன.

தரும மூர்த்தியென் சண்முகன் றணிகைந் தாற்று
கரும யாகமு ளார்க்கிடு புண்ணியங் கரிசில்
பெருமை யாமொரு பிறப்பள வந்தவ யாகக்
குருமை யார்க்கிட *னூறள வுப்பலன் கொடுக்கும். ௬௨.

சேய வன்றன தாணிகைந் தேசுறு செபஞ்செய்
நேய யாகமு ளார்க்கிடு புண்ணிய நிரம்பா
வாயி ரப்பிறப் பளவுந் தியான விடாகர்க்
கீயு நன்மையொர் பிரமகற் பாந்தமின் பிகைக்கும். ௬௩.

தீனர் நாயக னைபவர் பூசைகொள் செவ்வேள்
கான மேதரு தாள சரோருகக் கடிசான்
ஞான யாகமு ளார்க்கிடு நல்லவை பெரிய
மான மாப்பிர ளயமள வுப்பலன் வழங்கும். ௬௪.

முதற்சீர்: கருவிளம்.

கரவயிற் பெருமான் றிருவருட் பொலிவினைக் கண்டா
லிரவொடு பகலும் மிரவினிற் பகலிர வுகளும்
பரவிய பகலிற் பகலிர வென்பவு மிலைவா
னிரவியி னுயர்வா மறிவுள தனையுயி ரேயும். ௬௫.

---

* நூறளவு மென்றதற்கு, நூறுபிறப்பளவுமெனப் பொருள்கொள்க.

தேமா கூவிளம் கூவிளம் கூவிளம் கூவிளம்.

முன்பி னீட்டிய குற்றமெ லாமற முன்னியே
யன்பர் மாட்டரு ளேவளர்க் கின்றகண் ணாநா
னின்பம் வேட்டுனே யேபுகழ் வேலையி லிங்குளேன்
றுன்ப மோட்டுபு கோடிக டம்பணி சூடியே. ௬௬.

வானை நோக்கும ரங்களு லாத்தரு வானரம்
போனை வேணுனே யேபிடி யேனிருள் போழுநீ
பூனை போலெனை யேகொடு போகுதி பூம்புன
மானை நேடிவ னம்புகு நெட்டயின் மள்ளனே. ௬௭.

தேமாங்காய் புளிமாங்காய் புளிமாங்காய் புளிமாங்காய்தேமாங்கனி.

கோவென்ற படைமீளி யனேவோரு நனிநாடு கோவாளிதா
ஞேவென்ற சிகியாகி வருகால மதிலேறி ஞொள்காதகூ
ரேவென்ற திதிபால ருயர்வாழ்வு தரல்போல வேகூழநான்
காவென்றபொழுதேனக தருவாயொர் விடுவாய காங்கேயனே.

தேமா கூவிளங்காய் கூவிளம் புளிமா புளிமா.

தான தந்தனன தந்தன தனந்த தனனு.

நீடை கொண்டவிரு மிஞ்சிகொ ளிலஞ்சி நிலைவாழ்
கோடை மஞ்சரிவி ரும்புள மலிந்த குமரா
பாடை வந்திடுமு னங்கரு துகின்ற படியே
பீடை வென்றமல வின்பது பிறங்க நினையே. ௬௯.

கூவிளங்காய் காய் காய் காய் தேமா.

மாதமொரு பூப்பூத்து வருடமொரு காய்காய்க்கும் வல்லி
யேதுமிடை யூறின்றிப் படருமர மாயிருந்த வென்னை
வாதனையிஃ தாமெனவென் மனமிருந்து வேறுசெய்த வாறு
கோதிருளும் வேறுபட வருள்புரிதி வேல்பிடித்த கோவே. ௭௦.

ஐந்தாஞ்சீர்: புளிமா.

எண்ணிறந்த விவகாரத் துள்ளுழன்று நாளுநின்ற வெனைநீ
நண்ணிவந்துநறுமதிதான்சொல்லியதண்ணளிவழியினடப்பான்
பெண்ணலமும் பொன்னலமு மண்ணலமு நான்விடுத்த பிறகு
முண்ணலநன் செய்தாததென்கொலுதி வேற்பெருமவுமையே.

புளிமா கூவிளங்காய் தேமா தேமா புளிமாங்காய்.
தனன தத்தனன தானா தானா தனதானா.

மணிகொள் பொற்பணிக ளேபூண் மாதா மகனும்வீ
யணிகொள் மற்புயவி சாகா நாகா வருளாளா
திணிகொள் வச்ரவயி லீசா தேசா சிறியேனேர்
துணிகொள் சிற்ககன மாநீ யாமா துயிலீயே. எஉ.

தேமாங்காய் தேமாங்காய் கருவிளம் கருவிளம் தேமாங்காய்.
தந்தத்தா தந்தத்தா தனதன தனதன தந்தத்தா.

பந்தப்பா டஞ்சிச்சூர் பரிவுறு பெரியவர் பண்டத்தா
நந்தப்பா நெஞ்சுக்கோர் நலமரு ளிறையென நண்புற்றோ
ரெந்தப்பா டுஞ்செற்று ளிதவரு ளறுமுக வென்கட்டார்
சந்தப்பர் கொண்டப்பா சமநிலை யெனைநனி தம்பித்தாள். எந.

---

கட்டளைக்கலித்துறை.

பாதமொன்றற்குப் பதினறெழுத்து.

பூவாய விந்த வுலகத்து வாழ்வைய பொய்யெனத்தந்
நாவார வோதிமெய்ஞ் ஞானைப தேச நவில்கவென்பார்
தாவாய வில்லத் தவாவினை விட்டே தழுவுமென்னிற்
போவார் மறுமொழி சொல்லாது வீணர்தண் போரியனே. எச.

ஓயாத நாட்டத்தி னின்றே யடையரு ளுண்மைநிலைக்
கேயாசை வைப்பவர்க் கிங்கொரு பாடு மிலையதின்றென்

ருயாத பேர்க்கந்த வுண்மைதா னெவ்வா றறிவிலுறுஞ்
சேயாகி யெங்கு நிறைவா யிருக்கின்ற சின்மயனே. எ௫.

கண்ணன் சனகன் முதலாய பேர்கண்மெய்க் கண்ணுளரா
யெண்ணில் வினைசெய்யவில்லைகொ ணுஞ்செயினென்னையென்ப
ரண்ணிய சன்மத்திற் றூனே மருளற்ற வாற்றலவர்
நண்ணின ரென்றறி யாதார் திருவள்ளி நாயகனே. எ௬.

செத்தறச் சுத்தி புரிந்தநற் செய்வினைச் சேற்றினடு
வைத்தெடுத் தானுங் களிப்பூ றிடா தந்த வாறிச்சையின்
வித்தவித் தானு வருட்கட லாமுன் விபுத்துவவான்
சித்தனைந் தாற்பின்பு செய்வினை பற்றுது சேயவனே. எஎ.

இப்பா ரமைக்குள்ள வேலையுங் காலமு மெண்ணங்களுந்
தப்பாம லின்னுஞ் சிலநாளிற் றீருமச் சந்தர்ப்பமா
துப்பாய முத்தியை நாடுவே மென்பார் துணிபுநரி
யுப்பாழி வற்றுமென் றுள்வேலை காத்தலொக் குங்குகனே.

நெஞ்சு முடம்பு மசைவறச் செய்துன்னு நிட்டையது
நெஞ்சு முடம்புந் தளராத வர்க்கே நிலைத்தலின்றே
னெஞ்சு முடம்புந் தளர்ந்தவர்க் கோவுண் ணிரம்புமென்ற
னெஞ்சு முடம்பும் பணிந்துய்ய வாக்கயி னின்மலனே. எ௯.

நீக்க மிலாநெடுந் தூக்கமுண் மூர்ச்சையி னிற்றலென
நாக்கை வலத்தொளை யேற்றிநிற் கின்றதை நன்றென்பர்கொல்
போக்கும் வரவுமி லாச்சிவ யோகப் பொருத்தமுளோ
ருக்க முடையர்துஞ் சாதுன்னு நெட்டயி லுத்தமனே. அ0.

இச்செய்யுள் போன்றவற்றைக் கோவைக்கலித்துறை யென்ப. என்புழி, மற்றது "நேர்முந் துறிற்பதி னாறெழுத் தாகி நிரைமுத ரஞ் - சீர்முந்து றிற்பதி னேழாய் முடிந்தசெப் பாட்டிக - ளோர்முந்

து நான்கொத் திருபதுசீரா லியன்றிடுமேற்-றேர்முந்து பேரல்குன் மாதே யஃது திலதமன்றே" எனும் வீரசோழியச்செய்யுட்படி, திலதக்கலித்துறையெனவாம். கட்டளைக்கலித்துறைதானே யிவ்வா றிருதிறப்படுமென்க. ஈண்டு ௮௦-வது செய்யுள் கோவைக்கலித்துறையாவ தெங்ஙனமெனின்; கடையடியில் "துஞ்சாது" எனுமூன்றுஞ் சீர்ச்சொல் பிளப்புண்டு முற்சீரோடொன்றி யொழுகிய வோசைத்தாய் வந்ததனாலென்க. இவ்வா றிரண்டாஞ்சீர் நான்காஞ்சீர்களும் பிரிந்தொழுகின்; மிக்க சிறப்பெனவுங் கூறுப.

[சதுரங்கபந்தம்.]

வாளா ரநாதி மயிலேறுஞ் சுந்தர மேயபகா
வேளா மயிலோய் விமலர்கண் வந்த சமாதியர்கோ
வாளா யெனுநாவுள் ளார்நா ரருந்தெங்க ளாரியற்கே
யாளாகி வாழ்வது மாணப் பெரிதெனு மாகமமே.　　௮௧.

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| வா | ழ் | வ | து | மா | ண | ப் | பெ |
| இ | ளா | யா | கே | ற் | ய | ரி | ளா |
| ர் | நா | ர | ரு | ந் | தெ | ங் | க |
| ளா | ள் | வு | நா | னு | யெ | ளா | வா |
| ந் | த் | ச | மா | தி | ய | ர் | கோ |
| வ | ண் | க | ர் | ல | ம | வி | ய் |
| ய | ம | கா | வே | ளா | ம | யி | லோ |
| மே | ர | த | ந் | சு | ஞ் | று | லே |

பாதமொன்றற்குப் பதினேழெழுத்து.

அறிவான சாயுச்சி யந்தா வலதரு ளாற்பசுமை
செறிவான புன்புழு வைச்செங் குளவி செயுமுறைபோற்
பொறிவான நாடர் பிரானீ யெனையும் புரிதிவண்மை
முறிவான நெஞ்ச ரறியாத வாறு முகக்குருவே. அஉ.

[அடி முதற்சீர் மடக்கு. (யமகம்)]

பிணிமுகங் கோடிகண் டாசைகொள் பேரெழிற் பீலியுடைப்
பிணிமுகங் காதலித் தேறி யுலாத்தரு பேழயிலோய்
பிணிமுகங் காணென் கலக்கற வென்னைப் பிறங்கருளிற்
பிணிமுகங் காட்டியுன் சேவடிச் சீர்வைத்துப் பேணுதியே.

[அடி முதலிரண்டுசீர் மடக்கு. (யமகம்)]

வளைக்கை யெனக்கு மிலையுமை மைந்தவிம் மாநிலத்தோம்
வளைக்கை யெனக்கு மரபத னுன்மல மாய்த்தருள்கு
வளைக்கை யெனக்கு யிலவுள்ள கட்குற மாதணங்கெ
வளைக்கை யெனக்கு நலமென்று நாடொரு வாலியனே. அச.

இதன்பொருள். வளைக்கையென் - வளையலணிந்த கையினளெனப்படும், அக்குமிலையுமை - சங்குமணியையணிந்த வுமாதேவியுடைய, மைந்த - மகனே, இம்மாநிலத்தோம் - இப்பெரிய பூமியிலுண்டாங் குற்றங்களை, வளைக்கை - வாரிக்கொள்ளுந்தன்மை, எனக்குமரபு-(ஆணவமலத்தோடுகூடிய) எனக்கியல்பு, அதனுன்மலமாய்த்தருள்-ஆகலின் (அந்த) ஆணவமலத்தைக்கெடுத் தநுக்கிரகஞ்செய்வாயாக, குவளைக்கு ஐயென-குவளை மலர்போன்ற கண்களுக்கெல்லாங்கடவுளென்று, குயிலவுள்ள - சொல்லும்படியாக வுள்ள, கண்குறமாது - கண்ணையுடையவளுங் குறவர்குடியில் வளர்ந்தவளுமான வள்ளிநாயகியினது, அணங்கு - அழகானது, எவள் ஐக்குஐ - எந்த ஸ்திரீயின தழகுக்குமழகாம்,எனக்கு நலம் - எனக்கு நலமாம்,என்று-

என, நாடு - விரும்புகின்ற, ஒருவாலியனே - சமானமற்ற கட்டிளமைக்கடவுளே. என்றவாறு. எனக்கு மென்பதிலுள்ள உம்மையை, ஐக்கு என்பதோடுங் கூட்டுக.

[மேற்படி, நிரோட்டகம். (இதழ்குவியாப்பாட்டு)]

தகையயி லானை நிரஞ்சன ஞானத் தனிக்கடியைத்
தகையயி லானை நனிகாத்த கண்ணன் சதாநினைதீ
தகையயி லானை யெயிற்றத்த னிளை ஞன்றனையார்
தகையயி லானை யிறைஞ்சடி யார்கட் சழக்கிலையே. அ௫.

இ - ள். தகை - சோர்வெனுமயக்கத்தை, அயிலானை - (அம்மயக்கத்தின்கண் ணிருந்தும் உயிர்களைப்போல) அநுபவியாதவனை, நிரஞ்சன - களங்கமில்லாத, ஞானத்தனிக்கடியை - ஞானமாகிய வொப்பற்ற சோதியை, தகைய - அழகுடைய, இல்லானை - வீட்டுப்பசுக்களை, நனிகாத்த - மிகவும் பரிபாலித்த, கண்ணன் - திருமாலானவர், சதாநினை - நாளுந்தியானிக்கின்ற (தெய்வமும்,) தீது - தீமையை, அகை - அறுக்கத்தக்க, அயில் - கூரிய, ஆனையெயிற்றத்தனர் - யானையினது கொம்பைக்கரத்தில் வைத்திராநின்ற விநாயகக்கடவுட்கு, இளைஞன்றனை - தம்பியுமானவனை, ஆர்தகை - ஆர்ந்தபெருமையுடைய, அயிலானை - வேலாயுதக்கடவுளை, இறைஞ்சடியார் - வணங்குகின்ற தாசர்கள், கண் - இடத்தில், சழக்கிலை - (துன்பங்கட்கேதுவாய) குற்றமில்லை. என்றவாறு. ஏ - ஈற்றசை. [அயிலல்=உண்டல்.]

மேலே நிரஞ்சனமென்றசொல்: வடமொழி. தென்மொழியில் வடமொழி வரலாங்கொ லென்னின்; வரலாமென்க. என்னை? "செந்தமிழ்ச் செய்யு டெரிந்துணர்ந்து செந்தமிழ்க்கண் - வந்த வடமொழியை மாற்றுதே - சந்தம் - வழுவாமற் கொண்டியற்று மாண்பினோர்க் குண்டோ - தழுவாமை நிற்குந் தமிழ்." என்பது யாப்பருங்கல விருத்திவரு முதாரணச்செய்யு ளாகலின்.

கொம்பில்லா நிரோட்டகச்செய்யுள்களை, இந்நூன் முதலாங் கண்டம் "சத்தியபோதகம்" எனுந் திருப்பதிகத்திற் காண்க.

கருவிளம் கூவிளம் கூவிளம் கூவிளம் கூவிளங்காய்.

தனதன தானன தானன தானன தானதன.

அலைவளர் சாகர மேவலை காசினி யாசையரோ
கலைவளர் யாமதி போலெழின் யாமயல் காதருடா
னிலைவளர் வேலிறை யேயுறு மோகவி லேழைமையேன்
முலைவளர் கோதையர் மோகமு ருதுயு மாறருளே. ௮௬.

இக் கட்டளைக் கலித்துறைகள்: "அடியடி தோறு மைஞ்சீ ராகி-முதற்சீர் நான்கும் வெண்டளை பிழையாக் - கடையொரு சீரும் விளங்கா யாகி-நேர்பதி னாறே நிரைபதி னேழென்-றோதினர் கலித் துறை யோரடிக் கெழுத்தே" எனுஞ் சூத்திரப்படி வந்தன. அடிகளின் கடைச்சீர்கள்: விளங்காயாக வரல்வேண்டுமென்றதற்கு யாருக ௭ - ம் தூக்கில் "வாறிச்சையின்" எனக் கனிச்சீரும், ௮0-ம் தூக்கில் "நன்றென்பர்கொல்" எனப் பூச்சீரும் வரலாங்கொலென்னின்; "சொல்லாரும் வல்லின மெல்லின மோடிடை தோன்றுமொற்று - நில்லாது நேர்நிரை நேராய் முடியும்" எனும் விதியானே இடைநிற்கு மொற்றொழிக்க அவை விளங்கா யாதலின் வரலாமென்க. இதுபற்றிக் குமரகுருதாசசுவாமிகள் பாடல் "பகலெல்லாம்" எனும் பிரபந்தத் திரண்டாஞ் செய்யுட் குறிப்பி லினிது விளக்கியிருக்கிறது. அவ்வுழிக்காண்க. நான்கடியே கொண்டு முடியுமித்துறைகள் : மேற்போந்த கட்டளை யுடைமையோடு தூக்கு ஈற்றில் ஏகாரம் வரப்பெறுமெனுங் கட்டளையு முடையன. ஏகாரம் பெறாது முடியுமாயின், அது கட்டளைக்கலித்துறையெனப் பெயர் பெறாமற் கலிநிலைத்துறையெனப் பெயர்பெறு மென்க.

---

நேரடியாகிய அளவடி விருத்தமென்னும்

## ௩. கலிவிருத்தம்.

கூவிளம் கூவிளம் புளிமா கூவிளம்.

சொல்லுய ராரியன் சுருதி போற்சொலு
நல்லுணா வோற்றவர் நடுவிற் சோர்வுறா
மல்லுயர் சிந்தையின் மதித்த வான்பெருள்
வில்லுயர் நின்னடி விளங்கொள் வேலனே. ௮௭.

அசைக்குறுப்புமுதலியனவுணர்ந்துஞ்செய்யுள்.

முதற்சீர்: கருவிளம்.

பணமலி பாம்புகோள் பரற்கி யாணரேன்
மணமலி சேயென வருமெஃ கீசுரா
நிணமலி யாக்கையி னிரம்பிக் கோஒதுண்
குணமலி யாவியென் குறையை நூறியாள். ௮௮.

இதனுள்ளே, அசைக்குறுப்பெனப்படுங் குறில், நெடில், உயிர், மெய், உயிர்மெய், ஆய்தம், வல்லினம், மெல்லினம், இடையினம், "கோஒது" என அளபெடை, "பரற்கியாணர்" எனக் குற்றியலிகரம், "பாம்பு" எனக் குற்றியலுகரம், "குறையை" என ஐகாரக் குறுக்கமாகிய எழுத்துப் பதின்மூன்றும் வந்தவாறு காண்க. அன்றி;

யா - என நெட்டெழுத்துத் தனிநின்றும், கி - எனக் குற்றெழுத்துத் தனிநின்றும், பாம் - என நெட்டெழுத்து ஒற்றடுத்து நின்றும், பிக் - எனக் குற்றெழுத்து ஒற்றடுத்து நின்றும் நேரசை நான்கும் வந்தவாறும்; பண - எனக் குறிலிணைந்து நின்றும், சுரா-எனக் குறினெடி லிணைந்து நின்றும், பரற் - எனக் குறிலிணைந் தொற்றடுத்து நின்றும், றியாள் - எனக் குறினெடி லிணைந் தொற்றடுத்து நின்றும் நிரையசை நான்கும் வந்தவாறுங் காண்க. இவ்வசைகள்

சேர்ந்து சீராகு முறையை, இதுகாறுஞ் செய்யுள்களின்மேலே தீட்டப்பட்ட "தேமா" வாதி சீருதாரண வாய்பாடுகளும், இனித் தீட்டப்படும் அவ்வாய்பாடுகளு நனி யுணர்த்தும். நேரசை யோரலகு பெறும். நிரையசை யீரலகு பெறும்.

கூவிளம். ஈறு புளிமா.

"நூல்வழி தேறிய" நுண்ணுணர் வோங்குபு
மால்வழி யேபிற வென்றறி மாண்பினர்
தோல்வழி நின்னடி சூழுவர் சூழ்கலர்
நீல்வழி கூடுவர் நீளயி லரசே. அகூ.

கருவிளம். ஈறு புளிமா.

ஒருசிவ னெழுதிய வுயர்திரு முறையுநல்
லிருவரொ டொருவர்செய் யிசைமலி முறைகளு
நிருமல வருணைய னிறைபுகழ் களுமுண
ரருளுடை யவரயி லையவு னடியர். கூ0.

[மேற்படி, தற்றெழுத்துச்செய்யுள்.]

குகருக குகருக குருபர வெனநனி
புகனல முளருமு னணியடி புகழுளி
மிகவுறு நருமர ஹரமனு விரதரு
மகமுனு நருமரு ளமுதுற னுறுதி. கூக.

கூவிளம் கருவிளம் கூவிளம் கருவிளம். ஈறு புளிமா.

பொய்த்திடு மலகைகள் பொய்ப்பத நினைபவர்
பொய்க்கதி யுறுவது பொய்ப்பிலை யவர்வழி
பொய்த்திட வெனைவளை பொய்ச்சட முளவனை
பொய்ப்படர் பொடிவளர் பொற்பயி லரசே. கூஉ.

கூவிளம் தேமா கருவிளம் கூவிளம். ஈறு புளிமா.

மாயவ ளக்கர் மயலற வேசொனு
பாயமு றைச்செந் நெறியுறு பாவகர்
காயம தைப்போ டளவுன கான்மலர்
நேயமி ருப்பர் நெடிலயி லரசே. ௯௩.

அடிதோறு முதலெழுத் தொன்றத்தொடுக்கும்
அடிமோனைத்தொடைச்செய்யுள்.
தேமா கூவிளம் கூவிளம் கூவிளம்.

மேவு வாருனை வேண்டுநர் மேன்கதி
மேவு வாருனை வேண்டலர் வீழ்கதி
மேவு வாரக மேயொளிர் மேனுதி
மேவு வாரயில் வேந்தெனு மீசனே. ௯௪.

அடிதோறு மிறுதிச்சீ ரொன்றத்தொடுக்கும்
அடியியைபுத்தொடைச்செய்யுள்.
சீர்வாய்பாடுசிதையினு மோசைகெடாது நடப்பன.

கோமி னையன்வி லென்பதுங் குன்றமே
மாமன், வன்குடை யென்பதுங் குன்றமே
நீமன் னுந்தென் னிகேதனங் குன்றமே
பூமி னின்னயில் போழ்ந்ததுங் குன்றமே. ௯௫.

இதி விறுதி யெழுத்தையு மொன்றத்தொடுக்கலாம். அதற்கித் தாக்கே காட்டாம்.

அடிதோறுமுறு முதலெழுத்தெல்லாந் தம்மிலொத்த
வளவினவாய் வர இரண்டாமெழுத்தொன்றத் தொடுக்கும்
அடியெதுகைத்தொடைச்செய்யுள்

அழகு டம்பு ளமேத்திய மாருநேர்
பழவு யிர்க்கணு மாசு படர்ந்ததான்

மழவ னுய்வரு வானவ னேயது
கழலு மாறு கடைக்கணித் தாளனே. கசு.

செய்யு நற்கடன் றீர்ந்தவெச் செவ்வியு
மெய்யும் பொய்யு மிழற்றுமை யாய்ந்துமெய்
யுய்யு மாறுனை யுன்னு மெனைக்கொளாய்
கையுங் காலுமில் கந்த சுவாமியே. கஎ.

சொல்லானும் பொருளானு மடிதோறு முதற்கண்ணே
மறுதலைப்படத்தொடுக்கும்
அடிமுரண்டோடைச்செய்யுள்.

வெண்பொன் போற்பல் விளங்கந்த ணாளர்சூழ்
பொன்கொண் மன்றுட் புராணன் குமாரனே
பைங்கண் மாகணம் பாடிப் பழிச்சுநின்
செங்க மூற்செல்வ மென்றெனைச் சேருமோ. கஅ.

அடிதோறு முதற்கண்ணே யளபெடையொன்றத்தொடுக்கும்
அடியளபெடைத்தொடைச்செய்யுள்.

சீஇர் விஞ்சிய தேவர்கள் வாழ்விசும்
பூஉர் பம்பெழி லோகையின் மேனவி
லோஒர் சின்மய வோஎகநல் காய்குகப்
பேஎர் கொண்ட பிரானெனு மெந்தையே. கக.

அந்தாதித்தொடைச்செய்யுள்.

புளிமா கருவிளம் தேமா புளிமா.

திருவே லவனரு டேடார் வினைரி
யெரியஞ் செனியினி யேயெம் மருளே
யருளே யெனுமடி யார்தே றினைதி
யருளே யெனுமடி யார்தே றினைதி. க00.

இச்செய்யுளில், அடிதோறு மிறுதிக்கண்ணின்ற "எரி" எனு மசையையும், "அருளே" எனுஞ் சீரையும், "அருளேயெனுமடியார் சேர்நினைதி" எனு மடியையும், "தி" எனு மெழுத்தையு மற்றையடிக் காதியாகத் தொடுத்தமையின்; அந்தாதித்தொடை நான்கும் வந்த வா றறிக.

ஓரடிமுழுது மொருசொல்லேவரத்தொடுக்கும்
இரட்டைந்தொடைச்செய்யுள்.

புளிமா.

தனனா தனனா தனனா தனனா.

நனிசூழ் நனிசூழ் நனிசூழ் நனிசூழ்
தனிவே லவனார் சரண்மா மலரே
தொனிபோ யிருளாய் வளையோர் துகள்போ
யினிதா நலமே யெழுமா றுளமே. ௧௦௪.

மோனை முதலிய தொடையுந் தொடைவிகற்பமும்
போலாது வேறுபடத்தொடுக்கும்
செந்தொடைச்செய்யுள்.

மா கூவிளம் கூவிளம் தேமா.

நீண்ட ஞவச்சுரி யந்திரு வீர
மனவை ராக்கிய நற்புகழ் ஞான
மாறு முள்ளப கேசனி ளங்கோ
விசாக னென்றறி வார்தெளி வுள்ளார். ௧௦௨.

இதனைச் செந்தொடைச்செய்யு ளென்றல், காராட்டை வெள்ளாடென்றாற்போலும். இதனை மங்கலவழக் கென்ப. அழகிலா விச்செய்யு ளிங்ஙன மிலக்கியங் காட்டு நிமித்தமாகவே சொலப்பட்டதென வறிக. "மேவுவாருனை" என்னுஞ் செய்யுண்முதல்

இச்செய்யுள்வரை, அடி மோனைத்தொடையாதி தொடை யெட்டுங் காட்டப்பட்டன.

இச்செய்யுள்: நிலைமண்டில வாசிரியப்பா வாகாதென்பதை, ஆசிரியவியல் உகூ-ம் செய்யுளடியில் விளக்கிய நியாயத்தி னுணர்க.

அடிமுதலிருசீர்க்கண்ணு முதலெழுத்தொன்றத்தொடுக்கும்
இணைமோனைத்தொடைச்செய்யுள்.
முதற்சீர்: தேமா.

வாகை வாரணத் தோகையற் பாடு
மோகை யோங்கிய பின்புவ னன்பி
னோகை யீடெனக் குற்றன நீருந்
தோகை தோன்றவற் பாடுதி ரன்பீர். ௧0௫.

அடிமுதற்சீருமூன்றாஞ்சீரு முதலெழுத்தொன்றத்தொடுக்கும்
பொழிப்புமோனைத்தொடைச்செய்யுள்.
முதற்சீர் : புளிமா. மூன்றாஞ்சீர் : கருவிளம்.

அருண்மு தற்பொரு ளறுமுகற் பாடு
திருவி ழுந்துமை திமிர்நு தன் மாந்த
ருருவி யந்தணி யுயர்கவி பாடின்
வருவ தென்சொலும் வளர்புவி யீரே. ௧0௪.

அடிமுதற்சீரு மிறுதிச்சீரு முதலெழுத்தொன்றத்தொடுக்கும்
ஒரூஉமோனைத்தொடைச்செய்யுள்.
புளிமா கருவிளம் கருவிளம் புளிமா.
தனனா தனதன தனதன தனனா.

பகவா னறுமுக னடிபுகழ் பரிவே
முகமே வெவரையும் வியனென வுனியே

பகரே மொருகவி யெனுநிலை படர்வோர்
துகடீ ரருணிலை யடைவது துணிபே. க0ரு.

அடிமுதற்சீரு மிரண்டாமூன்றுஞ்சீரு
முதலெழுத்தொன்றத்தொடுக்கும்
கூழைமோனைத்தொடைச்செய்யுள்.
கூவிளம் கூவிளம் கூவிளந் தேமா.

கங்கைபா கஞ்சசி கண்டம ணிந்தோன்
பங்குறு பண்புமை பங்கயக் கைம்மே
வங்கிள ரள்ளயி லத்தனைப் பாடல்
சங்கையில் சத்தனை சற்சனர் மாட்டே. க0சு.

அடிமுதற்சீரு மூன்றுநான்காஞ்சீரு
முதலெழுத்தொன்றத்தொடுக்கும்
மேற்கதுவாய்மோனைத்தொடைச்செய்யுள்.

தே*டரு மங்குக தேவனைத் தேடிப்
பாடணி யிற்றன பாடுறு பாங்கு
மாடருள் வல்லமை யாரமு காதி
கூட்டிட வாற்றுவர் கூர்மதி கூர்ந்தோர். க0எ.

அடிமுதற்சீரு மிரண்டாநான்காஞ்சீரு
முதலெழுத்தொன்றத்தொடுக்கும்
கீழ்க்கதுவாய்மோனைத்தொடைச்செய்யுள்.

தெள்ளிய [illegible]கவி வாணனைத் [illegible]வ்வாற்
கள்ளமில் கல்வியி லார்நனி கண்ணு

---

*அருமை அருமென மரீஇயிற்று. இவ்வாறு, சிவப்பிரகாசய முதற்சூத்திரம் சு - ல் "போற்றலருமருள்" எனவும், திருவாசகம் திருப்பொற்சுண்ணம் ரு - ல் "நறுமுறு" எனவும், தாயுமா[illegible] லில் "பேசருமனந்தபத" எனவும் வருதல் காண்க.

ரெள்ளவ ரெவ்வுழை யுங்கெட வேந்தாய்
வள்ளிமன் வண்பதம் பாடுவர் வல்லார். ௧0அ.

அடிநாற்சீரு முதலெழுத்தொன்றத்தொடுக்கும்
முற்றுமோனைத்தொடைச்செய்யுள்.

கருவிளம் கருவிளம் கருவிளம் புளிமா.

மலர்ந்தநன் மருமலி மலரணை மறுவி
லலங்கலென் னணிபணை மறுமிழி வடையு
முலம்பழ குழையணி யுலர்விழி வுறலின்
றிலங்கிடு மிதையயி லிறைக்கிட லியைபே. ௧0௯.

அடியினிறுதியைமுதலாகக்கொண்டுவரு மிறுதித்தொடையாகிய
இயைபுந்தொடைச்செய்யுள்.

தேமா தேமா தேமா தேமாங்காய்.

[தமுத லிரண்டுவிருத்தமும், நேட்டெழுத்துக்கவி.]

மாதா வேனே மாகா மாவேகா
வேதா தூயா வீமா மாமாயா
நாதா வேலா ஞானே சாநீதா
போதா நாகா போகா நீயேகா. ௧௧0.

தானா தானா தானா தானானா.

தாவா னேநா னேநீ தானாமா
தூவே பூவே தோலா வேலோனே
கோவே வீடீ கோனே வானோனே
தேவே வாவே சேயே மாதாயே. ௧௧௧.

இவ்விரண்டு செய்யுளுள்; முதற்செய்யுண் முதலடி யிறுதிச்சீ ரிரண்டும் இறுதியெழுத் தொன்றத் தொடுத்தமையால், இணையியைபு. இரண்டாமடி யிரண்டாஞ்சீரு மிறுதிச்சீரும் அவ்வாறு

தொடுத்தமையால், பொழிப்பியைபு. மூன்றுமடி முதற்சீரு மிறுதிச் சீரும் அவ்வாறு தொடுத்தமையால், ஒரூஉவியைபு. நான்காமடி முதற்சீ ரொழிந்த வனை முச்சீரும் அவ்வாறு தொடுத்தமையால், கூழையியைபு. இரண்டாஞ்செய்யு ளிரண்டாமடி யீற்றயற்சீ ரொழிந்த வனை முச்சீரும் அவ்வாறு தொடுத்தமையால், மேற்கதுவா யியைபு. மூன்றுமடி முதலயற்சீ ரொழிந்த வனை முச்சீரும் அவ்வாறு தொடுத்தமையால், கீழ்க்கதுவா யியைபு. நான்காமடி நாற்சீரும் அவ்வாறு தொடுத்தமையால், முற்றியைபு.

எதுகைத்தொடைச்செய்யுள்.

நான்காஞ்சீர்: கூவிளங்காய்.

நம்பா வெம்பா நல்லா ருள்கயிலா
வம்பா வென்பார் கொம்பா மன்முலையா
ரம்பார் கண்ணு னையா ரம்பிகைசே
யம்பா தம்பே ணும்பே றண்ணுவரே. ககஉ.

தேமா.

[மெல்லினமிலாச்செய்யுள்.]

தீயார் தேடா வாயா வாயா
வீயா வாயா வில்லா காயா
தூயா சேயா தூயா டாயா
டாயா வாவா தாளீ தற்கே. ககங.

இவ்விரண்டு செய்யுளுள்; முதற்செய்யுண் முதலடி முதற்சீரு மிரண்டாஞ்சீரு மிரண்டாமெழுத் தொன்றத் தொடுத்தமையால், இணையெதுகை. இரண்டாமடி முதற்சீரு மூன்றுஞ்சீரும் அவ்வாறு தொடுத்தமையால், பொழிப்பெதுகை. மூன்றுமடி முதற்சீரு மிறுதிச்சீரும் அவ்வாறு தொடுத்தமையால், ஒரூஉவெதுகை. நான்காமடி யிறுதிச்சீ ரொழிந்த வனை முச்சீரும் அவ்வாறு தொடுத்தமை

யால், கூழையெதுகை. இரண்டாஞ்செய்யுண் முதலடி முதலயற்சீ ரொழிந்து ஏனை முச்சீரும் அவ்வாறு தொடுத்தமையால், மேற்கதுவாயெதுகை. இரண்டாமடி யிறுதியயற்சீ ரொழிந்து ஏனை முச்சீரும் அவ்வாறு தொடுத்தமையால், கீழ்க்கதுவாயெதுகை. மூன்றுமடி நாற்சீரு மவ்வாறு தொடுத்தமையால், முற்றெதுகை.

முரண்டொடைச்செய்யுள்.

புளிமா புளிமா தேமா கருவிளம். ஈறு புளிமா.

பேரிதுஞ் சிறிதும் பேசும் படியிழி
தெருளுந் தனுளார் பேதுஞ் சிகுநனி
விரிவிண் குகனே மெய்யுட் குவ்வுட
ஞெருகா லிருகான் முக்கா லுனினே. ககச,

முதற்சீர்: தேமா. மூன்றுஞ்சீர்: புளிமா.

மாறு வருள்வேன் மனன்மெய் யடியவர்
தாறே கதையா ரமிதஞ் சமமற
வீறே முதலே பறையா ரிடையிடை
யேறு ரிழியார் கருதார் மறவார். ககரு.

இவ்விரண்டு செய்யுளுள்; முதற்செய்யுண் முதலடி முதற்சீரு மிரண்டாஞ்சீருஞ் சொல்லானும் பொருளானு முரணத்தொடுத்தமையால், இணைமுரண். இரண்டாமடி முதற்சீரு மூன்றுஞ்சீரும் அவ்வாறு தொடுத்தமையால், பொழிப்புமுரண், மூன்றுமடி முதற்சீரு மிறுதிச்சீரும் அவ்வாறு தொடுத்தமையால், ஒரூஉமுரண். நான்காமடி யிறுதிச்சீரொழிந்து ஏனைமுச்சீரு மவ்வாறு தொடுத்தமையால், கூழைமுரண். இரண்டாஞ்செய்யு ளிரண்டாமடி முதலயற்சீரொழிந்து ஏனை முச்சீரு மவ்வாறு தொடுத்தமையால்,மேற்கதுவாய்முரண். மூன்றுமடி யிறுதி யயற்சீரொழிந்து ஏனை முச்சீரு மவ்வாறு தொடுத்தமையால், கீழ்க்கதுவாய்முரண். நான்காமடி நாற்சீரு மவ்வாறு தொடுத்தமையால், முற்றுமுரண்.

### அளபெடைத்தொடைச்செய்யுள்.

தேமா கூவிளம் தேமாங்காய் மா.

ஆஅன் பாஅனு மஃகல்கொள் ளாத
தேஎன் பாருநெய் திண்ணகண் டாசில்
வாஅன் கன்னனும் பின்போக மரூஉ
நாஅன் பேஎனு நன்செவ் வேள்கேள். ககசு.

தூஉ பாமிணி தன்ன்றோர் தாஅர்
பூஉ ணி இணைல் வேலண்ணல் பூஉங்
காஅ ஞஅடல் காஅண்ட லோஓங்
கேஎ ரேறுந ரெந்தைக ளாவார். ககஎ.

இவ்விரண்டு செய்யுளுள்; முதற்செய்யுண் முதலடி முதற்சீரு மிரண்டாஞ்சீரு மளபெழத் தொடுத்தமையால், இணையளபெடை. இரண்டாமடி முதற்சீரு மூன்றாஞ்சீரு மவ்வாறு தொடுத்தமையால், பொழிப்பளபெடை. மூன்றாமடி முதற்சீரு மிறுதிச்சீரு மவ்வாறு தொடுத்தமையால், ஒரூஉவளபெடை. நான்காமடி யிறுதிச்சீரொழிந்த வேனை முச்சீரு மவ்வாறு தொடுத்தமையால், கூழையளபெடை. இரண்டாஞ் செய்யுண் முதலடி முதலயற்சீ ரொழிந்த வேனை முச்சீரு மவ்வாறு தொடுத்தமையால், மேற்கதுவாயளபெடை. இரண்டாமடி யிறுதியயற்சீ ரொழிந்த வேனை முச்சீரு மவ்வாறு தொடுத்தமையால், கீழ்க்கதுவாயளபெடை. மூன்றாமடி நாற்சீரு மவ்வாறு தொடுத்தமையால், முற்றளபெடை.

"வாகை" எனத்தொடங்கும் ௧௦௯-வது செய்யுண்முத லிச் செய்யுள்வரை, தொடைவிகற்பம் முப்பத்தைந்துங் காட்டப்பட்டன. இவற்றொடு முன்னர்க்காட்டிய தொடை யெட்டையுங் கூட்டின்; நாற்பத்து மூன்றாகும். ஆகவே "இழுக்கி லடிதொடைநாற்பத்துமூன்று" என யா - காரிகையில் வருமாறு இந்நூற்கண்ணுந் தொ

டையும்,தொடைவிகற்பமும் வந்தவா றறிக. இத்தொடை தொடைவிகற்பங்களன்றி யடிதோறு மிறுதிச்சீர்க்கண் மறுதலைப்படத் தொடுப்பது கடைமுரண், கடையிருசீர்க்கண்ணு மறுதலைப்படத்தொடுப்பது கடையிணைமுரண், இரண்டாஞ்சீர்க்கண்ணு நான்காஞ்சீர்க்கண்ணு மவ்வாறு தொடுப்பது பின்முரண், முதற்சீர்க்கண்ணின்றி யொழிந்த முச்சீர்க்கண்ணு மவ்வாறு தொடுப்பது கடைக்கூழைமுரண், இடையிருசீர்க்கண்ணு மவ்வாறுதொடுப்பது இடைப்புணர்முரணெனவுங் கூறுப. இவ்வாறு ஏனைய மோனைத்தொடை, இயைபுத்தொடை, எதுகைத்தொடை, அளபெடைத்தொடை யென்பவற்றுக்குமொட்டிக்கொள்க. இவ்வியல் ௧0௨ - வது தொடர்பாகிய செந்தொடைச் செய்யுள்போன்ற செய்யுளடியி லெங்கேனு மடியின் முதனிற்கு மோனையெழுத்துக்குரிய இனவெழுத்துவரி னதனை, மருட்செந்தொடை யென்க.

பின்வரு வழியெதுகை வழியாக வழிமுரண்டொடை யொன்றுசொலப்படும். அஃதளவடியின் மேற்பட்ட நெடிலடி, கழிநெடிலடிகளி லேயே வரத்தக்கது. பின்வரு வருக்கவெதுகைவழியாக வருக்கமோனை யொன்று சொலப்படும். இதற்கிலக்கியம் ஆசிரியவியலில் "தருமமும்" எனத்தொடங்கும் ௧௨-வது செய்யுள். அதிலடிதோறு முதலில், தகரவருக்கம் வந்தமை காண்க. இம்மோனை : ஆசிரியப்பாவிற்கேயின்றியுமாசலி னங்குத்தர நேரிட்டது. இடையிட்டெதுகை, விட்டிசை வல்லொற்றெதுகை, விட்டிசை மோனை யென மூன்று கூறப்படும். அவை, கட்டழகில்லா நடையு மோசையுமுடையன வென்க.

வருக்க வெதுகைச்செய்யுள்.

தேமாங்காய் தேமா தேமாங்காய் தேமா.

தானன தான தானன தான.

தாமேவு போத மேதேவர் தாழ்வில்
பூமாலை சூடு போர்வேலன் மீது

பாமாலை பாடி யேபேணு தாசர்
நாமுடை ராகி டோநாளு நாடு. ௧௧௮.

இதில், இரண்டாமெழுத்து அளவொத்த மகரவருக்கம். ஆத லின், இது மகரவருக்கவெதுகை. இவ்வா றேனையவெழுத்து வருக் கம் வரினும், அவ்வவ்வருக்க வெதுகையாம்.

நெடிலெதுகைச்செய்யுள்.

தேமா தேமா கூவிளம் தேமா.

ஏரார் பெண்கா ளெம்பெரு மானைக்
கூடா வாழ்வென் வாழ்வருள் கூரா
யானு வன்பா லாள்குக வென்றோர்
வாதே செய்துய் வேபெற வாரீர். ௧௧௯.

இதில், இரண்டாமெழுத் தொன்றுவிடினும், அவ்வெழுத்தின் மேலேறிய நெடி லொப்புமையாம். அவ்வழி யிது நெடிலெதுகை. இது, பெரியதோர் சிறப்புடையதன்று.

வல்லினவெதுகைச்செய்யுள்.

கூவிளம் புளிமா கூவிளம் தேமா.

தத்தன தனனு தந்தன தான.

மச்சறு தகைசான் மங்கைய ரேகை
கொட்டியுண் மகிழ்வே கொண்டொரு ஞான
முத்தியை யருள்சேய் மொய்ம்பணி பாட
விக்கணம் வருவீ ரின்பரி வோடு. ௧௨௦.

இதில், இரண்டா மூன்று மெழுத்துக்கள் வல்லினமாதலின்; இது வல்லினவெதுகை.

மெல்லினவெதுகைச்செய்யுள்.

கூவிளங்காய் காய் மா தேமா.

எம்பெருமா னைஞ்செவ்வே ளியற்பே ரோதிக்
கண்டவொலி கலகலக்கக் கனிந்து பாடிச்
சுந்தரமா நடிப்பதற்குத் தொடர்ந்து வாரீர்
மஞ்சொழியா விளங்கன்னி மாரே யன்றே. கஉக.

இதில், இரண்டாமெழுத்து மெல்லினமாதலின்; இது மெல்லினவெதுகை.

இடையினவெதுகைச்செய்யுள்.

கூவிளம் தேமாங்காய் கூவிளம் தேமா.

மெய்யுரை யோர்சூழு மேதைவி சாக
னல்லரு ளேவாழி நாளுமெ னுவாட்
கொள்ளடி யேபாடி நாடுதிர் கோல
மவ்வலை நேர்கூரன் மாமுலை யீரே. கஉஉ.

இதில், இரண்டாமெழுத்து இடையின மாதலின்; இஃதிடையின வெதுகை.

தலையாகெதுகைச்செய்யுள்.

மூன்றுஞ்சீர்: கருவிளம்.

தொண்டக மேநாளுந் தொனிதரு சீறா
ரண்டக னிறைக வணிபுற வுள்ளீர்
முண்டக னூர்பேணு முருகன பாதங்
கண்டக மேமாவின் கனிகொள வாரீர். கஉங.

இதில், "சீர்முழுதொன்றிற் றலையாகெதுகை" எனும் விதிப்படி முதற்சீ ரிரண்டாமெழுத்துமுத லெல்லாவெழுத்தும் ஒன்றத் தொடுத்தமையால், இது தலையாகெதுகை. "ஒரெழுத்தொன்றி

ணிடை'' என்றபடி யிரண்டாமெழுத் தொன்றுமட்டு மொன்றத் தொடுப்பது இடையாகேதுகை. இது முன்னர்க்காட்டிய அடியெதுகையைச்சேரும். அது கூகு - வது யாப்பு. "கடைபிறவே" என்றபடி மேலிருவகைக்கும் வேறுபடுவது கடையாகேதுகை. இதற்கிலக்கியம்: மற்றவெதுகைகளே. அதனால், இங்கிரண் டியாப்புத்தரவில்லை.

மூன்றமெழுத்தொன்றேதுகைச்செய்யுள்.

தேமா கூவிளம் தேமா கூவிளங்காய்.

தன்ன / தைன தானன தான தானதனு.

செம்மை நாய்கமு கோமை சேர்சுரமார்,
நன்மை மாநுடர் காளெ ஞைறவே
மெய்மை யோதிய வேல ஞர்பெயரே
யுண்மை யாநித மோதி வாழ்மினரோ. கஉச.

இதில், 'மை' என மூன்றுமெழுத் தொன்றத்தொடுத்தமை காண்க.

ஆசேதுகைச்செய்யுள்கள்.

தான தந்தன *தல்ல தத்தனு.

மாமல் குங்குளிர் குல்லை வச்சிகளீ
பூமல் கும்பொழின் முல்லை யச்சுதனுர்
தூமல் குந்துதி சொல்லு மற்புடையீர்
சேய்மல் கன்பதர் செல்லு மிக்குயர்வீர். கஉரு.

* தைய வெனுஞ் சந்தத்தையே, தல்ல வென விகற்பிக்கும் வழி விகற்பித்த துணர்க.

இதில், ஆசாக யகரவொற் றிடைவந்தது காண்க.

தாத்த தானன தான தானதன.

ஏர்க்கு ழாமுழு மேசி லாமருத
மாக்க ளேபெரு வான மாமுருக
வாக்கை போமுன மாள வாவெனவொர்
நோக்க மாகுதிர் நூறு வீர்துயரை. கஉசு.

இதில், ஆசாக ரகரவொற் றிடைவந்தது காண்க.

தான தல்லன தான தானதனு.

ஒவ லில்லலை வீசு மோர்கடனீர்
மேவு முள்ளிக டாழை வீறிடையிர்
கோல்வி டல்லக வூழர் கோள்கடிசேய்
தாவி னல்லடி தாழ்வி ரேனுயர்வீர். கஉஎ.

இதில், ஆசாக லகரவொற் றிடைவந்தது காண்க.

தான தன்னன தான தந்தனு.

போதல் பின்னுறல் கூறு புந்தியர்நூ
லோதல் பன்னுத லோடு ளன்புடையா
ரீத லெண்ணுவ ரேதில் கந்தனையே
தாழ்த றண்ணல மாகு மென்றறிவார். கஉஅ.

இதில், ஆசாக ழகரவொற் றிடைவந்தது காண்க. "யரலழ வென்னு மீரிரண் டொற்றும் - வரன்முறை பிறழாது வந்திடை யுயிர்ப்பினஃ - தாசிடை யெதுகையென் றறைதல் வேண்டும்." எனும் யா - காரிகையுரைவரு சூத்திரப்படி, இங்ஙன மாசெதுகை நான்கு மினி காட்டப்பட்டன.

ஆசிடையிட்டுவரும் வல்லினவெதுகைச்செய்யுள்.

தான தையன தந்த தானதனு.

காதன் மல்குயி ரென்ற காரிகைதா
னோர்கோ ளுள்ளிட மென்ற பூவணைமே

லாத வுள்ளமெ னங்கை யாலணையா
வேத மில்லயி லெந்தை மேவுவளே.                    கஉ௬.

இது, 'த-கொ' எனும் வல்லினமொன்றிய வெதுகை. அவ்வல்லினத்திடையில், ஆசாக ரகரவொற்று வந்தது காண்க.

இரண்டடியெதுகைச்செய்யுள்.

தான தந்தன தான தந்தனா.

சூரி யன்றெழு தூய வந்தணரே
யேரி லங்கயி லீச னங்குமுளா
னுளு மென்றவ னடி நண்ணுற்னே
பீளு டப்படை பீடை வெந்திடுமே.                    கரு0.

இதில், முன்னிரண்டடியு மோரெதுகையாய்ப் பின்னிரண்டடியு மோரெதுகையாய் வந்தவாறு காண்க.

உயிரெதுகைச்செய்யுள்.

தான தந்தன தன்ன தானதனா.

கானி லங்கடி துன்ன வேகமழ்தார்
கோடி தந்தெழில் வண்மை கூர்செடிகா
ளாசி னுஞ்சும மன்னல் சேயுருவே
சாரி னுஞ்சிறு சன்ம மோசனமாம்.                    கருக.

இதில், இரண்டாமெழுத் தொன்றுவிடினும், இரண்டாமெழுத்தின்மே லேறிய இகரவுயிர் ஒன்றிவந்தமையினால் இஃதுயிரெதுகையாயிற்று. இது பெரியதோர் சிறப்புடையதன்று.

வழியெதுகைச்செய்யுள்.

இச்செய்யுள் : முற்போந்த கலிநிலைத்துறைகளுள் ருடு - வது யாப்பு. அந்த யாப்பினெதுகை யிங்கே காட்டப்படுவதாயின், முன்னர்க்காட்டிய முற்றெதுகையாய் முடியும். ஆகலின், அளவடியின்

மிக்க வடிகளானே வரத்தக்க வதனை யங்குக்காட்ட நேரிட்டது. அதிற் சீர்தோறு மிரண்டாமெழுத்தாகிய ககரவொற்று வந்தமை காண்க. ஒற்றன்றி யுயிர்மெய்யெழுத்தும் வரும். இவ்வாறு முற்றும் வருதலின்றிச் சிலசீர் விட்டியைந்துவரினும் வரலாம். அநுப்பிராச மெனும் வடமொழியை வழியெதுகையென்பது தமிழ்வழக்கு. எதுகைகளிற் றலையாகெதுகை சிறப்பாதல் போல, இதுவும் பெரியதோர் சிறைப்புடைத்து.

நெடின்மோனைச்செய்யுள்.

தேமா தேமா கருவிளம் கூவிளங்காய்.

காணர் பக்கி களையறி வார்பெரியோர்
கோண யிட்டர் குழாமுட னேவருசேய்க்
காண வன்பி னருஞ்சிறை வீசுமினோ
வூண ரங்க முறுநல மேவிடுவீர். ௧௩௨.

இதில், அடிதோறும்வந்த முதலெழுத்து நெட்டெழுத்தாகலின் நெடின்மோனை. அடிதோறு முதலெழுத் தொன்றத்தொடுக்கும் அடிமோனைக் கிதுவேறு. அம்மோனை முன்னர்க் காட்டப்பட்டது. இந்நெடின்மோனையுஞ் செந்தொடைச்செய்யுட் கின்றென்பதை யுணர்த்துவான் இதனையுமொரு மோனையென்க் கூற்று வல்லோர் கொள்வ ரென்க

வல்லினமோனைச்செய்யுள்.

காவாழ் கிள்ளை களேமயில் காளடியார்
கோவா மெந்தை குகேசன சீரெழிலே
பாவா மாறு பகர்ந்தினி தாடுமினோ
தூவா ரோகை சுரந்திடு நும்பகமே. ௧௩௩.

இதில், அடிதோறும் வந்த முதலெழுத்து வல்லெழுத்தாகலின் வல்லினமோனை. இவ்வாறு மெல்லெழுத்துவரின் மெல்லினமோனை. இடையெழுத்துவரின் இடையினமோனை யெனவுங் கொள்க.

### இரண்டடிமோனைச்செய்யுள்.

தேமாங்கனி கூவிளம் கூவிளம் கூவிளங்காய்.

தாத்தந்தன தானன தானன தானதனா.

நீற்கண்டன ருமக னய்வரு நீளுயிரார்
நீற்கண்டற வேபுரி நேரயி லாள்கரவேள்
வாற்கெண்டைகண் மால்கொளு மேர்கெழு மான்பகள்கோ
வாற்கெண்டைகள் பாய்புய மாதிரம் வான்வரையே. ௧௩௪.

இதில், முன்னிரண்டடி முதலெழுத்து மொருமோனையாய்ப் பின்னிரண்டடி முதலெழுத்து மொருமோனையாய் வந்தவாறு காண்க. கட்டு : கண்டென மெலிந்தது.

### அனுமோனைச்செய்யுள்.

புளிமா கூவிளங்காய் தேமா கூவிளம்.

தனன தானதன தான தானன.

சேருநர் காதுருக தேவை வேலொடு
திருவு லாமிதய நாடு சீரியர்
தெருள ராயிதய தேசு கூடுவர்
சிரம மேதுமடை யாது தீவிரம். ௧௩௫.

இதனில், அடிதோறும் வந்த முதலெழுத்து அனுவெழுத்து. அதனாலிது அனுமோனை. அனுவெழுத்தை யினவெழுத்தெனப்படும். விவரம்: அ-ஆ-ஐ-ஔ தம்முளினமாம். இ-ஈ-எ-ஏ தம்முளினமாம். உ-ஊ-ஒ-ஓ-தம்முளினமாம். இவையேறிய வுயிர்மெய்யு மிவ்வாறும். ஒற்றினுள் ச - த தம்முளினமாம். ஞ - ந தம்முளினமாம். ம - வ தம்முளினமாம். அன்றி, ய - இ - எ - தம்மு ளினமெனக்கோடற்கும், ஆன்றோர் செய்யுள்வழக் குண்டு. முதலெழுத்தாய மோனையெழுத்தேனும், உரிய வினவெழுத்தேனுஞ் செந்தொடைச்செய்யு ளொழிந்த எல்லாச்செய்யுட்கு மடிதோறும் வரத்தொடுப்பது சிறப்பாம்.

இக்கண்டத்திலுள்ள செய்யுளனைத்து மிச்சிறப்புடையனவே. அடி முதற்சீரொழிந்த வேனைச் சீர்களி லெச்சீரிலேனு முதலில் வரத் தக்க அவ்வெழுத்தானது, சீர்க்கு இடைகடையில் வருமாயின் அது மேற்சிறப்பினின்றும் போலியென வங்கீகரிக்கப்படும். இதற்குதா ரணம்: இவ்வியல் கஉ௫ - வது தூக்கிரண்டாமடி யிரண்டாஞ்சீரும், கரு௬ - வதுதூக்குமுதலடி யிரண்டா நான்காஞ் சீர்களும், ௫௫ - வது தூக்கு மூன்றுமடி நான்காஞ் சீருமாம். இவ்வா றவ்வெழுத்துவரப் பெற்றவையன்றிப் பெறாத வாசிரியவடி : பொழிப்பெதுகையாலு நடக்கும். இதனை, ஆசிரியவியல் க - ௧0 - கக - கஉ - அ - ம் செய் யுள்களி லறிக. நிற்க ;

இச் செய்யுள்காறுங் காட்டிய தொடை தொடைவிகற்ப முத லியவற்றுட் சில: தொடைகாட்டத் தொடங்கிய கலிவிருத்தத்திற்கு முற்போந்த செய்யுள்களில் வந்திருப்பினும், அவற்றை யொருங்கே யறிகுந ரறியுமா றிங்ஙனங் காட்டிய வொழுங்கு கவினென்க.

ஈண்டு வந்தவாறு நாற்சீர்கொண்ட அளவடியிலேயே நடைபெ றத்தக்க தொடைவிகற்பம் முப்பத்தைந்தும், இரட்டைத்தொடை யும், வழியெதுகையும், ககள - வது விருத்தத்தினடியில் வெளி யிட்ட வழிமுரண்டொடையு மொழிந்த மற்றைய தொடை யனைத் தும்: குறள், சிந்து, அளவு, நெடில், கழிநெடில் என்னு மடி யைந்தினு நடைபெறாஉம் என்க.

முதற்சீர் : தேமா.

ஆசி றம்முடலை லிங்க மாகினே
நேச மோடுயிரி னின்றவ் வாறதி
னாசை யில்குகனை நாட்டு வோருயர்
தேசி லங்குசிவ லிங்க மாகுவர். கரு௬.

### மா புளிமா புளிமா புளிமாங்காய்.

தோலார் திருவி லைகளைச் சொலுமுந்தை
நூலே யறியா நொசிவுள் ளவர்முன்னோர்
காலே தறிவார் கதியென் னடையாரேர்
வேலா விமலா விபுவா யவிர்சோதீ. ௧௩௭.

நள்ளார் பகமா றுளவெங் குருநாதா
வளவில் கலையே தமிலா தறிவோராய்க்
களமில் *களனே பெறினுங் களிநாதர்
மிளிருன் கழலைப் புகழ்நூல் விழையாரே. ௧௩௮.

செல்வப் பொருளோர் செயுநல் வினைபோலே
கல்விப் பொருளோர் கடமூன் கழன்மோனத
சொல்வித் தையிலே யுயர்வார் துகளோர்வார்
நல்வித் தகவே விறையா நடையானே. ௧௩௯.

### நான்காஞ்சீர்: கூவிளங்காய்.

வீடு வெறுக்கா தொருசெவ் வேள்பெயரிற்
பாடு திருப்பா வுயர்வே பாடதினும்
வீடு வெறுத்தே வெளிநின் றோருளாற்
பாடு திருப்பா வுயர்வே பாடகரே. ௧௪௦.

### தேமா கூவிளம் தேமா கூவிளம்.

முந்தை நோன்மையி னான்முத் தமிழ்
வந்து ளார்குகன் வாழ்த்தி யின்னருட்
சிந்து மூழ்கிவி டாத சேர்க்கையிற்
சொந்த மாயுறு வார்சு வாமியை. ௧௪௧.

---

* களன்=நாதமெனப்படு மோதை யென்பதை, சூடாமணி நிகண்டு "அரவமே களனே யோதை" என்பதனு லறிக.

முதற்சீர் : புளிமா.

எனக்கு நற்றமி ழீந்த சேயரு
ணினைக்கு நெஞ்சுடை யோய்தள் ளாடிடிற்
றனக்கி லாயமெய் தாது தாழ்வெளி
மனக்கு மீனம தாமம் மானசம். ௧௪௨.

கூவிளம் கூவிளம் புளிமா கருவிளங்காய்.

தேனுறழ் முத்தமிழ் விரகு சிறந்துளவுன்
மீனுறழ் சித்திர ஞெகிழி மிடைந்தசரண்
பானினை வுற்றவர் பயில்க லைவிஞ்சையராய்
மேனிலை பற்றுவர் விரைசெய் கடம்பணியோய். ௧௪௩.

தேமா கூவிளங்காய் கூவிளம் தேமா.

சேடை கொண்டதமிழ் செவ்விய தேவ
பாடை யென்றறவர் பன்னுவர் தேமார்
கோடை யங்குகனை யேபிது கொண்டு
பாடை யிங்கிதம ருமதர் பண்ணும். ௧௪௪.

கூவிளங்கனி தேமா கூவிளங்கனி தேமா. †

*மங்கலமுத லீரைந் தங்கமுமுள மாணு
ரிங்கிதகவி மாலை யேசினின்முடி வேய்வோர்.
தங்கமினுட லோடு சங்கமொருவி யந்தந்
துங்க வமுது சேர்வர் சுந்தரமுரு கோனே. ௧௪௫.

† இச்செய்யுள்: முதற்சீரையு மூன்றாஞ்சீரையும், தேமா புளிமா வெனப்பிரிக்கின்; அறுசீர்க் கழிநெடிலடி விருத்தமுமாம்.

---

* மங்கலமுதலீரைந்தங்கம்=மங்கலம், சொல், எழுத்து, தானம், பால், உணவு, வருணம், நாள், கதி, கணம். இவற்றை முதன்மொழிப் பொருத்தமாகிய தசாங்கமென்ப. முதன்மொழியாகு மங்கலமொழியில், இரட்டை மங்கலமும் புகவொண்ணு வென்ப.

[ஒற்றிலா வல்லினச்செய்யுள்.]

தானனதன தானு தானனதன தானு.

தீதறுசுக போதா சேடகடக கோகா
சாதறெறுகு கேசா சாடுதவறு சாடு
சூதறுபகை தீதீ சோதிபதிப கேசா
கோதலுகடி தாதா கோடிபடிக பாதா. ௧௪௬.

இதில், வன்கணவெழுத்தாறும் வந்தன.

[மெல்லினச்செய்யுள்.]

முன்மைமனுமுன் ஞான முன்னுமனனை நண்ணு
நன்மைமினைநன் மோன நண்ணினஙன நண்ணு
மென்மைமுனிமன் னேம னெண்ணமெனைமு ணுமே
மென்மைமணிமின் மஞ்ஞை மின்னுமினிமை மன்னே. ௧௪௭.

இதில், மென்கணவெழுத்தாறும் வந்தன.

[இடையினச்செய்யுள்.]

வையவயவு லாவு வாலிலிழிவர் வாயால்
வையவளவி *லாரி லேவிழைவளை வாரி
வெய்யவழலி லீயோர் வேலையுரிய ராவோர்
வெய்யவலலை யேவில் வேலவவளி யாயே. ௧௪௮.

இதில், இடைக்கணவெழுத்தாறும் வந்தன.

காய் காய் காய் புளிமா.

வம்புமலர் முடிமுருகன் மதியுடையா ரெவரும்
பம்புமளி யால்விரும்பப் படுபொருளா யிடலா
னம்பனெனும் பெயருமணை வானெனுநன் னடையர்
கும்புபடர் குகவெனையுங் கொளவருளி னினையே. ௧௪௯.

* அரில் : ஆரிலென நீட்டல்விகாரமாயிற்று. அரில்=குற்றம்.

கரியபிரான் மருகனெனக் கனகமயில் வருவோன்
பிரியமுளார் மனம்போலப் பேருதவி செயலாற்
பெரியபிரா னெனும்பெயரும் பெறுவனென வறிவோர்க்
குரியபரா பரவெனையு மூவகையொடு நினையே. ௬௯0.

வச்சிரத்தோ டயில்பிடிக்கு மருமறைக்க மழவ
னெச்சகப்பே ரழியிலுவந்தா னழிவடையர் வெழிலா
லச்சுதப்பே ருறுவனென வறியறிஞர் மனமே
வுச்சிதப்பா வகியெனையு மூவகையொடு நினையே. ௬௯௧.

[விருத்தமும், துறையும்.]

எண்ணரிய குகபரம்விண் ணென்னுமறி வுடனு
மண்ணுலகை கிரியையொடு மன்னிமிளிர் வதனல்
விண்ணுமணு மதுவயமென் றேயறியும் விறலோர்
நண்ணுநடை வருகுமர நம்பெனையு நினையே. ௬௯௨.

எண்ண ரியகு கபரம்விண் ணென்னு மறிவுடனு
மண்ணு லககி ரியையொடு மன்னி மிளிர்வதனல்
விண்ணு மணும துவயமென் றேயறி யும்விறலோர்
நண்ணு நடைவ ருகுமர நம்பெ னையுநினையே.

இது, கட்டளைக்கலித்துறை.

[சொல்லும் பொருளும் வேறுபடாமல், அடியுந்
தொடையும் வேறுபட்டுவரும் பிறிதுபடுபாட்டு.]

[விருத்தமும், அகவலும்.]

பூமணமே புனன்மணமே பொங்களிமா மணமே
காமணமே கனிமணமே கம்மெனவே கமழு
மீமருவி கமலைவள மேயவொரு தளிபுய்
சேமகுகா வுவகைநெய்தை செய்யவெற்கு நினையே. ௬௯௩.

பூமண மேபுனன் மணமே பொங்களி
மாமண மேகா மணமே கனிமண

மேகம் மெனவே கமழு மீமரு
வீக மலைவள மேய வொருதளி
யுய்சே மருகா வுவகை
நெய்தை செய்ய வெற்கு நினையே.

இஃதாறடி நேரிசையாசிரியப்பா.

[திரிபாகி.]

மூன்றெழுத்து மெம்பெருமான் முருகிருக்கை முதலிற்
றோன்றெழுத்து மீற்றெழுத்துந் துணைமுருகன் கரண
மூன்றெழுத்து னிடைகடைதா மோங்குமர னிலையங்
கான்றிளக்குங் கோதைசொல்லிற் கமலைகலை மலையே. கருச.

இதில், மூன்றெழுத்து - கமலை. இது திருவாரூர். கமலையில் முத லெழுத்துங் கடையெழுத்துங் கலை. இது கரணமென்னுங்கல்வி. இடையெழுத்துங் கடையெழுத்தும் மலை. இவை பொருந்தப் பொருள் கொள்க.

நான்காஞ்சீர்: தேமா.

கன்மநெறி காய்ந்தவர்கள் போனனிக தைத்தே
தன்மநெறி காய்ந்துகறை யண்முவினை தன்னைக்
கொன்மனசி லெள்ளளவு நீக்குபதி கொள்ளார்
சன்மமென வாகுவர்சொல் சண்முகபி ரானே. கருரு.

தேமா தேமாங்காய் தேமா தேமாங்காய்.

தானு தானனு தானு தானனு.

[நேட்டெழுந்துச்செய்யுளும், மாலைமாற்றும்,
திரிபங்கியும், துவிதநாகபந்தமும்.]

க. சேயா சேயாதே தேயா சேயாசே
மாயா மாயாவா வாயா மாயாமா
வாயா மாவாயா மாயா சேமாசே
யோயா நேயாவோ யாயே தேயாளே. கருசா.

## வஞ்சித்துறை.

௧. சேயா சேயாதே
தேயா சேயாசே
மாயா மாயாவா
வாயா மாயாமா.

௨. வாயா மாவாயா
மாயா சேமாசே
யோயா நேயாவோ
யாயே தேயாளே.



இதனில், ௧-௨-ம் அடிகள் தம்மின் மாலைமாற்றும். நான் கடிகளையு முறையே யிரண்டிரண்டு சீராகப்பிரித்துப் படிக்கும் போது பாம்புக்கொரு பாட்டாகப்பொருளோடு முடிகின்ற மேற் காட்டிய மோனைபிழையா விரண்டு வஞ்சித்துறைகளாகும். ஆகவே

யிவ்விருத்தம்: குழிப்புடைய நெட்டெழுத்துச்செய்யுளும்,மாலைமாற் றும், திரிபங்கியும், துவிநாகபந்தமு மாயிற்றெனக.

இதன்பொருள். சேயாசேயா—சேயவனே சேயவனே, தே - கடவுளே, தேய்ஆசு—(எனது) சிறுமையைக்கெடு, ஆசு ஏமா - சிறுமைக்கு நமனாயுள்ளானே, யாமாயா—(சத்திருபமாகச் சுருங்கியிருந்து) வியக்திருபமாக விரியு மாய மாயைக் கதிபதியே, வா—(என்முன்) வந்தருள்வாயாக, வாயாமாயாமா—(உயிர்களோ டத்துவிதமாயிருந்து மவைகட்குக்)கிட்டாத மஹாசிவராத்திரியத்தனே, வாயா-உண்மைப்பா டுடையானே, மாவாயா— சிறந்த வாக்குடையானே, மாயா—மாயவித்தைகளுடையானே, சேமா—சேமமுடையானே, சேய்—இளநலமுடையானே, ஓயாநேயா—(அன்பர்மாட்டு) ஒழியா நேயமுடையானே, ஓயாய் ஏது—(என்கண்ணதாய) ஏதெனுங் குற்றத்தையொழித்தருள், ஆள்—ஆண்டருள். என்றபடி. ஏயிரண்டு மசை.

தேமாங்கனி புளிமாங்கனி புளிமாங்கனி புளிமா.
தைன்னதன தனத்தத்தன தனத்தந்தன தனத்த.

பொய்ந்நூல்வழி யொழித்துக்குரு புரக்குந்திற முறைக்கு
மெய்ந்நூல்வழி பிடித்துத்தவ மிகுக்கும்பொறி யடக்கர்
செய்ந்நூல்வழி சிறக்கக்களி திளைத்தின்பமு தளிக்கு
பொய்ந்நூல்புக ழுயிற்கைக்குக முருக்கென்றுயர் முருக்கு.

முதற்சீர்: நிரை+நேர்+நிரை=புளிமாங்கனி.
தனனதன தனனதன தனனதன தனன.

எயிலேறிய புலியாமிதி லெளியேன்மட முடையா
பயிலேறிய முலையார்தரு பயனுடுத லறிவாம்
வெயிலேறிய பெரியார்நடை விடலேவிழை யினுமே
மயிலேறிய முருகாவெனை மறவேலெனை மறவேல். ௧௫௮.

புலைமாதருள் கிடுமாறவர் புணர்மாமறை யவரு
முலைமாதருண் மறையோர்மகண் முலைபுல்லிய கலரு
மலைமாதருள் செவருந்திரு வமுதம்பெற விலையோ
மலைமாதருள் குமராவென மறவேலென மறவேல். கடுகூ.

விதிமீறிய பெயரும்புலை மிசையுந்தவ றுளரும்
பதிமீறிய பெயரும்பல பலகோதுசெய் தவருந்
திதிமீறிய கதிமேவினர் சிறியேனவை யுறினு
மதிமீறிய குகனேயென மறவேலென மறவேல். கசுo.

சீர்வாய்பாடு பேதிக்கினு மோசை கெடாது நடப்பது.

ஒரைந்தையும் வென்றோர்நவி லுரையின்படி யேயிய்
யீரைந்துகொ டேயுன்னடி யிணையேதொழு மெவரு
மூரைந்தினு முயர்தியொரு மூன்றெய்துவ ரேநார்
வாரைந்தொழின் முருகாவென மறவேலென மறவேல். கசுக.

கருவிளங்கனி கருவிளங்கனி கருவிளங்கனி புளிமா.

இறைமறைமுடி வெறுமுறைகளி லிடைவருகவி படன
முறையொடுபணி யொருபுனிதமு முயலுநியம மிலராய்ப்
நிறைபொருணமை யலதிலையென நினதடிமலர் பரவாக்
கறையருறுவ தவலமெனது கறைதெறுகர வயிலோய். கசுஉ.

கருவிளங்கனி.

தனனதனன தனனதனன தனனதனன தனனதனனு.

மருணைவுறமெய் கருதுபறிஞர் மனமுணடன மிடுகுருபர
கருணையிறைவர் புதல்வபெரிய கலைஞரினிது புகழுறமுக
வருணைவளரு மருணகிரியி னமலபரம சரவணபவ
விருணைவுறவு னடியையினையெ னிடர்தொலைவுற வருடியருடி.

"கேசீற்றியற்சீர் வெண்கலியுள்ளுங் கொச்சகத்துள்ளும் வருத லும் * * * * செய்யுளோத்துள்ளே சொல்லப்பட்டன." என யா—

காரிகையொழிபியன் மூன்முஞ்செய்யுளுளாயிருத்தலினாலும், கொச்சகக்கலி வெண்டளை பெற்றும் வருகின்ற வழக்கிருத்தலினாலும் இக் கலியியலில் வெண்டளை பெற்றுள்ள ௬00 - ௬0௪ - ம் செய்யுள்கள்: தரவு கொச்சகக்கலிப்பா வாகாவோவெனின்; கூறுதும், வெண்டளையான்வரு தரவுகொச்சகத்திலும் கலிக்குரிய நிரைமுதல் நேர்முதலாகிய காய்ச்சீர்கள் பொருந்துகின்ற வெண்சீர் வெண்டளையும் வர வேண்டு மென்றல் மரபாகும். ஆகவே, மேலெடுத்துக்கொண்டவிரண்டு செய்யுளுங் காய்ச்சீர் பொருந்தா இயற்சீர் வெண்டளையானே வந்தமையின்; அவை தரவு கொச்சகக்கலியெனப் பெயர் பெருமற் கலிவிருத்தமெனப் பெயர் பெறுத லியைபேயென்க. மேலுரையில் "வருதலும்" என்றது நேரீற்றியற்சீராகிய மாஞ்சீர் முற்றும் வரு வழக்குண்டெனப் பொருள்கொள்ளற்க. அற்றன்றேல் "துள்ளலோசையிற் சிறிதும் வழுவாது நாற்சீர் நாலடியான் வருவது தரவுகொச்சகக்கலிப்பா வென்றும், துள்ளலோசையிற் சிறிது வழுவி நாற்சீர் நாலடியான் வருவது கலிவிருத்தமென்றுந் தெரிந்துணரப்படு மெனக்கொள்க." என மேலைக்காரிகை யுறுப்பியல்௧௪-ம் பாட்டுரையிலும் விளக்கப்பட்டிருக்கிறது. "மாஞ்சீர் கலியுட் புகா கலிப் பாவின் விளங்கனிவந்-தாஞ்சீ ரடையா வகவ லகத்துமல் லாத வெல்லாந்-தாஞ்சீர் மயங்கும்" எனும் மேற்படி காரிகையின்படி, மாஞ்சீரும் விளங்கனிச்சீருமல்லாத காய்ச்சீரும் விளஞ்சீரும் வெண்டளைபெறுத தரவுகொச்சகக்கலியுட்புகுங்காலத்துங் காய்ச்சீர்கட்கு விளஞ்சீர்கள் குறைவாகவேண்டுமென்ற லினிதுபொருந்தும். இக் கலியியல் ௧அ - வது செய்யுள்போலச் சமமாயினு மாகலாம். இன்றி விளஞ்சீர்மிகுந்து ஓசையளவாய் நிகழின் ; அதனைக் கலிவிருத்த மெனவே மேல்விதி யுரைகட்கு மியைபென்க. நிற்க.

"அளவடி நான்கின கலிவிருத் தம்மே." எனும் யாப்பருங்கலச் சூத்திரவழி யிவ்வியற் பாவினத்துள் வந்த கலிவிருத்தமெல்லாம்:

இருபதெழுத்தின் மிக்க நாற்சீ ரடிப்பாவும், இருபத்துநான்கெழுத்தின் மிக்க நாற்சீ ரடிப்பாவினமு மில்லையென் றுணருமாறு, யாப்பருங்கலச்செய்யுளோத்து விருத்தியுரையில் விளக்கியபடியே, எட்டெழுத்துமுத லிருபத்துநான்கெழுத்தின் காறு மளவா யுயர்கின்ற வடிகளையே யுடையன. ௧௬௨ - ௧௬௫ - ம் விருத்தங்களிலுள்ள கனிச்சீர்களைப் புளிமா புளிமா வெனப் பிரிக்கில், முன்னையது எழுசீர்க்கழிநெடிலடிவிருத்தங்களுள் ௬௧ - வது செய்யுளளவும், பின்னையது எண்சீர்க்கழிநெடிலடிவிருத்தங்களு ளொன்றுமாம்.

கலிப்பாவின முற்றிற்று.

௩ - வது கலியியன் முற்றிற்று.

ஆக இயல் - ௩ - க்குத் திருச்செய்யுள் - ௪௪௭.

---

# ௪ - வது வஞ்சியியல்.

## ௧. இருசீரான்வரும்

## குறளடிவஞ்சிப்பா.

ஒன்றிய வஞ்சித்தளை பெற்று, ஏந்திசைத்
தூங்கலோசைத்தாய் வருவது.

இலகம்பர மிலையென்றெவர்
சொலினும்பல துதைபேருல
குளதாலது வுளதென்றறி
யுளமாதவ ருளமேவொரு
௫. சிவனேநிறை திருவேலிறை
யவனேயெனை யணைவேனென

நினையென்னையு நினைதொள்ளரு
டுனைவன்பொடு தொடராதினி—வாளா
விருக்கவோர் நீதி யேது
திருக்கிளர் குழகா செப்பி யருளே. ௪.

இது, "வாளா" என்னுந் தனிச்சொற்பெற்று இரண்டடி யாசிரியச்சுரிதகத்தா லிற்றது. கனிமுன் நிரை வருவது ஒன்றிய வஞ்சித்தளை.

ஒன்றாத வஞ்சித்தளை பெற்று,
அகவற்றூங்க லோசைத்தாய் வருவது.

ஈராயிர மேர்நாவனு
மோராயிர மோங்குன்பெயர்
மாண்போதிடு வாதேவை
நான்பேசவு நண்ணுங்கொலே
௫. யேனற்பர ணேழைக்கினி
தாநட்புடை யாதீயளி—யருளால்
கயிலைக் கபாடந் திறக்கச்
செயுமற் புதவருட் சிவசே யவனே. ௨.

இது, "அருளால்" எனுந் தனிச்சொற்பெற்று, இரண்டடி யாசிரியச்சுரிதகத்தாலிற்றது. கனிமுன்நேர்வருவது ஒன்றாதவஞ்சித்தளை.

பலதளையும்விரவிப் பிரிந்திசைத்தூங்கலோசையான் வருவன.

அறிவே—ஒங்கேதமி லோர்மகிழ்ச்சி
வீங்காரியர் விரவெனையினி
நீங்காதுற நிறைவிசாக—நாளும்
காலா யுதவங் *கதலியும்
வேலா யுதமும் விளங்கெழுந் தருளே. ௩.

* கதலி=கொடி யென்பதை, "தேறுகொடிவாழைகதலி" எனு முரிச்சொல் நிகண்டா லறிக.

இஃது அடிமுதற்கண் "அறிவே" எனுஞ் சீர்க்கூனும், ஈற்றில் "நாளும்" எனுந் தனிச்சொல்லும் பெற்று, இரண்டடியாசிரியச் சுரிதகத்தா லிற்றது. இப்பாவில், "ஒங்கேதமில்" எனு நிரையீற்றுக் கனிச்சீர்முன் "ஓர் " என நேர்வருதலின் ஒன்றாதவஞ்சித்தளையும், "ஓர்ம கிழ்ச்சி" என்பது நேர் நேர், நேர் நேர் என வலகிடவு நிற்றலின் நேரொன்றாசிரியத்தளையும், அச்சீர்: நேர் நிரை நேர் என வலகிடவு நிற்றலிற் காய்ச்சீராகி யிரண்டாமடி முதற்சீராகிய நேரோடொன்றுங்கால் வெண்சீர் வெண்டளையும், அச்சீராகிய நேர் நேர் நிரைக் கனிச்சீர்முன் "விர" எனு நிரை வருதலின் ஒன்றிய வஞ்சித்தளையு மாமாறுகாண்க. பிறவு மன்ன.

அடியிறுதியில், உகரவீற் றியற்சீர்க்கூன் பெற்று வருவது.

மாறுநானென் மதமணப்ப
வீறார்நீல மேனிகாட்டி
வருமாணவ வாரணம்போ
ழுருண்மாசிங்க மாமுருகா—வறிவு—நிமிர்வான்

என்மலம் போழ்நா ளெந்நா
ணின்மல மலர்வாய் நீதிறந் துரையே, ச.

இது, "அறிவு" என்னுங் கூனும், "நிமிர்வான்" என்னுந்தனிச் சொல்லும் பெற்று, இரண்டடியாசிரியச்சுரிதகத்தா லிற்றது.

அடிநடுவி லசைக்கூன் பெற்று வருவது.

மலமேவிய—வுயிர் மசகமுண்டாம்
புலமேவிடு—மெனிற் புன்கொசுகாம்
வலமேவிய—முறின் வயமாவாம்—அதனல்

அளவினின் னடிநா ணடையக்
களவினின் னுளத்தே கருதுவே லோயே. ரு.

அடியிறுதியி லசைக்கூன் பெற்று வருவது.

ஆகமொன்றுயி ரருள்விழித்திடி—னரு
ளேகிநின்றிடு மிருள்விழித்திடி—னிரு
ளாகிநின்றிடு மவிர்கலைப்படி—னது
வாகநின்றிடு மன்றேவெனு—மறை—அதனால்

கிளிமுக மண்டலங் காட்டியிவ்
வெளியினைக் கோடி யென்னுளக் குகனே. ௬.

இந்த ரு - ௬ - ம் பாட்டுகள்: "அதனால்" என்னுந்தனிச்சொற் பெற்று, இரண்டடி யாசிரியச்சுரிதகத்தா லிற்றன.

"அடிமுதற் பொருளைத் தானினிது கொண்டு - முடிய நிற்பது கூனென மொழிப" "வஞ்சியி னிறுதியு மாகு மதுவே - யசைகூனுகு மென்மனார் புலவர்" எனும் யா—காரிகையுரைவரு சூத்திரப்படி ரு - ௬ - ம் செய்யுள்களில், ஆதி நடு இறுதியாக வந்தவாறு வருவதில் நடுவு மிறுதியு மசை கூனாய் வருதல் சிறப்பு. சீர்கூனாய் வரினும் ௪ - வது செய்யுளில் வந்தவாறு, உகரவிறுதியாகிய நேரீற்றியற்சீராயல்லது வேறு வாராதென வறிக.

மான்பயந்தவொர் மகளும்
வானறுங்கய மகளு
மேன்படுஞ்சும மிலங்தென்
மேன்மிகுந்தனைய மேவா
ரு. நீன்மயின்மிசை நின்பாங்—கிலகவே

வருமெழில் கண்டுநான் மகிழுமா
றருளாலென் றேநீ யயில்வே லரசே. எ.

பொன்விசும்பிறை புதல்விதன்னுள
மின்புறும்படி யிணையினன்மணம்
புரிவானெழில் பொலியொருபரங்

கிரிமீதுயர் கிரிமகளொடு
வாலசந்திர மௌலிமாலயன்
கோலவந்தணர் கோவிபுதருங்—குழுமு
திருமணச் சவையிற் சிறந்த தெய்வப்
பொருளெனத் திகழ்ந்த புலவ
கருணையி னென்மலங் கழீஇ யருளே. அ.

இவ்விரண்டு செய்யுளும் முறையே "இலகவே" "குழுமு" எனுந் தனிச்சொற்கள் பெற்று, இரண்டடி மூன்றடி யாசிரியச் சுரிதகங்களா னிற்றன.

---

உ. முச்சீரான்வரும்
சிந்தடிவஞ்சிப்பா.

ஒருபூரண வறிவெனச்செறி யுனைமுதலாந்
திருவாவண மெனுங்கலைவளா திகழுமண்ட
மணிபோலொளி ராயிரத்தொடு மருவிருநான்
கணியார்சிவ லிங்கமாகவு மருண்மகேச
நிலைமாகண பதியிற்குக னிர்க்குணஞ்சா
னலவீசுர னாகவுநறுஞ் சாதாக்கிய
மதிலேயுறு சிவனாகவு மரியசத்தியில்
வதியோர்பொரு ளாகவுமதன் வலமிலங்கைந்
தெனுமாவண மிருக்குமேரு ரூபமாகவு
நனவாறெனு மாவரணத்தி னல்லநிர்க்குண
முடையாமிய முகமூர்த்தியு மோங்குமேழி
னடராசநிர்க் குணமூர்த்தியு நவையிலெட்டி
னுமைநாதனு மாகவுமுடி போதுமொன்பதி
னிமையோர்புக ழின்பவறிவி லிங்கமாகவு
மெணிமானச பூசைபுரியு மேமாப்பெனை
நணுமோநசை தீர்பெருந்தவர் நாயகநவி—னிணையே

நம்பெனைக் கைவிடேனு
யம்பிகை பகனு யவிர்சே யவனே. ௯.

ஓங்கார கப் பொருளுரைத்ததொவ் வாதெனப்படர்
பூந்தாமரைப் போதனைச்சிறை புகவிடுத்தரு
ளாஞ்சிருரு வோடிருந்தய னுர்கிருத்தியஞ்—செய்த
ஐயநின் னருளு டடியேன்
பையுளிலருட்கடல் படியநன் கருளே. ௧௦.

[மொழிதிருப்பு.]

வசைகுழமு மெனையருட்பெரு வாரியெனிலொ
டிசையிதன்மு னெழுசீர்மொழி திருப்பியொழித—லெங்நாள்
உனைநினை வோர்க்கு வீடு
நனியெளி திலேயோ ஞாங்க ரரசே. ௧௧.

இங்குவந்த ௯-௧௦-௧௧-ம் பாட்டுகள்: முறையே "நினையே" "செய்த" "எங்நாள்" எனுந் தனிச்சொற்கள் பெற்று, இரண்டடி யாசிரியச் சுரிதகங்களா விற்றன. இறவே, வஞ்சிப்பா: வெள்ளைச் சுரிதகத்தா லிறுதெனப தறிக.

யா—காரிகையில், "வஞ்சிக்கு மூன்றடி * * * யிழிபு" எனக் கூறியிருக்க, இங்குவந்த ௧௧-வது செய்யு ளிரண்டடிச்சிறுமை பெற்றதென்னை யெனின்;"வெண்பா வாசிரியங் கலியே வஞ்சியென நண்பா வுணர்ந்தோர் நுவலுங் காலை - யிரண்டு மூன்று நான்கு மிர ண்டு - மிரண்ட வடியின் சிறுமைக் கெல்லே." என மேலைக்காரிகை யுரைவரு சூத்திர மிருத்தலின்; இரண்டடிச்சிறுமையும் பெறு மென்க. அடிப்பெருமை யெத்துணைத்தென்னின்; "உரைப்போருள் ளக்கருத்தினளவே பெருமை" என்க. குறளடியானுஞ் சிந்தடியா னும் வராநின்ற இருதிறவஞ்சிப்பாவிலும், வஞ்சியுரிச்சீராகிய கனிச்

சீரோடு பூச்சீர் நிழற்சீரேனும் பொதுச்சீர் பதினாறும் வருமென்பர் வண்டமிழர்.

வஞ்சிப்பா முற்றிற்று.

# வஞ்சிப்பாவினம்.

## க. ஒருபொருண்மேன் மூன்றடுக்கிவரும் வஞ்சித்தாழிசை.

மாங்காய் புளிமாங்காய்.

ஆறொன்று மணிவேணி
வீறொன்று விழிவந்தோய்
சேறொன்று னடியன்றி
வேறொன்று விழையேனே.

கவினொன்று கனலாடி
சவியொன்று விழிவந்தோய்
துவரொன்று னடியன்றி
யிவணொன்று விழையேனே.

நீலொன்று நிகழ்கண்டன்
பாலொன்று விழிவந்தோ
யோலொன்று னடியன்றி
யேலொன்று விழையேனே. கஉ.

புளிமாங்காய் புளிமாங்காய்.

பலதுன்பு பயிலேனைக்கள்
வலிகொண்டு வருமேனுங்

கலிவென்ற முருகன்கான்
மலரென்று மறவேனே.

சலமுந்து சமணர்மொய்
மலையஞ்ச வருமேனுங்
கலைதந்த குமரன்கான்
மலரென்று மறவேனே.

உலகுந்தி யொழிமாறென்
மலிசண்டன் வருமேனு
மலருந்து மயிலன்கான்
மலரென்று மறவேனே. ௧௩.

இச்செய்யுளிரண்டும், "குறளடி நான்மையிற் கோவை மூன்றாய் - வருவன வஞ்சித் தாழிசை தனிவரிற் - றுறையென மொழிப துணிந்திசி னோரே." எனும் யாப்பருங்கலச் சூத்திரவழியே வந்தன.

---

உ. குறளடித்துறையெனும்

## வஞ்சித்துறை.

தேமா கருவிளம்.

வானோர் வழிபடு
கோனே குமரவுன்
றேனார் திருவடி
தானே தனிநிலை. ௧௪.

தானா தனதன.

தீயார் தெறுகுக
மாயா மகியலை
நாயே னலமுற
வீயா விறலருள். ௧௫.

புளிமா கூவிளம்.

தனத்த தானன.

செனித்த சிவருண்
மனத்தின் மாவொளி
மினுக்கும் வேலவ
வெனக்கு மீயொளி. ௧௬.

தேமா கூவிளம்.

ஓர்ப்பா ருண்ணசை
தீர்த்தாள் சேயினைப்
பார்ப்பார் பந்தன
மார்க்கா தென்றறி. ௧௭.

கூவிளம் புளிமா.

எங்கணு மிலகே
ணங்கர வஃபில்வேள்
சங்கமர் தடையை
யுங்கொள வுளதோ. ௧௮.

இந்த ௧௮ - வது செய்யுள்: "தந்தன தனன" எனுங் குழிப்புப் பெறுமோவெனின்; பெறுமென்க. நியாயம்.—"தடையை" எனுஞ் சீரிலுள்ள வீற்றைகாரம், நெடிலேயாயினும் அது: ஆ-ஈ-ஊ-ஏ-ஓ எனு நெடில்களைப்போலப் பாட்டகத்து நீண்டொலியா நீர்த்தாக லின். ஆகவே அத்தடையை யென்பதி னிடையிலுள்ள ஐகாரங் குறுகியவாறே யதனீற்றைகாரமுங் குறுகி, "தனன" எனுங்குழிப்பே பெறும்; அஃதிங்கேலாதென்க. இதுபோலவே நெடிலாகிய ஔகா ரமு மாண்டு நீண்டொலியா நீர்த்தென்க. "மூன்றுயி ரளபிரண் டா நெடிலொன்றே-குறிலோ டையௌக் குறுக்கம்" என நன்னூ லுரை க்குமாற்றானும், "ஐகார நைவே லோருங் குறிலியல்" என யா—

காரிகை கூறுமாற்றானுஞ் செய்யுளிடையில் வரு மைகாரங் குற்றெ ழுத்தேபோலக் குறுகி நின்று குறின்மாத்திரையே பெறுமென்றறிக. சில விடங்களில் அவ்வைகாரந் தன்னெடிற்றன்மை குன்றாமல் நே ரசையாயு நிற்கும். உதாரணம்: கலியியல் ௧௧௨ - ம் செய்யுண் மூன் றாமடியினது மூன்றாஞ்சீர் போல விந்நூற்கண்ணே பலவாம். இவ் வாறே ஒளகாரமும். உதாரணம்: வெள்ளியல் ௧௧அ - ம் செய்யு ளீற்றடியினது மூன்றும் நான்காஞ் சீர்கள்போலப் பலவாம். இவ் வௌகார நடை; அவ்வென வியைவதாய், "தை" எனுங் குழிப்பிற் சேர்வதாயுளது. இதுபோல ஆய்தம் புகுந்த மொழியும், "தைய" எனுங் குழிப்பிற் சேருமெனினும், அது குன்றிய வோரசைத்தாம்.

கூவிளம் விளம்.

புங்கவர் புகழொரு
மங்கள மழவிறை
யெங்கவ ரெண்ணினு
மங்கெழு தருமறி. ௧௯.

தேமா புளிமா.

அள்ளா ரயிலன்
புள்ளார் புரிவன்
கள்ளார் கழலே
யுள்ளா ருவகை. ௨௦.

எஃக னொணர்பூ
வெஃகல் விடாருள்
ளஃக லுறார்வீ
டெஃகி யிராரே. ௨௧.

பத்தர் குழாமுஞ்
சித்தர் குழாமுஞ்

சத்தி விசாகன்
வித்தை யுளாமே. உஉ.

இந்த உஉ-வது தூக்கடிகளில், மோனையெழுத்தேனும், மோனையினவெழுத்தேனும் வரவில்லை. இதுபோலவே, பல்லோர் பாடிய வஞ்சித்துறை பலவு நடைபெற்றன வென்பதை யுணர்த்துவானிவ்வொருசெய்யு ளவ்வாறு சொலப்பட்டதென்க.

புளிமா புளிமா.

கருள்கீழ் கதிர்வேன்
முருகே முனுவோ
ரொருபே ரொளியை
யருளா லறிவார். உரு.

தேமா தேமா.

தையா தையா.

பொல்லார் பொல்லா
னல்லார் நல்லா
னெல்லே மில்லான்
வல்வேல் வல்லான். உச.

மண்ணூண் மன்னன்
விண்ணூள் விண்ணன்
கண்ணூள் கண்ணெண்
கண்ணூள் கண்ணன். உரு.

விளம் காய்.

தனதன தனதானு.

ஒருநினை வுடனேயோ
முருகனை முனிஞனி

கருதிய களிதானே
மருவுவை மனனேகாண். ௨௬.

[இதுமுதன்மூன்றுதுறையுங்கொம்பில்லாச்செய்யுள்.]

நாரணன் ஞானியரன்
காரணர் கான்முளைதா
ணாரண னலடியான்
பூரண புங்கவனல். ௨௭.

உரைமன முள்ளடங்கா
மறைமுக மாமுருக
னுரைமன மூக்கமுறப்
பரவுநர் பால்வருவான். ௨௮.

தனதன தனதல்லா.

நிதநனி நினைநல்லா
ரிதயமு ளிலகுள்ளா
னதிசுத னலிவில்லான்
மதமுளர் மனநில்லான். ௨௯.

கருவிளங்காய்.

மணியனையான் மலரொளியோன்
றுணியனையான் சுடரயிலோன்
பணியுடையார் பழமலமாப்
பிணியுடையார் பெரிதடைவார். ௩௰.

கூவிளங்காய்.

தானதன தானதன.

[பாடக மடக்கு. (யமகம்)]

நானிலையே ஞானிலையே
வேன்முருகா வேன்முருகா

மேன்மதியாய் மேன்மதியாய்
மான்மருகா மான்மருகா. ௩௧.

இதன்பொருள். நானிலையேல்—நானென்னுமகங்காரம் (என்கண்) இல்லையாயின், நானிலையே—நானிற்கு நிலையிலேயே, மேன்மதியாய்—மேலானவறிவு வடிவமாகி, வேன்முருகாவேன்—வேலிறையெனப்படு மிளம்பூரண னவேன், மேல்—இனி, மதியாய்—(என்னிலைமையை) மதித்தருள்வாயாக, முருகா - முருகக்கடவுளே. மான்மரு—மான்மருவும், காமால்—சோலையிலெழுந்தருளிய திருமாலின்; மருகா—மருமகனே. என்றவாறு.

தேமாங்காய் கூவிளம். ஈறு: தேமா.

மின்செய்யும் வீட்டினை
நின்செய்கை நீட்டுமவ்
வின்செய்கை யின்றெனி
லென்செய்வ லீங்கே. ௩௨.

கூவிளங்காய் புளிமா.

அங்கிளிநே ரதர
மங்கையர்மா மயலா
லிங்கலையே னினியாள்
சங்கரர்தாழ் தகையே. ௩௩.

தானதன தனனா.

காசுபதி கருதே
னைசரொடு நடவே
னேசமொடு நினையா
யாசிலயி லரசே. ௩௪.

தந்ததன தனனா.

பந்தமறு படநீ
வந்ததயை மறவே
னந்தநிலை யளியாய்
நந்திபுகழ் நலமே. ௫௫.

கடைச்சீர் : தேமா.

மெய்த்துயர மேவி
யெய்க்கவினி யேவேல்
மைக்கணெழில் வள்ளி
கைப்பிடித்த கண்ணே. ௫௬.

தேமாங்கனி புளிமா.

நாடாண்டிடு நயமுங்
காடாண்டிடு கயமு
மாடாண்டவ னருள்வேள்
வீடாண்டவர் விழையார். ௫௭.

தேமாங்கனி கூவிளம்.

வேலேந்துசெவ் வேளரு
ளாலோர்ந்தொரு ஞானமில்
சீலோர்ந்தவிர் தேசினர்க்
காலாந்தகர் காய்வரோ. ௫௮.

தேமாங்கனி கூவிளங்காய்.

தானாத்தன தாந்தனனா.

பூமாப்பிறை போம்படியோர்
தூமாப்பிணை தோன்றிடுமே
லேமாப்பில கேண்முசவே
ளாமாப்பிளை யாண்டிடுமே. ௫௯.

---

ரு. சிந்தடிவிருத்தமெனும்

## வஞ்சிவிருத்தம்.

மா மா விளம்.

துன்பு கண்டு தொழுபவ
ரன்ப நல்ல ரயின்முதா
லன்பு கண்டு னடிதொழு
மன்ப ரென்று மன்பரே. சு0.

எரியிற் புழுவி லாமைபோற்
பரிவுப் பெரியர் பாலிரா
துரிதத் துயர்கள் சூழ்வுறூர்
தெரிதற் கரிய சேயவா. சுக.

சிறப்பு ளார்கள் செருக்கெலா
மிறப்பி லாவு னிணைப்பதங்
குறித்து நோற்ற குறிப்பலோ
பொறிச்ச மீர புரத்தனே. சுஉ.

மா கூவிளம் கூவிளம்.

பிணிசெய் வாந்தியும் பேதியு
மணிசெய் நின்பத வார்வமார்
குணியை யென்செயுங் கோதிலாத்
தணிகை தங்கிய சாமியே. சுரு.

தான தந்தன தானனு.

வாளு டம்பிடி வாழ்கைவே
டாள்ப ணிந்தவ ரேசதா
கோள்க டிந்தவர் கோணைவாழ்
நாள்வ ளர்ந்தவர் ஞாலமேல். * சுசு.

*இச்செய்யுளடி: முதலிரண்டுசேர்களை யொன்றுபடுத்துக் கூவி ளங்கனி யெனக்கொள்ளின்; வஞ்சித்துறையுமாம்.

தான தானன தானனு.

[அந்தாதித்தொடை நான்காரைச்சக்கரம்.]

வால மேயவ மாலவா
வீரல மாமுனி பாலவா
வால பாவல வேலவா
வால வேடமி மேலவா. † ௪௫.



---

† இதுபோலவரு சக்கரச்செய்யுள், பின்வரு சுழிகுளம், சருப்பதோபத்திரமெனும் மிறைக்கவிகளை : எதுகையின்றியும் ; காதை கரப்பு, கோமூத்திரியென்பவற்றை : (அடிதோறு முறவேண்டிய) மோனையெழுத்தேனு மவ்வினவெழுத்தேனுமின்றியும், எதுகையின்றியுஞ் சிலர் பாடுமா றிந்நூலாசிரியர்பாடாது, அங்ஙன மவ்வெதுகை மோனைக்குரிய வெழுத்துக்கள் பொருந்தப்பாடுதலை யிவ்வியற்கண் ணே காண்க. அன்றி, சுழிகுளத்தை யிடைவிட்டு வாசிப்பதுங் குழிப்புகளு மதிகமெனவு முணர்க.

இதன்பொருள். வால் அம் மேயவ-மிகுந்த அழகுமேவியவனே, மால் அவாவு - திருமாலாசைப்படும், ஆலமாமுனி பால - ஆலடியிலிருந்த மஹாமுனியாகிய பரமசிவனுடைய புதல்வனே, வா - வருவாயாக, வால - இளநலமுடையானே, பாவல - புலவனே, வேலவா - வேலுடையானே, வால - தூயவனே, ஏமம் அளி - (எனக்கு) இன்பமீந்தருள்வாயாக, மேலவா - பெரியோனே. என்றவாறு. ஏமம் ஏமென நின்றது.

கருவிளம் தேமா தேமா.

தனதன தானா தானா.

[ஒற்றிலாச்சுழிகுளம்.]

மதிமதி மாமா வாவா
திதிதிதி சேயே யோவா
மதியமு மாசே யேமா
திதிமுரு காமா சேமா. ௪௬.

ம வா
தி வா
ம மா
தி தி மா வா
தி யோ
தி யே
ம தி சே மா
தி யே
ய சே
தி மு மா மா
தி சே
மு மா
ரு கா

இதில், மேலிருந்து கீழிழிந்து கீழிருந்து மேலேறி யுச்சரித்தானும், புறநின்றுவர் துண்முடிய வுச்சரித்தானும் மேற்செய்யுளே யாயா றறிக.

இ - ள். மதிமதி - அறிவுக்கறிவே, மாமா - அழகுக்கழகே, வாவா - வருவாயாக வருவாயாக, திதி திதி - (என்னை) நிலைநிறுத்துவாயாக நிலைநிறுத்துவாயாக, சேயே - இளமைப்பருவமுடையானே, ஓயா - கெடாத, மதி அம் உமா - அறிவு மழகுமுடைய வுமாதேவியின், சேயே - மகனே, மா திதி முருகா - பெரிய காப்புத் தொழிலுடைய முருகனென்னுந் திருநாமத்தோனே, மா சேமா - மகாசேமமுடையானே. எ - று.

புளிமாங்கனி கூவிளங்காய் தேமா.

[மாத்திரைவருத்தனம். (மாத்திரைப்பெருக்கம்)]

ஒருமாத்திரை யேறுகுகை யொப்பா
ரொருமாத்திரை யேறிடுசெய் யுன்னி
னொருமாத்திரை யேறிடோதி யொப்பா
ரொருமாத்திரை யேறுதப முண்ணூர். சஎ.

இதில், ஒருமாத்திரை யேறுகுகை—கூகை. இது பகற்குருடு. ஒருமாத்திரை யேறிடுசெய்—சேய். இது குமாரக்கடவுள். ஒருமாத்திரை யேறிடோதி—ஓதி. இஃதிரவும்பகலுங் கண்டெரி பூனை. ஒருமாத்திரையேறுதபம்—தாபம். இது துன்பம். இவற்றை யேனைச் சொற்களோ டிணைத்துப் பார்க்கின்; பெத்தர்நிலை, ஜீவன் முத்தர்நிலை யித்தன்மையவெனப் பொருளாம்.

காய் காய் மா.

[அக்கரவருத்தனம். (எழுத்துப்பெருக்கம்)]

துட்டர்க்கு முருகிருக்கை துணைவி
தட்டர்க்கும் படையிவற்றின் றலைமுன்

விட்டொவ்வோ ரெழுத்துமரு விடச்சேர்த்
திட்டாற்கை வகையுவகை யெனவாம். சஅ.

இ - ள். தீமையைப் பிளக்கத்தக்க முருகக்கடவுட் கிருப்பிடமாகிய கைலே, துணைவியாகிய வள்ளி, குற்றங்கடி படையாகிய உடம்பிடி யெனப்படுமிவற்றின் தலையெழுத்தொழிந்த மற்றைய வெழுத்துக்களை விலக்கியத்தலை யெழுத்துக்களை யொரோவொன்றாக முன்சேர்த்தால், கை, வகை, உவகை யெனத் தனித்தனி பொருடருசொல்லாம். எ - று. கை - சாமர்த்தியம், வகை - வாகையெனும் வெற்றி, உவகை - களிப்பு எனவாம். [உடம்பிடி-வேல்.]

[மாத்திரைச்சுருக்கம்.]

சுருதியொரு மாத்திரைதான் சுருங்கிற்
பெருமுருக னாயுதமாம் பெயர்த்துஞ்
சுருதியொரு மாத்திரைதான் சுருங்கிற்
பெருமுருக னாயுதமாம் பெயர்த்தும். சகூ.

இதில், முதலாமடியில் வருஞ்சுருதி—சாத்திரம். இஃதொருமாத்திரை சுருங்கினற் சத்திரமாம். சத்திரம் - வேல். இரண்டாமடியில் வருஞ்சுருதி—ஆரணம். இஃதொருமாத்திரை சுருங்கினல் அரணமாம். அரணம் - வேல்.

உயர்வள்ள னகரநொடி யொருவி
னயிலைய னடியிலணி யணியாம்
வியனுள்ள விறைவைநொடி விலகி
னயமுள்ள வொளிமுருக னடமாம். ருo.

உயர்வள்ளல்நகரம் - மேன்மையுடைய (இருபத்தொருவள்ளல்களிலொருவனுகிய) பாரியெனும் வள்ளலின் ஊர். இதுபாரிபுரம்.

ஈதொருமாத்திரை நீங்குழிப் பரிபுரமாம். பரிபுரம் - சிலம்பு. இறைவை - கூடை. ஈதொருமாத்திரை நீங்குழிக் குடையாம். ஈதொரு கூத்து. நொடி - மாத்திரை. வியல் - அகலம். இவை பொருந்தப் பொருள் கொள்க.

திருவருள் விழைவார் யாவர்க்கு மாங்காங் கனுக்கிரகம் புரிபொருட்டுச் சிலம்புதோறுந் திருக்கோவில்கொண் டேகபரிபூரணஞான வியாபகப்பொருளா யிராநின்ற பகவானாகிய ஸ்ரீ சுப்பிரமணிய பரமாத்துமாவினது திருவடிமலரின்கண்ணே சிலம்பெனும் பரிபுரமுண்டென்பதை, "அரைவட மலம்பு கிங்கிணி பரிபுர நெருங்கு தண்டைக ளணிமணி சதங்கை கொஞ்சிட மயின்மீதே" எனும் அருணகிரிநாதசுவாமிகளி னமுதவாக்கானு மறிக.

[அக்கரச்சுதகம். (எழுத்துச்சுருக்கம்)]

அருவேல னணியொருபு வனமும்
பொருவேலன் வலவனுமம் புதமு
மொருசாரி யையுமிவன முறைக்கின்
மருநீப வநம்பவநம் வநநம். ௫க.

அருவேலனணியொருபுவனம்—கடம்புவனம். இது நீபவநம். பொருவேலன்வலவன்—போர்வேலாயுதக்கடவுளுடைய இரதசாரதி (எனுங்காற்று). இது பவநம். அம்புதம் - நீர். இது வநம். ஒருசாரியை - நம். இவற்றுள் நீபவநம் எனுஞ்சொல்லில் நீமுத லொவ்வோரெழுத்து நீங்குழி மற்றைய பவநம், வநம், நம்மெனு மூன்று சொல்லும் வருமா றறிக. நம்மெனு மந்தத்தை, அருவேலனெனு மாதியோடு கூட்டி நம்முடைய அருமைவேலனெனப் பொருள் கோடலுமொன்று. சாரியைக்கு உதாரணம்: "எல்லா நம்மையும்" [மரு—வாசனை.]

தானனா தானனா தானா.

[சருப்பதோபத்திரம். மாலைமாற்று.]

தாதாமா வேவேமா தாதா
தாதாதா தாதாதா தாதா
மாதாசே யாயாசே தாமா
வேதாயா மீமீயா தாவே. ௫௨.

தா தா
தா தா
மா மா
தா வே வே தா
தா தா
தா தா
மா தா தா மா
தா தா
சே சே
வே யா யா வே
தா தா
யா யா
மீ மீ
மீ மீ
யா யா
தா தா
வே யா யா வே
சே சே
தா தா
மா தா தா மா
தா தா
தா தா
தா வே வே தா
மா மா
தா தா
தா தா

இந்த ருஉ - வது செய்யுளிலுள்ள காய்ச்சீர்களைக்கலந்து மாஞ் சீர்களாகப் பிரிக்கின் அளவடிக் கலிவிருத்தமுமாம்.

இதனில், மேலிருந்து கீழுங் கீழிருந்து மேலும் ஆதிமுத லந்த மும் அந்தமுத லாதியுமாக மாறிமாறி நான்குமுகத்து வாசித்தானு மேற்செய்யுளேயாமா றறிக. மாலைமாற்றில் வருகின்ற பங்கியைக் குமரகுருதாசசுவாமிகள் பாடலிற் காண்க.

இ - ள். தாதா - ஈகையாளனே, மா - (சூரபதுமனாகிய) மா மரத்தை, ஏவு - (முடிவுக்கு) ஏவும், ஏமா - நமனானவனே, தாதா - பிரமாவானவனே, தாதா தாதா - (நிறைவினால்) பிரமனுடைய தந் தையானவனே, தாதா தாதா - ஈகையாளர்க்கீகையாளனே, மாதா - பார்வதியம்மைக்கு, சேய் - மகனாகிய சேயென்னுந் திருநாமத்தோ னே, ஆபா - (நிறைவினால்) கிருஷ்ணமூர்த்தியாகவு நின்றவனே, சேதா - நற்பசுவினுமுள்ளானே, மாவே தா-(எனக்குச்) செல்வமே கொடுத்தருள், யமீ - முனிவனே, மீயாதா - மேலான குருவே. எ - று. ஏகாரம் - ஈற்றசை. யமீ யாமீயென்றாயது நீட்டும்வழி நீட்டல். [பசு - ஆன்.]

[வினாவுத்தரம்.]

சமரமுதர் நாமமெது சாகா
விமலர்ணி பூணெதுபின் வில்லென்
குமரகுரு தாரணிறை கோயா
ரமரர்பணி சோதிமுரு கையன்.　　　ருரு.

இதில், ஈற்றடி யுத்தரம். ஏனையடி வினா.

கருவிளம் கருவிளம் காய்.

எழுத்தரி லொழித்திட வேவுளையென்
கழுத்தினில் வளைத்திடு கலனெவனார்

கொழுத்தவர் திருத்தலை குவிப்பதெவன்
செழிப்புயர் குகற்குள திருத்தணிகை. ருச.

இதில், ஈற்றுச்சீர் உத்தரம். எழுத்தரில்=எழுத்துக்குற்றம்.

மா கருவிளம் காய்.

தந்தத் தனதன தந்தானு.

பந்தக் கடமுறை பண்பீரே
சந்தக் கடமதி தந்தேயா
ளெந்தக் கடவுளு மென்கோள்போழ்
கந்தக் கடவுளை மிஞ்சாதே. ருரு.

தனனு தனந்தன தானதனு.

[கூடசதுக்கம்.]

நதியா ருடம்பிடி நாபுரவேள்
வதியோ மணைந்திரு மாய்முனரே
நிதியார் கொளுந்தகை நீளமெலா
மதியா ரணைந்தவர் மாநாடரே. ருசு.

இதில், ஈற்றடிச்சொல்லனைத்தும் ஏனைய மூன்றடியுள்ளுஞ் சொல்லாகாம லெழுத்தாகக் கரந்துநிற்குமாறு காண்க.

கூவிளங்காய் புளிமாங்காய் கூவிளம்.

[காதைகரப்பு.]

வாளரசு குமராவொ மங்குகா
வாளுருசு கிலாவு மங்களா
வாளசுர விபலாக மன்விபூ
வாளரவி தழிமேனி மஞ்சகா. ருஎ.

சமமே தரவா
விமலா விசுவா

கமலா கருவா
குமரா குரவா.

இது வஞ்சித்துறை.

இந்த நுஎ - வது செய்யுளில், ஈற்றுமொழியாகிய காவுக்கு முத லெழுத்துத் தொடங்கி யொவ்வோரெழுத் திடையிட்டு வாசிக்கப் பின்னுள்ள மோனே பிழையா ஒற்றிலாவஞ்சித்துறை யாவதறிக.

முற்செய்யுட்பொருள். வாளரசு - வீரவாளேந்து மரசே, குமரா - குமரனென்னுந் திருநாமத்தோனே, ஓம்-பிரணவப்பொருளே, அம்குகா - அழகிய குகனென்னுந் திருநாமத்தோனே, வாள் - ஒளியே, அரு - அருவே, சுகநிலாவுமங்களா - இன்பமயமாகத்திகழு மங்களமூர்த்தியே, வாளசுரவிபலா - ஈர்வாளேந்து மசுரர்கருதுபலனுக்கு விரோதமானவனே, கம்மன் - பிரமனுக்கிறைவனே, விபூ - நிறைவானவனே, வாளரவிதழிமேனி - வாள்போன்ற அரவமுங் கொன்றையுமணி மேனியனாகிய பரமசிவனுக்கு, மஞ்ச - மகனே, கா - (என்னைக்) காத்தருள்வாயாக. எ - று. ஓம் - ஒம்மென்றானது குறுக்கும்வழி குறுக்கல்.

புளிமா கூவிளங்காய் புளிமா.
தனனா தானதன தனனா.

[அந்தாதிமடக்கு. ஒற்றிலாச்செய்யுள்.]

முருகு லாநறிய முருகு
முருகு கோடியென முருகு
முருகு மூசுலக முருகு
முருகு ருதுமன முருகு. நூஅ.

இ - ள். முருகுலாம் - திருவிழாவிலுலாவும்,நறிய - நல்ல, முருகு- இளமைப்பருவமுடைய, முருகு - முருகென்னுந் திருப்பெயருடையாய், கோடியென - (என்னைக்) கொள்வாயாகவென்று, முருகு -

வாசனையும், முருகு - அழகும், மூசுலகம் - மொய்க்கின்ற வுலகத்தில், உருகும் உருகு - துன்பி னுருகுகின்ற பிறப்பானது, உறாது - (இன்னும்) பொருந்தாமல், மனம் உருகு - மனமே யுருகுவாயாக. எ - று. வாதம் வாதென் றாவதுபோல, உருகம் உருகென்றாயது. [உருகம் - பிறப்பு.]

தேமா தேமா தேமாங்காய்.

[அந்தாதித்தொடைத் தமரகபந்தம்.]

வேலா வீயா வீராகோ
கோலா கோதே றாராமா
மாலா வேணை மாமாகா
காலா ளாதே காகாவே. ௫௧.

| | | | | |
|---|---|---|---|---|
| கோ | | | | கா |
| ரா | லா | | லா | மா |
| வீ | கோ | | ளா | மா |
| யா | | தே | | ணை |
| வீ | கா | | றா | வே |
| லா | கா | | ரா | லா |
| வே | | | | மா |

[பகாவிகற்ப மடக்கு.]

பப்புப் பூப்பாப் பப்புப்பூப்
பப்பப் புப்பே பாப்பாப்பை
பப்பப் புப்பூப் பாப்பாப்பிப்
பப்புப் பாப்பொப் பொப்பொப்பே. ௬௦.

இ - ள். பம்பு உப்பு - ஆரவாரிக்கின்ற கடலானது, உப்பர் - அதிகப்படாத, பப்பு பூ - பரப்பாகிய பூமிக்கும், பம்பு அப்பு - பரவு நீரையுடைய, பே - மேகத்திற்கும், பாழி பாப்பு - பெரும்பாம்பாகிய சேடனுக்கும், ஐ - அரசனுயுள்ளானே, பப்பு அப்பு பூ - பொலிவுடைய கங்கையில் வந்தவனே, பா பா - (நெசவு) பாப்போற் செயப்படு பாட்டுக்கு, அப்பு - அப்பனே, இப் பப்புப்பு - இந்தப் பப்புப்பு எனத் தொடங்கும், ஆப்பு - பாட்டை, ஒப்புஒப்புஒப்பு - ஒப்புக்கொள் ஒப்புக்கொள் ஒப்புக்கொள். எ - று. ஏ - ஈற்றசை. பம்பு பப்பு எனவாதல் வலிக்கும்வழி வலித்தல். பாழி - பா எனக் கடைகுறைந்தது. பாப்பா அப்புஎன்பது பாப்பாப்பு என மருவிற்று. அப்பென்பது அப்பனென்பதின் குறுக்கம். யாப்பு ஆப்பென மருவிற்று. இது யானையை ஆனை யென்பதுபோலும்.

விளம் விளம் மா.

தந்தன தானன தன்னு.

[ஏகபாதம்.]

மங்கல மீமயின் மன்னே
மங்கல மீமயின் மன்னே
மங்கல மீமயின் மன்னே
மங்கல மீமயின் மன்னே.　　　௬௧.

இ - ள். மங்கு - (அறிவு) ஒளிமங்கும், அலம் ஈ - சஞ்சலந் தராநின்ற, மாயில் - வெறும்புக்கிடமாகிய வீட்டில், மன்னேம் - சேர்ந்திரேம், அம்கலம் - அழகிய ஆயுதங்களை, ஈரும் அயில் - பிளக்கத் தக்க வேலிற்கும், மன் - பெருமைக்கும், மங்கலம் - தருமத்திற்கும், மீமயில் - ஆகாயத்திற்செல்லுமயிலுக்கும், மன்னே - அரசனே, மங்கலம் - சுபத்தை, ஈ - (எமக்ளுக்கு) ஈந்தருள்வாயாக, மயில்மன்னே - திருமயிலத்தி லெழுந்தருளி யிருக்கு மிறைவனே. எ - று.

மாயில் மயிலென விகாரமாயிற்று. ஈருமென்பது ஈமென மரீஇயிற்று. ஏ - அசை.

தானன தானன தானு.

[கோமூத்திரி.]

சூரனை யீரதி சூரா
சாரளி யீவதி தாரா
பாரரி யேறிடு பாலா
சேரளி யேகொடு சீலா. சுஉ.

சூ ர னை யீ ர தி சூ ரா பா ர ரி யே றி டு பா லா

சா ர ளி யீ வ தி தா ரா சே ர ளி யே கொ டு சீ லா

இது: கோமூத்திரம்போல மேலுங் கீழு மொவ்வோரெழுத்திடையிட்டு வாசிக்குமிடத்து மேற்செய்யுளாயே வருவது காண்க.

புரச்சகத் ததிகமும் பொருவில்
பரத்திலற் பழமனம் பதிக்குந்
தரத்தனைத் தணிந்தவ தமரென்
றுரைப்பரென் னுயிர்க்குக னுவப்போர். சுங.

முதமறு சகத்திடை முழுதும்
பதிமன முடையனைப் பரமன்
சுதனெனு முருகனைத் தொடர்வோ
ரதமரு ளதமரென் றறைவார். சுச.

சகத்திலும் பரத்திலுஞ் சமமா
யகத்தினை நிறுத்துந ரணிசா

விகத்துமத் திட்டமென வெழிலோ
முகத்திறை யடியவர் மொழிவார். ௬௫.

சுத்தனன் பினிலதி கமுபா
பக்கணை யுலகிலற் பமுமாஞ்
சித்தனைக் குகனரு டிளைப்போ
ருத்தம ரெனவிதந் துணைப்பார். ௬௬.

சூரிருஞ் சகமனந் தொலைத்தேர்
கூரிறை முழுதுமுள் குநனைச்
சாருமுத் தமருளுத் தமரென்
பாருர வயிலனற் பரிவோர். ௬௭.

தனதுணை சருக்கநில் லானான்
றனுபவ மேகமென் றவலம்
பனுமுயிர் பாழுயி ரதன்சொல்
லெணையென செயுமயி லிறையே. ௬௮.

கண்ணிணை மூடிடு கான்பா
மண்ணெதிர் மறைவது போலே
யுண்ணிலை யுளமறை விலுமென்
றெண்ணுவ தியைபயி லிறையோ. ௬௯.

இருவிழி யிலர்க்கிரு ளொன்றோ
தெரிவது போன்மனஞ் சேரா
வருளுளர்க் கெங்கணு மறிவாத்
தெரியும தேசிவ சேய்நீ. ௭௦.

இருபொரு ளொருபொரு ளெனவே
பிரிவினை பேசுந ரெவரு
மருணிலை யத்துவி தமெனத்
தெரியது பவமிலர் சேயே. ௭௧.

நித்தனு நித்தனை நீங்காச்
சித்தனு மொத்தது தேற்ற
வத்துவி தப்பய னுமென்
றத்தவு னற்பின ரார்வார். எ௨.

செவ்விய சேயுனை யேசே
ரிவ்வரு பவமில ரிறைநூ
லெவ்வள வுணரினு மீங்கே
யவ்வரு பவமுள ராகார். எ௩.

எந்நெறி வருநரு மிறையா
முன்னிறை வருபவ முளரே
லன்னவ ருரியரஃ தில்லா
ரந்நிய ரெற்கயி லரசே. எ௪.

வினையள வாயுயிர் மேவு
மனுபவ மும்பல வாமே
யுனையுற லவைகளி லுயர்வென்
றனகரெண் ணுவரரு ளயிலோய். எ௫.

மா விளம் மா.

மதலை போல்வரு மாவேண்
முதலை நேடொரு மோகர்
முதலை வாய்ச்சியர் மூவாத்
திதலை மார்ப்புடை தேடார். எ௬.

அளியு மூந்தொடை யான்வே
லொளிர்கை யெந்தையுள் ளூரன்
களிய ணைந்தகண் ணர்தாம்
விளியி னும்வில காதே. எ௭.

கிரிக்கா னவர்மகள் கிளைத்தோ
ளுரித்தோ டணைதுக ளுவப்பால்
வரித்தார் மதனைய மரத்தா
னெரித்தாங் கெனதிட ரெரிப்பரின். எஅ.

தனத்தாந் தனதன தனத்தா.

அருட்பாங் குளியென வரிப்பா
டிருப்போங் கறுமுக னெழிற்கு
றரித்தோங் கிறைதிரி தலத்தா
ரெரித்தாங் கெனதிட ரெரிப்பான். எக.

தனன தானன தையா.

இதய நாவுள ரெள்ளா
வுதய னுபுர முள்ளான்
மதன மேவெனுண் மல்கா
விதனம் யாவையும் வெல்வான். அ௦.

தந்த தந்தனத் தான.

தங்க வின்பருட் சோதி
கங்கை யங்கணைக் காசி
தங்கு கந்தனற் சார்பி
னிங்கு மூன்றிடெற் கீயும். அக.

தேமா புளிமா தேமா.

[இதுமுதலிரண்டுவிருத்தமும், ஒற்றிலாஇதழ்குவிபாட்டு.]

நோவ றுபவ நீறு
தூவ ருளொரு தூவி
மேவு குருகு மீது
கோவொ டுவரு கோவே. அஉ.

தேமாங்காய் தேமா தேமா.

தானன தானா தானா.

பூமேவெ ளேவே போமா
ரேமாகு வேலோ யோவா
மாமேவு கோபூ மாவா
வாமா சொரூபா வாவா. ௮௩.

கருவிளங்காய் புளிமா தேமா.

தனந்தனன தனன தந்தா.

மனங்குறுகின் மகிமை யுண்டே
மனம்பெருகின் மகிமை யின்றே
மனந்துவளின் வதித லின்றே
யெனுங்குமர னிசைக ணம்பே. ௮௪.

இம் முச்சீரடி விருத்தங்கள்: "சிந்தடி நான்காய் வருவன வஞ்சி - யெஞ்சா விருத்த மென்மனார் புலவர்" எனும் யாப்பருங்கலச் சூத்திர வழியே வந்தன. இச் செய்யுளடிகளி னிறுதிச்சீர்க்கண் மோனையெ ழுத்து, அல்ல ததனினவெழுத்து வருவது சிறப்பு.

வஞ்சிப்பாவின முற்றிற்று.

௪ - வது வஞ்சியியன் முற்றிற்று.

ஆ இயல் ௪ - க்குத் திருச்செய்யுள் - ௫௩௧.

---

வாயுறைவாழ்த்துமருட்பா.

—ooooo—

வெண்பாமுதலு மாசிரிய மீறுமாய் வருவது.

கடல்கவி மண்டிணிந்த காசினியீர் கேண்மி
னுடல்பொருள் கல்வியுத்தி யோக மரும்பூண்

டிடமுடை யில்லமகார் சேர்சுற்ற நட்டார்
படையாய்மா மொய்யென் பனவெல்லா நில்லா"
ரு. வெதனு லெனிற்பண் டிழைத்தவினைக் குள்ள
விதியா விளைந்த விதிகொடுதென் ருட
ரதிதீ விரம்வருகா லன்னவனா நீயிர்
மதியா திருந்துய்ய மாட்டீர் - அந்தனுல்

கடிகெழு புகழ்முனி கடவுளாஞ் சேயவற்
கடிமையாய் நின்மினென் னறையைப்
பிடிமினஃ தழியாப் பெரும்பயன் றருமே. க.

இது மெய்ப்பொருள் கூறினமையால் வாயுறைவாழ்த்து மருட்பா. கிற்க.

"செயிர்தீர் செய்யு டெரியுங் காலை—யடியி னீட்டத் தழகு வெற் றியலு—மோரடி யானு மொரோவிடத் தியலு—மவைதாம்—பாட்டுரை நூலே மந்திரம் பிசியே—முதுசொல் லங்கதம் வாழ்த் தொடு பிறவு—மாகுந வென்ப வறிந்திசி னோரே" என யாப்பருங் கல விருத்தியுரைவரு சூத்திரப்படி, பாட்டுரையும், நூலும், மந்திரமும், சங்கேதபிசிதமும், முதுசொல்லும், அங்கதமும், வாழ்த்துமெனு மிவை யோரடியானும் பலவடியானு நடக்குமென வறிக.

அறிஞராலும் புராண கவிஞராலும் பாடிய பாக்களிலும் பாடு பாக்களிலும் சீர், தளை, அடி, தொடை, வரையறுக்கப்பட்டபா பாவின மென்பன (யாப்பின் றிறமறிதற்குப் பேரிலக்கியமா யமைக் கப்பட்ட) விக்கண்டத்துப் பாக்கண்மூல மெடுத்துக்காட்டிய பெற்றி யிற்றிரிந்து மிக்குங் குறைந்தும் வரக்காணின்; அவற்றை யொரு புடை யொப்புமை நோக்கி யொன்றன்பாற்படுத்து வழங்கப்படுமெ னக்கொள்க. என்னை ? "ஒப்பும்" என யா - காரிகையொழிபியல் அ - வது பாட்டி லுளதாகலின்.

வெள்ளியலாதி நான்கியல்கொண்ட இவ்விரண்டாங் கண்டத்துத் திருச்செய்யுள் ஐந்நூற்று முப்பத்தொன்றுள் வெள்ளியற்கண் அடியளவாகத் "தேமா" ஆதி யுதாரணவாய்பாடு பெற்ற செய்யுள்-எ, ஆசிரிய வியற்கண் அடியளவாக "விளம்" ஆதி யுதாரணவாய்பாடு பெற்ற செய்யுள் - கசச, கலியியற்கண் அடியளவாகக் "காய்" ஆதி யுதாரணவாய்பாடுபெற்ற செய்யுள் - க0சு, வஞ்சியியற்கண் அடியளவாக "மாங்காய்" ஆதி யுதாரணவாய்பாடு பெற்ற செய்யுள் - எரு ஆகச் சீருதாரணவாய்பாட்டுச் செய்யுள்: ருரு0 - எனவும்; ஆசிரிய வியற்கண் "தத்தாந்தனன" ஆதி சந்தக்குழிப்புப்பெற்ற செய்யுள் - ருக, கலியியற்கண் "தனதனனு" ஆதி சந்தக்குழிப்புப்பெற்ற செய்யுள் - ருச, வஞ்சியியற்கண் "தானு" ஆதி சந்தக்குழிப்புப்பெற்ற செய்யுள் - உரு ஆகச் சந்தக்குழிப்புச்செய்யுள் : க0அ - எனவும்; மேலை நான்கியற்கண்ணும் "பின்முடுகு" ஆதி விசேடச்செய்யுள் க0எ - எனவும்; செய்யுள்களின்மேல் வரையப்பட்ட வாய்பாடுகளும், குழிப்புகளு மொன்றுக்கொன்று பேதமெனவு மறிக.

ஆக திருச்செய்யுள் - ருருஉ.

பல்சந்தப்பரிமளமாகிய, இரண்டாங்கண்ட முற்றிற்று.

ஆக கண்டம் உ - க்குத் திருப்பாடல் - ககருரு.

# திருவலங்கற்றிரட்டு முற்றிற்று.

---

குமரகுருபரன் றிருவடிவாழ்க.

திருச்சிற்றம்பலம்.

---

# திருவலங்கற்றிரட்டினிரண்டாங்கண்டத்துத்
# திருச்செய்யுட்பெயரட்டவணை.


| திருச்செய்யுட்பெயர். | பக்கம். |
|---|---|
| **வெள்ளியல்.** | |
| நேரிசைவெண்பா | க |
| இன்னிசைவெண்பா | க0 |
| பஃறொடைவெண்பா | க௨ |
| சவலைவெண்பா | க௩ |
| நேரிசைச்சிந்தியல்வெண்பா | க௪ |
| இன்னிசைச் சிந்தியல் வெண்பா | க௫ |
| குறள்வெண்பா | ,, |
| குறட்டாழிசை | ௨0 |
| செந்துறைச்சிதைவுத் தாழிசைக்குறள் | ௨க |
| தாழிசைக்குறளென்னுங் குறட்டாழிசை | ,, |
| வெள்ளொத்தாழிசை | ௨௨ |
| குறள்வெண்செந்துறை | ௨௪ |
| ஒரொலிவெண்டுறை | ,, |
| வேற்றொலிவெண்டுறை | ௨௫ |
| வெளிவிருத்தம் | ,, |

| திருச்செய்யுட்பெயர். | | பக்கம். |
|---|---|---|
| **ஆசிரியவியல்.** | | |
| நேரிசையாசிரியப்பா | | ௨௭ |
| இணைக்குறளாசிரியப்பா | | ௩0 |
| அடிமறிமண்டிலவாசிரியப்பா | | ௩க |
| நிலைமண்டிலவாசிரியப்பா | | ,, |
| ஆசிரியத்தாழிசை | | ௩௫ |
| ஆசிரியத்துறை | | ௩௯ |
| அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம் | | ௪க |
| எழுசீர் | ,, | ௫க |
| எண்சீர் | ,, | ௬௪ |
| ஒன்பதின்சீர் | ,, | ௭௮ |
| பதின்சீர் | ,, | ௮0 |
| பதினொருசீர் | ,, | ௮௩ |
| பன்னிருசீர் | ,, | ,, |
| பதின்மூன்றுசீர் | ,, | ௮௮ |
| பதினான்குசீர் | ,, | ௮௯ |
| பதினைந்துசீர் | ,, | ௯க |
| பதினாறுசீர் | ,, | ௯௩ |

| திருச்செய்யுட்பெயர். | பக்கம். | திருச்செய்யுட்பெயர். | பக்கம். |
|---|---|---|---|
| **கலியியல்.** | | மயங்கிசைக்கொச்சகக் கலிப்பா | ௧௧௫ |
| | | கட்டளைக்கலிப்பா | ௧௧௬ |
| | | கலித்தாழிசை | ௧௨௩ |
| நேரிசையொத்தாழிசைக் கலிப்பா | ௯௬ | கலிநிலைத்துறை | ௧௨௫ |
| அம்போதரங்கவொத் தாழிசைக்கலிப்பா | ௯௭ | கட்டளைக்கலித்துறை | ௧௩௧ |
| வண்ணகவொத்தாழிசைக் கலிப்பா | ௧௦௦ | கலிவிருத்தம் | ௧௩௭ |
| வெண்கலிப்பா | ௧௦௪ | **வஞ்சியியல்.** | |
| கலிவெண்பா | ௧௦௫ | | |
| தரவுகொச்சகக்கலிப்பா | ௧௦௮ | குறளடிவஞ்சிப்பா | ௧௬௯ |
| சுரிதகத்தரவுகொச்சகக் கலிப்பா | ௧௧௨ | சிந்தடிவஞ்சிப்பா | ௧௭௦ |
| சுரிதகத்தரவிணைக்கொச் சகக்கலிப்பா | ,, | வஞ்சித்தாழிசை | ௧௭௨ |
| இயற்றரவிணைக்கொச்சக க்கலிப்பா | ௧௧௩ | வஞ்சித்துறை | ௧௭௩ |
| சிஃறாழிசைக்கொச்சகக் கலிப்பா | ,, | வஞ்சிவிருத்தம் | ௧௮௦ |
| பஃறாழிசைக்கொச்சகக் கலிப்பா | ௧௧௪ | **மருட்பா.** | |
| | | வாயுறைவாழ்த்துமருட்பா | ௧௯௯ |


திருச்செய்யுட்பெயரட்டவணை முற்றிற்று.

## திருவலங்கற்றிரட்டின திரண்டாங்கண்டத்து விசேடத்திருச்செய்யுளட்டவணை.


| பெயர். | செய்யுளிலக்கம். |
| --- | --- |
| **வெள்ளியல்.** | |
| பின்முடுகு | கூச |
| முன்முடுகு | கூரு |
| மொழிமாற்றுப்பொருள்கோள் | கூசா |
| இரதபந்தம் | கூஎ |
| **ஆசிரியவியல்.** | |
| வருக்கமோனைச்செய்யுள் | கஉ |
| சிலேடை | உகூ - கூக |
| சதாக்கரம் | சக-ரு-சாஉ |
| அட்டோத்திரசதாக்கரம் | சாரு-சாசா |
| ஒற்றிலாச்செய்யுள் | எகூ |
| சதாக்கரம் | அசா |
| ஷை (ஒற்றிலாநூறெழுத்து) | அஎ |
| ஒற்றிலாச்செய்யுள் | அஅ-அகூ |
| சதாக்கரம் | கூஉ-க0க |
| அட்டோத்தர சதாக்கரம் | கஉரு |
| ஐகாரமொழிந்தநெடிலு மொற்றுமிலாச்செய்யுள் | கஉசா |
| நாற்கூற்றிருக்கை | கஉஅ |
| சதாக்கரம் | கச0 |
| ஒற்றிலாப்பஞ்சபங்கி. இருநூறெழுத்து | ககூ0 |
| **கலியியல்.** | |
| அட்டாட்டாக்கரம் | கக |
| ஒற்றிலாச்செய்யுள் | கஅ |
| இடையிறுதி முற்றுமடக்கு | கூஎ-கூஅ |
| வழியெதுகைச்செய்யுள் | ருரு |
| நெட்டெழுத்துச்செய்யுள் | ருஅ |
| சதுரங்கபந்தம் | அக |
| அடிமுதற்சீர்மடக்கு | அகூ |

| பெயர். | செய்யுளிலக்கம். |
|---|---|
| அடிமுதலிரண்டுசீர்மடக்கு | ௮௪ |
| ஷைநிரோட்டகம்(இதழ்குவியாப்பாட்டு) | ௮௫ |
| அசைக்குறுப்புமுதலியனவுணர்த்துஞ்செய்யுள் | ௮௮ |
| குற்றெழுத்துச்செய்யுள் | ௯க |
| அடிமோனைத்தொடைச்செய்யுள் | ௯௪ |
| அடியியைபுத்தொடை | ,, ௯௫ |
| அடியெதுகைத்தொடை | ,, ௯௬-௯௭ |
| அடிமுரண்டொடை | ,, ௯௮ |
| அடியளபெடைத்தொடை | ,, ௯௯ |
| அந்தாதித்தொடை | ,, க00 |
| இரட்டைத்தொடை | ,, க0க |
| செந்தொடை | ,, க0உ |
| இணைமோனைத்தொடை | ,, க0௩ |
| பொழிப்புமோனைத்தொடை | ,, க0௪ |
| ஒரூஉமோனைத்தொடை | ,, க0௫ |
| கூழைமோனைத்தொடை | ,, க0௬ |
| மேற்கதுவாய்மோனைத்தொடை | ,, க0௭ |
| கீழ்க்கதுவாய்மோனை | ,, க0௮ |
| முற்றுமோனை | ,, க0௯ |
| இயைபுத்தொடையும், நெட்டெழுத்துக்கவியும் | கக0-ககக |
| எதுகைத்தொடைச்செய்யுள் | ககஉ-கக௩ |
| மெல்லினமிலாச்செய்யுள் | கக௩ |
| முரண்டொடைச்செய்யுள் | கக௪-கக௫ |
| அளபெடைத்தொடை | கக௬-கக௭ |
| வருக்கவெதுகை | ,, கக௮ |
| நெடிலெதுகை | ,, கக௯ |
| வல்லினவெதுகை | ,, கஉ0 |
| மெல்லினவெதுகை | ,, கஉக |
| இடையினவெதுகை | ,, கஉஉ |
| தலையாகெதுகை | ,, கஉ௩ |
| மூன்றாமெழுத்தொன்றெதுகை | ,, கஉ௪ |
| ஆசெதுகை | ,, கஉ௫-கஉ௬-கஉ௭-[கஉ௮ |
| ஆசிடையிட்டுவரும்வல்லினவெதுகைச்செய்யுள் | கஉ௯ |
| இரண்டடியெதுகை | ,, க௩0 |
| உயிரெதுகை | ,, க௩க |
| நெடின்மோனை | ,, க௩உ |
| வல்லினமோனை | ,, க௩௩ |
| இரண்டடிமோனை | ,, க௩௪ |
| அனுமோனை | ,, க௩௫ |
| ஒற்றிலாவல்லினச்செய்யுள் | க௪௬ |
| மெல்லினச்செய்யுள் | க௪௭ |
| இடையினச்செய்யுள் | க௪௮ |
| விருத்தமுந்துறையும் | க௫உ |

| பெயர். | செய்யுளிலக்கம். |
|---|---|
| பிரிதுபடுபாட்டு. விருத்தமும் அகவலும் | கருகூ |
| திரிபாகி | கருச |
| நெட்டெழுத்துச்செய்யுளும், மாலைமாற்றும், திரிபங்கியும், துவிதநாகபந்தமும் | கருசு |

## வஞ்சியியல்.

| பெயர். | செய்யுளிலக்கம். |
|---|---|
| மொழிதிருப்பு | கக |
| கொம்பில்லாச் செய்யுள் | உஎ-உஅ-உகூ |
| பாடகமடக்கு | கூக |
| அந்தாதித்தொடை நான்காரைச்சக்கரம் | சரு |
| ஒற்றிலாச்சுழிகுளம் | சசு |
| மாத்திரைவருத்தனம். (மாத்திரைப்பெருக்கம்) | சஎ |
| அக்கரவருத்தனம். (எழுத்துப்பெருக்கம்) | சஅ |
| மாத்திரைச்சுருக்கம் | சகூ-ரு0 |
| அக்கரச்சுதகம். (எழுத்துச்சுருக்கம்) | ருக |
| சருப்பதோபத்திரம். மாலைமாற்று | ருஉ |
| வினுவுத்தரம் | ருகூ-ருச |
| கூடசதுக்கம் | ருசு |
| காதைகரப்பு | ருஎ |
| அந்தாதிமடக்கு. ஒற்றிலாச்செய்யுள் | ருஅ |
| அந்தாதிதொடைத் தமரகபந்தம் | ருகூ |
| பகரவிகற்பமடக்கு | சு0 |
| ஏகபாதம் | சுக |
| கோமூத்திரி | சுஉ |
| ஒற்றிலாஇதழ்குவிபாட்டு | அஉ-அகூ |

விசேடத்திருச்செய்யுளட்டவணை முற்றிற்று.

உ

சிவமயம்.

குமாரகுருப்யோநம:

# ஸ்ரீமத் - குமரகுருதாசசுவாமிகள் திருத்தலதரிசனகாலங்களிற்பாடியருளிய கட்டளைக்கலித்துறைகள்.

## திருவனந்த சயனம்.

சீராரு நல்வி சயவாண்டு கன்னியந் திங்கண்மதி
யோராரு முற்பக்க வேகா தசியி லெழில்வளஞ்சே
ரூரா மனந்த சயனத்தி லென்னிறை யோன்கடப்பந்
தாரான்ம் மானது பள்ளிகண் டேனற் றருக்குறவே. க.

## திருக்கன்னியாகுமரி.

அலைமேவு பவ்வ வளநீடு மங்கன்னி யாகுமரி
நிலைமேவு சத்தி தனையென்னை யாளொரு நேயமுள்ள
விலைவேல னென்று விசயதெய் வக்கன்னி யென்னுமதிக்
கலைமேவு பூரனை நான்கண் டிறைஞ்சிய காலமன்றே. உ.

## திருச்சுசீந்திரம்.

பத்தர் குழாஞ்சூழ் சுசீந்திரம் வாழுமை பங்கனைமா
சித்தர் குழாஞ்சூழ் குமர னெனக்கரு டேவெனவென்

பத்தர்கள் வாழ்பிரப் பன்வல சைச்செம் பதிதனிலே
சத்திய யாகக்கை கூடின தாலினித் தாழ்விலையே. கூ.

## திருக்குன்றக்குடி.

சொல்லாரு நான்மறை தந்திர மாதி துதிக்குநெடு
வில்லாரும் வேற்கர வேந்தனெம் மீசனை மேதினியோ
ரெல்லாரு மேத்துகுன் றக்குடி தன்னினு மேயிறைஞ்சி
நல்லாரு ளுந்திற னுற்றேன் சிவாநந்த நாட்டத்திலே. கச.

## திருச்சிகண்டிமலை.

திருவே சிறந்தநன் மன்மத வாண்டுற்ற திங்கணண்டு
தருவே தனையில்பிற் பாக நவமி தனிற்கடப்ப
மருவேறு தோட்பெரு மானைச் சிகண்டி மலைதனிலே
கருவே புகாதுய் வணநா னிறைஞ்சிக் களித்ததுண்டே. கரு.

## திருப்புத்தூர்.

பொன்னு மருஞ்செல்வி நீங்கா திலங்கு பொழில்வளஞ்சா
னன்னு டெனுந்திருப் புத்தூரின் மேவிய நந்திதன்னை
யென்னு தரம்படு செவ்வே ளெனத்தரி சித்திறைஞ்சி
யின்னு வுரங்கடிந் தேன்மனந் தான்குளிர்ந் தேனன்பரே. கசு.

## திருக்கானப்பேரூர்.

நீரகஞ் சார்நெடு நேமியிற் சீர்மை நிரம்புகின்ற
பேரகஞ் சார்திருக் கானநற் பேரூர்ப் பெரியவனை
யேரகஞ் சார்திருச் சேயவன் யாண்டு மிருப்பவனென்
றோரகங் கொண்டுவந் திப்பவர்க் கேமனு லகிலையே. கஎ.

## திருவுருமாமலை.

தூமலி யன்புடை யார்நன் னடையைத் தொடரடியேன்
மாமலி செல்லை நதியிற் றிருவுரு மாமலைமேற்

பாமலி நாவயின் மன்னெனு மெங்கையைப் பார்த்ததினம்
பேமலி மன்மத வாடியிற் பக்கப் பிரதமையே. ௧௮.

## திருவேற்பு.

திருவாணி லாவிடு குற்றால நாதர்தஞ் செல்வனையென்
வெருவாணி தீர்த்தருள் வேலவ னைத்திரு வெற்புமிசைப்
பெருவாணி லாது மளமள வென்றறை பெய்விளம்பி
மருவாணி யாரம்ப நான்கண்டு பூரித்த வைகலன்றே. ௧௯.

## திருப்பாலைவனம்.

வேலை யுடுத்த விபுலைவாழ் நர்க்கு விவேகநெறி
நூலை வகுத்தத னுட்பமுங் காட்டியந் தோன்மைவழிக்
காலை யளித்தருண் முக்கண்ண னுறைங் கனிவொடுவாழ்
பாலை வனத்திற் குமரனை நன்கு பணிகுதமே. உ0.

## வெவ்வேறு சந்தர்ப்பம்.

எழுத்தறை மேனு னளிபுக ழெம்மா னெனுங்குகனின்
வழுத்தசர் ற்குமென் முன்சென்னை வாழ்நன் மாண்படியைத்
தொழுத்தகு மன்பர் தெரிவித்த வாறுன் றொடர்பிலின்னுந்
தழைக்குக நற்சைவ சித்தாந்த வேதத் தமிழ்ச்சபையே. உ௧.

சடைக்கற்றை தாங்குவ்விச் சங்கர னார்தந்த தங்கவயிற்
படைக்கையெந் தாயறி யாமையி னன்செய்த பண்டைவினை
தொடைக்கட்டி யோடாக் கட்டியு மாநனி தோன்றியென்னை
நடக்கவொட் டாதுசெய் கின்றது சென்னை நகர்தனிலே. உஉ.

நெல்வேலிச் சிக்க நரசைய னூரினன் னேர்வடக்கே
கல்வேலை செய்த மடஞ்சென்று காடாயக் காரர்கண்டு
சில்வேலை பூசைக் கிடமீகென் றேனவர் தெவ்வுரைத்தார்
வெல்வேலை யேந்திறை யேயிந்த வாறம் விளைந்ததென்னே. உ௩.

தேன்பட்ட வாய்வண் டறைவெற்பு மேல்வாண தீர்த்தமதி
னூன்பட்ட காயந் தனையே நனைப்பா னுவந்துசென்று
நான்பட்ட பாடென் றிருவுள்ள மொன்றே நனியறியுங்
கூன்பட்ட சோதிப் பிறைமுடித் தோனிளங் கோமகனே. உ௪.

சேமத்தை வெல்லினுஞ் சாமத்தை வெல்லினுந் தீயவர்செய்
யோமத்தை வெல்லினு மீமத்தை வெல்லினு மோங்குசிங்க
வீமத்தை வெல்லினும் வீரத்தை வெல்லினும் வீறியெழு
காமத்தை வெல்வ தரிதுகண் டீர்குகற் கண்ணுநரே. உ௫.

நோயின்மை செல்வச் செருக்கின்மை சோம்பின்மை நொய்மையின்
பேயின்மை பேதைக் குணமின்மை சாமிசொற் பீடிகழும் [மை
வாயின்மை யாயுட் குறைவின்மை பேருண்டி மாந்தலின்மை
தீயின்மை வேண்டுமென் றேசிவ யோகிற் றிளைப்பவர்க்கே. உ௬.

சவ்வுந் தசையு மெலும்புஞ் செறிபுன் சடத்தொடர்புந்
தெவ்வுந் திரிபுஞ் செயற்கையு நீங்குஞ் சிதம்பரச்சீ
ரொவ்வும் படிமன மும்பமோம்ரீமை யுங்கிலியு
மவ்வுஞ்சவ் வுஞ்ச ரவண பவாய நமவெனவே. உ௭.

தேங்கட லாய பராபர சண்முகன் சேத்திரமாம்
வேங்கடந் தன்னையந் தாயுதற் காக்கியவ் வேங்கடத்திற்
பூங்கடங் கொள்ளரி யைக்குகன் பூசித்த தாப்பொறித்தோர்
தாங்கடம் விட்டபின் பேதடைந் தாரோ சழக்குடனே. உ௮.

சடப்பொரு ளுள்ளு மிருக்கின்ற சாமி சடப்பொருட்குந்
திடப்பொரு ளாமுயி ரின்கண் விளங்கு திறமதிசத்
திடப்பொரு ளுக்குந் திடப்பொரு ளாமது சீகண்டனென்
னடப்பொருண் மூர்த்தியின் மின்ன லதிகாநன் னட்பினரே. உ௯.

நிலத்தி லழுகுக் கழகுநற் கல்வி நிகழதுபோ
னலத்தி னடத்த லதினு மழகரு ணட்டமுயர்
தலத்தி லிருத்த லதினு மழகயிற் சாமியினுன்
மலத்தி னடலறுத் துய்த்த லதனினு மாவழகே. ௬௦.

உலகத் தெதிலுங் கனநீளங் கண்ணறை யுள்ளமைபோ
லிலகத் துவிதப் பொருட்கண்ணு மெய்யறி வின்பெனச்சொன்
னலகத் தனுண்மை யொருமூன் றையுங்குகன் ஞானமில்லார்
விலகத் தமேசெய்து சேர்க்கையென் றேதம் விரும்புவரே. ௬௧.

குறுந்தொழி லிற்றெனை வோர்ந்தறி யாமைக் குறும்பதனைத்
தெறுந்தொழில் செய்குகன் றேசரு ணடுங் திறமதொன்றே
நறுந்தொழி லல்லாத யாவுமெஞ் ஞான்று நலமொழிந்த
வெறுந்தொழி லென்றறி வீர்மா னவுரு மேயவரே. ௬௨.

எவரம் பரத்தை யடைபொருட் டெப்பொழிக் கின்றனரோ
வவரம் புவிக்கு ளடையா ரவத்தைக ளங்ஙனமே
துவரம் பருப்புண் டிடின்வயிற் றிற்புழுத் தோன்றமிந்த
விவரம் பழக்கத் தறிந்துசொன் னேன்குரு வேட்கையரே. ௬௩.

நூலாத்தர் பாசமெய் யென்பது கொண்டிந்த நோயுலகை
மேலாத்த மூண்ணிணை வோர்பரி பூரண மெய்யுணர்வு
சாலாத்த ளைக்குட் கிடப்பரே யெங்குஞ் சதாசிவமாம்
வேலாத்த னென்றுள்கு வோர்ஞான வீட்டின்ப மேவுவரே. ௬௪.

சாம்பொழு தோர்செவி கேட்கினு நன்றே தரும்புகழை
யாம்பொழு தெல்லா மறைந்தவெம் மானல் லருணகிரி
யோம்பொழு தாக்கண் டிருள்கீண் டடைந்த வொருவனையே
போம்பொழு துள்ளத் திருத்துமின் பந்தம் பொடிபடுமே. ௬௫.

## திருவலங்கற்றிரட்டு ருகூஉ-செய்யுட்டொகையுள்ள இரண்டாங்கண்டத்துத் தவறு திருத்தம்.

| பக்கம். | பாட்டு. | வரி. | தவறு. | திருத்தம். |
|---|---|---|---|---|
| உ | ரு | உ | தன்,னைபோற் | தன்னைப்போற் |
| எ0 | கக அ | ரு | யாவெனல் | யாவனெனல் |
| எஎ | ககூரு | ,, | யஎன்யர் | யன்பர் |
| அசு | கருக | கூ | விளக்சியச | விளங்கியச |
| ககு0 | கருக | க | மருமனாக்க | மருமனாக்கை |
| கதூஉ | | | க. சேயா | உ. சேயா |
| கஅ0 | சஉ | ச | மீர | மீக |

கஙரு - வது பக்கம் அரு - வது பாட்டினுரையில் ஈற்றசை. என்பதற்கும் [அயிலல்=உண்டல்] என்பதற்கு மிடையில் "கோவில் கோயிலென வாதல்போலத் தகையவிலானை யென்பது தகைய யிலானை யெனப் போலியாயிற்று. மரூஉ எனினு மமையும்." என் றிருக்கவேண்டியது விடுபட்டிருக்கிறது.

ககூஎ - வது பக்கம் சகூ - வது வரியில் "அறிஞராலும் கவிஞ ராலும்" எனவுள்ளவற்றை அறிஞரும் கவிஞரும் என்று வாசிக்க.

---

## திருவலங்கற்றிரட்டு கூ0க - செய்யுட்டொகையுள்ள முதலாங்கண்டத்தின் தவறு திருத்தத்திற்கு வாராது விடுபட்ட தவறு திருத்தம்.

| பக்கம். | பாட்டு. | வரி. | தவறு. | திருத்தம். |
|---|---|---|---|---|
| உச | சு | அ | மெருமவயற | மருமயிற் |
| எசு | சு | க | விருட்வெறுக்கை | விருவெறுக்கை |
| கசஅ | சா | ச | மடிப்பா | மரிப்பா |

௧௨௮௧ - செய்யுட்டொகையுள்ள

# குமரகுருதாசசுவாமிகள் பாடன் முதற்பதிப்பின் தவறு திருத்தத்திற்கு வாராது விடுபட்ட தவறு திருத்தம்.



| பக்கம். | பாட்டு. | வரி. | தவறு. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௯ | ௫ | ௩ | கச்சு | கச்சை |
| ௧௪ | ௩ | ௯ | வல்லுநகர் | வல்லுநர் |
| ௫௮ | ௩ | ௧௧ | வல்லுமரு | வல்லுநரு |
| ௩௯ | ௪ | ௧௬ | மேவுநனே. | மேவுகுகனே. |
| ௬௪ | ௧ | ௧ | சொளிக்கு | கொழிக்கு |
| ௬௯ | ௩ | ௫ | டிரும்வள்ளி | டிருவள்ளி |
| ௮௧ | ௨ | ௨ | நிகளம் | நீளம் |
| ௧௩௯ | ௧ | ௧௫ | லடிப்பாடு | லரிப்பாடு |
| ௧௭௫ | ௫௯ | ௧ | நியமத்திற் | மியமத்திற் |
| ௧௭௮ | ௬௩ | ௧ | வாதலூரான் | வாதலூரன் |
| ௨௧௩ | ௫ | ௧ | செப்பரும்வி | செப்பருவி |
| ௨௨௯ | ௪௮ | ௩ | ணண்புவை | ணன்புவை |
| ௨௬௧ | ௧௧ | ௪ | வேலோயோ | வேலோயே |
| ௫0௯ | ௨௫ | ௪ | சுந்தனே | சுந்தரனே |
| ௩௭௧ | ௧௫ | ௪ | கோயிடர் | சேயிடர் |

௩௭௭ - ம் பக்கம் ௪௬ - ம் பாட்டினடியில் தனதனு தஙனதனு

## ௧௧00 - செய்யுட்டொகையுள்ள திருப்பா முதற்பதிப்பின் பிழைதிருத்தத்திற்கு வாராது விடுபட்ட பிழை திருத்தம்.

| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௨ | ௩ | ௧ | யன்னவொரு | யென்னவொரு |
| ௪ | ௨ | ௧௩ | கழுதன்ன | கழுதென்ன |
| ௧௧ | ௪ | ௪ | செழுத்தன்ன | செழுத்தென்ன |
| ,, | ,, | ௧௧ | அநிமாவின | அநிமாலின |
| ௧௪ | ௮ | ௬ | சொற்றவுங் | சொல்லியுங் |
| ௨0 | ௮ | ௧ | காயிதன் | காயதன் |
| ,, | ,, | ௧௨ | மெந்தன் | மென்றன் |
| ௨௩ | ௩ | ௮ | கிர்த்தியமே | கிர்த்தியமெ |
| ௨௪ | ௫ | ௩ | யருள்கின்றோ | யருள்கிறோ |
| ௨௭ | ௧0 | ௩ | கின்றதற்றே | கின்றதொப்பத் |
| ௨௯ | ௨ | ௭ | வல்லரன்றே | வல்லரலரோ |
| ௩0 | ௪ | ௧௩ | யெந்த | யென்ற |
| ௩௩ | ௯ | ௧0 | வுலகாயிதர் | வுலகாயதர் |
| ௩௪ | ௧ | ௫ | மேரன்னவு | மேருபோலு |
| ௩௬ | ௪ | ௬ | மூளாரன்றெ | மிலாதவரெ |
| ௩௯ | ௧0 | ௪ | நுந்தன் | னுன்றன் |
| ௪0 | ,, | ௧ | படுமெந்த | படுமென்ற |
| ௫௫ | ௫ | ௯ | கோடாது | கொள்ளாது |
| ௬௧ | ,, | ௩ | மறைந்தன்ன | மறைந்தென்ன |
| ௬௪ | ௧0 | ௫ | நின்றவுயிர் | நிற்குமுயிர் |
| ௭௯ | ௬ | ௧ | தக்கனற்றணங் | தக்கனெத்தணங் |
| ௮௧ | ௨ | ௧ | திடலன | திடலென |
| ௧0௩ | ௭ | ௩ | கோடநினைப் | கோடனினைப் |

| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௧0௧ | ௭ | ௪ | கோடநினைத் | கோடனினைத் |
| ௧௧௭ | ௩ | ௨ | கோடவெனக் | கோடலெனக் |
| ௧௧௯ | ௧ | ௩ | கனைகாணரும் | கனைகாணரு |
| ௧௨௫ | ௪ | ௨ | கோடவி | கோடலி |
| ௧௨௬ | ௭ | ௧ | கோதியு | காதியு |
| ,, | ௮ | ௬ | தாருவர் | தார்பவர் |
| ௧௨௭ | | | தரவுக்கொச்சக | தரவுகொச்சக |
| ௧௪௨ | ௧ | ௮ | யதிர்த்த | யதிர்த்தா |
| ௧௪௫ | ,, | ,, | கோடு | கொள்ளு |
| ௧௪௬ | ௨ | ௧௩ | கோடுங் | கொள்ளுங் |
| ௧௪௭ | ௪ | ௪ | கோடா | கொள்ளா |
| ௧௬௮ | ௧ | ௧ | யன்னவே | யென்னவே |
| ௧௭௧ | ௯ | ௬ | தன்னவே | தொப்பவே |
| ௧௭௨ | ௨ | ௨ | தற்றே | துபோல் |
| ௧௭௬ | ௩ | ௧ | கோடாதவ் | கொள்ளாதவ் |
| ௧௮0 | ௫ | ௬ | மனவே | மெனவே |
| ௧௮௩ | ௩ | ௭ | கோடுவரோ | கொள்ளுவரோ |
| ௧௮௬ | ௪ | ௨ | றென்றுக்காற் | றென்றக்காற் |
| ௨0௬ | ௨ | ௪ | நீனி | நீநி |
| ௨௨௬ | ௭ | ௧ | மனவுயிர் | மெனவுயிர் |
| ,, | ௯ | ,, | சொற்றிய | சொற்றிடு |
| ௨௩௧ | ௩ | ௨ | லனவுன் | லெனவுன் |
| ௨௩௫ | ௫ | ௧ | தன்னவெவ் | னென்னவெவ் |
| ௨௩௭ | ௯ | ௨ | மன்னவே | மார்தல்போற் |
| ௨௩௮ | ௧ | ௪ | வோச்சொரு | வோஞ்சொரு |
| ௨௫௮ | ௬ | ௨ | சொற்றிய | சொற்றிடு |
| ௨௬௨ | ௧0 | ௩ | றுருக்காணீ | றுருகாணீ |
| ௨௬௪ | ௮ | ௨ | லன்னவே | லென்னவே |
| ௨௬௫ | | | நிஷதார்த்தம். | நிஷதர்த்தம். |

## திருப்பாவில் விடுபட்ட பிழை திருத்தம்.

| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| உளஅ | க | சா | கொழுந்தனைய | கொழுந்தினைய |
| உஅக | கூ | எ | யின்னிகள | யின்னறிய |
| உஅகூ | ச | ச | சேவையும் | சேயுமே |
| உஅரு | க0 | உ | ஞேந்தான் | ஞேடரோ |
| உகூசா | ச | ச | சொற்றியவா | சொற்றதுபோல் |
| ,, | சா | உ | சொற்றி | சொற்று |
| உகூஎ | | | தரவுக்கொச்சக | தரவுகொச்சக |
| உகூகூ | க0 | கூ | கோடு | கொள்ளு |
| கூ0க | ச | ,, | றுளவரிதான் | றுளவரிதாஞ் |
| கூ0உ | கூ | க | சொற்றியலிங் | சொற்றவிலங் |
| ,, | க0 | ச | ஷை | ஷை |
| கூ0கூ | கூ | எ | றறிவளை | றறிநளை |
| கூகரு | ரு | க | முறணிக் | முரணிக் |
| கூகஉ | சா | ரு | வல்லுவளை | வல்லவளை |
| கூகஎ | கூ | சா | தயர்வாமேற் | தயராமே |
| ,, | ,, | எ | றூண்டி | தூண்டி |
| கூகூகூ | | | வகைத்தென்பது. | வகையென்பது. |
| கூசகூ | அ | க | சிங்குவையா | சிகுவைகண்ணை |
| ,, | | | தரவுக்கொச்சக | தரவுகொச்சக |
| கூருசா | ச | ரு | ளியிராசதத்தி | ளித்தாமதத்தி |
| கூசாக | க | எ | கைப்பெறு | கைப்பெரு |
| கூசாஎ | அ | ,, | றிந்தனெனு | றிந்தனனெ |
| ,, | ,, | அ | மப்பர் | னப்பர் |
| கூஎச | க0 | சா | மனையவி | மௌனவேயி |
| கூஎரு | உ | அ | வல்லுவ | வல்லு |
| கூஅசா | | | திருப்பாமுடிந்திற்று. | திருப்பாமுடிந்தது. |
| கூஅகூ | க | க | வேகபா | மேகபா |

கூஅச - ம் பக்கத்துச்சந்தக்குழிப்புத்தள்ளுபடி.

